Accn. No. 13428

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :



# ஸ்ரீ விஷ்ணுசித்த விஜயம்

## இரண்டாமத்தியாயம் – முதல் பாகம்

( இரண்டாம் அத்தியாயம் — முதல் பாதம் )

[ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம் வெளியீடு]


இயற்றியவர் :-

ஸ்ரீ உ. வே. S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

அட்வகேட்,

'ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்,

3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி 17.



ஸ்ரீ. ரா. ஸ்ரீ. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் குடும்ப
தர்ம சொத்துக்களின் ஆதரவில் வெளியிடப்பெற்றது.





விலை ரூ. 16-00] [தபால் 2-00.

ஸ்ரீநிவாஸம் பிரஸ், 8, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620017.

# முன்னுரை

ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனத்தில் சிறிதுசிறிதாக 33-வருடங்களாக வெளிவரும் விஷ்ணுசித்தவிஜயம் என்னும் மஹாக்ரந்தம் (1948) ஸர்வஜித் வருஷம் தை மாதத்தில் தொடங்கப் பெற்றது. இதுவரையில் இரண்டாயிரம் பக்கங்கள் வெளிவந்துள்ளது. மேலும் பல்லாயிரம் பக்கங்கள் வெளிவர வேண்டியுள்ளது. பெரியாழ்வார் பாண்டிய ஸதஸ்ஸில் பரதத்வநிர்ணயம் செய்ததை அடியொற்றி, இக்காலத்தில் உள்ளவர்களுக்குப் புரியும்படி எளிய இனிய தமிழ் உரை நடையில் ப்ரமாணங்களை விளக்கித் திருமாலின் பரத்துவத்தை நிலை நாட்டுவதாகையாலே, இதற்கு "விஷ்ணுசித்தவிஜயம்" என்னும் பெயர் கீர்த்திமூர்த்தியான எந்தையாராம் ஸ்ரீ உ.வே. கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியால் 33-வருடங்களுக்கு முன் சூட்டப்பெற்றது.

வைணவத்திற்காகத் தம் உடல், பொருள், ஆவி ஆகிய அனைத்தையும் பயன்படுத்திய அப்பெருந்தகை (சுமார் 500 பக்கமுள்ள) இந்நூலின் முதல் அத்தியாயத்தின் முதற் பகுதியைத் தாமே எழுதி அச்சிட்டு, விஜயவைகாசியில் திருநாட்டை அடைந்தபோது எஞ்சிய பகுதிகளை எழுதி அச்சிடுமாறு அடியேனை நியமித்தருளினார். அவ்வண்ணமே வேத வேதாந்தநிர்ணயம் எனும் முதலத்தியாயத்தின் இரண்டாம் பகுதி சுமார் 13-வருடங்களில் நிறைவுபடுத்தப்பெற்று பராபவ வைகுண்ட ஏகாதசியன்று வெளியிடப்பெற்றது. பதினாலு வருடங்களுக்குப்பின் 'ஸ்ம்ருதிநிர்ணயம்' என்னும் இப்பகுதி (இந்நூலின் இரண்டாம் அத்தியாயத்தின் முதல் பாதமாய் அமைந்தது) ரௌத்ரி வைகுண்ட ஏகாதசியான இன்று வெளியிடப்பெறுகிறது. இதில் இப்போது அச்சிடப்பெற்று நமக்குக் கிடைத்துள்ள எல்லா ஸ்ம்ருதிகளையும் ஆராய்ந்து, ஸ்ரீமந்நாராயணனே அவற்றில் பரம்பொருளாக நிலைநிறுத்தப் பட்டுள்ளான் என நிரூபிக்கப்பட்டுள்ளது.

இனி இவ்வத்தியாயத்தின் இரண்டாம் பாத3த்தில் இதிஹாஸஶ்ரேஷ்ட2மான ஸ்ரீராமாயணத்தைக்கொண்டும், மூன்றும் பாத3த்தில் ஐந்தாம் வேத3மான பா4ரதத்தைக்கொண்டும், நாலாம் பாத3த்தில் பா4ரதஶேஷமான ஹரிவம்ஶத்தைக் கொண்டும், மூன்றும் அத்தியாயத்தின் நாலு பாத3ங்களில் முறையே ஸாத்விக ராஜஸ தாமஸ மஹாபுராணங்கள், உப புராணங்கள் ஆகியவற்றைக் கொண்டும், நாலாம் அத்தியாயத்தில் முறையே விசிஷ்டாத்3வைதி, த்3வைதி, அத்3வைதி, கவிகள் எனும் வைதிகர்களின் கிரந்தங்களைக்கொண்டும் நாராயண பரத்வத்தை நிலைநாட்டி இந்நூல் இனிதே நிறைவடையும்படி எம்பெருமான் திருவருள்புரிவானாக.

ஸநாதனத4ர்மத்தின் அடிப்படைகளான வேத3வேதா3ந்தங்கள், ஸ்ம்ருதிகள், இதிஹாஸபுராணங்கள், வைதி3கர்களுடைய நூல்கள் ஆகிய அனைத்தின் உட்பொருளையும் வெளியிடுவதாய், ஒரு தனி மனிதனால் ஒரு புருஷாயுஸ்ஸில் நிறைவு செய்ய அரிதான இந்த மஹாக்3ரந்த2த்தை, எந்தையாரைப் போலே அடியேனும் நிறைவுபடுத்த முடியாவிடினும், நிறைவு படுத்த வல்லவர்களையும் ப்ரயோஜக கர்த்தாவான அப்பரம புருஷனை தோற்றுவிப்பானாக.

ரௌத்ரி-ஸூ
வைகுண்ட ஏகாதசி
(18—12—80)

தாஸன்,

ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார்,

'ஸ்ரீவைஷ்ணவ ஸுதர்சனம்' ஆசிரியர்.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



ஆழ்வாராசார்யர்களின் அருளிச்செயல்களுக்கு எளிய தமிழ்
விரிவுரைகளுடன் வெளிவரும் சிறந்த

—ஸ்ரீ வைஷ்ணவ மாதப்பத்திரிகை—

# ஸ்ரீ வைஷ்ணவ ஸுதர்சனம்

ஆழ்வார்களுடைய திவ்யப் பிரபந்தங்களுக்குப் பெரியவாச்சான்பிள்ளை முதலான ஆசாரியர்கள் அருளிச்செய்த மணிப்ரவாளநடை வியாக்கியானங்களை எளிய தமிழ்நடை விவரணங்களோடு வெளியிடுவதையே முக்கிய நோக்கமாகக்கொண்டு இப்பத்திரிகை கடந்த முப்பத்துமூன்று வருடங்களாக நடைபெற்று வருகின்றது. தற்போது திருமாலை நாச்சியார்திருமொழி வியாக்கியானங்கள் விவரணத்தோடு தொடர்ந்து அச்சிடப்படுகின்றன. இது தவிர, ஸ்ரீமந்நாராயணனின் பரத்வத்தை விளக்கும் விஷ்ணுசித்தவிஜயம் என்னும் கிரந்தமும், விரிவான கீ₃தா வ்யாக்₂யானமும், ஆழ்வாராசார்யர்களின் சரித்திரத்தை விரிவாக விளக்கும் (தமிழ் விவரணத்தோடு கூடிய) பிரபந்நாம்ருதமும், ஸ்ரீபா₄ஷ்யஸாரமான (தமிழ் விவரணத்தோடு கூடிய) சாரீரககாரிகாவளியும் விவரணத்தோடு கூடிய வார்த்தாமாலையும், அன்பர்களின் கேள்விகளுக்கு பதிலளிக்கும் ஸுதர்சனர்பதிலும், மற்றும் பல கட்டுரைகளும், கிரந்தங்களும் புத்தகமாக்கிக் கொள்ளலாம்படி தனித்தனி பாரங்களாகத் தொடர்ந்து வருகின்றன. விளம்பரமேயில்லாமல் நல்ல காகிதத்தில் ஒவ்வொரு மாதமும் சுமார் எழுபது பக்கங்களுக்குக் குறையாமல் தரமான விஷயங்களைக்கொண்டு வெளிவருவது இப்பத்திரிகையின் தனிச்சிறப்பாகும். இப்பத்திரிகையில் வெளிவந்த நூல்களில் தற்போது கிடைப்பவை அடுத்துள்ள பக்கங்களில் கொடுக்கப்பட்டுள்ளன.

ஆசிரியர்:
**ஸ்ரீ. S. கிருஷ்ணஸ்வாமி ஐய்யங்கார், அட்வகேட்,**
3 புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-620 017.

## வருடச்சந்தா ரூ. 12.

தனிப்பிரதி ரூ. 1. —●— ஆயுள் சந்தா ரூ 100.

ஸர்வஜித் மார்கழி 28-உ (12-1—1948) முதல்
தொடர்ந்து வெளிவருகிறது.

**பழைய பிரதிகள் கிடைக்கமாட்டா.**

## ஆழ்வார் அருளிச்செயல்களுக்குப் பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்கள்

(பதவுரை அரும்பதவுரை ப்ரமாணத்திரட்டுகளோடு கூடியவை)

| க்ரந்தங்கள் | விலை | தபால் |
|---|---|---|
| 1. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 1-50 | -40 |
| 2. முதல் திருவந்தாதி வ்யாக்யானம் | 1-88 | -50 |
| 3. திருப்பள்ளியெழுச்சி வ்யாக்யானம் | 1-00 | -20 |
| 4. பகவத்விஷயம் I (முதலிரண்டு திருவாய்மொழிகள்) | 25-00 | 5-00 |
| டி II பாகம் (முதற்பத்து 3-10 திருவாய்மொழிகள்) | 28-00 | 5-50 |
| டி III பாகம் (இரண்டாம்பத்து முழுவதும்) | 35-00 | 6-50 |

## ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு எளியநடை விவரணத்துடன் கூடிய பூர்வாசார்யர்களின் வ்யாக்யானங்கள்

| | | |
|---|---|---|
| 1 சிறிய திருமடல் வ்யாக்யானம் | 3-00 | 65 |
| 2. பெரிய திருமடல் வ்யாக்யானம் | 5-00 | -75 |
| 3. இரண்டாந்திருவந்தாதி வ்யாக்யானம் | 4-00 | -85 |
| 4. மூன்றாந்திருவந்தாதி வ்யாக்யானம் | 4-00 | -85 |
| 5. நான்முகன் திருவந்தாதி வ்யாக்யானம் | 5-00 | -85 |
| 6. திருவெழுகூற்றிருக்கை வ்யாக்யானம் | 1-00 | -35 |

## அருளிச்செயல்களுக்கு எளியநடை விவரணம் மாத்திரம்

| | | |
|---|---|---|
| 1. திருப்பல்லாண்டு வ்யாக்யானம் | 2-00 | -50 |
| 2. திருப்பாவை வ்யாக்யானம் | 4-00 | -75 |

## நமது மற்ற வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| 1 ஸ்தோத்ரரத்நசது:ச்லோகீ ஜிதந்தே வ்யாக்யானங்கள் | 8-00 | 1-00 |
| 2. சது:ச்லோகீ வ்யாக்யானம் [நாயனாராச்சான்பிள்ளை] | 2-50 | .50 |
| 3. கத்ய வ்யாக்யானங்கள் | 4-50 | .50 |
| 4. ஸ்ரீராமாயண தனிச்லோகம் [விவரணத்துடன்] part I | 3-50 | -75 |
| டி இரண்டாம் பாகம் [விவரணத்துடன்] | 7-00 | 1-10 |
| 5. பாசுரப்படி ராமாயணம் | 0-25 | — |
| 6. முமுக்ஷுப்படி வ்யாக்யானம் | 3-00 | -65 |
| 7. ஆறாயிரப்படி குருபரம்பராப்ரபாவம் முதலியவை | 12-00 | 1-50 |
| 8. ஸ்ரீவசநபூஷண வ்யாக்யானம் 4-அரும்பதவுரைகளுடன் முதல் பாகம் | 6-00 | 1-00 |
| 9. சாரீரககாரிகாவளி [இரண்டாம் பாகம்] | 5-00 | -75 |
| 10. கைசிகபுராணம் | 1-00 | -25 |
| 11. உபயவேதாந்த ஐககண்ட்யம் | 2-00 | -50 |
| 12. வடுகநம்பிஅருளிய யதிராஜவைபவம் [விவரணத்துடன்] | 1-00 | -20 |
| 13. நாலாயிர திவ்யப்ரபந்தம் [முதலாயிரம்] | 7-00 | 1-00 |
| ,, [இரண்டாமாயிரம்] | 8-00 | 1-00 |
| ,, [மூன்று நான்காமாயிரம்] | 12-00 | 1-50 |

P. T. O.

| | | | |
|---|---|---|---|
| 14. | திருக்குறள் ஸம்ஸ்க்ருதஶ்லோக மொழிபெயர்ப்புடன் | 10-00 | 2.00 |
| 15. | [போதாயந] ஸந்த்யாவந்தநம் பதவுரையுடன் | 0-50 | -20 |
| 16. | [போதாயந] உபாகர்மவிதி | 0-50 | -20 |
| 17. | அருளிச்செயல் ரஹஸ்யம் [வரதாசார்ய ஸ்வாமி தொகுத்த பூ4ஷணத்துடன்] | 2.50 | -65 |
| 18. | புருஷஸூக்த வ்யாக்யானம் | 1-50 | -40 |
| 19. | நாராயணஸூக்த வ்யாக்யானம் | 0.75 | -25 |
| 20. | ஸ்ரீஸூக்த வ்யாக்யானம் | 2-00 | -40 |
| 21. | பூ4நீளா விஷ்ணுஸூக்த வ்யாக்யானங்கள் | 1-75 | -40 |
| 22. | தே3ஹளீஶ ஸுப்ரபா4தம் | 0-25 | -15 |
| 23. | சாதிமத ஆராய்ச்சி [முதல்பாகம்] | 4-00 | -75 |
| 24. | ஸ்ரீலக்ஷ்மீ ந்ருஸிம்ஹஸ்தவம் | 0-50 | -20 |
| 25. | விஷ்ணுசித்தவிஜயம் [முதல் பாகம்] | 5-00 | 1.00 |
| | டை [இரண்டாம் பாகம்] | 7-00 | 1-50 |
| | டை [இரண்டாமத்தியாயம்-முதல்பாகம்] | 16-00 | 2.00 |
| 26. | ஸாத்விகவிஜய ஸர்வஸ்வம் | 0-75 | -25 |
| 27. | ஸந்த்4யாவந்த3நபா4ஷ்யம் | 3-00 | -75 |
| 28. | மகரநெடுங்குழைக்காதர் பாமாலையந்தாதி | 1-50 | -40 |
| 29. | ஸ்ரீகேசவமணிமாலை | 0-75 | -25 |
| 30. | மாமுனிகள் அறுநூறாவது ஆண்டு மலர் | 1-50 | -40 |
| 31. | சங்கரரும் வைணவமும் | 0-75 | -25 |
| 32. | ஸித்3தோ4பாய விஜயம் & [ஸ்ரீரங்கராஜ விஜயம்] | 3-00 | -75 |
| 33. | திருப்பாவை, திருப்பள்ளியெழுச்சி மூலம் மட்டும் | 0-25 | -10 |
| 34. | க3த்3யத்ரயம் மூலம் மட்டும் | 0-25 | -10 |
| 35. | திருவாய்மொழி நூற்றந்தாதி—மூலம் மட்டும் | 0-25 | -10 |
| 36. | கீ3தா வ்யாக்2யானம் முதல்பாகம் (ஆறு அத்தியாயம்) | 10-00 | 1-50 |
| | டை இரண்டாவது பாகம் (7,8 அத்தியாயம்) | 8-00 | 1-50 |
| 37. | அக்3நிஹோத்ரியும் வைணவமும் | 2-50 | -65 |
| 38. | காட்டுமன்னார்கோவில் வீரநாராயணப்பெருமாள், நாதமுனிகள், ஆளவந்தார் வைபவம் | 0-50 | -20 |
| 39. | சோலைமலைக்குறவஞ்சி | 3-50 | -75 |
| 40. | ஸ்ரீவைஷ்ணவ மகாநாடு மலர் | 1-00 | -25 |
| 41. | ஸுதர்சனர் பதில் (மூன்று ஶதகங்கள்) | 6-00 | 1-00 |
| 42. | What is Visishtadvaita System of Philosophy? (English) | 1-00 | -30 |
| 43. | பராசரவிசிஷ்ட பரமதர்ம சாஸ்திரம் | 3-00 | -50 |
| 44. | பொன்விழா மலர் (ஆழ்வாராசார்யர்கள் வைபவமடங்கியது) | 8-00 | 1-00 |
| 45. | இராமலிங்க ப்ரதிஷ்டை | 0-50 | |
| 46. | ஆண்டாள் சந்திரகலாமாலை | 2-00 | -40 |
| 47. | யதீந்த்ரமததீபிகை—ஸந்மதகாரிகாவளீ | 7-00 | 1-00 |

கிடைக்குமிடம் :— S. கிருஷ்ணஸ்வாமி ஐயங்கார், அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம்,
திருச்சி-620 017.

## ஸ்ரீவிஷ்ணுசித்தவிஜயம் — விஷயஸூசிகை

(இரண்டாமத்தியாயம்—முதற்பாதம்)



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீ விஷ்ணுசித்த விஜயம்

## இரண்டாமத்தியாயம்

## ஸ்ம்ருதீதிஹாஸ நிர்ணயம்

## முதற்பாதம் - ஸ்ம்ருதி நிர்ணயம்

[ ஸுதர்சனம் ஆசிரியர் ஸ்ரீ. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார் ]

## அவதாரிகை

ஸ்ரீவிஷ்ணுசித்த விஜயம் என்னும் பகவத்பரத்வத்தை நிலை நாட்டும் கிரந்தத்தில், வேதவேதாந்த நிர்ணயமாகிய முதலத்தியாயத்தில் பூர்வபா$_4$க$_3$ம் என்றும், உத்தரபா$_4$க$_3$ம் (உபனிஷத்துக்கள்) என்றும் பெயர்பெற்ற இருபகுதிகளையுடைய ஶ்ருதியில் பரம் பொருளாகச் சொல்லப்படுபவன் நாராயணனே என்று பரபக்ஷ நிரஸன பூர்வகமாகவும், எதிரிடமுற்பட்டவர்கள் வாய்திறக்க முடியாதபடியும் நிலைநாட்டப்பட்டது. அதன் அனுபந்தத்தில், உபனிஷத்துக்கள் நூற்றெட்டு என்னும் கற்பனையின் பொய்ம்மை நிரூபிக்கப்பட்டு, தற்போது வழங்குகின்றவற்றில் உண்மையான உபனிஷத்துக்கள் யாவையென்றும் காட்டப்பட்டது. இதுவே போதுமாயிருக்க, மற்ற மூன்று அத்தியாயங்கள் எதற்காக என்னும் ஐயம் எழக்கூடும். முதலில் இவ்வையத்தைத் தெளிவிப்போம்.

" அநந்தா வை வேதா$_3$: " என்று வேதத்திலேயே சொல்லிய படியே வேதங்கள் அளவிடமுடியாதவை. அவ்வேதக்கடலின் ஒரு சில திவலைகளே இப்போது வழங்கிவரும் நாலு வேதங்களும், உபனிஷத்துக்களும். அதனாலேயே இப்போது நாம் காணும் இவ்வேதங்களிலும், உபனிஷத்துக்களிலும் அநந்தனான பரம புருஷனுடைய ஸ்வரூபரூபகுணவிபூ$_4$திகளில் பல விஷயங்கள் மந்த$_3$

மதிகளான நமக்குப் புரியும்படியாக விளக்கப்பட்டிருக்கவில்லை. உதா3ஹரணமாகப் பரமபத3நிலயனான பரமபுருஷன் ஶங்க2சக்ராதி3களான பஞ்சாயுத4ங்களையும், ஸ்ரீகௌஸ்துப4ம் முதலான பல பல திவ்யாப4ரணங்களையும், அநந்தக3ருட4விஷ்வக்ஸேநாதி3 பரிஜனங்களையும உடையவனாயிருக்கிறான என்பதும், ராமகிருஷ்ணாத்3யவதாரங்களில் அவன செய்த திவ்யசேஷ்டிதங்களும் வேத3வேதா3ந்தங்களில் தெளிவாக விளக்கப்பட்டிருப்பதைக் காண்கின்றிலோம். ஆகையால் இக்குறையைத் தீர்க்கவேண்டியது அவசியமாயிருக்கிறது. இதை எப்படித் தீர்ப்பது எனில்: நாம் காணாத வேதவேதா3ந்தபா4க3ங்களைத் தம் ஞானக்கண்ணாலே கண்ட மஹர்ஷிகள், அந்த வேத3வேதா3ந்த பா4க3ங்களில் சொல்லப்பட்ட அர்த்தங்களையும் பெய்து இயற்றியிருக்கும் ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களைக் கொண்டே இக்குறையைத் தீர்த்துக்கொள்ளவேண்டியுள்ளது. இப்படி வழக்கொழிந்த மூலஶ்ருதியைத் தம் தவவலிமையால் ஸ்மரித்து, அவற்றில் சொல்லப்பெற்ற அர்த்தங்களையும் பெய்து இயற்றப்பெற்றவையாகையாலேயே ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்கள் அனைத்துமே ஸ்ம்ருதிகள் எனப்பெயர்பெற்றன.

இங்கு, ஒரு விஷயத்தை முக்கியமாகக் குறிக்கொள்ளவேண்டும். ஸர்வேஶ்வரனையுள்ளிட்ட எந்தச் சேதநனாலும் இயற்றப்படாததாய், அதனாலேயே அபௌருஷேயமென்றும், நித்யமென்றும் புகழ்பெற்ற தான வேதம், இப்படி அபௌருஷேயமாயிருக்கும் காரணத்தாலேயே இருள் துயக்கு மயக்கு மறப்புக்களுக்கு இடமில்லாததாய், ஸ்வத: (இயற்கையிலேயே) பிரமாணமாயிருக்கிறது. ஸ்ம்ருதிகளோவெனில் ஒரு புருஷனால் இயற்றப்பெற்றவையாகையாலே இருள் துயக்கு மயக்கு மறப்புக்களுக்கு இடமேற்படக்கூடியவை. ஸர்வேஶ்வரனே இயற்றிய ஸ்ம்ருதியானாலும், புத்தாவதாரம் முதலானவற்றிற்போலே அஸுரராக்ஷஸர்களை மயக்கும் வார்த்தையாயிருப்பதற்கு இடமுண்டு. ஆகையாலே அவை ஸ்வத: (இயற்கையிலேயே) பிரமாணமாயில்லை. ஒரு மூலஶ்ருதியை அனுமானம் செய்வதன் மூலமே ப்ரமாணமாகின்றன. அதனாலேயே ஸ்ம்ருதிகள் அனுமானமென்றும் வழங்கப்படுகின்றன. இக்காரணத்தாலேயே, 'ப்ரத்யக்ஷமாகக் காணப்படும் தெளிவான பொருளையுடைய ஶ்ருதிக்கு நேரே முரண்பட்ட ஸ்ம்ருதியானது தள்ளத்தக்கதே, அதைக்கொண்டு, மூலமான வேதவாக்யத்தை அனுமானம் செய்யலாகாது' என்று மீமாம்ஸகர்கள் அறுதியிட்டனர்.

"விரோதே₄ த்வநபேக்ஷம ஸ்யாத; அஸதி ஹி அநுமாநம்
[ஜைமினிஸூத்ரம் 1-3-3]
[வேததேதாடு விரோதிக்குமாகில, (ஸ்மருதி) கைவிடத்தக்கதே; விரோதமில்லாவிடிலன்றோ மூலவேதத்தை அனுமானம் செயவது] என்று பூர்வமீமாமஸாஸூத்ரகாரரான ஜைமினி மஹர்ஷி உத்கோஷித்தார். உத்தரமீமாம்ஸையான ப்ரஹமஸூத்ரத்தின இரண்டாவது அததியாயம முதல் அதிகாணமான ஸ்ம்ருதயதி₁கரணத்திலும இவ்விஷயம வலியுறுத்தப்படடது ஆக, "பரத்யக்ஷ ஶ்ருதிககு நேரே விருத்தமாயிராத ஸ்மருதிகளைக் கொண்டு, பரத்யக்ஷஶ்ருதிகளில தெளிவாயிராத அம்ஶஙகளைப் பூர்த்தி செய்து கொள்ளவேண்டும்" என்றதாயிற்று. இவ்வர்த்தங்கள், "இதிஹாஸ புராணம பஞ்சமம்" [ப்₃ருஹ 4-4] [இதிஹாஸபுராணஙகள ஐந்தாம வேதமாகும்]

"ஶ்ருதி: ஸ்மருதிர் மமைவாஜ்ஞா யஸ்தா முல்லங்க₄ய வர்த்ததே।
ஆஜ்ஞாசசே₂தீ₃ மம த்₃ரோஹீ மத₃ப₄க்தோऽபி ந வைஷ்ணவ ||
[விஷ்ணுதாமம 6-31]
[வேதமும், ஸ்மருதிகளும் என் ஆணைகளே; எவன இவற்றை மீறி நடககிறானே, அவன் என ஆணையை மீறி நடக்கையால் எனககு துரோகம செய்கிறான்; அவன் என பக்தனுயிருந்தபோதிலும வைஷ்ணவனாகமாட்டான.]

"இதிஹாஸபுராணாப்₄யாம் வேத₃ம் ஸமுபப்₃ரும்ஹயேத்।
பி₃பே₄தயல்பஶ்ருதாத்₃வேத₃: மாமயம் ப்ரதரிஷ்யதி||"
[பாரதம்; ப்ருஹஸ்பதிஸ்மருதி]
[இதிஹாஸபுராணங்களைக்கொண்டு வேதத்தை விளக்கவேண்டும; வேதபாகங்களில் சிலவற்றை அத்யயனம் செய்துவிட்டு, தான அத்யயனம செய்யாத மற்ற வேதபாகங்களின் பொருளைச்சொல்லும் இதிஹாஸபுராணங்களைக் கேளாதவனைக்கண்டு 'இவன என்னைக் கலககிவிடுவானே' என்று வேதம பயப்படுகிறது.]

"ஶ்ருதிஸ்ம்ருதிவிரோதே₄ து ஶ்ருதிரேவ க₃ரீயஸீ"
[ஜாபாலஸ்ம்ருதி]
[ஶ்ருதிக்கும், ஸ்ம்ருதிக்கும முரண்பாடு ஏற்படடால் ஶ்ருதியே பலமுள்ளது.]

"ஶ்ருதயா ஸஹ விரோதே₄ து ப₃ாத்₄யதே விஷயம் விநா"
[ப₄விஷ்யத்புராணம]

[ஶ்ருதியோடு விரோதம் ஏற்பட்டால், ஸ்ம்ருதியானது பொருளற்றதாகித் தள்ளப்படும்.] என்று சாஸ்திரங்களில் கோஷிக்கப்பட்டன. இக்காரணத்தாலேயே வைதிகர்கள் அனைவரும், மநு, அத்ரி, விஷ்ணு, ஹாரீதர், யாஜ்ஞவல்க்யர், பராசரர் முதலான மஹர்ஷிகள் வேதத்தை ஓட்டியியற்றிய ஸ்ம்ருதிகளையும், ஸ்ரீராமாயண மஹாபாரதங்களாகிற இதிஹாஸங்களையும், புராணங்களில் ஸாத்விகப்பகுதிகளையும் ஆதரிக்கிறார்கள்; கபிலர், கணாதர், அக்ஷபாதர் முதலானோர் இயற்றிய வேதவிருத்தமான ஸ்ம்ருதிகளையும், புராணங்களில் ராஜஸதாமஸப் பகுதிகளையும் அநாதரிக்கிறார்கள். வேதத்தை உபப்ருஹ்மணம் செய்வதற்கு ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களில் ஏதேனும் ஒன்று போராதோ? மூன்றும் வேண்டுமோ? என்னில்: வேதமானது பகவானுக்கு ஆராதனமான கர்மங்களைச் சொல்லும் பூர்வபாகமென்றும், ஆராதிக்கப்படும் அவனைச் சொல்லும் உத்தரபாகமாகிற உபனிஷத்துக்களென்றும் இருவகைப்பட்டிருக்கிறது. வேதத்தின் இவ்விருபகுதிகளையும்

"ப்ராயேண பூர்வபாகார்த்தபூரணம் தர்மஶாஸ்த்ரத: ।
இதிஹாஸபுராணாப்யாம் வேதாந்தார்த்த: ப்ரகாஶ்யதே ॥"

[பெரும்பாலும் தர்மஶாஸ்திரங்களைக்கொண்டு வேதத்தின் பூர்வபாகத்தில் தெளிவாயிராத அர்த்தங்கள் தெளிவுபடுத்தப்படுகின்றன. உத்தரபாகமான வேதாந்தங்களின் அர்த்தம் இதிஹாஸ புராணங்களைக்கொண்டு தெளிவுபடுத்தப்படுகின்றது.] என்கிறபடியே (முறையே) ஸ்ம்ருதிகளும், இதிஹாஸபுராணங்களும் விவரிக்கிறபடியால் இவையனைத்தும் வேண்டியிருக்கிறது. உத்தரபாகத்தை விவரிக்க இதிஹாஸபுராணங்கள் இரண்டும் வேணடுமோ? ஒன்று போராதா என்னில்: இரண்டிலும் ஒவ்வொரு குறையிருக்கையாலும், ஒன்றிலுள்ள குறை மற்றொன்றிலில்லாமையாலும் இரண்டும வேண்டும். அதாவது:—

"ஸங்கீர்ணாஸ்தாமஸாஶ்சைவ ராஜஸாஸ் ஸாத்விகாஸ் ததா ।
கல்பாஶ்சதுர்விதா: ப்ரோக்தா ப்ரஹ்மணோ திவஸாத்யயே ॥
யஸ்மிந் கல்பே து யத் ப்ரோக்தம் புராணம் ப்ரஹ்மணா புரா ।
தஸ்ய தஸ்ய து மாஹாத்ம்யம் தத்ஸ்வரூபேண வர்ண்யதே ॥
அக்நே: ஶிவஸ்ய மாஹாத்ம்யம் தாமஸேஷு ப்ரகீர்த்யதே ।
ராஜஸேஷு ச கல்பேஷு அதிகம் ப்ரஹ்மணோ விது: ॥

ஸங்கீர்ணேஷு ஸரஸ்வத்யா: பித்ரூணுஞ்ச நிக₃த்₃யதே ।
ஸாத்விகேஷ்வத₂ கல்பேஷு மாஹாத்ம்யமதி₄கம் ஹரே: ॥
தேஷ்வேவ யோக₃ஸம்ஸித்₃த₄ா க₃மிஷ்யந்தி பராம க₃திம் ॥''
[மாதஸ்யம்290]

[ பிரமனுக்கு ஒவ்வொரு நாள் முடிந்தவுடனும் ஸங்கீர்ணங்கள், தாமஸங்களா, ராஜஸங்கள், ஸாத்விகங்களா என்று நான்குவிதமான கல்ப(கால)ங்கள் சொல்லப்படுகினறன. ஆதிகாலத்தில் எநதக் கல்பத்தில் எந்தப் புராணம் பிரமனால் உபதேசிக்கப்பட்டதோ, அந்தப்புராணததின்மாஹாத்ம்யம் அநதக் கலபத்தின ஸ்வரூபத்தை யொட்டிச் சொல்லப்படுகிறது. அகனியுடையவும், சிவனுடையவும் பெருமை தாமஸகல்பங்களிலே சொல்லப்பட்டது. ராஜஸகல்பங்களில் பிரமனுடைய பெருமை சொல்லப்பட்டதாக (அறிவாளிகள) அறி கின்றனர்; ஸங்கீர்ண(மிச்ர) கல்பஙகளில் ஸரஸ்வதிக்கும் பித்ருக் களுக்கும பெருமை சொல்லப்படுகிறது. ஸாத்விககல்பஙகளில் பகவான ஹரிககு அதிகமான பெருமை சொல்லப்படுகிறது. அவற்றைப்பற்றிநின்றே யோகிகள் பரமபதமடைகினறனர்.] என்று மாதஸ்யபுராணத்திலும,

''நாத்₃ரியேத புராணுதீ₃ந் ராஜஸாந் தாமஸாம்ஸ்தத₂ா ।
அநீஸாநாம் பரேஸத்வம் வ்ருத₂ா யத்ரோபவர்ண்யதே ॥''

[ராஜஸதாமஸ புராணங்களை ஆதரிக்கக்கூடாது ; ஏனெனில் ; ஈஸ்வரரல்லாத ப்ரஹ்மமருதராதிகளை வீணுக அவற்றில் பரமாத்மா வாகச் சொலலப்படுகிறதனறே] என்று ஸமருதியிலும் சொன்ன படியே புராணஙகளில் பெரும்பகுதி ராஜஸதாமஸஙகளாயிருக்கை யாகிற குறை புராணஙகளுககு உண்டு. இக்குறை இதிஹாஸங் களுக்கு இல்லை. கதைகளையும, ( ஸாமாந்ய ) த₄ர்மார்த்த₂காம புருஷார்த்தங்களையும் விரிவாகச்சொல்லி, அவற்றினிடையே ஒரு சில இடஙகளிலேயே பரமதத்துவமான பகவத்ஸ்வரூபத்தையும், பரமஹிதமான பக்திப்ரபத்திகளையும், பரமபுருஷார்த்தமான மோக்ஷத்தையும் தெளிவுபடுத்துகையாலே, பரமதத்வஹித புருஷார்த்தஙகளை ப்ரத₄ாநப்ரமேயமாகக் கொண்டிராமலிருக்கை யாகிற குறை இதிஹாஸங்களுக்கு உணடு. பரமதததவஹித புருஷார்தததஙகளையே ப்ரத₄ாநப்ரமேயமாகக்கொண்ட புராணங் களுக்கு இக்குறையில்லை. ஆகையாலே வேதாந்தார்த்தததை விளக்க இரண்டும வேணடும். இப்படி இரண்டும் வேண்டுமாயினும் இவ்

விரண்டினுள்ளும், பரிக்3ரஹாதிஶயம் (சாஸ்திரங்களாலும் சான்ரோர்களாலும் விசேஷமாகக் கொண்டாடப்படுகை), நடுநிலைமை, இயற்றியவர்கள் பரமாப்தர்களாயிருக்கை முதலான பல காரணங்களாலே இதிஹாஸங்கள் புராணங்களைக் காட்டிலும் ப்ரப3லமாகவுமிருக்கின்றன. இவ்வர்த்தங்களையே "வேதார்த்தமறுதியிடுவது ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களாலே, ஸ்ம்ருதியாலே பூர்வப4ாக3த்தில் அர்த்தம் அறுதியிடக்கடவது; மற்றையிரண்டாலும் உத்தரபாகத்தில் அர்த்தம அறுதியிடக்கடவது; இவையிரண்டிலும் வைத்துக்கொண்டு இதிஹாஸம் ப்ரப3லம். அத்தாலே அது முற்பட்டது" என்று ஸ்ரீவசநபூஷணத்தின் தொடக்கத்தில் பிள்ளைலோகாசார்யரும், அதன் வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகளும் தெளிவாக அருளிச்செய்தனர்.

வேதத்தின் பூர்வபாகத்தை விவரிக்கவந்த ஸ்ம்ருதிகளில் பெரும்பாலும் பகவதாராதனமான கர்மங்களைப் பற்றியே பேசியிருந்தாலும், ஆராதிக்கப்படும் பகவத்ஸ்வரூபத்தைப்பற்றியும் ஆங்காங்கு பேசியிருக்கிறதாகையாலே, பகவத் பரத்வத்தை நிலைநாட்டவந்த விஷ்ணுசித்தவிஜயமெனனும் இந்நூலில் இவ்வத்தியாயத்தின் முதல் பாதத்தில் ஸ்ம்ருதிகளின நிர்ணயம் விவரிக்கபபடுகிறது. மேல் பாதங்களில், உத்தரபாகத்தை விவரிக்கும் இதிஹாஸ புராணங்களுக்குள் ப்ரப3லமான இதிஹாஸங்களின நிர்ணயம் காட்டப்படும். அவ்விதிஹாஸங்களுள் ஶ்ரேஷ்ட2மான ஸ்ரீராமாயணத்தின் நிர்ணயம இரண்டாம்பாதத்திலும், மற்ற இதிஹாஸமான மஹாபாரதத்தின நிர்ணயம் மூன்றும்பாதத்திலும மஹாப4ாரத ஶேஷமான ஹரிவமசத்தின் நிர்ணயம் கடைசிபாதத்திலும் காட்டப்படும், மூன்றுமத்தியாயத்தின் நான்கு பாதங்களிலும் இதிஹாஸங்களுக்கு அடுத்தபடி ப்ரமாணமான புராணங்களின நிர்ணயம் காட்டப்படும். அவற்றிற்குள்ளும்,

"வைஷ்ணவம் நாரதீயஞ்ச தத2ா ப4ாக3வதம் ஶுப4ம்|
கா3ருட3ஞ்ச தத2ா பாத்3மம் வாராஹம் ஶுப4த3ர்ஶநே|
ஸாத்விகாநி புராணாநி விஜ்ஞேயாநி ஶுப4ாநி வை||"
[பாத்ம-உத்தர 263-83]

[(1) வைஷ்ணவம், (2) நாரதீயம், (3) பாகவதம் (4) காருடம் (5) பாத்மம (6) வாராஹம் என்னும் ஆறு அழகிய புராணங்களும ஸாத்விக புராணங்களாகையாலே மோக்ஷமளிப்பவை.] முதலான ப்ரமாணங்களிற் சொல்லியபடியே ஸத்வகு3ணப்ரத4ானங்களாகையாலே முழுவதும் ஆதரிக்கத்தக்க ஆறு புராணங்களின் நிர்ணயம் முதற்பாதத்திலும்,

"ப்₃ரஹ்மாண்ட₃ம் ப்₃ரஹ்மவைவர்த்தம் மார்க்கண்டேயம் ததை₂வ ச|
ப₄விஷ்யம் வாமநம் பா₃ராஹ்மம் ராஜஸாநி நிபோ₃த₄ மே||"
[பாத்ம-உத்தர 263-84]

[ (1) ப்ரஹ்மாண்டம் (2) ப்ரஹ்மவைவர்த்தம் (3) மார்க்கண்டே₃யம (4) பவிஷ்யம் (5) வாமனம (6) பா₃ராஹ்மம என்னும ஆறு புராணங்களும ராஜஸங்களென்று அறிவாயாக ] முதலான ப்ரமாணங்களிற் சொல்லியபடியே ரஜோகுணப்ரத₄ானமான ஆறு புராணங்களின நிர்ணயம் இரண்டாம் பாதத்திலும,

"மாத்ஸ்யம் கௌர்மம் தத₂ா லைங்க₃ம் சைவம் ஸ்காந்த₃ம் ததை₂வ ச|
ஆக்₃நேயஞ்ச ஷடே₃தாநி தாமஸாநி நிபோ₃த₄ மே||"
[பாத்ம-உத்தர 263-81]

[(1)மாத்யஸ்யம் (2)கௌாமம் (3) லைங்கம் (4) சைவம் (5) ஸ்காந்த₃ம் (6) ஆக்₃நேயம் என்னும் ஆறு புராணங்களையும் தாமஸ புரணங்களாக அறிவாயாக] முதலான பரமாணங்களிற் சொல்லியபடியே தமோகு₃ணப்ரத₄ாநமான தாமஸபுராணங்களின நிர்ணயம் மூனறும் பாதத்திலும காட்டப்படும.

"ஸாத்விகா மோக்ஷத₃ா: ப்ரோக்தா ராஜஸா: ஸ்வர்க்₃க₃தா: ஶுப₄ா:|
ததை₂வ தாமஸா தே₃வி நிரயப்ராப்திஹேதவ: ||"
[பாத்ம-உத்தர 263-85]

[ ஸாத்விக புராணங்கள மோக்ஷத்தையும், ராஜஸ புராணங்கள ஸ்வர்க்கத்தையும், தாமஸ புராணங்கள் நரகத்தையும அளிக்கும். ] என்று இம்மூவகைப் புராணஙகளின பலமும் சொலலபபட்டது. ருத்₃ராதி₃பகதர்கள் அந்தந்த தெய்வங்களிடமே ஈடுபடுவதற்காக அநதந்த தேவாந்தரஙகளுககுப் பெரும்பாலும் பரத்வஞ் சொல்லிய போதிலும், இந்த ராஜஸ தாமஸ புராணஙகளிலும, உண்மையை அடியோடு மறைக்கமுடியாமல், ஆங்காங்கு நாராயணபரத்வமே கோஷிக்கப்பட்டிருக்கிறது எனனும் பரமார்த்தம் இவ்விருபாதங்களிலும் விளககப்படும. இப்படிப் பதினெட்டு மஹாபுராணங்களின் நிர்ணயததையும் முதல மூன்று பாதங்களிலும் காட்டியபின்பு, பரிக்₃ரஹாதிஶயமினமை முதலானவற்றாலே மஹாபுராணங்களைக் காட்டிலும் துர்ப்ப₃லமான உபபுராணங்களின் நிர்ணயம் நாலாவது (கடைசிப்) பாதத்தில காட்டப்படும்.

இப்படி மூன்று அத்தியாயங்களாலே ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸ புராணநிர்ணயங்களைக் காட்டியபின்பு. வைதிகநிர்ணயமாகிற

நாலாவது அத்தியாயம் எதற்கெனில்: "ஶ்ருதி: ஸ்ம்ருதி: ஸதா₃சார:" [யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி 1-7] முதலான ப்ரமாணங்களில், ஶ்ருதி ஸ்ம்ருதிகளுக்கு அடுத்தபடியாக அந்த ஶ்ருதிஸ்ம்ருதிகளை அறிந்த நல்லோர்களின அனுஷ்டானமும் ப்ரமாணமாக எடுக்கப்படுகிறது. அந்த ஶ்ருதிஸ்ம்ருதிகளும், "ப்₃ரஹ்மவாதி₃நோ வத₃ந்தி" முதலான விடங்களில் தத்வதர்ஶிகளின் வாக்கைத் தாம் சொன்ன அர்த்தத்துக்கு ஸம்வாத ப்ரமாணமாக எடுக்கின்றன. மேலும், கலியின் கோலாஹலத்தாலே ஶ்ருதிஸ்ம்ருதிகளில் பல இடைச்செருகல் எறிதல்கள் ஏற்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். உபனிஷத்துக்களிலேயே பல மாறுபாடுகள் விளைக்கப்பட்டிருப்பதையும், எவரும் தொட்டறியாத பல உபனிஷத்துக்கள் ஐந்நூறு வருடங்கட்குள் கற்பிக்கப் பட்டிருப்பதையும் காண்கிறோம். இவற்றில் எது உண்மை எது பொய் என்று வைதி₃கர்களான பண்டைச் சான்றோர்களின வாக்கைக்கொண்டே நிர்ணயிக்கவேண்டியிருக்கிறது. சிவபரத்துவத்தைக் காட்டும் அடிமுடிதேடியகதை முதலானவை பண்டைச் சான்றோர்கள் பலரால் ஆதரிக்கப்படவில்லையெனபதைக்கொண்டே அவை பொய்யானவை என்று அறுதியிடவேண்டியுள்ளது. இதற்காகவே ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸ நிர்ணயங்களுக்குப் பின் கடைசியான நாலாவது அத்தியாயத்தில் வைதிகநிர்ணயம வெளியிடப்படும்.

இவ்வைதிகர்களில் தலைசிறந்தவர்களாய், பரதத்வபரமஹித பரமபுருஷார்த்தங்களை உள்ளபடி ஸாக்ஷாத்கரித்தவர்களான ஆழ்வார்களும், ஆசார்யர்களுமடங்கிய விசிஷ்டாத்வைதிகளின நிர்ணயம் முதற்பாதத்திலும், இவர்களுக்கு மிக நெருங்கிய த்வைதிகளின் நிர்ணயம் இரண்டாம பாதத்திலும், ஆராய்ச்சியின்மையாலே பல அபார்த்தங்களைச் சொன்னபோதிலும், தம் காலத்தில் மறுக்கவொண்ணுதபடி ஸுப்ரஸித்தமாயிருந்த நாராயணபரத்வத்தைத் தம் நூல்களில் கல்வெட்டாகப் பொறித்துவைத்திருக்கும் ஆதிசங்கரர் முதலான ப்ராசீநாத்வைதாசார்யர்களின் நிர்ணயம் மூன்றும் பாதத்திலும், இப்படி மத ப்ரவர்த்தகர்களாயிராதபோதிலும், அந்தந்தக் காலத்திலுள்ள சான்றோர்களின் கருத்தைக் காட்டும் காவியங்களை எழுதிவைத்துள்ள கவிகளின் நிர்ணயம் கடைசியான நாலாம் பாதத்திலும் காட்டப்பெற்று உத்தரமீமாம்ஸா ஶாஸ்திரத்தைப்போலே நாலு அத்தியாயமும், பதினாறு பாதங்களும் கொண்ட இந்நூல் இனிது நிறைவுபெறும். தன்பெருமையைப் பேசவென்றே ஏற்பட்ட இந்நூலை ஸத்யஸங்கல்பனான பரமபுருஷன் குறைவறத் தலைக்கட்டிவைப்பானாக. இனி, இவ்விரண்டாமத்தியாயத்தின் முதற்பாதத்தில் ஸ்ம்ருதிகளின் நிர்ணயத்தைக் காட்டுவோம்.

அவதாரிகை முற்றிற்று.

## ஸ்ம்ருதிவிசாரம்

மந்வாதி₃ஸ்ம்ருதிகள் என்றும், ஶ்ரௌத ஸூத்ரங்கள் என்றும், த₄ர்மஸூத்ரங்கள் என்றும, க₃ருஹ்யஸூத்ரங்கள் என்றும், பரமைகாந்திகளின த₄ர்மங்களை விவரிக்கும் பரமத₄ர்மஶாஸ்த்ரங்கள என்றும் ஸ்மருதிகள் பல வகைப்படும. இவற்றில பரம்பொருளைப்பற்றிய நிர்ணயம் முதலிற்சொன்ன மநவாதி₃ஸ்ம்ருதிகளிலும், கடைசியிற் சொன்ன பரமத₄ர்மஶாஸ்திரங்களிலுமே விஶேஷமாகக் காணப்படுகிறது. இவவிரண்டினிடையேயும ஸாமாந்ய த₁ாமங்களைப் பரகக்பேசும் மநவாதி₃ஸ்ம்ருதிகளே நெடுநகாலமாகப் பல ஸ்ம்ருதி புராணங்களிலும, பறபல மதத்தைச் சேர்ந்த பணடைச் சானறோர்கள் பலராலும எடுததுக கையாளபபட்டிருக்கிறபடியால அவற்றுக்குப் பரிக்₃ரஹாதிஶயம் உண்டு. பரமைகாந்திகளின விஶேஷத₁ர்மங்களை விளக்கும் பரமத₄ர்மஶாஸ்திரங்களுக்கு அத்தகைய பரிக₃ரஹாதிஶயம் இலலாவிடிலும பூர்வாசார்யர்களாலும, த₄ர்மஶாஸ்திரவிசாரத்தைச் செய்யும நிப₃ந்த₄காரர்களாலும் அவை எடுக்கபபட்டிருக்கையாலே அவற்றுக்கும ப்ராமாணயமுணடு. ஆகையால் மந்வாதி ஸ்மருதிநிர்ணயத்துககுப் பின அவைறறிலுளள விஶேஷதர்மஙகளும இங்கு எடுத்துக்காட்டப்படும. முதலில பரிக₃ரஹாதிஶயததையுடைய மந்வாதிஸ்மருதிகளைக கொணடு பரததவநிஷ்கர்ஷததைச் செய்யக் கடவோம். அநத ஸ்மருதிகள்தான யாவை? என்னும கேளவி முதலில் எழுகின்றது. யாஜ்ஞவலக்ய ஸ்மருதியின தொடக்கததில் (1-4, 5)

"மந்வத்ரி விஷ்ணு ஹாரீத யாஜ்ஞவல்க்யோஶநாங்கி₃ரா: |
யமாபஸ்தம்ப₃ஸம்வர்த்தா: காத்யாயநப்₃ருஹஸ்பதீ ||
பராஶரவ்யாஸ ஶங்க₂லிகி₂தா த₃க்ஷகௌ₃தமௌ |
ஶாதாதபோ வஸிஷ்ட₂ஶ்ச த₄ர்மஶாஸ்த்ரப்ரயோஜகா: ||"

[ (1) மனு (2) அத்ரி (3) விஷ்ணு (4) ஹாரீதர் (5) யாஜ்ஞவல்க்யர் (6) உஶநா (7) அங்கி₃ரா (8) யமர் (9) ஆபஸ்தமபர் (10) ஸமவர்த்தர் (11) காத்யாயனா (12) ப்₃ருஹஸ்பதி (13) பராஶரர் (14) வ்யாஸர் (15) ஶங்க₂ர் (16) லிகி₂தர் (17) த₃க்ஷர் (18) கௌ₃தமர் (19) ஶாதாதபா (20) வஸிஷ்டர் என்னும இருபது பேர் த₄ாமஶாஸ்திரம் எழுதியவர்கள.] என்று பெயரிட்டு இருபது ஸ்ம்ருதிகள எடுக்கப்பட்டன. அபரார்க்கர் எனனும

நிப₃ந்த₄காரர் எடுத்த கௌ₃தமஸூத்ரத்திலும், வீரமித்ரோத₃யம் என்னும் நிப₃ந்த₄க்ரந்தத்தில் எடுக்கப்பட்ட ஶங்க₂லிகி₂தஸூத்ரத்திலும், பராஶரஸ்ம்ருதியிலும் (1-1-13, 14, 15) இந்த ஸ்ம்ருதிகளில் பெரும்பான்மையானவை எடுக்கப்பட்டன. காருடபுராணத்தில் (93-4, 5, 6 ஜீவாநந்தர்பதிப்பு 223-ம் பக்கம்,)

"வக்தாரோ த₄ர்மஶாஸ்த்ராணும் மநுர் விஷ்ணுர்
யமோऽங்கி₃ரா: ।
வஸிஷ்ட₂த₃க்ஷஸம்வர்த்த ஶாதாதப பராஶரா: ।
ஆபஸ்தமபே₃ாஶநோவ்யாஸா: காத்யாயநப்₃ருஹஸ்பதீ ॥
கௌ₃தம: ஶங்க₂லிகி₂தௌ ஹாரீதோத்ரிரஹம் தத₂ா ।
ஏதே விஷ்ணும் ஸமாராத்₄ய ஜாதா த₄ர்மோபதே₃ஶகா: ॥"

என்று இந்த ஸ்ம்ருதிகர்த்தாக்களின் பெயர்கள் எடுக்கப்பட்டு, இவர்கள் *பரமபுருஷனை விஷ்ணுவை ஆராதித்தமையாலேயே த₄ர்மஶாஸ்திரம செய்ய வல்லவரானார்கள் என்று கூறப்பட்டது. இந்த ஸ்ம்ருதிகள் அனைத்திலும் பரம்பொருளைப்பற்றிய பேச்சில்லை; சிலவற்றிலேயே பரதத்வநிஷ்கர்ஷமுள்ளது. இதற்குக் காரணம் புராணங்களிற்போலே ஸ்ம்ருதிகளிலும் ஸாத்விகராஜஸ தாமஸப் பிரிவுகள் இருக்கையே என்று பாத்மபுராணத்தில் விளக்கப்பட்டது. அப்புராணத்தில் (பூனு ஆநந்தா₃ஶ்ரமப்பதிப்பில் உத்தரகண்டம் 263 ம் அத்தியாயத்தில்) ஓர் அழகான விருத்தாந்தம் விவரிக்கப் படுகிறது:— பார்வதீ தேவியானவள். சிவப்பிரானைப்பார்த்து, "பாஷண்டர்களோடு பேசவே கூடாதென்று நீர் சொன்னீர்; அப்பாஷண்டர்களின் லக்ஷணம் என்ன" என்று கேட்டாள்; "நாராயணனைக்காட்டிலும் வேறான் ஒரு தேவனைப் பரமாத்மாவாக யார் கூறுகிறார்களோ, அவனோடு ஸமமாக ப்₃ரஹ்மருத்ராதி₃ தேவதைகளை யார் சொல்லுகிறார்களோ, கபாலம், ப₄ஸ்மம (சாம்பல்), எலும்பு முதலான அவைதிகமான அடையாளங்களை யார் தரிக்கிறார்களோ, ஸந்யாஸாஶ்ரமத்துக்குத்தகுதியில்லாமலே சடை மரவுரிகளை யார் தரிக்கிறார்களோ. அவைதிகமான பல செயல்களை யார் செய்கிறார்களோ அவர்கள் பாஷண்டிகள்" என்று தொடங்கி விரிவாகப் பாஷண்டிகளின் அடையாளங்களைச் சொன்னார் சிவன். இதைக்கேட்ட பார்வதி, "இதுவே பாஷண்டிகளின் லக்ஷணமாகில், 'நீர் ஏன் கபாலம்; பஸ்மம, எலும்பு முதலான அந்த வேதநிந்திதமான அடையாளங்களை தரிக்கிறீர்' என்று கேட்டாள்; இப்படிக்

கேட்கப்பட்ட முக்கட்பிரான் ஒருவருமில்லாத இடத்திற்குப் பார்வதியை அழைத்துச்சென்று, 'நீ இதை எவரிடமும் சொல்லாதே' என்று ஆணையிட்டு "முற்காலத்தில் நமுசி முதலான அஸுரர்கள் வேததர்ம நிஷ்டர்களாய்; விஷ்ணு பக்தர்களாயிருந்தமையாலே வெல்லவரிய ப$_3$ல வீர்யங்களை உடையவர்களாயிருந்தனர். அவர்களால் அடக்கப்பெற்ற தேவர்கள் பரமபுருஷனை விஷ்ணுவிடம் முறையிட்டனர். விஷ்ணுவானவர் என்னைப் பார்த்து, 'தேவத்வேஷிகளான இவ்வஸுரர் அவைதிகர்களாய், எனனிடம் பக்தியற்றவர்களாகி பலங்குறைந்தவர்களாவதற்காக நீ நேரேயும், பல அந்தணர்களை ஆவேசித்து நின்றும், பல பாஷண்ட ஶாஸ்திரங்களையும், தாமஸபுராணங்களையும் செய்து, அவற்றில கபால ப$_4$ஸ்மாஸ்தி$_2$த$_4$ாரணம முதலான பாஷண்ட$_3$த$_4$ர்மங்களை அவர்களுக்கு உபதேசிப்பாயாக' என்று நியமிக்க, 'இதனால் எனக்குப் பெரும பாவம் வந்துசேருமே' என்று நான் நடுங்க, 'தேவதைகளின் நலத்துக்கும, பாவிகளான அஸுரர்கள் அழிவதற்கும நீ இப்படிச் செய்தே தீரவேண்டும. ஆயினும், இதற்கு ப்ராயச்சித்தமாக என்னை நெஞ்சில தியானித்து, எனனுடைய தாரக மந்திரத்தை ஜபித்துக்கொண்டேயிருந்தால உன்னிடம் பாபம ஒட்டாது' என்று நியமித்தார் நானும அப்படியே செய்தேன" என்று கூறினார் சிவன் இதை கேட்ட பார்வதீதேவியால்,

"தாமஸாநி ச ஶாஸ்த்ராணி ஸமாசக்ஷ்வ மமாநக$_4$ |
ஸம்பரோக்தாநி ச யைர் விப்ரைர் ப$_4$க$_3$வத்$_3$ப$_4$க்திவர்ஜிதை: ||
தேஷாம நாமாநி க்ரமஶ. ஸமாசக்ஷ்வ ஸுரேஶ்வர ||"

[குற்றமற்ற தேவா தலைவனே! பகவத்பக்தியற்ற அந்தணர்களாலே சொல்லப்பெற்ற தாமஸ ஶாஸ்திரங்களை வரிசையாய்ப் பெயரிட்டு எனக்குச் சொல்லுவீராக.] என்று பிரார்த்திக்கப்பட்ட முக்கட்பிரான்,

"ஶ்ருணு தே$_3$வி ப்ரவக்ஷ்யாமி தாமஸாநி யதா$_2$க்ரமம் |
யேஷாம் ஸ்மரணமாத்ரேண பாதித்யம ஜ்ஞாநிநாமபி ||
ப்ரத$_2$மம ஹி மயா சோக்தம் ஶைவம் பாஶுபதாதி$_3$கம் |
மச்ச$_2$க்த்யாவேஶிதைர் விப்ரை: ப்ரோக்தாநி ச தத: ஶ்ருணு||
கணாதே$_3$ந ச ஸம்ப்ரோக்தம் ஶாஸ்த்ரம வைஶேஷிகம் மஹத் |
கௌ$_3$தமேந தத$_2$ா ந்யாயம ஸாங்க்$_2$யம து கபிலேந வை ||

தி₄ஷணேந தத₂ா ப்ரோக்தம் சார்வாகமதிக₃ர்ஹிதம்।
தைத்₃யாநாம் நாஶநார்த்த₂ாய விஷ்ணுநா பு₃த்₃த₄ரூபிணா ॥
பௌ₃த்₃த₄ ஶாஸ்த்ரமஸத் ப்ரோக்தம் நக்₃நநீலபடாதி₃கம்।
மாயாவாத₃மஸச்ச₂ாஸ்த்ரம் ப்ரச்ச₂ந்நம் பௌ₃த்₃த₄முச்யதே ॥
மயைவ கதி₂தம் தே₃வி கலௌ ப்₃ராஹ்மணரூபிணா।
அபார்த்த₂ம் ஶ்ருதிவாக்யாநாம் த₃ர்ஶயல் லோகக₃ர்ஹிதம் ॥
கர்மஸ்வரூபத்யாஜ்யத்வமத்ர வை ப்ரதிபாத்₃யதே।
ஸர்வகர்மபரிப்₄ரஷ்டம் வைத₄ர்ம்யத்வம் தது₃ச்யதே ॥
பரேஶஜீவயோரைக்யம் மயா து ப்ரதிபாத்₃யதே।
ப்₃ரஹ்மணோऽபி ஸ்வயம் ரூபம் நிர்கு₃ணம் வக்ஷ்யதே மயா ॥
ஸர்வஸ்ய ஜக₃தோऽப்யத்ர மோஹநார்த்த₂ம் கலௌ யுகே₃।
வேதா₃ர்த்த₂வந்மஹாஶாஸ்த்ரம் மாயயா யத₃வைதி₃கம் ॥
மயைவ ரக்ஷ்யதே தே₃வி ஜக₃தாம் நாஶகாரணாத்।
த்₃விஜந்மநா ஜைமிநிநா பூர்வம் வேத₃மபார்த்த₂கம் ॥
நிரீஶ்வரேண வாதே₃ந க்ருதம் ஶாஸ்த்ரம் மஹத்தரம।

*[தேவியே! தாமஸஶாஸ்திரங்களை முறைப்படி சொல்லுகிறேன் கேளாய்! இந்தத் தாமஸஶாஸ்திரங்களை (ஆநுகூல்யபு₃த்தி₄யோடு) நினைத்தால்கூட அறிவாளிகளுக்கும் பதிதத்தன்மை ஏற்படும். முதன் முதலில் பாசுபதம் முதலான சைவாகமங்கள் என்னால் நேரே சொல்லப்பட்டன. என் சக்தியால் ஆவேஶிக்கப்பட்ட அந்தணர்களாலே உபதேசிக்கப்பட்ட தாமஸ சாஸ்திரங்களை அடுத்தபடி கூறுகிறேன் கேளாய்! வைஶேஷிகம் என்னும் பெரிய ஶாஸ்திரம கணாத₃ராலே கூறப்பட்டது; கௌதமராலே ந்யாயஶாஸ்திரம கூறப்பட்டது (இவ்விரண்டும் பரமாணுவை ஜகத்காரணமாகச் சொல்கின்றவை.) கபிலரால் (மூலப்ரக்ருதியை ஜகத்காரணமாகச் சொல்லும்) ஸாங்க்₂யஶாஸ்திரம் செய்யப்பட்டது. தேவகுருவான ப்ருஹஸ்பதியால் மிகத்தாழ்ந்ததான சார்வாக ஶாஸ்திரம் இயற்றப் பட்டது. திரிபுராசுரர்களை அழிப்பதற்காக புத்தாவதாரம் எடுத்த விஷ்ணுவாலே நக்₃னம் நீலபடம முதலான பிரிவுகளையுடைய பௌத்தம் என்னும் தீய சாஸ்திரம் உபதேசிக்கப்பட்டது. மாயா வாதம் என்னும் தீய ஶாஸ்திரம மறைந்துநிற்கும் பௌ₃த்₃த₄மதம் எனப்படுகிறது. கலியுகத்தில் அந்தணவுருக்கொண்ட என்னாலேயே அது சொல்லப்பட்டது. வேதவாக்யங்களுக்கு அனைவரும் இகழத் தக்க அவப்பொருள்களை அந்த மாயாவாதம் காட்டும். 'அந்த*

மதத்தில் கர்மதத்திற்கு ஸ்வரூபத்யாகமே சொல்லப்படும். அதில், எல்லாக் கர்மங்களினின்றும் நீங்கிய ஸந்யாஸாஶ்ரமம் சொல்லப் படும். அதில் ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவுக்கும் என்னால் ஸ்வ ரூபைக்யம் கூறப்படுகிறது. ப்ரஹ்மத்திற்கு நிர்க்குணஸ்வரூபமும் என்னால் சொல்லப்படுகிறது கலியுகத்தில் தீயவர்கள் அனைவரும் மயங்குவதற்காக அவைதிகமான இந்தப் பெரிய ஶாஸ்திரம் வேதார்த்தம் போலே என்னால் வஞ்சனையால் அவர்களை அழிப்ப தற்காக ரக்ஷிக்கப்படப்போகிறது. ஜைமிநியென்னும் அந்தணராலே வேதத்தின் பூர்வபாகமாகிற பெரிய சாஸ்திரம் நிரீஶ்வரவாதம் செய்யப்பெற்று அவப்பொருளுடையதாகச் செய்யப்பட்டது.] என்று தொடங்கிப் பாவிகளை அழிப்பதற்காக சைவாகமம் மாயாவாத ஶாஸ்திரம் முதலான அஸச்சாஸ்திரங்களைத்தான் நேரேயும், பல அந்தணர்களின் உட்புகுந்தும் இயற்றியிருப்பதை ரஹஸ்யமாகப் பார்வதிக்குச் சொல்லி, * பதினெட்டு மஹாபுராணங்களில் ஸாத்விக ராஜஸதாமஸப்பிரிவைச் சொல்லி

"வாஸிஷ்டஞ்சைவ ஹாரீதம் வ்யாஸம் பாராஶரம் ததா ।
பாரத்வாஜம் காஶ்யபம் ச ஸாத்விகா முக்திதா: ஶுபா: ॥
யாஜ்ஞவல்க்யம் ததாऽऽத்ரேயம் தைத்திரம் தாக்ஷமேவ ச ।
காத்யாயநம் வைஷ்ணவம் ச ராஜஸா: ஸ்வர்க்கதா: ஶுபா:॥
கௌதமம் பார்ஹஸ்பத்யஞ்ச ஸாமவர்த்தம் ச யமம் ஸ்ம்ருதம் ।
ஶங்கம் சௌஶநஸம்தேவி தாமஸா நிரயப்ரதா: ॥
கிமத்ர பஹுநோக்தேந புராணேஷு ஸ்ம்ருதிஷ்வபி ।
தாமஸா நரகாயைவ வர்ஜயேத் தாந விசக்ஷண: ॥

[ (1) வாஸிஷ்டம், (2) ஹாரீதம், (3) வ்யாஸம், (4) பாராஶரம் (5) பாரத்வாஜம், (6) காஶ்யபம் என்னும் ஆறு ஸ்ம்ருதிகளும் ஸத்வகுணப்ரதானரால் இயற்றப்பெற்றவை; (அதனாலேயே) சுபமானவையாய், பின்பற்றுகிறவர்களுக்கு முக்தியளிப்பவையா யிருப்பவை. (1) யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி (2) அத்ரிஸ்ம்ருதி (3) தைத்திரஸ்ம்ருதி (4) தக்ஷஸ்ம்ருதி (5) காத்யாயனஸ்ம்ருதி (6) விஷ்ணுஸ்ம்ருதி என்னும் ஆறும் ரஜோகுணப்ரதானரால் இயற்றப் பெற்றவையாகையாலே பின்பற்றுகிறவர்களுக்கு ஸ்வர்க்கமளிப

---

* புராணங்களில் ஸாத்விக ராஜஸ தாமஸங்கள் எவை என்பதைக் காட்டும் ஶ்லோகங்கள் அவதாரிகையில் எடுக்கப்பட்டன.

பவையாயிருப்பவை. (1) கௌதமஸ்ம்ருதி (2) ப்ருஹஸ்பதிஸ்ம்ருதி (3) ஸம்வர்த்தஸ்ம்ருதி (4) யமஸ்ம்ருதி (5) ஶங்கஸ்ம்ருதி (6) ஔஶநஸஸ்ம்ருதி என்னும் ஆறும தமோகுணப்ரதாநர்களால் இயற்றப்பெற்றவையாகையாலே பின்பற்றுகிறவர்களுக்கு நரகத்தை அளிப்பவையாயிருப்பவை பல சொல்லி என? புராணங்களிலும், ஸ்ம்ருதிகளிலும் தாமஸங்கள் தம்மைப் பின்பற்றுவார்க்கு நரகத்தையே அளிக்குமாகையால், அறிவாளியாயிருப்பவன் அவற்றை விலக்கவேண்டும்.] என்று ஸ்ம்ருதிகளிலும் ஸாத்விக ராஜஸதாமஸப்பிரிவைச் சொல்லி, தாமஸஸ்ம்ருதிகளும் அடியோடு விலக்கத்தக்கவை என்று உத்கோஷித்தார்.

யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதியில் எடுக்கப்பட்ட இருபது ஸ்ம்ருதிகளும், "மன்மதநாததத்தர் (ஶாஸ்திரி) M. A." என்பவரால் இந்த நூற்றண்டின தொடக்கத்தில் ஆங்கில மொழிபெயர்ப்போடு கல்கத்தாவில் அச்சிடப்பெற்றிருக்கின்றன. இவற்றில் பெரும்பான்மையான ஸ்ம்ருதிகள் பம்பாய் வெங்கடேஶ்வர ஸ்டீம் பிரஸ்ஸிலும், பூநா ஆநந்தாஶ்ரமத்தில், ஸ்ம்ருதிஸமுச்சயம்" என்னும் பெயரிலும் அச்சிடப்பெற்றுள்ளன. மாக்ஸ் முல்லர் என்னும் ஐரோப்பியர் இந்த ஸ்ம்ருதிகளில் பலவற்றை "The Sacred books of the east" என்னும் வரிசையில், ஜூலியஸ் ஜாலி, ஜார்ஜ் பூலர் முதலான ஐரோப்பிய அறிஞர்கள் பலரைக்கொண்டு சென்ற நூற்றண்டின் இறுதியில் ஆங்கிலத்தில் மொழிபெயர்ந்து வெளியிட்டிருக்கிறார். நிற்க, ஸௌத்ரஶைலியில் அமைந்த ஶங்கலிகித ஸ்ம்ருதியொன்று இருந்ததாகப் பழைய நிபந்தநூல்களிலிருந்து தெரிகிறது. இப்போது அச்சிடப்பட்டிருக்கும் ஶ்லோகரூபமான ஶங்கலிகிதஸ்ம்ருதிகள் அதிலும் வேறுபட்டவையென்று அறியத்தக்கது. ஶ்லோகரூபமான ஶங்கஸ்ம்ருதியில் வேதவிருத்தமான பகுதிகள் யாதொன்றும் இல்லாமையாலும், வேதத்தோடு அது மிகவும் ஒத்திருக்கையாலும், கீழே எடுத்த பாத்மபுராணஶ்லோகத்தில் தாமஸம் என்று கழிக்கப்பட்டது ஸௌத்ரஶைலியில் அமைந்திருந்த ஶங்கஸ்ம்ருதியே என்று அறியத்தக்கது. இவ்வண்ணமே ப்ருஹஸ்பதிஸ்ம்ருதியும் ஸௌத்ரசைலியில் ஒன்று அமைந்திருந்ததாகத் தெரிகிறது. அதுவே சார்வகமதத்தை உபதேசிப்பது; "அத லோகயதம், ப்ருதிவ்யாபஸ் தேஜோவாயுரிதி தத்த்வாநி, தேப்யஶ் சைதந்யம் கிண்வாதிப்யோ மதஶக்திவத்" [இனி, லோகயாத மதம் விவரிக்கப்படுகிறது. பூமி, ஜலம், அக்னி, வாயு என்று

நாலு பொருளகளே உள்ளன. கள் முதலான திரவியங்களில் மத₃ சக்தி உண்டாவதுபோலே இநத நாலு பூதங்களுடைய சேர்த்தியிலே அறிவு எனறு ஒரு தனமை பிறக்கிது.] எனறு தொடங்குவதாக ஈட்டின் ப்ரமாணத்திரட்டு முதலான ப்ராசீனநூல்களிலே எடுக்கப்பட்ட அந்த நாஸ்திகநூலே பாத்மபுராணத்தில தாமஸமாகக் கழிக்கப்படடதென்று உணரத்தககது. மந்மதநாததத்தர் முதலானோரால் அச்சிடபபெற்ற இருபது ஸ்ம்ருதிகளில் சேர்ந்த ஶ்லோகரூபமான ப்₃ருஹஸ்பதிஸ்மருதியும, பல பூர்வாசார்யர்களாலும, ப்ராசீநநிப₃ந்த₄கார்களாலும கையாளப்பட்டதும, இப்போது லுப்தமாயிருபபதும'பரோடா ஓரியண்டல் இன்ஸ்டிடயூட்' எனனும ஸதாபனத்தால காசி ஹிந்து ஸாவகலாசாலைப்பேராசிரியர் ஸ்ரீ. K. V. ரங்கசாமி அயயங்காரைக்கொண்டு புநருத்₃த₄ாரணம செயயப்பெற்று (GAEKWAD'S ORIENTAL SERIES. VOLUME LXXXV) பதிப்பிக்கபபெற்றிருப்பதுமான ஶ்லோகரூபமான ப்₃ருஹஸ்பதிஸ்மருதியும் வேதததையொட்டியிருககையாலே கைக்கொளளத்தக்கவையே. மற்றும பாத்மபுராணத்தில தாமஸமென்று கழிககப்பட்ட கௌதம ஸமவாதத யம ஔஶநஸஸ்ம்ருதிகள பரதததுவததைப பறறிப் பேசாமலே செல்கினறனவாகையாலே தாமஸமெனறு கழிக்கப்பெற்றனவென்று கொளளத்தக்கது.

இங்கு, ஓர் ஐயம் எழக்கூடும். ஶ்ருதிஸ்மருதீதிஹாஸபுராணஙகள எனறு, முன எடுககப்பட்ட ஸம்ருதிவசனத்தைப் பின எடுக்கப்பட்ட புராணவசனத்தைக்கொண்டு தளளுவது தகுமோ எனில: இதிஹாஸபுராணங்களைக்காட்டிலும ப்ரப₃லம எனனும காரணத்தாலே ஸமருதியானது முதலில எடுககப்படவில்லையாகையாலும், ஶ்ருதியின் பூாவப₄ாக₃ விவரணமாகையாலே ஶ்ருதிக்கடுததபடி ஸமருதியும், உத்தரப₄ாக₃ விவரணமாகையாலேயே ஸ்மருதிக்கடுததபடி இதிஹாஸபுராணங்களும எடுக்கப்பட்டனவாகையாலும் இதிஹாஸ புராணவாககியங்களைக்கொண்டு ஸ்மருதிவாக்யங்களைக் கழிக்கத தட்டிலலை. உண்மையை ஆராயப்புகில, ஶ்ருதிவிருத்தமாயிருக்கையாலேயே ப்₃ருஹஸபதிஸூத்ரம முதலான ஸ்மருதிகள கைவிடப் படுகின்றன எனறும, ஶ்ருதியை ஒட்டியிருக்கையாலே பாத்மம முதலான ஸாத்விகபுராணங்களும், இதிஹாஸங்களும கைக்கொள்ளப்படுகின்றன என்றும் விளங்கும். ஆகையாலே, பாத்மபுராணவசனத்தைகொண்டு சில ஸம்ருதிகளைத் தாமஸமென்று கழித்ததில் எக்குறையுமிலலை.

இனி, இப்போது அச்சிடப்பெற்றிருப்பவையாக முன் எடுத்த இருபது ஸ்ம்ருதிகளில் மநுஸ்ம்ருதி, ஹாரீதஸ்ம்ருதி, விஷ்ணு ஸ்ம்ருதி, ஶங்க₂ஸ்ம்ருதி, ஶாதாதபஸ்ம்ருதி, வஸிஷ்டஸ்மருதி, அத்ரி ஸ்ம்ருதி என்னும் இவற்றிலும், புநருத்₃த₄ாரணம் செய்யப்பெற்ற ப்₃ருஹஸ்பதிஸ்மருதியிலுமே கர்மாராத்₄யனை பரம்பொருளைப் பற்றி விசேஷமாகப் பேசப்பட்டிருக்கிறதாகையாலே, அவற்றைக் கொண்டும், ப்ராசீனர்களால் கையாளப்பட்ட யோக₃யாஜ்ஞ வல்க்யம முதலான மற்ற சில ஸ்ம்ருதிகளைக்கொண்டும் பரம்பொருள் எந்த தேவதை என்பதைக் காட்டிவிட்டு, வ்ருத்₃த₄ஹாரீத ஸ்ம்ருதி முதலான பரமத₄ர்மஶாஸ்திரங்களின்மூலம் பரதேவதாநிஷ்கர்ஷமும், விஶிஷ்ட பரமைகாந்திகளின் ஆசாரநிர்ணயத்தையும் செய்வோம் இப்பாதத்தில்.

இந்த ஸ்ம்ருதிகள் எல்லாவற்றிலும் பல காரணங்களால் மநு ஸ்ம்ருதியே மிகச்சிறந்ததாகப் பல்லாயிரம் வருடங்களாகப் பல சான்றோர்களால் கொண்டாடப்படுகிறது. "யத்₃வை கிஞ்ச மநுர வத₃த் தத்₃பே₄ஷஜம்" [யஜு-அஷ்ட 3.2-11] [மனு சொன்னது அனைத்தும் மருந்தாகும்] என்று மனுவினுடைய வார்த்தை ஸம்ஸார நோயால் அவதிப்படுகின்றவர்கள் அனைவருக்கும் மருந்தென்று வேதத்தில் கொண்டாடப்பட்டது.

"வேத₃ார்த்த₂ப்ரதிப₃த்₃த₄த்வாத் ப்ராமாண்யம் து மநோ: ஸ்ம்ருதம் |
மந்வார்த்த₂விபரீதா து யா ஸ்ம்ருதி: ஸா ந ஶஸ்யதே"

[வேதார்த்தங்களையே உட்பொதிந்து கொண்டிருக்கையால் மநு ஸ்ம்ருதியே மிகச்சிறந்த ப்ரமாணமாகக் கொள்ளப்படுகிறது. மனு சொன்ன வார்த்தைக்கு முரண்பட்ட எந்த ஸ்ம்ருதியும் கொண்டாடப் படுவதில்லை.] என்று ப₃ார்ஹஸ்பத்யஸ்ம்ருதியிலும்

"வேதே₃ஷு பௌருஷம் ஸூக்தம் த₄ர்மஶாஸ்த்ரேஷு மாநவம்|
பா₄ரதே ப₄கவத்₃கீ₃தா புராணேஷு ச வைஷ்ணவம்||

[வேதத்தில் புருஷஸூக்தமும், தர்மஶாஸ்திரங்களில் மனுஸ்ம்ருதியும், பாரதத்தில் பகவத்கீதையும், புராணங்களில் விஷ்ணுபுராணமும் சிறந்தவை] என்று புராணங்களிலும் மிகச்சிறந்த ஸ்ம்ருதியாகக் கொண்டாடப்படுவது மநுஸ்ம்ருதியேயாகும். ஆகையாலே, முதலில் அதைக்கொண்டு பரதத்வநிஷ்கர்ஷத்தைச் செய்வோம்.

# மநுஸ்ம்ருதி நிர்ணயம்

இந்த மநுஸம்ருதியின் தொடக்கத்தில் மநுவானவர் பரமாத்ம தியானத்தோடு எழுந்தருளியிருந்தபோது மஹர்ஷிகள் பலர் அவரை அடிபணிந்து, 'எல்லா வர்ணங்களுடைய தர்மங்களையும் எமக்குச் சொல்லவேணடும்' என்று கேட்க, முதலத்தியாயத்தில் ஐந்தாவது ஶ்லோகத்திலிருந்து தொடங்கி ஜகத்காரணமான பரமாத்மாவையும் அவர் ஸ்ருஷ்டி செய்த முறையையும் பற்றிப் பேசுகிறார். 'ஒன்றைக்கேட்க, மற்றொன்றைச் சொல்லுவதுபோலே யிருக்கிறதே இது' என்னில்: வர்ணதாமங்களெல்லாம் பரமாத்மாவுக்கு ஆராதனமாகவேயிருக்கையாலே, ஆராத்$_4$யனுடைய ஸ்வரூபத்தைப்பற்றித் தெளிவுபடுத்திவிட்டு, அதன் பிறகு, அவனுக்கு ஆராதனமான வர்ணதர்மங்களைப் பற்றிப் பேசுகிறாராகையாலே இந்த தோஷமில்லை. அவனுக்கு ஆராதனமாயிருப்பவை என்று அறியாமல் செய்யப்படும் தர்மாநுஷ்டானத்தால் ஒரு பயனுமில்லாமையாலேயன்றோ ஸாத்விகஸம்ருதிகள் அனைத்திலும் முதன்முதலில் அவனைப்பற்றிப் பேசப்படுகிறது. அவ்வண்ணமே பரமஸத்வநிஷ்டரான மனுவும் முதலில் ஜகத்காரணப் பொருளைப்பற்றிப் பேசுகிறார். அந்த ஶ்லோகங்களில் முக்கியமானவையான ஏழு ஶ்லோகங்கள் ப்ரஹ்மஸூத்ர ஸம்ருத்யதிகரணத்தின் (2-1-1) ஶ்ருதப்ரகாஶிகையில் எடுத்து வியாக்கியானம் செய்யப்பெற்றிருக்கின்றன. அதைப் பின்பற்றி அவற்றின் பொருளைக் காணபோமினி.

1. **ஆஸீதி$_3$த$_3$ம் தமோபூ$_4$தமப்ரஜ்ஞாதமலக்ஷணம் |**
**அப்ரதாக்யமவிஜ்ஞேயம் ப்ரஸுப்தமிவ ஸர்வத: ||**

**இத$_3$ம்**—*இவ்வுலகமானது*, **தமோபூ$_4$தம்**—*தமஸ் என்னும் நிலையை அடைந்ததாய்*, **அப்ரஜ்ஞாதம்**—*ப்ரத்யக்ஷஜ்ஞானத்தால் அறியமுடியாததாய்*, **அலக்ஷணம்**—*(ரூபம் முதலான) அடையாளங்களற்றதாய்*, **அப்ரதர்க்யம்**-*அனுமானத்தாலும் அறியப்படாததாய்*, **அவிஜ்ஞேயம**—*(பரம்பொருளைவிட்டுப் பிரித்து) அறியமுடியாததாய்*, **ஸர்வத: ப்ரஸுப்தம் இவ**—*எல்லாப்படியாலும் தூங்கும் நிலையை அடைந்தது போலிருப்பதாய்*, **ஆஸீத்**—*(ப்ரளயகாலத்தில்) இருந்தது*.

இந்த ஶ்லோகத்தில் ப்ரளயகாலத்தில் இவ்வுலகம் பரமாத்மாவோடு ஒன்றி இருந்த நிலையைச் சொல்லுகிறார். இதைச் சொல்லுவானேன் ? எனில்: மேலத்தியாயங்களில் அக்னி இந்திரன் முதலிய பல தேவதைகளைப்பற்றிய பல கர்மங்கள் சொல்லப்படப் போகின்றன. அந்த தேவதைகள் அனைவரும் பரமகாரணமான பரமாத்மாவோடு ஒன்றியிருந்தவர்களாகையாலே சரீரமான அவர்களைப்பற்றிய கர்மங்களனைத்தும் சரீரியான அவனுக்கு முற்கூறிய முறையில் ஆராதனமாயிருப்பவையே என்று காட்டுவதற்காக அந்நிலையைச் சொல்லுகிறார். மேலும், "காரணம் து த்₄யேய:" [அதர்வசிகை] [ஜகத்காரணப்பொருளே தியானிக்கத்தக்கது] என்று ஜகத்காரணவஸ்துவே உபாஸ்யமாக வேதாந்தங்களில் எடுக்கப்படுகையாலும், இங்கு சொல்லப்படும் கர்மங்கள் உபாஸநாங்கமாகையாலும், "யதோ வா இமானி பூ₄தானி ஜாயந்தே யேந ஜாதானி ஜீவந்தி யத்ப்ரயந்த்யபி₄ஸம்விஶந்தி, தத்விஜிஜ்ஞாஸஸ்வ தத்₃ ப்₃ரஹ்மேதி" என்கிறபடியே உலகைப்படைத்து அளித்து அழிப்பதே அந்தக் கர்ம ஸமாராத்யனான பரமனுக்கு லக்ஷணமென்று காட்டிக் கொண்டு வேதாந்தங்களில ப்ரளயத்தை முதலிற்சொல்லி, அதற்குப் பின் ஸ்ருஷ்டியைச் சொல்லும் வழக்கத்தையொட்டி முதலில் ப்ரளயதசையைச் சொல்லுகிறார். அதில், இங்கு ஸுபா₃லோபனிஷத்தின் பொருள் உபப்₃ரும்ஹணம் செய்யப்படுகிறது. அவ்வுபனிஷத்தில் இரண்டாவது கண்டத்தில் "ப்ருதி₂வ்யப்ஸு ப்ரலீயதே" என்று தொடங்கி பூமி நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்பு காற்றிலும், காற்று ஆகாசத்திலும், ஆகாசம் அஹங்காரத்திலும், அஹங்காரம் மஹானிலும், மஹான அவ்யக்தத்திலும், அவ்யக்தம் அக்ஷரத்திலும, அக்ஷரம் தமஸ்ஸிலும் லயிப்பதாகச் சொல்லி, "தம: பரே தே₃வ ஏகீப₄வதி" [தமஸ்ஸானது பரமாத்மாவிடம் ஒன்றுகிறது.] என்று தமஸ் எனப்படும் மூலப்ரக்ருதியானது பரம்பொருளிடம் பிரித்துப் பார்க்க முடியாதபடி ஒன்றுவதாகிற ப்ரளயம் கூறப்பட்டது. அவ்விஷயமே இங்கு 'தமோபூ₄தம்' என்னும் பதத்தால் காட்டப் படுகிறது. (இத₃ம் தமோபூ₄தம் ஆஸீத்) ப்ரத்யக்ஷமாகக் காணப் படும இவ்வுலகம் 'தமஸ்' என்னும் நிலையையுடையதாயிருந்தது. ஸுபாலோபனிஷத்தில் 'ப்ருதிவீமுதலானவை தம் தம் காரணங்களில் லயமடைந்தன' என்று லயமடையும் கார்யத்தை முதல் வேற்றுமையிலும், காரணத்தை ஏழாம் வேற்றுமையிலுமிட்டுப் பேசிற்று. இப்படிப் பேசும்போது 'முன் இருந்த கார்யப்பொருள் லயகாலத்தில் அழிந்து விடுகிறதோ' என்னும் ஐயம் ஏற்படக்கூடும்.

அஸத்கார்யவாதிகள் இப்படியே கூறுகிறார்கள். இவ்வையம தவிரப் பெறறு, ஏற்கனவே இருநத காரியபபொருள் மற்றொரு நிலையை அடைகிறதேயொழிய அழிவதிலலை என்று தெளிவுபெறும்படியாக 'இவ்வுலகம தமஸ்ஸாகவே ப்ரளயகாலததில் இருந்தது' என்று ஸமாநாதி₄கரணமாக (ஒரே வேற்றுமையில) கூறபபடுகிறது இங்கு; இதுவே ஸதகார்யவாதம எனபபடும்.

''ததே₃தத₃க்ஷயம் நித்யம் ஜக₃ந்முநிவராகி₂லம் |
ஆவிர்பப₄ாவதிரோப₄ாவஜந்மநாஸவிகல்பவத் ||''

[வி–பு 1–22–60]

[முனிவாதலைவரே! தோற்றமும், மறைவுமாகிற பிறபபழிவுப் பிரிவுகளையுடைய இவ்வனைத்துலகும என்றும குறையாததாகவும, நித்யமாகவுமிருப்பது] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணததிலும் உலகை நித்யமெனக்கூறுவதனமூலம் ஸத்கார்யவாதமே ஆதரிக்கப்பட்டதனறோ. (தமோபூ₄தம) இங்கு'தமஸ' எனப்படுவது மூலபரக்ருதியின பரமஸூக்ஷம நிலையாகும. ஸூத்₃த₄ஸத்வத₃ரவ்யமும ஸதவ குணமுடையதாயிருக்கையாலே, ரஜஸ்ஸூம தமஸ்ஸூமே மூலப்ரக்ருதிக்குத தனிக்குணஙகள எனனும கருததாலே ''ரஜஸ: பராகே'' முதலானவிடஙகளில் ரஜஸ' எனனும ஸப்தத்தாலும, ''தமஸ: பரஸதாத'' முதலானவிடஙகளில 'தமஸ' எனனும ஸபதத்தாலும வேதங்களில குறிககபபடுகிறதனறோ மூலப்ரக்ருதி. (தமோபூ₄தம் ஆஸித) தமஸ் எனனும் நிலையை உடையதாயிருந்தது. ''தமஸி லீயதே'' [தமஸ்ஸில லயமடைகிறது] என்று ஸூபாலோபனிஷத்தில 'காரியமானது காரணமான தமஸ்ஸில் லயிக்கிறது' என்று சொன்னதறகு 'கார்யநிலையிலிருந்தபொருள காரணநிலையிலிருககும தமஸஸாக ஆயிற்று' எனறே கருத்து என்று காட்டுகிறது. ஸ்ரீவிஷ்ணுபுராணததில், ''அக₃ந்யவஸ்தே₂ ச ஸலிலே வாய்வவஸதே₂ ச தேஜஸி'' [(கார்யமான) ஜலமானது அக்னியெனனும (காரண) நிலையை அடைந்தவளவில; (கார்யமான) அக்னியானது வாயு வென்னும (காரண) நிலையை அடைந்தவளவில்] என்று கார்யப பொருள காரணததில லயிபபதாவது காரணநிலையை அடைவதேயாகும எனக்காட்டினாரனறோ வியாஸரின தந்தையான ஸ்ரீபராசரபகவான்.

இனி, ''இவ்வுலகமானது 'தமஸ' எனனும நிலையை அடைநதிருநததாகில, அது நமது புலன்களுககுப் புலப்பட

வேண்டாமோ? அப்படிப்புலப்படாததிலிருந்தே அப்படியொரு நிலை இல்லையென்று * அநுபலப்₃தி₄ப்ரமாணத்தாலே நிர்ணயிக்கலாமே'' என்னும ஐயத்தைத் தவிர்க்கிறது அடுத்தபடியாக: (அப்ரஜ்ஞாதம்) ப்ரக்ருஷ்டமான (சிறந்ததான) ப்ரத்யக்ஷ ஜ்ஞாநம் ப்ரஜ்ஞானம் எனப்படுகிறது. அந்த ப்ரஜ்ஞானத்தால் அறியத்தகாதது 'அப்ர ஜ்ஞாதம்' ஆகிறது. இந்தத் தமோநிலையானது அதிஸூக்ஷ்ம மானதாகையாலே ப்ரத்யக்ஷத்தால் அறிய யோக்₃யதையே அற்றது. அறிவதற்கு யோக்₃யதை (தகுதி) உள்ள பொருள் அறியப்படாம லிருந்தால்தான் அதை * அநுபலப்தி ப்ரமாணத்தாலே இல்லை செய்யமுடியும். இத்தமஸ்ஸோவெனில் ப்ரத்யக்ஷத்தால் அறிய யோக்₃யதையே இல்லாததாகையாலே இதை அநுபலப்₃தி₄ப்ர மாணத்தால் இல்லைசெய்யமுடியாது என்று கருத்து.

இனி, ப்ரத்யக்ஷத்தால் அறியப்படாமலிருக்கைக்குக் காரணத்தைக் காட்டுகிறது அடுத்தபடியாக,— (அலக்ஷணம்) "ஶப்₃த₃ஸ்பர்ஶவிஹீநம் தத்₃ரூபாதி₃பி₄ரஸம்ஹிதம்" [(மூலப்ரக்ருதி யானது) ஶப்தஸ்பர்ஶங்களற்றது; ரூபம் ரஸம் கந்தம் என்னும் குணங்களோடு சேராதது.] என்கிறபடியே ரூபம் முதலிய லக்ஷணங்கள் (அடையாளங்கள்) அற்றதாகையாலே, ப்ரத்யக்ஷத் தால் அறியமுடியாதது என்று கருத்து.

இனி, "கார்யங்களாகிற பஞ்சபூதங்களில் ஶப்தம் முதலான குணங்கள் காணப்படுகையால், காரணமான தமஸ்ஸிலும் அவை யிருக்கவேண்டுமே; இப்படி ஶப்தாதி லக்ஷணமுடையதானபின்பு, ப்ரத்யக்ஷத்தால் அறியத்தக்கதாகி, * அநுபலப்₃தி₄ப்ரமாணத்தால் இல்லைசெய்யக்கூடியதாகாதோ?" என்னும் ஐயம் தவிர்க்கப்படு கிறது அடுத்தபடியாக,— (அப்ரதர்க்யம்) சாஸ்திரங்கொண்டே அறியத்தக்கதான இத்தமஸ்ஸின் விஷயத்தில் சாஸ்திரத்திற்குப் புறம்பான முற்கூறிய தர்க்கங்கள் விலைசெல்லமாட்டா என்கிறது.

---

* ஆகாயத்தாமரை போனறதொரு பொருள் இருந்ததாகில், அது எவருக்காவது காணப்படும். அப்படி எவர்க்கும் காணப் படாமையாலே அப்படியொரு பொருள் இல்லை என்று நிரூபிக்கும் ப்ரமாணம் 'அநுபலப்₃தி₄' எனப்படும். இந்திரியங்களால் அறியத் தக்க பொருள்களையே இப்ரமாணத்தால் இல்லைசெய்யமுடியும். அதீந்திரியமான பொருள்களை இதுகொண்டு இல்லைசெய்ய முடியாது. அதனாலேயே இது 'யோக்₃யாநுபலப்₃தி₄' என்றும் கூறப்படும்.

அந்தத் தர்க்கங்கள் சாஸ்திரவசனங்களாலே பாதிக்கப்படுகின்றன என்று கருத்து. அன்றிககே, 'அப்ரஜ்ஞாதமலக்ஷணம' என்று ஸம்ப்தாதிலக்ஷணமின்மையாலே ப்ரத்யக்ஷங்கொண்டு அறியமுடியாது என்று கூறி, 'அலக்ஷணமபரதர்க்யம்' என்று நெருப்பை ஸாதிக்கும தூ$_4$மாதிகளைப்போலே லிங்கங்கள் (அடையாளங்கள்) ஒன்று மில்லாமையால, இந்தமஸ்ஸானது அநுமானத்தாலும் அறிய இயலாதது என்று கூறுகிறதாகவுமாம. ஆக, இது சாஸ்திரங் கொண்டே அறியத்தக்கது என்றதாயிற்று.

இனி, "தம: பரே தே$_3$வ ஏகீப$_4$வதி" [தமஸ்ஸானது பரமாத்மா விடம ஒன்றுகிறது] என்று ஸுபாலோபனிஷத்தில 'தமஸ்ஸானது பரமாதமாவிடம பிரிததறிய முடியாதபடி ஒன்றுகிறது' என்று கூறப்பட்ட அர்த்தத்தைக காட்டுகிறது அடுத்தபடியாக,—(அவிஜ்ஞேயம) விஜ்ஞாநமாவது,—விப$_4$ாகம செய்து அறிதல். அதாவது—பரமனைவிட்டுப பிரித்து அறிதல; அப்படி அறியமுடியாதபடி, பாலில் நீர்போலே கலந்திருப்பது அவிஜ்ஞேயம் எனப்படுகிறது. கார்யநிலையில பரமனைவிட்டுப் பிரிதது நமபோல்வாரால அறியலாமபடியிருநத இது, காரணநிலையில அப்படி அறியமுடியாததாயிற்று என்று கருத்து.

அப்படியானல், ப்ரஹ்மஸ்வரூபமும் இதுவும் ஒன்றேயாயிற்றே? எனில்: (ப்ரஸுப்தமிவ) தூங்கும நிலையில ஜீவன் பரமாத்மாவோடு ஒன்றுமபோது, அவரைவிட்டுப் பிரிததுப்பார்க்க முடியாத நிலையையடைகிறானேயொழிய அவரோடு ஸ்வரூபைக்யமடைவதில்லை. அப்படியே இதுவும் பரமனைவிட்டுப் பிரித்துப் பார்க்கமுடியாதபடி ஒன்றிநிற்கிறதேயொழிய ஸ்வரூபைக்யமடைவதில்லை என்று கருத்து. 'தூங்கும் நிலையில் ஜீவனுடைய ப்ராணனகள லயிப்பதில்லை; அதுபோல் இங்கும் ஏகதே$_3$ஶலயமதானே?' எனில்: (ஸாவத: ப்ரஸுப்தமிவ) எல்லாப்படியாலும தூங்குவது போலிருப்பது; அங்கு போல ஏகதேஶலயமன்று. ஸர்வப்ரகாரலயம இது என்று கருதது. ஆக, சேதநாசேதனங்கள் பரமனிடம ஒன்றியிருந்தபடியைப் பேசிற்று. அன்றிக்கே, 'அவிஜ்ஞேயம' என்பதீறாக அசேதநமாத்ரதின லயமும, 'ப்ரஸுப்தமிவ ஸர்வத:' என்று சேதனாகளின் ஸர்வப்ரகாரலயமும பேசப்படுகிறதாகவுமாம். முதல பக்ஷத்தில இத$_3$மஸ்ப்தத்தாலே அசேதனங்களோடு கூடிய சேதனங்களையெடுக்கிறது; இரண்டாம பக்ஷத்தில் அசேதன மாத்திரத்தையெடுக்கிறது.

**2.** தத: ஸ்வயம்பூ₄ர் ப₄க₃வாநவ்யக்தோ வ்யஞ்ஜயந்நித₃ம் |
மஹாபூ₄தாதி₃வ்ருத்தௌஜா: ப்ராது₃ராஸீத் தமோநுத₃: ||

**தத:**—ப்ரளயத்திற்குப் பிற்பட்ட ஸ்ருஷ்டிகாலத்தில், **ஸ்வயம்பூ₄:ப₄க₃வாந்**—(தனக்கொரு காரணமற்றவனுய்த்) தானேயுண்டான பரமபுருஷன், **இத₃ம் வ்யஞ்ஜயந்**–(வ்யஷ்டிரூபமான) இக்கார்யப்பொருள்களை வெளிப்படுத்துவதற்காக, **மஹாபூ₄தாதி₃வ்ருத்தௌஜா:**-ஐம்பெரும்பூதங்கள், (அவற்றுக்குக்காரணமான) மஹத₃ஹங்காரங்கள் ஆகியவற்றைத் தூண்டும் (ஸங்கல்பரூபஜ்ஞானமாகிற) தேஜஸ்ஸையுடையவனுவதற்காக, **தமோநுத₃:**-(தன்னைவிட்டுப் பிரித்துப்பார்க்கக்கூடிய) தமஸ்ஸை சரீரமாகக்கொண்டவனுகி. **அவ்யக்த:**–(அதற்குப்பின்) அவ்யக்த நிலையையடைந்த மூலப்ரக்ருதியை சரீரமாகக்கொண்டவனுகி. **ப்ராது₃ராஸீத்**–தோன்றினுன்.

இந்த ஸ்லோகத்தில், பகவான் ஸ்ருஷ்டி செய்யத்தொடங்கிய ப்ரகாரம் விவரிக்கப்படுகிறது. (தத:) "ப்ரதா₄நபுருஷௌ சாபி ப்ரவிஸ்யாத்மேச்ச₂யா ஹரி:| க்ஷோப₄யாமாஸ ஸம்ப்ராப்தே ஸர்க்க₃காலே வ்யயாவ்யயௌ||" [வி-பு 1-2-29] [விகாரமுள்ள ப்ரக்ருதியையும், விகாரமற்ற புருஷனையும், ஹரியானவர் ஸ்ருஷ்டிகாலம்வந்தவளவில் தன் ஸங்கல்பத்தாலே உள்நுழைந்து (ஸ்ருஷ்டியின் பொருட்டுத்) தூண்டினுர்.] என்கிறபடியே ப்ரளயத்திற்குப் பிற்பட்ட ஸ்ருஷ்டி காலம் வந்தவளவில். இவர் பல பொருள்களைப் படைப்பதுபோலே, இவரைப்படைததார் யாரேனுமுண்டோ? எனில்: (ஸ்வயம்பூ₄:) தானேயிருப்பவராகையாலே இவரைப்படைத்தவர் எவருமிலர் என்று கருத்து. 'ஸ்வயம்பூ₄:' என்னும் ஸப்தம் பிரமனைக்குறித்தன்றோ சாஸ்திரங்களில் பிரயோகிக்கப்படுகிறது? எனில்; பரம காரணத்தைக்கூறும் இந்த 'ஸ்வயம்பூ₄:' என்னும் பதம், அப்பிரமனையும் படைத்த நாராயணனிடமே மிகப்பொருந்தி நிற்கும். அவனைக்குறித்து பாரதாதிகளில பிரயோகிக்கப்படுவதையும் பார்க்கிறோம். ஸபாபர்வத்தில் "அவ்யக்தோவ்யக்தலிங்க₃ஸ்தோ₂ ய ஏஷ ப₄க₃வாந் ப்ரபு₄:| புரோ நாரயணோ தேவ: ஸ்வயம்பூ₄: ப்ரபிதாமஹ:||" [அளவிட்டு அறியப்படாதவராய், அறியப்படும் அடையாளங்களிலுமிருப்பவராய், பகவானுய், தலைவனுய், தேவனுய், தானேயுண்டானவராய், பிதாமஹனை பிரமனுக்கும் தந்தையாயிருந்தார் நாராயணன்.] என்று தொடங்கி "தத: ஸ ப₄க₃வாம்ஸ்தோயே

ப்₃ரஹ்மாணமஸ்ருஜத் ஸ்வயம்'' [அதற்குப்பின் நீரிலிருந்த அந்த பகவான, பிரமனைப்படைததார்.] எனபதிருகப் பிரமனையும் படைத்த நாராயணனிடம ஸ்வயம்பூ₄ ஶப்தம பிரயோகிக்கப்பட்டது மோக்ஷ தர்மத்திலும ''நாராயணோ ஜக₃ந்மூர்த்தி:'' என்று தொடஙகி, ''ததஸ் தேஜோமயம் தி₃வ்யம் பத்₃மம் ஸ்ருஷ்டம ஸவயம்பு₄வா। தஸமாத் பத₃மாத ஸமப₄வத் ப்₃ரஹ்மா வேத₃மயோ நிதி₄:।।'' [அதற்குப்பின் தேஜோமயமாய, திவ்யமானதான தாமரை தானேயுண்டான பக வானால படைககப்பட்டது; வேதமயநிதிபோன்றவனை பிரமன் அத்தாமரையில தோனறினான] என்று பிரமனைப்படைத்த நாரணனைக்குறிதது ஸ்வயம்பூ₄ஶபதம வழஙகபபட்டது. ''விஷ்ணு ரேவாதி₃ ஸாககே₃ஷு ஸ்வயமபூ₄ர் ப₄வதி ப்ரபு₄:'' [ஆதிஸ்ருஷடி காலஙகளில் தலைவரான விஷ்ணுவே 'ஸவயமபூ₄:' எனபபடுகிறார்.] என்று ஆஶ்வமேதிகபர்வத்திலும் ஆதிஸ்ருஷ்டியைச் சொல்லும் போது விஷ்ணுவே 'ஸ்வயமபூ₄:' எனப்படுகிறா எனறு கூறப்பட்டது. இந்த மநுஸ்ம்ருதியிலும ஆதிஸ்ருஷ்டியே கூறப்படுகையாலும், பிரமனைப்படைத்ததாக மேலே கூறுகையாலும, பகவானெனறும், நாராயணனெனறும இந்த ஸ்வயமபுவை விஶேஷிக்கையாலும், மற்ற ஶ்ருதி ஸ்மருதிவாக்யஙகளிலும நாராயணனே பிரமனைப் படைத்தவனெனறும் தானேயுண்டானவனெனறும கூறுகையாலும் இங்கு, 'ஸ்வயமபூ₄:' என்னும் ஶப்தம் பகவானான நாராயணனையே குறிக்கக்கடவது.

பகவானான நாராயணனே இவன் என்று காட்டுவதற்காகவும், ஸ்ருஷடிககுறுப்பான குணங்கள இவனிடம் நிறைநதிருக்கினறன எனபதை உணர்த்துவதற்காகவும ப₄க₃வச்ச₂ப₃த₃த்தைப பிரயோகிக்கிறது அடுததபடியாக,— (ப₄க₃வாந)

''ப₄க₃வாநிதி ஶப்₃தே₃ாऽயம தத₂ா புருஷ இத்யபி।
நிருபாதீ₄ ச வர்த்தேதே வாஸுதே₃வே ஸநாதநே ।।''

[பகவான் என்னும் சப்தமும, புருஷன் என்னும் சப்தமும், இயற்கை யாகவே ஸநாதனனான வாஸுதேவனிடததிலேயே பொருந்து கின்றன.] எனறு வராஹபுராணத்திலும,

''ஶுத்₃தே₄ மஹாவிபூ₄த்யாக்₂யே பரே ப்₃ரஹ்மணி ஶப்₃த₃யதே।
மைத்ரேய! ப₄க₃வச்ச₂ப்த₃ஸ் ஸர்வகாரணகாரணே ।।
ஸம்ப₄ர்த்தேதி தத₂ா ப₄ர்த்தா ப₄காரோऽர்தத₂த்₃வயாந்வித:।
நேதா க₃மயிதா ஸ்ரஷ்டா க₃காரார்த்த₂ஸ் தத: ஸ்ம்ருத: ।।

ஐம்ʼவர்யஸ்ய ஸமக்₃ரஸ்ய வீர்யஸ்ய யமஸ: ம்ரிய:।
ஜ்ஞாந வைராக்₃யயோம்சைவ ஷண்ணாம் ப₄க₃ இதீரணா ॥
வஸந்தி தத்ர பூ₄தாநி பூ₄தாத்மந்யகி₂லாத்மநி।
ஸ ச பூ₄தேஷ்வமேஷேஷு வகாரார்த்த₂ஸ் ததோऽவ்யய: ॥
ஜ்ஞாநமக்தி ப₃லைம்வர்ய வீர்யதேஜாம்ஸ்யமேஷத:।
ப₄க₃வச்ச₂ப்₃த₃வாச்யாநி விநா ஹேயைர் கு₃ணாதி₃பி₄: ॥
ஏவமேஷ மஹாமப்₃தோ₃ மைத்ரேய ப₄க₃வாநிதி।
பரமப்₃ரஹ்மபூ₄தஸ்ய வாஸுதே₃வஸ்ய நாந்யக₃: ॥
தத்ர பூஜ்ய பத₃ார்த்தோ₂க்தி பரிபா₄ஷாஸமந்வித:।
மப்₃தோ₃ऽயம் நோபசாரேண அந்யத்ர ஹ்யுபசாரத: ॥''
[வி-பு 6-5]

[மைத்ரேயரே! சுத்தமானதும், 'மஹாவிபூதி' என்னும் பெயரையுடையதும், காரணபுருஷர்களுக்கெல்லாம் காரணமாயிருப்பதுமான பரப்ரஹ்மத்தினிடத்தில் பகவச்சப்தம் சொல்லப்படுகிறது. '(ப்ரக்ருதியை) கார்யதசை அடையச்செய்பவன், 'ஸ்வாமி' என்னும் இரண்டு பொருள்களுடன கூடியது ப₄காரம. அப்படியே 'ரக்ஷிப்பவன், ஸம்ஹரிப்பவன, ஸ்ருஷ்டிப்பவன்' எனபவை 'க₃' என்னுமெழுத்தின் அர்த்தமென்று சொல்லப்படுகிறது. ஸம்பூர்ணமான ஐச்வர்யம், வீர்யம், கீர்த்தி, செல்வம், ஜ்ஞானம், வைராக்யம் என்னும் இந்த ஆறு குணங்களுக்கும் 'ப₄க₃' என்னும் பதம் வாசகமாயிருக்கிறது. பூதங்களை சரீரமாகக்கொண்டவனும், எல்லாவற்றுக்கும் ஆத்மாவாயிருப்பவனுமான அவனிடத்தில் பூதங்கள் வஸிக்கின்றன. அவனும் எல்லா பூதங்களிலும் வஸிக்கிறான். ஆகையால் அழிவற்றவனை பகவான் வகாரத்துக்கு அர்த்தமாகிறான். கீழானவையான முக்குணங்கள் முதலியவற்றுடன் சேராத 'ஜ்ஞானம், சக்தி, பலம், ஐச்வர்யம், வீர்யம், தேஜஸ்' என்னும் எல்லாக்குணங்களும் 'பகவான்' என்னும் சப்தத்தினால் சொல்லப்படுகின்றன. மைத்ரேயரே! இம்மாதிரியாக பகவான் என்ற இந்த மஹாசப்தம் பரப்ரஹ்மமான வாஸுதேவனுக்கே உரியது. வேறொருவரையும் குறிக்காது. பூஜிக்கத்தக்க பொருளைக்குறிப்பதாகிய இந்த சப்தம் அவன் விஷயத்தில் ஔபசாரிகமாகச் சொல்லப்படுவதில்லை. மற்றவர்கள் விஷயத்தில்தான் ஔபசாரிகமாக (அமுக்கியமாகச்) சொல்லப்படுகிறது.] என்று விஷ்ணுபுராணத்திலும் பகவச்ச₂ப்தம் ஸகலகல்யாணகுணங்களையுமுடைய நாரணனையே முக்கியமாகக்குறிக்கும் என்று காட்டப்பட்டதன்றோ.

(இத₃ம் வ்யஞ்ஜயந்) இப்போது, நாம் கண்ணால் காணும் வ்யஷ்டி ரூபமான கார்யப்பொருள்களை வெளிப்படுத்துவதற்காக. 'ப்ராது₃ராஸீத்' [தோன்றினான்] என்று மேலே கூட்டிக்கொள்வது. ''லக்ஷணஹேத்வோ: க்ரியாயா:'' என்னும் வியாகரண ஸூத்ரப்படி 'வ்யஞ்ஜயந்' என்றவிடத்தில் ஶதருப்ரத்யயம் 'ஹேது' என்னும் பொருளையுடையது. இவனுடைய தோற்றம் இப்போது நாம் காணும் கார்யப்பொருள்களை வெளிப்படுத்துவதற்கு ஹேதுவாகவேயானது என்று கருத்து.

இனி, இந்த வ்யஷ்டிப்பொருள்களுக்கு முன் நிலைகளாக கூறுகிறது.— (மஹாபூ₄தாதி₃வ்ருத்தௌஜா:) ப்ருதி₂வீ(பூமி), அப்பு (ஜலம்), தேஜஸ்ஸு(தீ), வாயு(காற்று), ஆகாஶம்(வெளி) என்னும் ஐந்து மஹாபூ₄தங்களையும், அவற்றுக்கு மூல காரணமான மஹாந், அஹங்காரம் என்னும் தத்துவங்களையும் குறித்து ப்ரவ்ருத்தமான ஸங்கல்பரூபஜ்ஞாநமாகிற தேஜஸ்ஸை உடையவன். மஹாபூ₄த ஶப்தம் ஐம்பெரும்பூதங்களைக் குறிக்கிறது இது ஐந்து தந்மாத்ரைகளுக்கும், பதினொரு இந்திரியங்களுக்கும் உபலக்ஷணம். ஆதி₃ ஶப்தத்தாலே இவற்றுக்குக்காரணமான மஹத்தத்வமும், அஹங்கார தத்துவமும் உணர்த்தப்படுகின்றன. 'வ்ருத்த' என்றது ப்ரவ்ருத்தமான என்றபடி இவற்றை ஸ்ருஷ்டிப்பதில் ஈடுப்பட்ட என்றபடி. 'ஓஜ:' என்னும் ஶப்தம் இவற்றை ஸ்ருஷ்டிப்பதில் ஈடுபட்ட ஸங்கல்பரூபஜ்ஞானமாகிற தேஜஸ்ஸைக் குறிக்கிறது. இப்படிப்பட்ட ஸங்கல்பத்தை உடையவனாவதற்காக என்று இங்கும் கொள்ளவேண்டும்.

மஹானுக்கும் முன் நிலையைச் சொல்லுகிறது.— (அவ்யக்த: ப்ராது₃ராஸீத்) அவ்யக்த நிலையையடைந்த மூலப்ரக்ருதியை ஶரீரமாகக் கொண்டவனாகித் தோன்றினான். இது இதற்கும் முன் நிலையான அக்ஷரம் என்னும் நிலையையடைந்த மூலப்ரக்ருதியை சரீரமாகக் கொண்டமைக்கும் உபலக்ஷணம். ''மஹாநவ்யக்தே லீயதே; அவ்யக்தமக்ஷரே லீயதே'' [ஸுபால] [மஹத்தத்வம் அவ்யக்தத்தில் லயிக்கிறது; அவ்யக்தம் அக்ஷரத்தில் லயிக்கிறது] என்று வேதம் அவ்யக்தநிலைக்கும் முன் நிலையாக அக்ஷரநிலையைக் கூறுகின்றதன்றோ.

இதற்கும் முன் நிலையைக் கூறுகிறது.—(தமோநுத₃:) ''ஆஸீதி₃த₃ம் தமோபூ₄தம்'' என்று முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட அவிப₄க்தமான (பரமனிடமிருந்து பிரித்துப்பார்க்கமுடியாத) தமஸ்ஸை

ஶரீரமாகக்கொண்டிருந்தவன், அதற்கடுத்தபடியாக விப₄க்தமான (பிரித்துப் பார்க்கக்கூடிய) தமஸ்ஸை ஶரீரமாக உடையவனாக ஆகி, மூற்கூறியபடி அக்ஷரநிலையையும் அவ்யக்த நிலையையும் அடைந்த ப்ரக்ருதியை சரீரமாகக் கொண்டவனாகித் தோன்றினான். இப்படித் தோன்றியது மஹதஹங்காரங்களைப்படைத்து, இந்திரியங்களையும் தந்மாத்ரங்களையும பஞ்சபூதங்களையும் அவற்றாலுண்டான மற்ற (வ்யஷ்டி)கார்யப்பொருள்களையும் படைப்பதற்காக என்று ஶ்லோகத்தின் திரண்ட பொருள். "அக்ஷரம் தமஸி லீயதே" [ஸுபால] என்று ஶ்ருதிசொல்லுகையாலே, இங்கு தமஶ் ஶப்₃த₃ம் விப₄க்தமான தமஸ்ஸைச் சொல்லுகிறது; "ஆஸீதி₃த₃ம் தமோபூ₄தம்" என்ற முன் ஶ்லோகத்தில் "தம: பரேதே₃வ ஏகீப₄வதி" [ஸுபால] [தமஸ்ஸு பரதெய்வத்திடம ஒன்றுகிறது] என்று ஶ்ருதியில் சொல்லப்பட்ட அவிப₄க்ததமஸ்ஸு சொல்லப்பட்டது என்று அறியத்தக்கது.

இங்கு சைவர்கள் ஓர் ஆக்ஷேபம் செய்யக்கூடும்:—'தமோநுத₃:' என்னும் பதத்தை 'தமோநுத்' என்னும் த₃காராந்த ஶப்தத்தின் ஐந்தாவது வேற்றுமையாகக்கொண்டு, "யதா₃ தமஸ் தந்ந தி₃வா ந ராத்ரி: ந ஸந்ந சாஸத் ஶிவ ஏவ கேவல:" [ஶ்வே] என்கிற ஶ்ருதியை யொட்டித் தமஸ்ஸைத்தூண்டுபவனாய் நிமித்தகாரணமான சிவனிடமிருந்து அவ்யக்தத்தை அதி₄ஷ்டிக்கும் உபாதானகாரணமான நாராயணன் உண்டானான் என்று பொருள்கொள்ள வேண்டாமோ? என்பதே அவ்வாக்ஷேபம். இதற்கு ஸமாதா₄நம் பின்வருமாறு: "யத₃ா தம:" என்னும வாக்யம் 'யதா₃' [எப்பொழுது] என்னும் பதத்தோடு கூடியிருக்கையாலே, வேறொரு ப்ரஸித்தமான ஶ்ருதி வாக்கியத்திற்கு அநுவாதம் என்று தெளிவாகிறது. அந்தப் புரோவாத₃வாக்யம் எது என்னும் கேள்வி பிறந்தவளவில் "ப்ருதி₂வ்யப்ஸு ப்ரலீயதே" (பூமி ஜலத்தில்லயிக்கிறது) என்று தொடங்கி, "அக்ஷரம் தமஸிலீயதே தம: பரே தே₃வ ஏகீப₄வதி, பரஸ்தாந் ந ஸந்நாஸந் ந ஸத₃ஸத்" [அக்ஷரம் தமஸ்ஸில் லயிக்கிறது; தமஸ் பரமாத்மாவிடம் ஒன்றுகிறது. அதற்குபின் ஸத்துமில்லை; அஸத்துமில்லை; ஸத₃ஸத்துக்களுமில்லை] என்பதிறாகப்படிக்கப்படும் ஸுபாலோபனிஷத்வாக்யமே புரோவாதம் என்னத்தகுந்தது என்று விளங்கும். அவ்வுபனிஷத்திலேயே மேலே "நைவேஹ கிஞ்சந அக்₃ர ஆஸீத்₃ தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:" [முதலில் இங்கு ஒன்றுமில்லை; பரமபத நிலயனான நாராயணனாகிற தேவன் ஒருவனே இருந்தான்.] என்று நாராயணனையே ஸகலஜகத்காரணனாகச் சொல்லுகையாலும், "யஸ்

யாவ்யக்தம் ஶரீரம், யஸய¯க்ஷரம் ஶரீரம், யஸ்ய ம்ருத்யு ஶரீரம்...... ஏஷ ஸர்வபூ₄தாந்தராத்மா அபஹத பாப்மா தி₃வ்யோ தே₃வ ஏகோ நாராயண:" [எவனுக்கு அவ்யக்தம ஶரீரமோ, எவனுக்கு அக்ஷரம் ஶரீரமோ, எவனுக்கு மருதயு எனபபடும தமஸ் சரீரமோ, அவன் ஸர்வபூதஙகடகும அந்தராதமாவாய், பாபம்றறவனுய, பரமபதத்தில எழுநதருளியிருககும நாராயணனுகிற தேவன ஒருவனே.] என்று தமஸஸை அதி₄ஷ்டித்திருப்பவன நாராயணனே என்று சொல்லுகையாலும், இந்த மநுஸ்மருதியிலும "தேந நாராயண: ஸமருத:" என்று மேலே இவனை நாராயணனுகவே எடுக்கையாலும, வேதாநதஙகள் ஒருமிடருக உபாதான காரணமும ஒருவனே என்று கோஷிககையாலும, ஶ்வேதாஶ்வதரததில தமஸஸை அதி₄ஷ்டிப்பவனுய் சிவஶப்ததத்தால் சொலலபபட்டவன நாராயணனே என விளஙகுகிறது. சாஸ்திரஙகளில பரமபொருளைபபற்றிப் பலவிடஙகளில் படிககப்படும ஶிவாதி ஶப்தஙகள நாராயணனேயே கூறும என்பதை "ஶாஶ்வதம் ஶிவமச்யுதம் நாராயணம்" என்று நாராயணவல்லியும், "ஸாவ ஶாவ: ஶிவ: ஸ்தா₂ணு:" என்று ஸ்ரீவிஷ்ணுஸஹஸ்ர நாமமும் காட்டித்தருகின்றன. ஆகையால முற்கூறிய ஆக்ஷேபததிற்கு இடமில்லை.

3. யோऽஸாவதீந்த்₃ரியக்₃ராஹ்யஸ் ஸூக்ஷ்மோऽவ்யக்த: ஸநாதந: |
ஸர்வபூ₄தமயோऽசிந்த்ய: ஸ ஏவ ஸ்வயமுத்₃ப₃பௌ₄ள ||

ய: அஸௌ—எந்தப்பரமபுருஷன், அதீந்த்₃ரியக்₃ராஹ்ய:- இந்திரியங்களால அறியத்தக்கவற்றைக கடந்திருக்கிருனே, ஸூக்ஷ்ம:— நுண்ணியவனுயிருக்கிருனே, அவ்யக்த:—(அதனுலேயே) தெளிவாக அறியப்படாதவனுயிருசகிருனே, ஸநாதந:—எப்போதும் நழுவாத தன்மைகளையுடையவனுயிருக்கிருனே, ஸ ஏஷ:—அந்தப் பரமபுருஷனே, அசிந்த்ய:— (ச்ருதி தவிர்ந்த ப்ரமாணங்களால்) நினைத்தற்கரியவனுயிருக்கையாலே, ஸ்வயம்—தானே நிமித்தகாரணமாயிருந்துகொண்டு, ஸர்வபூ₄தமய: உத்₃ப₃பௌ₄ள — எல்லா ஸமஸ்டிவ்யஷ்டிப் பொருள்களாகவுமிருப்பவனுய் வெளிப்பட்டான்.

இந்த மூன்ருமஶ்லோகத்தில், முன் ஶ்லோகத்தில் சொனன அவ்யக்த சப்தத்தை விவரிததுக்கொணடு அவ்யக்த நிலைக்கு அடுதத

படி நடந்த ஸமஷ்டி வ்யஷ்டி ஸ்ருஷ்டிகளைச் சுருக்கமாகக் கூறுகிறார். (ய: அஸௌ) முன் ஸ்லோகத்தில் சொல்லப்பட்ட எந்தப் பரம புருஷன். இவனை அறியவுதவும் பிரமாணம் எது? எனில்: அதீந்த்₃ரியக்₃ராஹ்ய:) அதீந்த்₃ரியமான சாஸ்திரத்தால் கிரஹிக்கத்தக்கவன். இந்திரியங்களால் அறியமுடியாத பொருள்கள்விஷயத்திலேயே ப்ரமாணமான சாஸ்திரத்தாலேயே அறியத்தககவன் என்றபடி. அன்றிக்கே, இந்திரியங்களால் அறியப்படுகின்ற பொருள்களைக் கடந்து நிற்பவன் எனறுமாம். இந்திரியங்களால் அறியப்படும் பொருள்களைக் கடந்துநிற்கும் தன்மை ஆகாசத்தாமரை முதலான இல்லாப்பொருளுக்கும் உண்டே; இங்கும் அப்படியோ? எனில்: அப்படியல்ல: மிக நுண்ணியவனாயிருக்கையாலேயே இந்த்₃ரிய க்₃ராஹ்யங்களைக் கடந்து நிற்கிறான் என்கிறது அடுத்தபடியாக,—(ஸூக்ஷ்ம:)முற்கூறியபடி அவ்யக்தசரீரகனாயிருக்கும்போது ஸூக்ஷ்மமான நிலையிலிருக்கிறான். (அவ்யக்த:) அதனாலேயே, அந்நிலையில் தெளிவாக அறியப்படாதவன் எனப்படுகிறான். அசேதனமாய், தோஷங்களுக்கு இருப்பிடமான இந்த அவ்யக்தத்தை சரீரமாகக் கொண்டவனாகில், தோஷங்களுக்கு எதிர்த்தட்டாயிருக்கும் தன் தன்மையை இழந்துவிடுவானே? எனில்: (ஸநாதந:) எப்போதும் தன் தன்மையை இழக்காதவன் என்கிறார். (ஸ ஏஷ:) அப்படிப்பட்டவனே இப்படிககார்யமானான். இதனால் முன் சொல்லப்பட்ட காரணப் பொருளும் இனிச் சொல்லப்போகும் கார்யப்பொருளும்ஒரே திரவியமே என உணர்த்தப்படுகிறது. மண்ணையும் மண்குடத்தையும் போலக் காரணமும் கார்யமும் ஒன்றாகில், குயவனைப்போலே மற்றொரு நிமித்தகாரணம்வேண்டுமே?எனில்,-(ஸ்வயம்)தானே நிமித்த காரணமாகவுமிருக்கிறான் என்கிறது. உபாதானமான மண்ணானது குடமாம்போது குயவனாகிற வேறொரு நிமித்தகாரணம் தேவைப்படுவதைப்பார்க்கிறோம்; இங்கு நிமித்தோபாதனங்கள் இரண்டும் ஒன்றாயிருப்பது எப்படி ஒட்டும்?எனில்:(அசிந்த்ய:)ச்ருதிதவிர வேறு ப்ரமாணங்களால் நினைத்ததற்கரியவனாயிருக்கையாலே ஒட்டும் என்கிறது. வேதம் இவன் இருவிதமான காரணமாகவும் ஆவதாகக் கூறுகையாலே, அதற்கு முரணான தர்க்கங்கள் இவன் விஷயத்தில் பயன்பட மாட்டா என்று கருத்து. (ஸர்வபூ₄தமய: உத்₃ப₃பௌ₄ள) இப்படிப் பட்டவனாயிருக்கையாலே, இவனே எல்லா ஸமஷ்டிவ்யஷ்டிப் பொருள்களாகவும் வெளிப்பட்டான்; மண்ணும் குடமும்போல காரணமும் கார்யமும் ஒரே திரவியமாகில், அவ்விடத்தில் நிலைகளில் வேற்றுமையிருப்பதுபோலே இங்கும் இருக்கவேண்டுமே; இங்கு அவ்வேற்றுமை யாது எனில்; (ஸூக்ஷ்ம: உத்₃ப₄பௌ₄ள)

அவ்யக்த ஶரீரகனுயிருந்தபோது ஸூக்ஷ்மநிலையிலிருந்தவன், இப்போது ஸ்தூ₂லநிலையை அடைந்தவனுஆனுன. ஆகையால், ஸூக்ஷ்மமாகவும், ஸ்தூலமாகவுமிருக்கும் நிலைகளிலேயே வேற்றுமையேயொழிய, காரணமும, கார்யமும் வெவ்வேறு திரவியங்களல்ல என்றதாயிற்று. இங்கு காரணநிலையில் ஸூக்ஷ்மமாயிருந்தவன் கார்யநிலையில் ஸ்தூலமானுன் என்று கூறுகையால், 'ப்ரஹ்மம் நிர்விகாரம்' என்னும ஶ்ருதிகளுக்கு விரோதம் வாராதோ? எனில்.—ஸூக்ஷ்மமாயிருந்து, ஸ்தூலமாகையாகிற விகாரம் ப்ரஹ்மத்தின் சரீரமான சேதநாசேதனஙகளிடம் நேரேயிருந்துகொண்டு, அவற்றை சரீரமாகக்கொண்டவனுயிருப்பதைவிட்டு இவனிடம் உள்ளதாகையாலே, 'இவனுடைய ஸவரூபம் நிர்விகாரம்' என்று கூறும ஶ்ருதிகளுக்கு விரோதமில்லை. இப்படி நேரே விகாரமில்லையாலும், காரணநிலையில ஸூக்ஷ்மப்பொருள்களை நியமிப்பவனுயிருந்து, கார்யநிலையில் ஸ்தூலபபொருள்களை நியமிப்பவனுகையாகிற விகாரம் இவனுக்கு நேரே ஏற்படுகையால் நிர்விகார ஶ்ருதி விரோதம் வருமே எனில் இவனுக்குத்தாழ்வைதரும் விகாரங்களில்லையெனறு கூறுவதிலேயே நிர்விகாரஶ்ருதிகளுககு நோக்கேயொழிய, பெருமையைத்தரும் முற்கூறிய விகாரஙகள இல்லையென்று கூறுவதில் கருத்தில்லை. 'விகாத்தா' [ஸுபாலஉபனிஷத்) முதலான ஶ்ருதிவாக்யஙகள இத்தகைய பெருமையைத்தரும விகாரங்கள இவனுக்கு உணடெனறு உணர்ததின. ஆகையால் நிர்விகார ஶ்ருதிவிரோதமிலலை.

4. ஸோऽபி₄த்₄யாய ஶரீராத் ஸ்வாத் ஸிஸ்ருக்ஷுர் விவித₄ா: ப்ரஜா: |
அப ஏவ ஸஸர்ஜாதெ₃ள தாஸு வீர்யமபாஸ்ருஜத் ||

ஸ:—*அப்பரமபுருஷன்*, அபி₄த்₄யாய—*ஸங்கலபம் செய்து*, ஸ்வாத் ஶரீராத்—*தன் சரீரத்தினின்றும்*, விவித₄ா: ப்ரஜா:—*பலவிதமான வ்யஷ்டிப் பொருள்களை*, ஸிஸ்ருஷு:—*ஸ்ருஷ்டிக்க விரும்பியவனுய்*, அப ஏவ—*(அண்டகாரணமான) ஜலம் முதலானவற்றையே*, ஆதெ₃ள—*முதலில்*, ஸஸர்ஜ—*படைத்தான;* தாஸு—*அவற்றில்*, வீர்யம—*சக்தியை*, அபாஸ்ருஜத்—*ஏற்படுததினுன*.

முன் ஶ்லோகத்தில் சுருக்கமாகச் சொல்லப்பட்ட ஸமஸ்டி வ்யஷ்டிஸ்ருஷ்டிகளில் ஸமஸ்டிஸ்ருஷ்டியை இந்த ஶ்லோகத்திலும வ்யஷ்டிஸ்ருஷ்டியை அடுத்த ஶ்லோகத்திலும் விவரிக்கிறுன.

(ஸ) அந்தப் பரமபுருஷன். (அபி₄த்₄யாய) ஸங்கல்பம் செய்து. "ஸ ஏவ ஸ்வயமுத்ப₃பெ₄ள" என்று சென்ற ஶ்லோகத்தில் சொன்ன ரீதியில் தானே எல்லா தோஷங்களுக்கும இருப்பிடமான ஸமஷ்டி வ்யஷ்டிப்பொருள்களாக ஆனுைகில், 'ப₄க₃வாந்' என்றவிடத்தில் சொல்லப்பட்ட தோஷமற்றவனுயிருக்கும் தனமையும், கல்யாண குணங்களுக்கும் இருபபிடமாயிருக்கும் தன்மையும் முரண் படுமே? என்னும் ஆஶங்கையெழ, 'இவன் தானே ஸமஷ்டிவ்யஷ்டிப் பொருள்களாக ஆகவில்லை; தன் சரீரத்தையே அவையாக ஆக்கினுன்; ஆகையால் இந்த தோஷமில்லை' என்று காட்டுவதன்மூலம் சென்ற ஶ்லோகத்தை விவரிக்கிருர்,-(ஶரீராத் ஸ்வாத்) தன் ஶரீரத்தினின்றும் படைத்தான் என்று மேலோடே கூட்டிப் பொருள்கொள்வது. இங்கு சரீரசப்தத்தாலே 'தமஸ்' 'அவ்யக்தம்' என்னும் நிலைகளையுடையதாய் சேதனப் பொருள்களோடு கலசியதான அசேதனப் பொருள் கூறப் படுகிறது. 'தன் ஶரீரத்தினின்றும் ஸங்கல்பத்தாலே படைத்தான்' என்று கூறுகையாலே, மநுவுக்கு ஸாங்க்யமதம், அத்வைத ஸித்தாந்தம முதலிய கொள்கைகள் அநிஷ்டமென்றும், விசிஷ்டாத்வைத ஸித்தாந்தமே இஷ்டமென்றும விளங்குகிறது. இது நாம் சொல்லு வதன்று; பா₄ஸ்கரமதத்தைச் சேர்ந்தவரான மநுஸ்ம்ருதிவ்யாக் யாதாவான குல்லூகபட்டர் பொறித்து வைத்ததாகும். "அபி₄த்₄யாந பூர்விகாம் ஸ்ருஷ்டிம் வத₃தோ மநோ: ப்ரக்ருதிரேவாசேதநா ஸ்வதந் த்ரா பரிணமதே—இத்யயம் பக்ஷோ ந ஸம்மத: | கிந்து ப்₃ரஹ்மைவ அவ்யாக்ருத ஶக்த்யாத்மநா ஜக₃த்காரணம் இதி த்ரித₃ண்டி₃வேத₃ாந்த ஸித்₃த₄ாந்த ஏவாபி₄மத: ப்ரதிபா₄தி" [ஸங்கல்பத்தை முன்னிட்ட ஸ்ருஷ்டியைச் சொல்லும் மனுவுக்கு, 'அசேதனமாய், ஸ்வதந்த்ர மான (ப்ரஹ்மாத்மகமல்லாத) மூலப்ரக்ருதியே உலகாகப் பரிண மிக்கிறது' என்னும் பக்ஷம் இஷ்டமன்று; 'ப்ரஹ்மமே அவ்யாக்ருத மான (ஶரீர) ஶக்தியைக்கொண்டு ஜகத்காரணமாகிறது' என்னும் த்ரித₃ண்டி (ராமாநுஜ) வேதாந்த ஸித்தாந்தமே இஷ்டமானது என்று விளங்குகிறது" என்று கல்வெட்டைப்போலே காட்டினுரனரோ குல் லூக பட்டர். இத்தகைய ப்ராமாணிகத்வத்தை வேறு எந்தப் பிற மதச்சான்ருேரிடமும் நாம் காண்கினறிலோம்.

(ஸிஸ்ருக்ஷுர் விவித₄ா: ப்ரஜா:)விதவிதமான வ்யஷ்டிப்பொருள் களை ஸ்ருஷ்டிக்க விரும்பியவனுய்; அடுத்த ஶ்லோகத்தில் சொல்லப் படும் அண்டம் பிரமன் முதலான வ்யஷ்டிப் பொருள்களே இங்கு 'விதவிதமான பிரஜைகள்' என்று கூறப்படுவதாகக் கொள்வதே உசிதமன்ருே.(அபி₄த்₄யாய ஶரீராத் ஸ்வாத்...)"லோகாமயத ப₄ஹு

ஸயாம் ப்ரஜாயேய'' ['நானே பலவாகக்கடவேன்' என்று அப்பரம்பொருள ஸங்கல்பித்தது] என்ற ஶ்ருதியை இங்கு விவரிக்கிறது. (அப: ஸஸர்ஜ) ஜலத்தைப் படைத்தான். ''தானோர் பெருநீர் தன்னுள்ளே தோற்றி அதனுள கண்வளரும் வானோர் பெருமான் மாமாயன வைகுந்தன எமபெருமானே' [திருவாய்1-5-4] எனறுர் ஆழ்வாரும். இங்கு ஜலம் எனறது அணடகாரணமான பஞ்சமஹாபூ$_4$தங்கள் முதலான எல்லா ஸமஷ்டிப் பொருள்களுக்கும் உபலக்ஷணம். 'மஹாபூ$_4$நாதி$_3$வ்ருத்தெளஜா:' என்றவிடத்தில இவ்வர்த்தம் விளக்கபபட்டது. ஐம்பெருமபூதஙகள் முதலானவற்றை ஜலத்தையிட்டு உபலக்ஷிக்கக் காரணமென? எனில்,–''தா இமா ஆப: தத$_3$தி$_4$ரண்யமண்ட$_3$மப$_4$வத்'' [அப்படிப்பட்ட இந்த ஜலஙகளே பொனமயமான அணடமாயிற்று] என்று ஶ்ருதி சொனன ரீதியிலே ப்ருதி$_2$வீப$_4$ாக$_3$த்தை அதிகமாககொண்ட அண்டததிற்கு இடையிடாத காரணம ஜலமேயாகையாலே, அதையிட்டுத் தீ முதலான முற்பட்ட காரணபபொருள்களை உபலக்ஷிக்கிறது. இந்த ஶ்ருதியிலுள்ள 'ஆப:' என்னும் ஶப்தத்தை நினைவுறுத்துவதற்காகவே 'அப ஏவ' என்கிறுர்.

(ஆதெள ஸஸர்ஜ) அண்டம் முதலான வ்யஷ்டிப்பொருள்களைப் படைக்குமுன் நீரைப்படைத்தான (அப ஏவ ஆதெள ஸஸர்ஜ) த்ரிவ்ருத்கரணம செயயப்படாத நீரையே முதலில் படைத்தான். மேலே 'தாஸு வீரயம் அபாஸருஜத்' எனறு த்ரிவ்ருத்கரணம் சொல்லப்படப் போகிறதாகையாலே, இங்கு 'ஏவ'காரத்தாலே அப்படி த்ரிவ்ருத்கரணம செய்யப்படாத பூதங்களை ஸ்ருஷ்டித்தமையைக் காட்டுகிறது. த்ரிவ்ருத்கரணமாவது,–ஒனறுகொன்று கலசாமல் தனித்தனியே நிற்கும் தீ, நீர், பூமி என்னும் மூனறு பூதங்களில் ஒவ்வொன்றிலும பாதிபாகத்தையும் மற்றையிரண்டில் கால் கால் பாகங்களையும சேர்த்து, ஒன்றுடொன்று கலசியதாக இப்போது நாம் காணும் தீ, நீர், பூமி எனனும் பூதங்களை உண்டாக்குகை. ஒன்றுக்கொன்று கலசாமல், தனியே நின்ற ஐமபெரும பூதங்களையும் எடுத்துககொண்டு அவை ஒவ்வொன்றிலும் பாதி பாகத்தையும மற்றை நான்கில் அரைக்கால அரைக்கால் பாகங்களையும் சேர்தது ஒனறுடொனறு கலசியதாக இப்போது நாம் அறியும் ஐமபெரும் பூதங்களைப் படைக்கை பஞ்சீகரணம் எனப்படும். ''ஸேயம் தே$_3$வதை க்ஷத, ஹந்தாஹமிமாஸ திஸ்ரோ தே$_3$வதா அநேந ஜீவேநாத்மநாऽநுப்ரவிஶ்ய நாமரூபே வ்யாகரவாணி, தாஸாம் த்ரிவ்ருதம் த்ரிவ்ருதம் ஏகை

காம் கரவாணி'' [சாந் 6-3-2] [இந்த ஜீவனை சரீரமாகக்கொண்ட நான் தீ, நீர், பூமி எனனும் இம மூன்றையும் வியாபித்து நாமரூபங் களைச் செய்யக்கடவேன; த்ரிவ்ருத்கரணம் செய்யக்கடவேன] என்று த்ரிவ்ருத்கரணம் சொல்லுமிடங்களில் பஞ்சீகரணமே உபலக்ஷிக்கப் படுகிறது. இப்படி ப்ருதிவீ முதலான ஒவ்வொரு பூதத்திலும் மற்ற பூதங்களின் பகுதிகள் கலசியிருந்தபோதிலும, அவற்றில் பிருதிவீ முதலானவற்றின்பாகமே அதிகமாகவும், மற்றபூதங்களின்பாகம குறைவாகவுமிருப்பதாலேயே அவற்றை 'பிருதிவீ' முதலான சப்தங்க ளால் வழங்கவுபதட்டில்லை என்பதை ப்ரஹ்ம ஸூத்ரத்தின் இரண்டா மத்தியாயத்தின் கடைசி ஸூத்ரத்திலே ''வைஶேஷ்யாத் து தத்₃வா த₃ஸ் தத்₃வாத₃:'' எனறு வேத₃வ்யாஸர் காட்டினர்.

(தாஸ) இப்படி த்ரிவ்ருத்கரணம் செய்யப்பெருமையாலே ஒன்ரேடொன்று கலசி அண்டத்தை உண்டாக்க முடியாமலிருந்த அந்த நீர் முதலானவற்றில். (வீர்யமபாஸ்ருஜத்) த்ரிவ்ருத்கரணம் செய்து, அதனுல் ஏற்பட்ட, அண்டத்தை உண்டாக்கவல்ல சக்தி யைப் படைத்தான் என்கிறது.

''நாநாவீர்யா: ப்ருத₂க்₃பூ₄தாஸ் ததஸ்தே ஸம்ஹதிம் விநா ।
நாஶக்நுவந் ப்ரஜா: ஸ்ரஷ்டும் அஸமாக₃ம்ய க்ருத்ஸ்நஶ:॥
ஸமேத்யாந்யோந்ய ஸம்யோக₃ம் பரஸ்பரஸமாஶ்ரயா: ।
ஏகஸங்கா₄தலக்ஷ்யாஶ்ச ஸம்ப்ராப்யைக்யமஶேஷத: ॥
புருஷாதி₄ஷ்டி₂தத்வாச்ச அவ்யக்தாநுக்₃ரஹேண ச ।
மஹதா₃த்₃யா விஶேஷாந்தா ஹ்யண்ட₃முத்பாத₃யந்தி தே॥''
[வி பு 1-2-52, 53, 54]

[மிகவும் திரவமாயிருக்கை, மிகவும் கடினமாயிருக்கை முதலான விதவிதமான சக்தியை உடையவையாய், தனித்தனியேயிருந்த அந்த ஸமஷ்டிப் பொருள்கள், (பஞ்சீகரணத்தாலே) ஒன்ரேடொன்று கலந்து ஒன்ருகாமல், அண்டம் முதலான வ்யஷ்டிப் பொருள்களைப் படைக்க வல்லமையற்றவையாயிருந்தன. (பஞ்சீகரணத்தாலே) ஒன்ருெழியாமல் ஒன்ரேடொன்று கலந்து ஒன்ருன அண்டத்தைப் படைப்பதற்காக ஒன்ருகி, ஜீவனுல் அதி₄ஷ்டிக்கப்பட்டிருக்கை யாலும், மூலப்ரக்ருதியால் வியாபிக்கப்பெற்றிருக்கையாலும் மஹான் தொடங்கிப் பஞ்ச பூதங்களீருகவுள்ள எல்லாத்தத்துவங்களும் அண்டத்தை உண்டாக்குகின்றன.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்தில் சொல்லப்பட்டது இங்கு அனுஸந்திக்கத்தக்கது.

5. ததண்ட₃மப₄வத்₃தை₄மம் ஸஹஸ்ராம்ஶு ஸமப்ரப₄ம் |
தஸ்மிந் ஜஜ்ஞே ஸ்வயம் ப்₃ரஹ்மா ஸர்வலோகபிதாமஹ: ||

தத்—*அண்டத்துக்குக் காரணமான ஜலம் முதலானவை.* ஹைமம்—*பொன்மயமானதாய்,* ஸஹஸ்ராம்ஶுஸமப்ரப₄ம—*சூரியனையொத்த ஒளியுள்ளதான,* அண்ட₃ம்—*அண்டமாக,* அப₄வத்—*ஆயிற்று;* தஸ்மிந்—*அவ்வண்டத்தில்,* ஸ்வயம்—*நாராயணனே தானே,* ஸர்வலோகபிதாமஹ: ப்₃ரஹ்மா—*எல்லா உலகிற்கும் பிதாமஹனான பிரமனாக,* ஜஜ்ஞே—*பிறந்தான்.*

முன் ஶ்லோகத்தில் ஸமஷ்டிஸ்ருஷ்டியைச் சொல்லிவிட்டபடியாலே, அதற்குப்பின் ஏற்பட்ட வ்யஷ்டிஸ்ருஷ்டியை விவரிக்கிறார் இங்கு. (தத்) முற்கூறியபடி த்ரிவ்ருத்கரணம் செய்யப்பெற்று, அண்டத்தை உண்டாக்கவல்ல சக்தியைப் பரமனிடமிருந்து பெற்றவையான பூ₁மி பர்யந்தமான தத்துவ ஸமூஹம். (அண்ட₃ம அப₄வத்) அண்டமாக ஆயிற்று. மஹான் தொடங்கி பூமியளவான தத்துவங்கள் பரமபுருஷனுடைய ஸங்கல்பத்தாலே அண்டமாகப் பரிணமித்தன என்று கருத்து. 'ததண்ட₃ம் ஸமப₄வத்' என்று ஸுபா₄லோபநிஷத்தின் முதல் கண்டத்தில் படித்ததையும், "மஹதா₃த₃யா விஶேஷாந்தா ஹ்யண்ட₃முத்பாத₃யந்தி தே" [வி-பு 1-2-54] [மஹான் தொடங்கிப் பஞ்ச பூதங்களீருகவுள்ள எல்லாத் தத்துவங்களும அண்டத்தை உண்டாக்குகின்றன.] என்று ஸ்ரீ விஷ்ணு புராணத்தில் உபப்₃ருமஹணம செய்ததையும் காண்பது. (ஹைமம அண்ட₃ம்) பொன்மயமான அண்டம; பொன்போலே ஆசைபடத்தக்க அண்டம என்று கருத்து; 'தா இமா ஆப: தத்₃தி₁ரண்யமண்ட₃மப₄வத' [அப்படிப்பட்ட இந்த ஜலங்களே பொன்மயமான அண்டமாயிற்று.] என்னும் ஶ்ருதியின் அர்த்தம உபப்₃ருமஹணம் செய்யப்படுகிறது. (ஸஹஸ்ராம்ஶு ஸமப்ரப₄ம அண்ட₃ம) நாம காணும தாழ்ந்த அண்டங்களன்று; சூரியனைப்போலே பேரொளி படைத்ததாயிருந்தது பரமனால படைக்கப்பெற்ற இவ்வண்டம என்று கருத்து. (ஸஹஸ்ராம்ஶு ஸமப்ரப₄ம் ஹைமம அண்ட₃ம) "தத் தேஜோ ஹிரண்யமண்ட₃ம்" என்னும மஹோபநிஷத்வாக்யம உபப்₃ரும்ஹணம செய்யப்பட்டதாயிற்று. அண்ட ஸ்ருஷ்டியைச் சொன்னபின்பு "தத்ர ப்₃ரஹ்மா சதுர்முகோ₂ ஜாயத"

[மஹோபனிஷத்] 'மத்₄யே புருஷோ தி₃வ்ய:' [ஸுபால] என்று ப்ரஹ்ம ஸ்ருஷ்டியை ஸுபாலமஹோபனிஷத்துக்களிற் சொன்னதை யொட்டி, அவ்வண்டத்தினுள ப்ரஹ்மாவின் ஸ்ருஷ்டியைச் சொல்லுகிருர் அடுத்தபடியாக,— (தஸ்மிந்) அவ்வண்டத்தில. (ஸ்வயம் ப்₃ரஹ்மா ஜஜ்ஞே) முற்கூறிய பரமபுருஷன் தானே பிரமனுகப் பிறந்தார். 'தஸ்ய ப்₃ரஹ்மா பி₃பீ₁தே' [அந்த ம்ருத்யுவைக்கண்டு பிரமன் பயந்தான்] என்று ஸுபாலோபனிஷத்தில் பிரமனை மருத்யுவைக்கண்டு பயப்படும் ஜீவனுகச் சொல்லுகையாலும், இங்கும்மேலே 'தத்விஸ்ருஷ்ட: ப்₃ரஹ்மா' என்று பிரமனை நாராயணனுல படைக்கப்பட்டவனுகச் சொல்லுகையாலும் இங்கு பரமபுருஷனுக்கும் பிரமனுக்கும் ஸ்வரூபைக்யம் சொல்லுவது பொருந்தாது. ஆகையால், 'ஸ ஏவ ஸ்வயமுத்₃ப₄பௌ' என்ற மூன்ரும் ம்லோகத்திற்போலே இங்கும் பிரமனுக்குப் பரமபுருஷன் சரீரியாயிருப்பதைக் கருதியே இருவரையும் ஒனருகப் படிக்கிற தெனறு கொள்ளவேண்டும. "விஷ்ணுர் ப்₃ரஹ்மஸ்வரூபேண ஸ்வயமேவ வ்யவஸ்தி₂த:" [விஷ்ணுவானவர் ப்ரஹ்மாவைத் தன் உருவாகக்கொண்டு தானே நிற்கிருர்.] என்று சொல்லப்பட்டதன்ருே. இக்கருத்தாலேயேயனருே 'ஸ ப்₃ரஹ்மா ஸ மிவ:' 'ப்₃ரஹ்மா நாராயண: மிவம்ச நாராயண:' என்று உபனிஷத்துக்களும், 'சிவனுய் அயனுய்' எனறு வேதம தமிழ் செய்த மாறனும் ப்ரஹ்மருத்ரர்களை நாராயணனுகவே உத்கோஷித்தனர். (ஸர்வலோகபிதாமஹ: ப்₃ரஹ்மா ஜஜ்ஞே) எல்லாவுலகிற்கும் பாட்டனுன பிரமனுக, அவனையும் படைத்த முப்பாட்டனுன நாராயணே பிறந்தான. தேவமனுஷ்யதிர்யக்ஸ்தா₂வரங்களான ஜீவராசிகளை த₃க்ஷன் முதலான ப்ரஜாபதிகள் படைக்கிருர்களாகையால், அவர்களையும் படைக்கும பிரமன் ஜீவராசிகளுக்குப் பாட்டனுகிருன் என்று கருத்து. இதிலிருந்து, அண்டத்திற்குள்ளிருக்கும் பொருள்களை ஸர்வேம்வரன பிரமன் முதலானுர்கத அந்தர்யாமியாயிருந்தே படைக்கிருன என்று விளஙகுகிறது.

6. ஆபோ நாரா இதி ப்ரோக்தா ஆபோ வை நரஸூநவ: |
தா யத₃ஸ்யாயநம் பும்ஸஸ் தேந நாராயண: ஸ்ம்ருத: ||

ஆப:—(அண்டகாரணமான) ஜலம் முதலான தத்துவங்கள். நாரா:—நாரங்கள். இதி—என்று, ப்ரோக்தா:—சொல்லப்படுகின்றன; ஆப:—அந்த ஜலம் முதலானவை.

நரஸூநவ: வை—அழியாதவனுகையால நரன் எனப்படும் பரமாதமாவிடமிருந்து பிறந்தவையனறே. யத்-எக்காரணத் திஞல. தா:-அந்த ஜலம் முதலானவை. அஸ்ய பும்ஸ:- இந்தப் பரமபுருஷனுக்கு. அயநம்-இருப்பிடமாயிருக்கின் றனவோ. தேந-அககாரணத்திஞல். நாராயண. ஸ்ம்ருத:- (இவன்) நாராயணன் எனபபடுகிறுன்.

முற் கூறியபடி எலலா ஸமஷ்டிவ்யஷ்டிப பொருளகளேயும முறையே நேரேயும், மற்றவர்களேயிடையிடடும படைத்தவன நாரா யணனே எனறு காட்டுகிருர் இந்த ஶ்லோகததில். ஸுபாலோப னிஷத்தில ஏழாவது கண்டததின தொடக்கத்தில'அஜ ஏகோ நிதய:' எனறு தொடஙகிப் பரபபொருள விகாரமற்றதாகவும, ஜகதகாரண மாகவும, உலகிற்கு அநதராத்மாவாகவும இருப்பது என்று கூறி, அதற்கு முனனும பினனும் இம்மூனறு தனமைகளேயும விரிவாக விளககி நாராயணசப்தமும் பலகால் படிக்கப்பட்டது. ஆகையால விகாரமற்றதாயிருக்கை முதலான இம மூனறு தனமைகளும நாரா யண ஶபதத்தின அவயவார்ததஙகள் எனபதே ஶ்ருதியின கருதது என்று எண்ணி இம மூனறு தனமைகளேயும விளககும நாராயண சபதமே பரமகாரணனுககு வாசகம் எனறு காடடுகிறுா: (ஆப:) முன ஶ்லோகஙகளில் கூறியபடி சேதனப்பொருளகளோடு கூடியவை யான அணடகாரணமான ஜலம முதலான தத்துவஙகளேக் குறிக் கிறது. (நாரா இதி ப்ரோக்தா:)நாரஙகள எனப்படுகின்றன இவை நாரங்கள எனபபடுவதற்குக் காரணததைக காட்டுகிறது அடுத்த பாதம: (ஆபோ வை நரஸூநவ.) இநத ஜலம முதலானவை நரனிட மிருந்து பிறநதவையனறே; அதனுலேயே நாரஙகள் எனப்படுகின றன எனறு கருதது.'ரீஙக்ஷயே'எனனும் தாதுவிலிருநது தோனறிய 'ர:' எனனும பதம அழிவுளளதைக காட்டுகிறது. 'நர:' எனறு அழியாததான பரபபொருளேக்காடடுகிறது. 'ஜந்ஹுர் நாராயணோ நர' எனறு ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமத்திலும நரஶப்தம பரம புரு ஷனின பெயராகப படிக்கப்பட்டதனறே. நரனுகிற அவனிட மிருந்து தோனறியவை நாரஙகளாகின்றன என்றபடி. இனி, நாரா யண ஶப்தத்துககு வ்யுதபத்தியைக் காட்டுகிறது உததரார்த்தம: (தா யதஸ்யாயநம புமஸஸ் தேந நாராயண. ஸ்ம்ருத) இவ் வணணமாக நாரங்கள எனபபடும ஜலம முதலானவை இபபரம புருஷனுக்கு அயநமாக-இருப்பிடமாக-இருககையால, இவன நாரா யணன என்ப்படுகிறுன். ஆக, 'நர' ஶபதம அழியாத பரம

பொருளைக்காட்டுகையாலே விகாரமற்றவனுயிருக்கையும். நார ஶப்தத்தாலே ஸகலதத்துவங்களும் நரனிடமிருந்து பிறந்தவையென்று காட்டுகையாலே ஜகத்காரணத்வமும், நாராயண ஶப்தத்தாலே எல்லாப் பொருள்களும் தனக்கு இருப்பிடம என்னலாம்படி இவன் அனைத்திலும் உள் நுழைந்திருப்பதைக் காட்டுகையாலே உலகிற்கு அந்தராத்மாவாயிருக்கும் தன்மையும் ஆக இம் மூன்றும் நாராயண ஶப்தத்தின பொருள் என்று காட்டுவதன் மூலம் 'அஜ ஏகோ நித்ய:' என்னும் ஸுபாலோபனிஷத் வாக்யமும், ஆறுவது ஏழாவது கண்டங்களின் பொருளும் உபப்₃ரும்ஹணம் செய்யப்பட்டதாயிற்று. இங்கு ஓராக்ஷேபம் எழுகிறது. முன் ஶ்லோகத்தில் ப்ரஹ்மாவைப் பற்றியே பேசியிருக்கையால், 'அஸ்ய' என்று இந்த ஶ்லோகத்தில் அவனை எடுப்பதே உசிதமேயொழிய, அதற்கு முன் ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட பரமபுருஷனை எடுப்பது உசிதமல்லவே என்பது அவ்வாக்ஷேபம். முன ஶ்லோகத்தில் 'ஸ்வயம்' என்று பரமபுருஷனையே எடுத்து அவனே பிரமனாகப்பிறந்தான் என்று கூறியிருக்கிறபடியால், அப்பரமபுருஷனையே இங்கு 'அஸ்ய' என்னும் ஸர்வநாமஶப்தத்தாலே எடுத்து அவனுக்கு வாசகமாக நாராயண ஶப்தத்தைக கூறுகிறது எனறு கொள்ளக் குறையில்லை—என்பது இவ்வாக்ஷேபத்திற்கு ஸமாத₄ானம். 'ப்ரஹ்மா' எனனும் ஶப்தத்திற்கு நான்முகனுக்கு அந்தர்யாமியான பகவான் எனறு பொருள் கொள்ளாத மற்றும சில வ்யாக்யாதாக்கள், ஸர்வநாமஶப்தம் ப்ரத₄ாநமாயிருப்பதையே காட்டுமாகையாலும், ஶாப்₃த₃ப்ராத₄ாந்யமும் முதல் வேற்றுமையில் படிக்கப்பட்ட ப்ரஹ்மாவுக்கேயாகையாலும், அவனே நாராயணன் எனப்படுகிறுன் எனறு ஆஶங்கித்துக் கொண்டு, அப்படிக் கொணடால் பல வேதசாஸ்திர வாக்கிய விரோதஙகள் வருமாகையாலும, மேல் ஶ்லோகத்தில் பரமபுருஷனிடமிருந்து பிரமன் உண்டானுன் என்று கூறுகையாலும் பரமபுருஷனே இங்கு நாராயண ஶப்தத்தாலே சொல்லப்படுகிறுன் என்று கொள்ளவேண்டும் என்று பரிஹாரமுரைத்தார்கள். இப்படிக் கொண்டாலும் விரோதமில்லை.

**7. யத் தத் காரணமவ்யக்தம் நித்யம் ஸத₃ஸத₃ாத்மகம்।**
**தத₃விஸ்ருஷ்ட: ஸ புருஷோ லோகே ப்₃ரஹ்மேதி கீர்த்யதே॥**

**யத் தத் காரணம்**—யாதொன்று ஸர்வகாரணமாயிருக்கிறதோ, **அவ்யக்தம்**-அவ்யக்தத்தை சரீரமாகக் கொண்டதாயிருக்கிறதோ, **நித்யம்**—எப்போதும், **ஸத₃ஸத₃ாத்மகம்**—

சேதநாசேதநப்பொருள்களை சரீரமாகக் கொண்டதாயிருக்கிறதோ, தத்₃விஸ்ருஷ்ட:—அந்தப் பொருளாலே நேரே பிறப்பிக்கப்பட்டவனை, புருஷ:—ஜீவனை, லோகே—உலகில், ப்₃ரஹ்மா இதி—பிரமன என்று, கீர்த்யதே—கூறப்படுகிறான்.

முன் ஶ்லோகத்தில் ஸர்வகாரணனாக் கூறப்பட்ட நாராயணன பிரமனல்லன என்று காட்டுவதன் மூலம பிரமனும் பிரமனால ஸ்ருஷ்டிக்கப்பட்ட மற்ற தேவதைகளும பரமபொருளல்லர் என்று நிலைநிறுத்துவதற்காகப பிரமன் ஸர்வகாரணனை நாராயணனால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவன என்று கூறுகிறார் இந்த ஶ்லோகத்தில; (யத் தத் காரணம்) 'ஆஸீதி₃த₃ம' என்று தொடங்கி, 'தேந நாராயண: ஸ்ம்ருத:' என்பதிருக ஸர்வகாரணபபொருளாகக் கூறப்பட்ட நாராயணனைப பூர்வார்த்த₄த்தாலே அநுவதி₃க்கிறார். (அவ்யக்தம்) 'அவ்யக்த: வயனுஜய ந்நித₃ம' என்று சேதநாசேதந ஸமுதா₃யமாயிருக்கும அவ்யக்தத்தை சரீரமாகக்கொண்டிருந்த நிலையைக் காட்டுகிறார். (நித்யம ஸத₃ஸதா₃த்மகம) முற்கூறியபடி காரணநிலையில அவ்யக்த ஶரீரகனாயிருந்தவனே காரியநிலையிலும சேதநாசேதந ஶரீரகனாயிருந்தவன என்று காட்டுகிறார். 'ஸத்' 'அஸத்' என்று உள்ளதென்றும, இல்லதென்றும் வழங்கப்படும சேதநாசேதனங்களைக் குறிக்கிறது 'ஸத₃ஸதா₃த்மகம' என்று வஸ்து பரிசசே₂த₃மின்மையைக் கூறுகிறதாகையாலே, 'நித்யம்' என்று காலபரிச்சே₂த₃மின்மையைக் கூறுகிறதாகவுமாம. இது தே₃ஶபரிசசே₂த₃மின்மைக்கும் உபலக்ஷணம். (தத்₃விஸ்ருஷ்ட: ஸ புருஷ: லோகே ப்₃ரஹ்மேதி கீர்த்யதே) அந்த நாராயணனாலே நேரே படைக்கப்பட்டவனான ஜீவனே உலகில் பிரமன் என்று கீர்த்திக்கப்படுகிறான். மற்ற ஜீவர்களை நாராயணன பிரமன் முதலான ஜீவர்களுக்கு அந்தர்யாமியாயிருந்துகொண்டு அவர்கள் மூலம ஸங்கலபாதிகளைசசெய்து படைக்கிறான; பிரமனை நேரே படைக்கிறான என்னும வாசியைக் காட்டுகிறது 'தத்₃விஸ்ருஷ்ட:' என்பதில 'வி' என்னும் உபஸர்க்கம. (லோகே) லோக ப்ரஸித்தி₃யைக் கூறுகிறதாகவுமாம; "ஸ ப்₃ரஹ்மா" [தை—நா] "ப்₃ரஹ்மா நாராயண" [ஸுபால] ப்₃ரஹ்மா பி₃பீ₄தே" [ஸுபால] "ப்₃ரஹ்மா தே₃வாநாம ப்ரத₂ம ஸம்ப₃பூ₄வ" [முண்டக] "ப்₃ரஹ்மா தே₃வாநாம் பத₃வீ: கவீநாம" [மஹா-நா] "நாராயணாத்₃ ப்₃ரஹ்மா ஜாயதே" [நாராயண] "ந ப்₃ரஹ்மா நேஶாந:" [மஹோபநிஷத்] "தத்ர ப்₃ரஹ்மா சதுர்முகோ அஜாயத" [மஹோபநிஷத்] முதலான வேதப்ரஸித்தியைக்

கூறுகிறதாகவுமாம். ஆக, இந்த ஶ்லோகத்தில், பிரமனும் நாராயணனால் படைக்கப்பட்ட ஜீவனேயொழிய ஸர்வகாரணப்பொருளல்ல என்றும் பிரமனைப்படைத்த நாராயணனே ஸர்வகாரணன் என்றும் கூறினராயிற்று. மும்மூர்த்திகளும் ஸமம், மூவருமே ஒருவரே, மூன்றிலும் மேலானதொன்றே பரபொருள் என்னும் துர்வாதங்கள் இங்கு மனுவினாலே தொலைக்கப்பட்டன என்று அறியத்தக்கது. ஸுபாலோபனிஷத்தையே இவ்வேழு ஶ்லோகங்களும் வெளிப்படையாக உபப்ருஂஹணம் செய்திருப்பதாலும் மஹோபனிஷத்தையும், நாராயணோபனிஷத்தையும ஆங்காங்கு உபப்ருஂஹணம் செய்திருக்கையாலும் இவ் வுபநிஷத்துக்கள் உபனிஷத்தோ அல்லவோ என்னும் நவீனர்களின் சங்கையும்தகாக்கப்படுகிறது.

இப்படி ஸ்ம்ருதியின ஆதியில் பரதத்துவநிஷ்கர்ஷம செய்த மனு, நடுவிலும் முடிவிலும் பரதத்துவநிஷ்கர்ஷம் செய்தபடியைக் காண்போம் இனி. எட்டாமத்தியாயத்தில் ஸாக்ஷிப்ரஶ்னப்ரகரணத்தில் ஓரழகிய ஶ்லோகம் உள்ளது; அதை திவ்யப்ரபந்த வயாக்யானங்களில் நம் பூர்வாசார்யர்கள் பலகால எடுத்துச் சுவை சொட்ட வியாக்கியானம் செய்துள்ளனர். அதைக் காணபோமினி.

**யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதி₃ ஸ்தி₂த:।**
**தேந சேத₃விவாத₃ஸ்தே மா க₃ங்க₃ாம் மா குரூந் க₃ம:॥**

யம:—நியமனத்தைச் செய்பவனாய், **வைவஸ்வத:**—ஸூர்யனின் நடுவிலிருப்பவனாய். **ராஜா**—இனியவனாய். **ய: ஏஷ:**—எவனொருவன். **தவ**—உன்னுடைய. **ஹ்ருதி₃**—நெஞ்சில். **ஸ்தி₂த:**—இருக்கிறானோ. **தேந**—அவனோடு. **தே**—உனக்கு. **அவிவாத₃: சேத்**—விவாதமில்லையானால். **மா க₃ங்க₃ாம் க₃ம:**—கங்கைக்கும் நீ போகவேண்டாம்; **மா குரூந் க₃ம:**—குருக்ஷேத்திரத்திற்கும் போகவேண்டாம்.

ஸர்வேஶ்வரனோடு விவாதமில்லையாகில், புண்ணியங்களை ஸம்பாதிக்கத் தேவையில்லை என்கிறார் இந்த ஶ்லோகத்தில்.

(யம:) சிலரை நியமிக்கும் அந்த யமனன்று கிடீர்!

**“அஹமமரவரார்ச்சிதேந தா₄த்ரா**
**யம இதி லோகஹிதாஹிதே நியுக்த:।**
**ஹரிகு₃ருவஶகே₃ாஸ்மி ந ஸ்வதந்த்ர:**
**ப்ரப₄வதி ஸம்யமநே மமாபி விஷ்ணு:॥”** [வி-பு3-7-13]

[தேவர் தலைவர்களால் அர்ச்சிக்கப்படும ஸர்வேஶ்வரனாலே ஜனங்களுக்கு நன்மை செய்யவும், தீமையை விலக்கவும 'யமன்' என்று பெயர் கொடுக்கப்பெற்று நியமிக்கப்பட்டிருக்கிறேன். பெரியோனான ஹரிக்கு வசப்பட்டவனே நான். சுதந்திரமானவனல்லன; என்னையும நியமிப்பதில் விஷ்ணுவே சக்தியுள்ளவர்.] என்று யமன் தானே சொல்லியபடி அவனையும நியமிக்கும யமனன்றோ இவன். (வைவஸ்வத:) விவஸ்வானான ஸூரியனுடைய பிள்ளையான யமனன்று கிடீர்!

''த்₄யேய: ஸதா₃ ஸவித்ருமண்ட₃லமத்₄யவர்த்தீ
நாராயண ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட: |
கேயூரவாந் மகரகுண்ட₂லவாந் கிரீடீ
ஹாரீ ஹிரண்மயவபுர் த₄்ருதஶங்க₂சக்ர:||''

[ஸூரியமண்டலத்தின் நடுவிலிருப்பவனாய், பத்மாஸனத்தில் வீற்றிருப்பவனாய், தோள்வளை, மகரநெடுங்குழை, கிரீடம, ஹாரம் முதலான தி₃வ்யாப₄ரணங்களை உடையவனாய், பொன்மயமான திருமேனியை உடையவனாய் சங்கசக்கரங்களை தரித்தவனான நாராயணன எப்போதும் தியானிக்கத்தக்கவன.] என்கிறபடியே, அந்த ஸூர்யனுக்கும அந்தர்யாமியாயிருப்பவன் கிடீர்! அன்றிக்கே, அந்த யமனையும நியமிப்பவனாயிருந்தும, ஸூர்யகுலத்திலே உலகுய்ய ராமனாக அவதரித்தவனகிடீர்! என்றும பொருள் கொள்ளலாம. ஆக, இவ்விரண்டுபொருள்களாலும நாராயணனே இங்கு சொல்லப்படுபவன என்று விளங்குகிறது. (ராஜா) தர்மராஜாவான அவனைப்போலே நரகத்திலேயிட்டுச் சுடுபவனாயிராமல், அனைவர்க்கும இனியவனாயிருப்பவன் கிடீர்! ''ரஞ்ஜயதீதி ராஜா'' [அனைவரையும ரஞ்ஜிப்பவனாகையாலே ராஜா எனப்படுகிறான்.] ''தே₃வ:'' என்று குல்லூகபட்டர் பாடம, அப்போது தி₃வுத₄ாதுவின் எல்லாப் பொருளும இயற்கையாகப் பொருந்தியிருக்கப்பெற்றவன என்று பொருளாகிறது. இதுவரை படிக்கப்பட்ட இம் மூன்று பெயர்களும் லோகப்ரஸித₃்த₄னான யமனையும குறிக்கலாமாகையாலே, அவனைத் தவிர்ப்பதற்காக நாராயணனுக்கேயுள்ள தனிப் பெருமையைப் படிக்கிறார் அடுத்தபடியாக,—(யஸ் தவைஷ ஹ்ருதி₃ ஸதி₂த:) அவனைத் தேடி நீ எங்கும போகவேண்டா; வெகுதூரத்திலிருந்துகொண்டு உன்னை ஆள்வதைக்காட்டிலும, உன்னோடு கூடியிருந்து உன்னைத்திருத்துவது நன்றென்று உன் நெஞ்சிலேயே எழுந்தருளியிருப்பவனன்றோ இவன. இதிலிருந்து, இவன் லோகப்ரஸித்த யமன அன்றென்றும, ஶ்ருதிப்ரஸித்த ஸர்வாந்தர்யாமியான நாராயணனே என்றும விளங்குகிறது. (தேந தே அவிவாத₃ஶ்

சேத்) அவனோடு உனக்கு விவாதமில்லையாகில். உடையவனுன அவன் உடைமையான உன்னை 'த்வம மே' [நீ என்னுடையவன] என்று கூறினுல், அதை மறுத்து 'அஹம மே' [நான் என்னுடையவன] என்று கூருமலிருந்தாயாகில். இதுவேயன்றே ப்ரபனனனிருக்கவேண்டிய நிலை.

''யோऽந்யதா₂ ஸந்தமாத்மாநமந்யதா₂ ப்ரதிபத்₃யதே ।
கிம் தேந ந க்ருதம் பாபம சோரேணுத்மாபஹாரிணு ॥''

[பகவானுடைய உடைமையாயிருக்கும் ஆத்மாவை எவன ஸ்வதந்த்ரமாக மயங்குகிருனே, ஆத்மாவையே திருடும் அவனுலே செய்யப்படாத பாபம் எது?] என்கிறபடியே ஆத்மாபஹாரமாகிற பாபத்தை நீ செய்யாமலிருந்தாயாகில், ஒரு பாபப்ராய்ச்சித்தத்திற்காக நீ புண்யதீர்த்தங்களுக்கோ, புண்யஸ்தலங்களுக்கோ செல்லவேண்டாம் என்கிறுர் மேலே,—( மா க₃ங்கா₃ம் மா குருந் க₃ம' ) கங்கைக்கும் போகவேண்டாம்; குருக்ஷேத்ரததிற்கும செலலவேண்டாம். இது ஸகலபுண்யதீர்த்தங்களுக்கும், ஸகலபுண்யக்ஷேத்ரங்களுக்கும் உபலக்ஷணம. ஆத்மாபஹாரமாகிற பெருமபாவததைச் செய்யாமல், பரமாத்மாவோடு விவாதமில்லாமலிருந்தாயாஞல், அதனுலேயே ஸர்வபாபஙகளும் நீஙகுமாகையால். பாபப்ராயஸ்சித்தத்திற்காக நீ ஒரு காரியம செய்யவேண்டாம்; பரமாத்மாவிடம் விவாதமுள்ளவனுய், ஆத்மாபஹாரம் செய்பவனுயிருந்தாயாகில, ''கிம தேந ந கருதம் பாபம'' என்கிறபடியே நீ என்ன ப்ராயச்சித்தம செய்தாலும அது தீராது. ஆகையால் ஸ்வயம் ப்ரயோஜன புத்தியுடன புண்யதீர்த்த புண்யஸ்தலங்களை அனுபவிக்கலாமேயொழிய உபாயபுத்தியுடன அவற்றில் இழிய இடமே இல்லை என்று கருத்து. ''உம்முயிர் வீடுடையானிடை வீடுசெய்ம்மினே'' [திருவாய் 1-2-1] எனனும் பாசுரத்தின ஈட்டில இந்த ஸ்லோகததை வியாக்கியாநம செய்து, ''அஹங்காரமமகாரங்கள் கிடக்க ப்ராயஸ்சித்தம பண்ணுகையாவது-நிஷித்தத்ரவ்யத்தை உளளே வைதது மெழுகூட்டினவோபாதியிறே. உடையவனுக்கும் உடைமைக்கும தககபடியிறே ப்ராயஸ்சித்தமும; உடையவன ஸர்வேஸ்வரன்; த₃ரவ்யங்களில் ப்ரத₄ாநமான ஆத்ம த்₃ரவ்யத்தையிறே அபஹரிததது. அபஹரித்த த்₃ரவ்யத்தைப் பொகட்டு, ப்ராயஸ்சித்தம பண்ணவேணுமே; பொகடுகிற த்₃ரவ்யம தானுகையாலே, ப்ராயஸ்சித்தம் பண்ணுகைக்கு வேறு அதி₄காரியுமில்லையே; ஆகையாலே, நீஙகளும உடையவன பக்கலிலே வீடுசெயம்மினே'' என்று அருளியிருக்கும் அமுதன்ன அருளிச்செயல்கள் இங்கு அனுஸந்திக்கத்தக்கன.

இனி, மநுஸ்மருதியின் கடைசியிலுள்ள சில ஶ்லோகங்களில் பரதத்துவநிஷ்கர்ஷம செய்திருக்கும் பெறறியைக் காண்போம். பனிரணடு அத்தியாயங்களில் அங்கமான கர்மத்தை விவரிதது விட்டு, கடைசி அததியாயமான பனிரணடாமத்தியாயத்தில் 122-வது ஶ்லோகம் தொடஙகி நாலு ஶ்லோகங்களில், அஙகி₃யான ப₁க₃வது₃பாஸனத்தை விதிக்கிருர் மனு. அந்த ஶ்லோகங்களை விவரிபபோமினி.

**ப்ரஶாஸிதாரம ஸர்வேஷாம் அணீயாம்ஸமணீயஸாம் |**
**ருக்மாப₄ம் ஸவப்நதீ₄க₃ம்யம வித்₃யாத் தம் புருஷம பரம்||**

**ஸர்வேஷாம**—*அனைவர்க்கும்*, **ப்ரஶாஸிதாரம்**—*நியமனத்தைச் செய்பவனும*, **அணீயஸாம**—*அணுஸ்வரூபமான ஜீவர்களைக் காட்டிலும்*, **அணீயாம்ஸம்**—*அணுவாயிருப்பவனும்*, **ருக்மாப₄ம்**—*பொன்போனற ஒளியுடைய திருமேனியுடையவனும்*, **ஸ்வப்நதீ₄க₃மயம்**—*கனவு போன்ற மானஸ ஜ்ஞானததாலே அறியப்படுபவனுமான*, **தம பரம் புருஷம்**—*அநதப் பரமபுருஷனை*, **வித்₃யாத்**—*உபாஸிக்கக்கடவன்*.

பரமபுருஷோபாஸனத்தை விதிக்கிருர்.

(ப்ரஶாஸிதாரம ஸர்வேஷாம) அனைவரையும் எவன் நியமிககிருனே அவனையே உபாஸிக்கவேணடும். உலகில் சிலரை நியமிபபவனை ஆஶ்ரயித்தால் அலபப₂லன கிடைப்பதையும், பலரை நியமிப்பவரான அரசன முதலானவரை ஆஶ்ரயித்தால் அதி₄கப₂லன் கிடைப்பதையும காண்கிறேம். இதே நியாயப்படி பாரததால சேதனரனைவரையும நியமிக்கும பரமபுருஷனை ஆஶ்ரயித்தாலதான மிகச்சிறந்த பலனன மோக்ஷம் கிடைக்கும என்று கருத்து. 'ஶாஸிதாரம்' எனனுமல, 'ப்ரஶாஸிதாரம்' எனகையாலே, அரசன முதலானருடைய நியமனத்தைக் காட்டிலும் இவனுடைய நியமனத்தின சிறப்பு பேசப்படுகிறது. அவர்களைப போலல்லாமல், எல்லா ஜீவர்களையும் உள்நுழைநது நியமிப்பவனனறே இவன். ஜீவர்கள அணுஸ்வரூபர்களாயிற்றே; அவர்களை எப்படி உள் நுழைந்து நியமிக்கமுடியும? எனில்: (அணீயாம்ஸமணீயஸாம்) அசேதனங்களைக காட்டிலும் அணுவான ஜீவர்களைக் காடடிலும் அணுவாகவல்லவனுகையாலே ஜீவர்கள அனைவரையும் இவன் உளநுழைந்து நிய

மிக்கத்தட்டில்லை என்று கருத்து. ஆக, இவ்வளவால், " அந்த: ப்ரவிஷ்ட: ஶாஸ்தா ஜநாநாம் ஸர்வாத்மா " [ தை-ஆர 3-11 ] [ஸர்வாந்தர்யாமியான நாராயணன் ஜனங்களை உள்நுழைந்து நியமிக்கிறான்.] "அந்தர் ப₃ஹிஶ்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண: ஸ்தி₂த:" [தை-நா] [உலகனைத்தையும் உள்ளும புறமும் வியாபித்து விளங்குகிறுன நாராயணன்] முதலான ஶ்ருதிகளின் பொருள் விளக்கப்பட்டது. இனி, இப்படி மனத்தால் தியானிக்கமுடியாத படி பரமஸூக்ஷ்மப் பொருளாயிருப்பானுகில், இவனை எப்படி உபா ஸிப்பது என்னும் கேள்வியெழுமாகையாலே, தியானிக்கத்தக்க ஶுபா₄ஶ்ரயமான திவ்யமங்களவிக்₃ரஹம் இவனுக்கு உண்டு என்று உணர்த்துகிறுர்,— (ருக்மாப₄ம) பொனபோன்ற ஒளியுடைய திரு மேனியையுடையவன. "அஶப்₃த₃மஸ்பர்ஶமரூபமவ்யயம்" முதலான உபனிஷத்வாக்கியங்கள் பரமாத்மாவுக்கு உருவமில்லையென்று கூறு கினறனவே எனில்: "புருஷம் மஹாந்தம் ஆதி₃த்யவர்ணம்" [பு. ஸூ] [சூரியன்போனற ஒளியையுடைய மஹாபுருஷனை] "வித்₃யுத: புரு ஷாத்"[தை-நா] [மினனொளியுள்ள புருஷனிடமிருந்து] "நீலதோயத₃ மத்₄யஸ்த₂ா வித்₃யுல்லேகே₂வ ப₄ாஸ்வரா" [தை-நா] [நீலமேகம நடு வுள்ள மின்கொடிபோல் ஒளிவிடுவது] முதலான பல வேதவாக்கி யங்களும், ஸ்ம்ருதிவசனஙகளும், பரமாதமாவுக்குத் தன இச்சை யால் எடுத்துக்கொளளப்படுவதாய், ப₃ந்த₄கமல்லாத அப்ராக்ருதத் திருமேனி உண்டெனறு கூறுகையாலே, "அரூபம்" முதலான வசனங் கள், கர்மத்தால ஏற்படுவதாய், பந்த₄கமான ப்ராக்ருதசரீரம் இவ னுக்கு இல்லை எனனும் கருத்துடையவை என்று கொளளவேண் டும். 'சுட்டுரைத்த நனபொன் உன திருமேனி ஒளி ஒவ்வாது' [திரு வாய் 3-1-2] என்கிறபடியே சுட்டுரைத்த நல்ல பொன்னும் இவ னுடைய திருமேனியின் ஒளிக்குஒப்பாகாதாயினும்,உலகில் சுத்தமான ஒளியுடைய பொருள்களில் பொன்னே சிறந்ததாகக் காண்கையாலே 'ருக்மாப₄ம்' என்கிறுர். "ஹேமாபா₄மாந வர்ணம்" என்று ஸ்ரீ ராமா யணத்தில் பிராட்டியும் பேசினுளனரே. இப்படிப்பட்ட உருவுடைய வனுகில், உருவுடைய மற்றபொருளகளைப்போலேநயமால் கண்ணுல் காணத்தக்கவனுயிருப்பானே? எனில், யோகிகளால் நெஞ்சாலேயே காண ததக்கவனுயிருப்பவனிவன் எனகிறுர் மேலே,— (ஸ்வப்நதீ₄ க₃மயம்)ஸ்வப்னத்திற்போலே மாநஸஜ்ஞானத்தாலே உபாஸகர்க ளால்அறியத்தக்கவனை. ஒளிமயமான சூரியனுக்கு த₄ர்மமாயிருக்கும் ஒளிமயமான கிரணம்போலே ஜ்ஞாநஸ்வரூபமான ஆத்மாவுக்கு எப்போதும் த₄ர்மமாயிருப்பதொரு ஞானம், தனக்கு ஆனையடி (க₃வாக்ஷம்) போலே ப்ரஸரத்₃வாரமாயிருக்கும் மனத்திலிருந்து

புறப்பட்டுக கண் முதலான வெளியிந்திரியங்கள் வழியாக விஷயங் களிறபாயந்து அவற்றை அறிவது இந்த்₃ரியங்களாலுண்டாகும காணபது முதலான அறிவாகும். கனவில் ஜீவன இப்படி இநதிரியஙகள வழியாகப பொருளகளை அறியாமல் மனத்தாலேயே அறிகிருன. யோகிகளும, ஆழ்வார்களும தஙகள நெஞசிலிருக்கும அநதாயாமியான பகவானை இப்படிக கனவிற்போலே வெளியிநதிரி யஙகளை எதிர்பாராமல் மனததாலேயே காணகிருாகள். இக காட்சியே, இஙகு 'ஸவப்நதீ₁கு₃ம்யம்' [ஸ்வப்னத்திறபோலே மானஸ ஜஞானத்தாலே அறியததககவனை] என்று சொலலப்படுகிறது. இககாட்சியானது கனவுபோலே மனத்தால் காணும காட்சியா யிருபபது என்பதையும, கனவைக காட்டிலும தெளிவாயிருப்பது எனபதையும "கணடேன திருமேனி யான கனவில், ஆஙகவன கைக கணடேன கனலும சுடராழி" [இர-திருவ 67] "பகற் கணடேன நாராணனைக கணடேன கனவில் மிகக கணடேன் மீணடவனை மெய்யே" [இர-திருவ 81] என்று பூதத்தாழ்வார் அருளிசசெய்தாரனறோ. (ஸ்வபநதீ₄க₃மயம) உபாஸகாகளால் ஸவபனம போலே மாநஸமான பகதிருபஜ்ஞானத்தாலே அடையப் படுபவன என்று வேதா₁ாதத₂ ஸஙகரஹததில் ஸ்ரீபாஷ்யகாரர் பொருள அருளினா. (வித₃யாத்) இப்படிப்பட்டவனை அறியக கடவன. வேதாநதஙகளில "மநோ ப்₃ரஹ்மேத்யுபாஸீத" [சாந் 3-18-1] என்று தொடஙகி "ய ஏவம் வேத₃" என்று முடிக்கை யாலும, "ந ஸ வேத₃" [ப₃ருஹ 3-4-7] என்று தொடங்கி "ஆத் மேதயேவோபாஸீத" என்று முடிககையாலும, "யஸதத்₃வேத₃" [சாந் 4-1-4] என்று தொடஙகி, "யாம தே₃வதாமுபாஸஸே" [சாந 4-2-2] என்று முடிக்கையாலும, இஙகு சொலலபபடும வேத₃னம (அறிவு) உபாஸனரூபமானதேயாகும. அதனலேயே வாக்யகாரரும "வேத₃நமுபாஸநம் ஸயாத் தத₃விஷயே ஶ்ரவணாத்" [வேத₃நம (அறிதல்) உபாஸனமேயாகும; உபாஸநவிஷயததில வேத₃நஶப்₃த₃ததை வேதாந்தஙகள படிக்கையால] என்றார். இப்படி உபாஸிக்கத்தக்கவன யார் எனில: (தம புருஷம பரம்) "வேதா₃ஹமேதம் புருஷம் மஹாந்தம்" [பு ஸூ] என்று புருஷ ஸூக்தம முதலானவற்றில் உபாஸிக்கததக்கவனுகப பிரஸித்தி பெற்ற பரமபுருஷனே அவன் என்கிருர். ஸபருதியின தொடக கததில ப₄க₃வச்ச₂ப்₃த₃த்தையும, நாராயண ஶப்₃த₃ததையுமிட்டுப் பரதத்வநிர்ணயம் செய்தவர், முடிவில் புருஷஶப்தததையிட்டுப் பரதத்துவ நிர்த்தாரணம செய்கிருர்.

"ப₄க₃வாநிதி ஶப₃தே₃ாऽயம் தத₂ா புருஷ இத்யபி ।
நிருபாதீ₄ ச வாததேதே வாஸுதே₃வே ஸநாதநே ॥"

[பகவான் என்னும் ஶப்தமும், அவ்வண்ணமே புருஷஶப்தமும், பழையோனை வாஸுதேவனிடமே இயற்கையாகப் பொருந்தி நிற்கின்றன.] என்று சொல்லப்பட்டதன்றோ. ஶ்ருதிஸ்ம்ருதிகளில் நூற்றுக்கணக்கானவிடங்களில் புருஷஶப்தமும், மஹாபுருஷஶப்தமும், பரமபுருஷஶப்தமும், புருஷோத்தமஶப்தமும் நாராயணனைக் குறித்தே பிரயோகிக்கப்பட்டிருக்கின்றனவென்று இந்நூலின் முதலத்தியாயத்தில் விரிவாக நிலைநாட்டப்பட்டது இங்கு அநுஸந்திக்கத்தக்கது. இனி, அடுத்த ஶ்லோகத்தைக் காண்போம்.

**ஏதமேகே வத₃ந்த்யக்₃நிம் மநுமந்யே ப்ரஜாபதிம்।**
**இந்த்₃ரமேகே பரே ப்ராணம் அபரே ப்₃ரஹ்ம ஶாஶ்வதம்॥**

**ஏதம்**—இப்பரமபுருஷனையே, **ஏகே**—சில வேதபாகங்கள், **அக்₃நிம் வத₃ந்தி**—அக்னியென்று கூறுகின்றன; **அந்யே**—மற்றும் சில வேதபாகங்கள், **மநும் ப்ரஜாபதிம் (வதந்தி)**-ஸ்ருஷ்டிக்கும் ப்ரஜாபதியாகக்கூறுகின்றன; **ஏகே**-வேறு சில வேதபாகங்கள், **இந்த்₃ரம் (வத₃ந்தி)**—இந்திரன் எனக் கூறுகின்றன; **பரே**—பிறிது சில வேதபாகங்கள், **ப்ராணம் (வத₃ந்தி)**-பிராணன் என்று கூறுகின்றன; **அபரே**-பிறபல வேதபாகங்கள், **ஶாஶ்வதம் ப்₃ரஹ்ம**--எப்போதுமிருக்கும் ப்ரஹ்மமென்று கூறுகின்றன.

முன் ஶ்லோகத்தில், புருஷஶப்தத்தால் சொல்லப்படும நாராயணனே உபாஸிக்கத்தக்கவன் என்று நிர்ணயிக்கப்பட்டது; மற்றும் பல வேதவாக்கியங்கள் உபாஸிக்கத்தக்க பரம்பொருளை அக்னியென்றும், மனுவென்றும், ப்ரஜாபதியென்றும், இந்த்ரனென்றும், ப்ராணனென்றும். ப்ரஹ்மமென்றும் மற்றும பல சப்தங்களாலும கூறுகின்றனவே ; இந்த சப்தஙகளால் குறிக்கப்படும் பலரும் உபாஸிக்கத்தக்க பரம்பொருளோ? என்னும் கேள்வியெழ, அந்த எல்லா ஶப்தங்களாலும் குறிக்கப்படுபவன் ஸர்வஶப்₃த₃வாச்யனை இப்பரமபுருஷனே என்கிறார் இந்த ஶ்லோகத்தில். "ஏகம் ஸத் விப்ரா ப₃ஹுதா₄ வத₃ந்தி' [பரம்பொருள் ஒன்றே; வேதாந்திகள் பல பெயரால் அதை அழைக்கின்றனர்.] என்ற ஶ்ருதிக்கு உபப்₃ரும்ஹணமாயிருக்கிறது இந்த ஶ்லோகம்.

(ஏநமேகே வத₃ந்த்யக்₃நிம்) "தத₃ாத்மந்யேவ ஹ்ருத₃யேऽக்₃நௌ வைஶ்வாநரே ப்ராஸ்யத்" [யஜு-அஷ்டக-3-11-8] "ஸ ஏஷ வைஶ்

வாநரோ விஶ்வருப. ப்ராணோக்₃நிருத₃ச்யதே" [ப்ரஶ்ந 1-7] "ஏ ஏஷோ ऽக்₃நிர் வைஶ்வாநரோ யத்புருஷ:" "ஸ யோ ஹைதமேவமக்₃நிம வைஶ்வாநரம புருஷேऽந்த: ப்ரதிஷ்டி₂தம் வேத₃" முதலான வேதபாகங்கள இப்பரமபுருஷனையே அகனியெனறு கூறுகின்றன. "ஸாக்ஷாத₃ப்யவிரோத₄ம் ஜைமிநி:" [பரஹ்ம ஸூத்ரம 1-2-29] எனகிற ப்ரஹ்மஸூத்ரததிற் சொன்னபடி அக்₃ரநயனத்தை (உயர்கதிககு அழைத்துச்செலவதை) செய்பவனுகையாலே பரமபுருஷன் அக்னியெனப்படுகிருன என்றே, அக்னியை சரீரமாகக்கொண்ட பரம புருஷன் இஙகு அக்னியெனப்படுகிருனெனறே சொள்ளவேண்டும. இப்படிக்கொள்ளாமல லோகப்ரஸித்த அக்னியோடு பரமாத்மாவுக்கு ஸ்வரூபைகயம சொல்லப்படுவதாகக் கொண்டால், 'பீ₄ஷாऽஸமாத₃க்₃நிஶ் சேந்த₃ரஶ்ச" [தை-ஆந] முதலான வேதவாக்யஙகளில் அவ்வக்னி பரமாத்மாவிடம் பயத்தாலே தொழில புரிவதாகக கூறுவது ஓட்டாமற் போய்விடும. இநத நியாயமே மேலே 'மநு' முதலான ஶபதங்களுக்கும் பொருந்தும். (அந்யே மநும ப்ரஜாபதிம வத₃ந்தி) "ப்ரஜாபதிஶ் சரதி க₃ர்ப்பே₄ऽந்த:" முதலான மற்றும் சில வேதபாகங்கள இவனையே ஸ்ருஷ்டிக்கும பிரஜாபதியெனறு கூறுகினறன. 'மநு' என்று மனததால் ஸருஷ்டிக்கும் ஸ்ரஷ்டாவைக் கூறுகிறதாய், ப்ரஜாபதிஶப்ததத்திற்கு விஶேஷணமாகிறது அனறிக்கே, 'மநும' எனபதைத்தனிபபதமாகக்கொண்டு. "அஹம் மநுரப₄வம" [ப்ருஹ 5-4-10] என்ற வாக்யத்தில் மநுஶப்தத்தாலே பரமாத்மாவைக் குறித்ததைக் கூறுகிறதாகவுமாம். 'மருதோऽந்யே" [சில வேத பாகங்கள இவனை மருத்துக்களாகக் கூறுகினறன] என்றும் பாடமுள்ளது. (இந்த்₃ரமந்யே) "இந்த்₃ரோ மாயாபி₄; புருரூப ஈயதே" முதலான வேதபாகங்கள் "இதி₃ பரமைஶ்வர்யே" என்னும் தாதுவிலிருந்து தோனறிய இந்த₃ரஶப்தத்தாலே இயறகையான பரமைஶ்வர்யத்தையுடைய இப்பரமபுருஷனையே உத்கோஷிததன. (பரே ப்ராணம்)"ஸர்வாணி ஹவா இமாநி பூ₄தாநிப்ராணமேவாபி₄ஸம்விஶந்தி ப்ராணமப்₄யுஜ்ஜிஹதே" [சாத்1-11-5] முதலான வேதபாகங்கள் இவனையே ஜகத்காரணமானப்ராணனுக உத்கோஷிததன. ஆக, இதுவரையில மற்றவர்களையும குறிக்கக்கூடிய அக்னி, மநு, பரஜாபதி, இநதிரன, ப்ராணன் என்னும் பதங்களாலே பல விடங்களில வேதா[illegible] குறிக்கப்படுபவன இப்பரமபுருஷனே என்று கூறப்பட்டது. அகனி முதலான இவ்வைந்து ஶப்தங்களும் ஶிவன, ஶம்பு₄, ஹிரண்யக₃ர்ப்ப₄ன முதலான மற்ற பல ஶப்தஙகளுககும் உபலக்ஷணம். இத்தால் "ந ஸந்ந சாஸச் சி₂வ ஏவ கேவல:" [ஶ்வே] ஶிவ ஏகோ த₄யேய: ஶமபு₄ராகாஶ மத்₄யே த்₄யேய" [அத₂ர்வஶிகை] "ஹிர

ண்யக₃ர்ப்ப₄: ஸமவர்த்ததாக்₃ரே'' [தை-ஸ்ம் 4-1] முதலான ஶ்ருதிகளில் சிவனென்றும, ஶம்பு₄வென்றும். ஹிரண்யக₃ர்ப்ப₄னென்றும் படிக்கப்பட்டவன் ஶாஶ்வத ஶிவனாய், பிரமனையும் படைத்தவனான இந்த நாராயணனே என்று உணர்த்தப்பட்டது. ஆக, இதுவரையில் உலகில் மற்றவர்களைக் குறிக்கும பதங்களாலும், ஸர்வஶப்₃த₃ வாச்யனான பரமபுருஷனே வேதாந்தங்களில் குறிக்கப்படுகிறுன் என்று உணர்த்தி, இனி, அவனுக்கேயுரிய ஶப்₃த₃ங்களாலும் பல வேதவாக்யஙகளில அவன் குறிக்கப்படுகிருன் என்று காட்டுகிருர் கடைசியாக.—(அபரே ப்₃ரஹ்ம ஶாஶ்வதம்) ''ப்₃ரஹ்ம வா இத₃மக்₃ர ஆஸீத்'' ''ஶாஶ்வதம் ஶிவமச்யுதம்...நாராயணபரம் ப்₃ரஹ்ம'' [தை-நா] முதலான பல வேதபாகங்கள் என்றுமிருக்கும் ப்₃ரஹ்மமாக இவனையே உத்கோஷிக்கின்றன. ப்₃ரஹ்மஶப்த₃த்தை மாத்திரமிட்டால், அது ஔபசாரிகமாகப் பிரகிருதி, ஜீவன முதலான மற்ற தத்துவங்களையும குறிக்கக்கூடுமாகையால், ஶாஶ்வதஶப்₃த₃த்தாலே அதை விஶேஷிக்கிருர். இது, ''ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் ந ப்₃ரஹ்மா நேஶாந:'' [மஹோபனிஷத்] ''விஶ்வம் நாராயணம் ஹரிம்'' [தை-நா] முதலான வாக்யங்களில் படிக்கப்படும் நாராயணன, ஹரி முதலான அவனையே குறிக்கக்கூடிய ஶப்தங்களுக்கு உபலக்ஷணம். ஆக, வேதாந்தவாக்யங்களில் பரமபொருளைக் குறிக்கும் ஸாத₄ாரண ஶப₄தஙகளோடு, அஸாத₄ாரண ஶப்₃தஙகளோடு வாசியற எல்லா சப்தங்களும நாராயணனென்றும், பகவானென்றும் இங்கு கூறப்பட்ட இப்பரமபுருஷனையே கூறுகின்றன என்று நிர்த்தாரணம் செய்தாராயிற்று. ''ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸமணீயஸாம்'' என்று எல்லா ஆத்மாக்களைக்காட்டிலும் அணுவாகவும், அனைவரையும் நியமிப்பவனுகவுமிருப்பதாகக்கூறுகையாலே ஏகாத்மவாதமாகிற அத்வைதமதம் மனுவுக்கு உடன்பாடன்று என்று காட்டப்பட்டது. பரம்பொருளைக் குறிக்கத் தொடக்கத்தில் ப₄க₃வச்ச₂ப்₃தத்தையும், நாராயணஶப்₃த₃த்தையும இட்டதிலிருந்தும், முடிவில் புருஷஶப்தத்தையிட்டதிலிருந்தும, தொடக்கத்தில் நாராயணனிடமிருந்து பிறந்தவன் பிரமன் என்று காட்டியதிலிருந்தும் ''ஏதமேகே'' என்னும் இந்த ஶ்லோகத்திலிருந்தும் திரிமூர்த்திஸாம்யவாத₃ம, ஐக்யவாத₃ம், சிவபரத்வவாத₃ம், சதுர்முக₂பரத்வவாத₃ம், துரீயப்₃ரஹ்மவாத₃ம் முதலான அஸத்₃வாத₃ங்கள் மனு இசைந்ததன்று என்றும், நாராயணனே ஸகலஜகத்காரணன் என்னும் பரம வைதி₃கஸித்₃தா₄ந்தமே மனு இசைந்ததென்றும் தேறுகிறது. இனி, அடுத்த ஶ்லோகத்தைக் காண்போம்.

ஏஷ ஸர்வாணி பூ$_4$தாநி பஞ்சபி$_4$ர் வ்யாப்ய மூர்த்திபி$_4$: |
ஜந்மவ்ருத்$_3$தி$_4$க்ஷயைர் நித்யம் ஸம்ஸாரயதி சக்ரவத் ||

ஏஷ:—இப்பரமபுருஷன், ஸாவாணி பூ$_4$தாநி—எல்லா ஜீவராசிகளையும், பஞ்சபி$_4$, மூர்ததிபி$_4$: வ்யாப்ய—தன் சரீரமான ஐந்து பூதங்களாலாகிய சரீரங்களாலே சூழ்ந்து நின்று, ஜந்ம வ்ருத்$_3$தி$_4$க்ஷயை:—பிறப்பு வளர்ச்சி, தேய்வு முதலான ஆறு விகாரங்களுக்கு உட்படுத்தி, சக்ரவத்—சுழன்று சுழன்று வரும் சக்கரம்போலே, நித்யம்—எப்போதும், ஸம்ஸாரயதி—ஸம்ஸாரத்தில உழலச்செய்கிறுன.

இப்பரமபுருஷனே பிரமன முதல புல்லெறும்பு வரையிலுள்ள எல்லா ஜீவர்களையும இந்த ஸம்ஸாரசக்ரத்திலே சுழலவைக்கிருன் என்கிருர் இந்த ஶ்லோகத்தில்.

(ஏஷ:) இப்பரமபுருஷனான நாராயணனே. (ஸர்வாணி பூ$_4$தாநி) தன்னால படைக்கப்பட்ட பிரமன் முதல் எறும்பு வரையிலுள்ள எல்லா ஜீவராசிகளையும. (பஞ்சபி$_4$: மூர்ததிபி$_4$: வ்யாப்ய) "ஶரீராத ஸ்வாத்" என்று முதலில சொன்னபடி தனக்கு சரீரமாயிருக்கும ஐந்து பூதங்களாலே சூழ்ந்து நின்று; ஐந்து பூதங்களாலான சரீரங்களாலே கட்டுப்படுத்தி என்று கருதது. (ஜந்ம வ்ருத$_3$தி$_4$க்ஷயை:) "அபக்ஷய விநாஶாப்$_4$யாம பரிணமர்ததி$_4$ ஜநமபி$_4$:" [வி-பு1-2-11] என்கிறபடியே (1) இருக்கிருன் (2) பிறக்கிருன (3) வளர்கிருன (4) தேய்கிருன (5) பரிணமிக்கிருன (6) அழிகிருன என்னும ஆறு விகாரங்களுக்கும இந்த ஜீவராசிகளை உட்படுத்தி. இங்கு ஜநமவ்ருதி க்ஷயங்களாகிற மூன்று விகாரங்களைச் சொன்னது மற்ற மூன்று விகாரங்களுக்கும உபலக்ஷணம. (சக்ரவத்) சுழன்று சுழன்று வரும சக்கரமபோலே, "புநரபி ஜநநம் புநரபி மரணம புநரபி ஜநநீஜட$_4$ரே ஶயநம்" என்கிறபடியே பிறப்பிறப்பாகிற ஸம்ஸாரசக்கரத்திலே சுழலச் செய்கிருன பரமபுருஷன என்று கருத்து. (நித்யம் ஸம்ஸாரயதி) எப்போதுமே இப்படி ஜீவர்களை ஸம்ஸாரசக்கரத்திலே சுழலச் செய்கிருன

இததால் பிரமன் முதலான எல்லா ஜீவர்களும ஸம்ஸாரி ஜீவர்களே என்றும நாராயணன ஒருவனே அவர்களை ஆட்டி வைப்பவன என்றும் சொல்லப்பட்டதாயிறறு. இனி, அடுத்த ஶ்லோகத்தைக் காணபோம்.

ஏவம் ய: ஸர்வபூ$_4$தேஷு பஶ்யத்யாத்மாநமாத்மநா |
ஸ ஸர்வஸ்மதாமேத்ய ப்$_3$ரஹ்மாப்யேதி பரம் பத$_3$ம் ||

**ஏவம்**-இவ்வண்ணமாய், **ய:**-எவனொருவன், **ஆத்மநா**-தன் நெஞ்சால், **ஸர்வபூ₄தேஷு**—எல்லா பூதங்களிலும், **ஆத்மாநம் பஶ்யதி**—பரமாத்மாவைக் காண்கிருனே. **ஸ:**—அவன், **ஸர்வஸமதாம் ஏத்ய**—எல்லா ஜீவராசிகளிடமும் ஸாம்யபுத்தியை அடைந்து, **பரம் பத₃ம்**—பரமப்ராயமான, **ப்₃ரஹ்ம**—பரம்பொருளை, **அப்யேதி**—அடைகிருன்.

பரமாத்மோபாஸனத்துக்குப் பலன் பரமாத்மப்ராப்தியாகிற மோக்ஷமே என்று கூறுகிருர்.

(ஏவம்) ''ஸர்வபூ₁தேஷு சாத்மாநம் ஸர்வபூத₄ாநி சாத்மநி। ஸமம் பஶ்யந்'' [மநு 12-91] [எல்லா பூதங்களிலும் பரமாத்மாவையும், எல்லா பூதங்களையும் பரமாத்மாவிலும் ஒருபடியாகக் காண்பவன்] ''ஸர்வமாத்மநி ஸமபஶ்யேத் ஸச்சாஸச்ச ஸமாஹித:'' [மநு 12-118] [சேதநாசேதனங்களாகிற எல்லாப் பொருள்களையும் ஸமாதிநிலையில் பரமாதமாவிடம் காணக்கடவன்.] எனறு கூறப்பட்ட வழியில். (ஆத்மநா) நெஞ்சாலே; 'ஸ்வப்நதீ₄க₃ம்யம்' என்கிற படியே மனத்திலுண்டாகும் அறிவாலே எனறுமாம். ஆத்மஶப்தம் நெஞ்சையும் அறிவையும காட்டும். (ஆத்மாநம ஸர்வபூ₄தேஷு ய: பஶ்யதி) பரமாத்மாவை எவன எல்லா ஜீவராசிகளினுள்ளும் காண்கிருனே. 'ப்ரஶாஸிதாரம்' என்ற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட படியே எல்லா ஜீவராசிகளையும உள்நுழைந்து நியமிப்பவனுகக் காண்கிருனே எனறு கருத்து. (ஸ:) அவ்வுபாஸகன (ஸர்வஸமதாம் ஏத்ய) எல்லா ஜீவராசிகளும் எம்பெருமான் குடியிருக்கும் கோயிலே எனனும் ஸாமயபுத்தியை அடைந்து (பரம பத₃ம் ப்₃ரஹ்ம அப்யேதி) ''தத்₃விஷ்ணோ: பரமம பத₃ம'' என்று வேதாந்தங்களில் பரம ப்ராப்யமாக ஓதப்படும் விஷ்ணுவாகிற பரஹ்மத்தை அடைகிருன. யதோ₂பாஸநம் ப₂லமாகையாலே, ப்ரஹ்மத்தை உபாஸிப்பவன் ப்ரஹ்மத்தையே அடைகிருன் என்று கருத்து. 'ப்ரஹ்மத்தை அடைகிருன்' என்கையாலே, மோக்ஷநிலையில் ப்₃ரஹ்மமாகவே ஆகிருன எனனும் அத்வைதமதம் தள்ளப்பட்டது.

ஆக, ஸர்வஶரீரியான நாராயணனே உலகிற்கு நிமித்தோபாத₃ாநமாகும் பரதத்துவமென்றும், அவன் விஷயமான பக்தி ப்ரபத்திகளே பரமஹிதமென்றும் அவனையடைவதே பரமபுருஷார்த்தமென்றும் கூறும் வேதஸித்தாந்தத்தை நிலைநாட்டி, வேத₃ ப₃ாஹ்யகுத்₃ருஷ்டி மதங்களை நிரஸித்தாராயிற்று.

மநுஸ்ம்ருதி நிர்ணயம் முற்றிற்று.

## அத்ரிஸ்ம்ருதி நிர்ணயம்

"மந்வத்ரிவிஷ்ணுஹாரீத" என்று யாஜ்ஞவல்கயரால எடுக்கப்பட்ட ஸ்மருதிகளில் மநுஸ்மருதியில பரதத்வநிஷகர்ஷம செய்யப்பட்டபடியை இதுவரை கண்டோம். இனி, அடுத்ததான அதரிஸ்மருதியில பரதேவதாநிஷ்கர்ஷம செய்திருக்கிறபடியைக் காண்போம். ஸ்ரீ ஆநந்தாஸ்ரமமுதரணாலயததில் அச்சிடப்பெற்ற ஸமருதி ஸமுச்சயத்தில நானூறு ஸ்லோகஙகொணட அதரிஸம்ஹிதையொன்றும, ஒன்பது அத்தியாயஙகொணட அத்ரிஸ்மருதியொனறும் அச்சிடபபெற்றுள்ளது. இவற்றில் அதரிஸமஹிதையில பரம்பொருளைப்பற்றிய குறிப்புகள யாதுமில்லை. அதரிஸ்மருதியின கடைசியான ஒனபதாவது அத்தியாயம பரமபொருளைபபற்றிப பேசுகிறது. அதைக் காண்போமினி

*யோ த்$_4$யாதா யச்ச யத்$_3$த்$_4$யாநம் யத்$_3$த்$_4$யேம் யத்*
*ப்ரயோஜநம்।*
*ஸர்வாண்யேதாநி யோ வேத்தி ஸ யோகஃ$_3$ம் யோக்துமர்ஹதி॥*
*ஆத்மா த்$_4$யாதா மநோ த்$_4$யாநம் த்$_4$யேய: ஸூக்ஷ்மோ*
*மஹேஶ்வர:।*
*யத பராபரமைஶ்வர்யம் ஏதத்$_3$த்$_4$யாநப்ரயோஜநம்॥*
*விதி$_3$த்வா ஸர்வஸூக்ஷ்மாணி ஷட$_3$ங்க$_3$ம் ச மஹேஶ்வரம்।*
*பரத$_4$ாநகு$_3$ணதத்வஜ்ஞ: பரம் ப$_3$ரஹ்மாதி$_4$க$_3$ச்ச$_2$தி॥*
*வித்$_3$வேஷாத$_3$பி கே$_3$ாவிந்த$_3$ம் த$_3$ம கே$_4$ாஷாதமஜ: ஸ்மரந்।*
*ஶிஶுபாலோ க$_3$த: ஸ்வர்க்கம் கிமுநஸ்தத்பராயண:॥*

[(1) தியானம செய்கிறவன (2) தியானிப்பதற்கு உபகரணமான த$_4$யானம் (3) தியானிக்கப்படும பொருள் (4) தியானிப்பதின் பயன என்னும இவையனைததையும அறிகின்றவன யோகம செய்யததகுந்தவன. (1) ஜீவாத்மாவே தியானம் செய்கிறவன. (2) மனமே தியானிப்பதற்கு உபகரணமான தியானமாகும. (3) அறிய அரியவனான மஹேஶ்வரனே தியானிக்கப்படும பொருள். (4) மேலான செல்வமான மோக்ஷமும, தாழ்நத செல்வமான ஸாமஸாரிகச செலவமும தியானிப்பதின பயனாகும. இவைபற்றிய ஸூக்ஷமங்கள அனைத்தையும அறிநது, ஆறு அஙகமுளள யோகத்தையும, தியானிககப்படும் மஹேஶ்வரனையும அறிநது, மூலபரக்ருதி, அதன குணஙகள ஆகியவற்றின தாழவையுமறிநதவன பரம

பொருளை அடைகிறான். கோவிந்தனை மிகுந்த துவேஷத்தோடு நினைத்த போதிலும், த₃மகோ₄ஷனின் பிள்ளையான சிசுபாலன் பேரின்பத்தை அடைந்தான். அந்த கோவிந்தனையே மேலான ப்ராப்யப்ராபகங்களாகக் கொண்டவன் மோக்ஷமடையச் சொல்லவேணுமோ?]

இங்கு, தியானிக்கப்படும் பொருள் மஹேஶ்வரஶப்தத்தால் கூறப்பட்டது. "யத்₃வேதா₃தௌ₃ ஸ்வர:" என்று தொடங்கும் தைத்திரீய நாராயண வல்லி மந்திரம் ஓங்காரத்தின் காரணமான அகாரத்தின் பொருளான நாராயணனே மஹேஶ்வரனெனப்படுபவன் என்று நிர்ணயித்திருப்பது இந்நூலின் முதலத்தியாயத்தின இரண்டாம்பாதத்தின் தசோபனிஷத்விசாரத்தில் தைத்திரீய உபனிஷத்தின தேவதா நிர்ணயம் என்னும் தலைப்பில் (இரண்டாம் பதிப்பு பக்கம் 313முதல் 316வரை) நிலைநாட்டப்பட்டது. இருந்த போதிலும் மஹேஶ்வர ஶப்தத்தால் குறிக்கப்படுபவன் சிவனே என்று சில மந்த₃மதிகள் மயங்குவாாகள் என்று நினைத்து, நாலாவது சுலோகததில், தனனை துவேஷித்த சிசுபாலனுக்கும் பரமபதமளித்த கோவிந்தனே இநத மஹேஶ்வரன் என்று அத்ரி மஹரிஷி தெளிவுபடுத்துகிறார். ஸ்வர்க்க₃ஶப்தம் இயல்பாக மோக்ஷத்தையே குறிக்கும் என்பது உபனிஷத்துக்களில் பிரஸித்தம். ஆக, அத்ரிஸ்ம்ருதியிலும் பரமபுருஷனை நாராயணனே பரம்பொருள் என்று நிஸ்ஸந்தேஹமாக நிலைநாட்டப்பட்டதாயிற்று.

அத்ரிஸம்ருதிநிர்ணயம முற்றிற்று.

## விஷ்ணுஸ்ம்ருதிவிநிர்ணயம்

"மந்வத்ரிவிஷ்ணுஹாரீத" என்று படிக்கப்பட்டவற்றில் மூன்றாவதான விஷ்ணுஸ்ம்ருதியில் பரதத்வநிஷ்கர்ஷம் செய்திருக்கும படியை இனிக்காண்போம். இந்த ஸ்மருதி மந்மதநாதத்தரால கல்கத்தாவில் ஆங்கிலமொழி பெயர்ப்புடன அச்சிடப்பெற்ற இருபது த₄ர்மஶாஸ்திரங்களில் ஒன்றாகக் காண்கிறது. இது நூறு அத்தியாயங்கள கொண்டது. பம்பாய் வேங்கடேஶ்வர ஸ்டீம் பிரஸ்ஸில், 'விஷ்ணுஸ்மருதி' என்னும் பெயரிலும் பூனா ஆநந்தாஶ்ரமத்தில் 'லகு₄ விஷ்ணுஸ்ம்ருதி' என்னும் பெயரிலும் அச்சிடப்பட்டிருக்கும் ஐந்து அத்தியாயஙகொண்ட ஸ்ம்ருதி இதனிலும் வேறுபட்டது. (அதில் பரம்பொருளைப் பற்றிய பேச்சில்லை.) இந்த ஸ்ம்ருதியில் பரம்பொருளைப் பற்றி விஸ்தாரமாகப் பேசப்பட்டிருக்கிறது. அப்பகுதிகளைக் காண்போம.

இதில 62 ஸ்லோகங்கொண்ட முதலத்தியாயத்தில் நைமித்திக ப்ரளய ஸ்ருஷ்டிக்ரமமும, வராஹப பெருமானுக்கும் பூமிதேவிககும நடநத ஸமவாதமும விரிவாக வர்ணிக்கப்பட்டிருககிறது. இதில் ஒவ்வொரு ஸ்லோகமும பரமபொருள் யாரென்பதைக் கையிலஙகு கனியாகக காட்டித்தருகின்றதாகையாலே, இவ்வத்தியாயம முழு வதையும பகுதி பகுதியாக எடுத்து விவரித்து, அதிலுள்ள முககிய மான விஷயஙகளை எடுததுக் காட்டுவோம்.

*ப்₃ரஹ்மராத்ர்யாம் வ்யதீதாயாம் ப்ரபு₃த்₃தே₄ பத்₃ம ஸம்ப₄வே |*
*விஷ்ணு: ஸிஸ்ருக்ஷு: பூ₄தாநி ஜ்ஞாத்வா பூ₄மிம் ஜலாநுகா₃ம்||*
*ஜலக்ரீடா₃ருசி ஶுப₄ம் கல்பாதி₃ஷு யதா₂ புரா |*
*வாராஹ மாஸ்தி₂தோ ரூபம் உஜ்ஜஹார வஸுந்த₄ராம் ||*
*வேத₃பாதோ₃ யூபத₃ம்ஷ்ட்ர: க்ரது ஹஸ்தஶ்சிதீமுக₂: |*
*அக்₃நிஜிஹ்வோ த₃ர்ப₄ரோமா ப்₃ரஹ்மஶீர்ஷோ மஹாதபா: ||*
*அஹோராத்ரேக்ஷணோ தி₃வ்ய: வேதா₃ங்க₃ஶ்ருதிபூ₄ஷண: |*
*ஆஜ்யநாஸ: ஸ்ருவாதுண்ட₃: ஸாமகோ₄ஷமஹாஸ்வந: ||*
*த₃ர்மஸத்யமய: ஶ்ரீமாந் க்ரமவிக்ரமஸத்க்ருத:|*
*ப்ராயஶ்சித்தமயோ வீர: பஶுஜாநு: மஹாவ்ருஷ: ||*
*உத்₃கா₃த்ராந்த்ரோ ஹோமலிங்க₃: பீ₃ஜௌஷதி₄மஹாபல: |*
*வேத₃யந்தராத்மா மந்த்ரஸ்பி₂க₃விக்ருத: ஸோமஶோணித: ||*
*வேதி₃ஸ்கந்தோ₄ ஹவிர்க₃ந்தோ₄ ஹவ்யகவ்யாதி₃வேக₃வாந் |*
*ப்ராக₃வம்ஶகாயோ த்₃யுதிமாந் நாநாதீ₃க்ஷாபி₄ரந்வித: ||*
*த₃க்ஷிணாஹ்ருத₃யோ யோக₃மஹாமந்த்ரமயோ மஹாந் |*
*உபாகர்மோஷ்ட₂ருசிர: ப்ரவர்க்₃யாவர்த்தபூ₄ஷண: ||*
*நாநாச்ச₂ந்தோ₃கதிபதோ₂ குஹ்யோபநிஷதா₃ஸந: |*
*சா₂யாபத்நீஸஹாயோ ऽஸௌ மணிஶ்ருங்க₃ இவோதி₃த: ||*

[பிரமனின் இரவுநேரம் முடிந்தபின், உந்தித்தாமரையில் பிறநத பிரமன் கண் விழித்தபின் விஷ்ணுவானவா ஜீவராசிகளை ஸருஷ்டி செய்ய விருப்பஙகொண்டார்; பூமி ஜலத்திலுள அமிழ்நதிருபப தைக கண்டு, முன் கலபதிற்போலே நீர விளையாட்டில விருபபங கொணட மங்களகரமான வராஹவுருவை எடுத்துககொண்டவராய் பூமியைத் தூக்கியெடுததார. அவர் நாலு வேதங்களையும நாலு

கால்களாகக் கொண்டிருந்தார்; யாகத்தில் நாட்டப்படும் யூப ஸ்தபம்பத்தை தந்தமாகக்கொண்டிருந்தார். யாகங்களே அவருடைய பற்களாயிருந்தன. யாகத்தில் உள்ள சிதியையே முகமாகக் கொண்டிருந்தார். யாகாக்னியை நாவாகவும், தர்ப்பங்களை ரோமங்களாகவும் மறைமுடிகளான உபனிஷத்துக்களைத் தலையாகவும் கொண்டு பெரிய ஸங்கல்பத்தை உடையவராயிருந்தார். அப்ராக்ருதரான அவர் இரவு பகல்களையே கண்களாகவும், வேதாங்கங்களையே காதணிகளாகவும், (யாக) நெய்யையே மூக்காகவும், ஸ்ருவத்தையே முகமாகவும், ஸாமகோஷத்தையே பெரிய முழக்கமாகவும் கொண்டிருந்தார். ஸ்ரீமானுய், தர்மஸத்யமயராய், முனனும் பின்னும அழகாக அசைபவராய், ஸர்வப்ராய்ஶ்சித்தங்களையும் தன்னுட்கொண்டவராய், வீரராய், யாகபசுவையே முழங்காலாகக்கொண்டவராய் விளங்கினுர். அந்த மஹாவராஹப்பெருமாள் உத்காதாவைக் குடலாகவும், ஹோமத்தை ஆண்குறியாகவும், விதைகளையும், பெரும்பழங்களையும் பீஜங்களாகவும், யாகவேதியை உயிராகவும் மந்திரங்களை இடுபபாகவும், ஸோமரஸத்தை ரத்தமாகவும கொண்டிருந்தார் மஹாவேதியைத் தோள்களாகவும், ஹவிஸ்ஸைத் தன் திருமேனியின நறுமணமாகவும், (தேவர்கட்கும் பித்ருக்களுக்கும் யாகத்தில் அளிக்கப்படும்) ஹவ்யகவ்யங்களை வேகமாகவும், யாகத்திலுள்ள ப்ராக்₃வம்ஶமெனும் ஸ்தானத்தை அழகிய திருமேனியாகவும கொண்டவராய், ஒளி நிறைந்தவராய், பல தீக்ஷைகளோடு கூடியவராயிருந்தார் அவர். யாகதக்ஷிணையையே ஹ்ருதயமாகக்கொண்டவராய், யோகமஹாமந்த்ரமயமாயிருப்பவராய், பெரியவராய், உபாகர்மமாகிற உதடுகளால் அழகியவராய், ப்ரவர்க்₃யாவர்த்தங்களை ஆபரணங்களாக உடையவராயிருந்தார் அவர். காயத்ரீமுதலான பலச்சந்தஸ்ஸுக்களையும நடக்குமிடமாகவும், ரஹஸ்யமான உபனிஷத்துக்களை ஆஸனமாகவும், நிழலையே பத்னியாகவும் கொண்டவரான அவர் மணிமயமான மலைமுடிபோலே விளங்கினுர்.]

இவ்வொன்பது ஶ்லோகங்களும் யஜ்ஞவராஹ மூர்த்தியின் வடிவில் ஒவ்வொரு பகுதியும் யஜ்ஞஸம்பந்தமுள்ளவையாகவேயிருந்தது என்று காட்டுவதன் மூலம் ''யஜ்ஞோ வை விஷ்ணு:'' [யஜுகா 1-7; 6-1; சதபத 1-7-4; 3-5-2] என்னும் வேதவாக்யம் உபப்₃ரும்ஹணம செய்யப்படுகிறது. விஷ்ணுவே வராஹவுருவெடுதது பூமியை நீரிலிருந்து தூக்கியெடுத்தார் என்று கூறுவதன் மூலம், "தாம் வராஹோ பூ₄த்வா அஹரத்" [யஜு-ஸம் 7-1-5] "உத்₃த்₄ருதாஸி வராஹேண க்ருஷ்ணேந ஶதபா₃ஹுநா" [தை-நா]

"ஸ்ருஷ்டிஸ்தித்யந்தகரிணீம் ப்₃ரஹ்மவிஷ்ணுஶிவாத்மிகாம் |
ஸ ஸம்ஜ்ஞாம் யாதி ப₄க₃வாந் ஏக ஏவ ஜநார்த்த₃ந: ||"
[வி. பு. 1-2-66]

[ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களைச் செய்வதற்காக பிரமன், விஷ்ணு, சிவன என்னும் சரீரங்களையும் பெயர்களையும் ஜநார்த்தனை ப₄க₃வான் ஒருவனே அடைகிறான.] என்று ஸ்ரீவிஷ்ணுபுராணத்திலும் பிரமவிஷ்ணுருத்ரர்களாகிற சரீரங்களையும், பெயர்களையும் அடைபவன் ஜநார்த்தனன் ஒருவனே என்று கூறப்பட்டதன்றோ. பிரமருத்ரர்களுடைய சரீரம் ரஜஸ்தமோமயமானது என்றும், பிரமருத்திரர்களான ஜீவர்களை இடையிட்டுப் பரமபுருஷனாலே அதி₄ஷ்டிக்கப்படுவது என்றும விஷ்ணு சரீரம் பரமஸத்வமயமானது எனறும், நாராயணன் தன்னாலே நேரே அதி₄ஷ்டிக்கப்படுவது என்றும் பல்லாயிரக்கணக்கான சாஸ்திரவசனங்களிலிருந்து அறிகிறோமாகையாலே இதுகொண்டு தரிமூர்த்திகளுக்கு ஸாம்யமோ ஐக்யமோ சொல்ல வழியில்லை. அப்படிச் சொலலப்பார்த்தால், முன் எடுத்த ஸூர்யனுக்கும அவர்களோடு ஸாம்யமோ ஐக்யமோ சொல்ல வேண்டிவரும். "ஸர்வம க₂ல்விதம்₃ ப்₃ரஹ்ம இத்யுபாஸீத" முதலான வேதவாக்யங்களில் எல்லாச்சேதநாசேதனப்பொருளகளையும ப்ரஹ்மமாக உபாஸிக்கச்சொல்லியிருப்பதிலிருந்து எல்லாப்பொருள்களுக்கும் ப்ரஹ்மத்தோடு ஸாம்யமோ ஐக்யமோ சொல்லவேண்டிவரும். நிற்க; ப்ரஹ்மவிஷ்ணுருத்₃ரர்களை இங்கு எடுக்கும்போது,

"க இதி ப்₃ரஹ்மணோ நாம ஈஶோऽஹம் ஸர்வதே₃ஹிநாம் |
ஆவாம் தவாங்கே₃ ஸம்பூ₄தௌ தஸ்மாத் கேஶவநாமவாந் ||"

['க' என்பது பிரமனின் நாமம், தேஹத்தில் அபிமானமுள்ள அனைவர்க்கும் நான் 'ஈசன்'. நாங்களிருவரும் உன் அங்கத்தினின்றும் பிறந்தவர்கள். ஆக, 'க' எனப்படும் பிரமனுக்கும, 'ஈஶ'னை எனக்கும் காரணனாகையாலே நீ கேசவனென்னும் பெயரையுடையவனாகிறாய்.] என்று ஹரிவம்ஶத்தில் விவரிககப்பட்ட பொருளையுடைய கேசவநாமத்தாலே விஷ்ணுவை எடுத்திருப்பதும் இதையே வலியுறுத்துகிறது. 'ஸம்ஸாரார்ணவதாரணம்' என்னும் விஶேஷணம் அரனுக்கு அந்தர்யாமியான அரியிடமே பொருந்துமாகையாலே குறையில்லை; "உபாயோஸ்மி ஹரே: ஸ்ம்ருதௌ" என்று ஹரிவம்ஶத்தில் சொனன ரீதியில பரமாத்மஜ்ஞானத்தை விளைப்பதனமூலம் மோக்ஷத்திற்குச் சிவன் பரம்பரயா காரணனாகையாலே, 'ஸம்ஸார்ணவதாரணம்' என்று ஹரனுக்கு விஶேஷணமிட்டதாகவும் கொள்ளலாம். ஆகையால், இவ்விடத்தில் ப₄க₃வத்பரத்வத்திற்கு எவ்விதமான முரண்பாடுமில்லை. நிற்க.

''ஹ்ருத்ஸ்தி2தம் ஸர்வபூ4தாநாம் ரவிமண்2டலஸம்ஸ்தி2தம் |
நீலஜீமூத ஸங்காஶம் வாஸுதே3வம் சதுர்ப்பு4ஜம் ||
ஶங்க3சக்ர க3தா3பத்4மதா4ரிணம வநமாலிநம் |
தத்பாதோ3த3கஜாம் க3ங்கா3ம் நிபதந்தீம் ஸ்வமூர்த்த4நி ||
சிந்தயேத்3 ப்3ரஹ்மரந்த்4ரேண ப்ரவிஶந்தீம் ஸ்வகாம் தநும்|....
மாநஸம் ப்ரவரம் ப்ரோக்தம் ஸேவிதம் ப3ரஹ்மவாதி3பி4: |
மந:ஶுத்3தி4கரம் பும்ஸாம் நித்யம தத் ஸ்நாநமாசரேத் ||''

[எல்லா உயிர்களின் இருதயத்திலுமிருப்பவனும், ஸூர்யமண்டலத்தில் எழுந்தருளியிருப்பவனும், நீலமேகம் போன்றவனும், நான்கு திருக்கைகளை உடையவனும், (அவற்றில்) சங்கம், சக்கரம், கதை, தாமரை ஆகியவற்றை தரிப்பவனும், வனமாலையை அணிந்தவனுமான வாஸுதேவனையும், அவனுடைய திருவடியிலிருந்து பெருகும் நீர்ப்பெருக்கினின்றும் உண்டாவதாய், தன் தலையில் விழுவதாய், ப்ரஹ்மரந்த்ரத்தின் வழியாகத் தன் உடம்பினுள் நுழைவதான கங்கையையும் சிந்திக்கக்கடவன். இதுவே மிகச் சிறந்த மானஸ ஸ்நானமாகக் கூறப்படுகிறது. ப்ரஹ்மஜ்ஞானிகளால் இந்த ஸ்நானம் (எப்போதும்) செய்யப்படுகிறது. மனிதர்களின் மனத்தை இது பரிசுத்தப்படுத்துவது; தினந்தோறும் இந்த ஸ்நானத்தை அனுஷ்டிக்கக்கடவன்.] என்று இந்த ப்ருஹஸ்பதிஸ்ம்ருதிப் பதிப்பின் 310, 311 பக்கங்களில் மானஸ ஸ்நானத்தைச் சொல்லும்போது ஸ்ரீமந்நாராயணனை வர்ணித்து, அவனுடைய திருவடிகளினின்றும் பெருகும் கங்கையானது தன் தலையில் விழுந்து ப்ரஹ்மரந்த்ரத்தின் வழியாகத் தன் உடலில் நுழைவதாக தியானிப்பதே மானஸ ஸ்நானம் என்று உத்கோஷிக்கப்பட்டது. திரிவிக்கிரமாவதாரகாலத்தில் பிரமன் எம்பெருமான் திருவடியை விளக்க, அந்நீரே கங்கையாகப் பெருகிற்று என்றும், சிவன் தன் பாபம் போவதற்காகத் தன் தலையில் அதைத் தாங்கினன் என்றும் புராணங்களில் பேசப்படும் விருத்தாந்தம் இங்கு உணர்த்தப்படுகிறது.

''ஏக: ப்ராஸீஸரத பாத3ம் ஏக: ப்ராக்ஷாளந் முதா3 |
அபரோப்யத4ரந் மூர்த்4நா கோऽதி4கஸ் தேஷு க3ம்யதாம் ||''

[ஒருவன் திருவடியை நீட்டினான்; ஒருவன் அதை உகப்புடன் கழுவினான்; மற்றொருவன் அதைத் தலையாலே தரித்தான். இவர்

களில் எவன் பெரியவன் என்பதை நீங்களே ஆராய்ந்து கொள்ளுங்கள்.] என்ற பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியின்படி இந்த விருத்தாந்தத்திலிருந்து பகவத்பரத்வம் தெளிவுபடுத்தப்படுகிறது.

ஆக, இந்த ஸ்ம்ருதியிலிருந்தும் ஸ்ரீமந்நாராயணனே பிரமன், உருத்திரன் முதலான அனைவரையும் அனைத்துலகையும் படைத்தவன் என்று விளங்குகிறது.

ப்ருஹஸ்பதிஸ்ம்ருதி நிர்ணயம் முற்றிற்று.

## ஶௌநகஸ்ம்ருதி நிர்ணயம்

இதுவரையில், "மந்வத்ரி" என்று தொடங்கி யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதியில் படிக்கப்பட்ட ஸ்ம்ருதிகளின் எல்லாப்பதிப்புகளிலும் பரம்பொருளைப்பற்றிப் பேசப்பட்டிருக்கும் இடங்களை ஒன்று விடாமல் ஆராய்ந்து, அவற்றிலிருந்து ஸ்ரீமந்நாரயணனின் பரத்வமே தேறுகின்றது என நிரூபித்தோம். இவை தவிர மற்றும் பல ஸ்ம்ருதிகளும், உபஸ்மருதிகளும் த₄ர்மஶாஸ்த்ரகாரர்களாலும், நிப₃ந்த₄காரர்களாலும கையாளப்படுகினறன. அவற்றில் பெரும்பாலானவை இப்போது கிடைப்பதில்லை. கிடைக்கும் சிலவற்றிலும் பரம்பொருளை நிஷ்கர்ஷிக்கவல்ல பகுதிகளில்லை. நிற்க.

வீரமித்ரோதயம் என்னும் நிப₃ந்த₄க்ரந்த₂த்தில் எடுக்கப்பட்ட ப்ரயோகபாரிஜாதம் எனனும் நூல,

"நாரத₃: புலஹோ கா₃ர்க்₃ய: புலஸ்த்ய: ஶௌநக: க்ரது |
போ₃த₄ாயனோ ஜாதுகர்ண: விஶ்வாமித்ர: பிதாமஹ:||
ஜாப₃ாலிர் நாசிகேதஶ்ச ஸ்கந்தோ₃ லோகா₃க்ஷிகௌ₃தமௌ|
வ்யாஸ: ஸநத்குமாரஶ்ச ஶந்தநுர் ஜநகஸ் தத₂ா ||
வ்யாக்₄ர: காத்யாயநஶ்சைவ ஜாதுகர்ண்ய: கபிஞ்ஜல: |
பௌ₃த₄ாயநஶ்ச காணாதோ₃ விஶ்வாமித்ரஸ் ததை₂வ ச ||
பைடீ₂நஸிர் கோ₃பி₃லஶ்சேத்யுபஸ்ம்ருதிவித₄ாயகா: ||"

[1. நாரதர் 2. புலஹர் 3. கார்க்யர் 4. புலஸ்த்யர் 5. ஶௌநகர் 6. க்ரது 7. போதாயனர் 8. ஜாதுகர்ணர் 9. விஶ்வாமித்ரர் 10. பிதாமஹர் 11. ஜாப₃ாலி 12. நாசிகேதர் 13. ஸ்கந்தர் 14. லோகா₃க்ஷி 15. கௌ₃தமர் 16. வ்யாஸர் 17. ஸநத்குமாரர் 18. ஶந்தனு 19. ஜநகர் 20. வ்யாக்ரர் 21. காத்யாயனர் 22. ஜாதுகர்ண்யர்

23. கபிஞ்ஜலர் 24. பௌதாயனர் 25. காணுதர் 26. விஸ்வாமித்ரர் 27. பைட₂நஸி 28. கே₃ாபி₃லர் என்னும இருபததெட்டு பேரும உபஸ்ம்ருதிகளைச் செய்தவர்கள்.] என்று உபஸ்ம்ருதிகளைச் செய்தவாகளில இருபத்தெட்டுபேரை எடுககிறது. [விஸ்வாமித்ரர் இருவர் இருந்திருப்பதாகத் தெரிகிறது.] இவர்கள செய்த ஸ்ம்ருதிகளில் பல இப்போது காணபபடவில்லை. போதாயனர் முதலான சிலர் செய்த தர்மஸூத்ரஙகளும, க்ருஹ்ய ஸூதரங்களும காணபபட்டாலும, அவற்றில் பரமபொருளைப்பற்றிய நிஷ்கர்ஷமில்லை. அதிருஷ்டவசமாக உபஸ்மருதிகர்தநாக்களில ஐநதாமவராகப் படிக்கப்பட்ட ஸௌநகருடைய ஸமருதி திருவனநதபுரம் அரசாங்கத்தாரால (Trivandrum Sanskrit Series No cxx) கி. பி. 1935ல C. K. சாமப சிவ சாஸதிரி எனபவரைப் பதிப்பாசிரியராககொண்டு பதிப்பிககப் பெற்றுளளது. முந்நூறு வருடஙகளுககு முற்பட்ட மூனறு சுவடிகளைத் துணையாகக்கொண்டு தாம இநநூலைப் பதிபபித்திருப்பதாக அவர் அபபதிபபின முகவுரையில கூறியிருக்கிறுர். நிறக;

சௌநகர் எனபவா புராணங்களில் மஹர்ஷிகளில் ஒருவராகப் படிக்கப்படுகிறுா. 'விஷ்ணுத₄ாமம' என்னும அவருடைய நூலைப் பூாவாசார்யாகள பலா கையாண்டிருக்கிறுாகள. தொணடரடிப் பொடியாழ்வாரின் திருமாலை எனனும திவ்யப்ரபநதம ஸ்ரீ விஷ்ணு தாமத்தை அடிபபடையாகக் கொணடது எனறு பெரியவாச்சான பிளளை நிரவஹிககிறுா. ஸௌநகர் ருக்₃வித₄ானமொன்று இயற்றியுள்ளதாக ப்ராசீனா பலர் கூறுகின்றனர். ருகவேத₃க₃ருஹய ஸூதரகாரரான ஆஸ்வலாயனர் தம க்ருஹ்யஸூத்ரததின் முடிவில் "நம: ஸௌநகாய நம: ஸௌநகாய" எனறு ஸௌனகருக்கு வணக்கம செலுத்துகிறுர். இபபோது அச்சிட்டிருக்கும ஸௌநகஸமருதியிலும இரணடாவது பாததததின இருபத்தோராவது கண்டததின தொடக்கத்தில், "ஶ்ருணு பு₂த்₃த₄யா ஸமாயுக்த! ஆஸ்வலாயந! ஸுவ்ரத!" [நல்விரதமுடைய அறிவாளியான ஆஸ்வலாயனனே! கேட்பாயாக.] எனறு ஸௌநகர் ஆஸ்வலாயனரைத தம் சிஷ்யராகவே விளிககிறுர். இவற்றிலிருநது ருக்வேதக்ருஹ்ய ஸூதரகர்த்தாவான ஆஸ்வலாயனரின ஆசார்யரே இந்த ஸ்மருதிகர்த்தாவான ஸௌநகர் என விளங்குகிறது. இந்த ஸ்ம்ருதி ப்ராசீனர்கள் எடுத்த ருக்₃வித₄ானமே எனறும தெரிகிறது. ஆஸ்வலாயனரின காலம் கி மு. ஆறுவது நூற்றுண்டிற்கும முற்பட்டதாக ஆராய்ச்சியாளர்களால் நிச்சயிக்கப்படுவதால, ஸௌனகரின் காலமும் அதற்கு முறபட்டதெனபது தெளிவு. இனி, இவர் தம்முடைய ஸ்ம்ருதியில் பரததவ

நிஷ்கர்ஷம் செய்திருக்கிறபடியைப் பார்ப்போம். இதில் முதல் பாதத்தில் இருபத்தெட்டு கண்டங்களும், இரண்டாம் பாதத்தில் இருபத்தொரு கண்டங்களும் உள்ளன. அவற்றில் முதல் பாதத்தில் இரண்டாவது கண்டத்தில் ப்ரதிஸரப$_3$ந்த$_4$ம் (விவாஹம் முதலானவற்றில் ரக்ஷாபந்தனம்) என்னும் கிரியையை விவரித்துவிட்டு கடைசி ச்லோகத்தில்,

*ஹரிமேவ ஸ்மரேந்நித்யம் கர்மபூர்வாபரேஷு ச |*
*வித்$_3$வாந் ஸர்வப்ரயத்நேந குர்யாத் ப்ரதிஸரம் ஶுப$_4$ம் ||*

[கர்மங்களின் முன்னும் பின்னும் எப்போதும் ஹரியையே நினைக்கக்கடவன். அறிவாளியாயிருப்பவன் மங்களமான ப்ரதிஸர ப$_3$ந்த$_4$த்தை மிகமுயன்று செய்யக்கடவன்.] என்று கர்மத்தின் முனனும் பின்னும் ஹரியையே நினைக்கவேண்டும் என்று விதிப்பதன் மூலம் கர்மங்களால் ஆராதிக்கப்படுபவன் ஹரியே என்று நிலை நாட்டினார். க்$_3$ராமப்ரதிஷ்டா$_2$விதி$_4$யை விவரிக்கும் ஆருவது கண்டத்தில், அந்தந்த தேவதைகளுக்கு ஸ்தா$_2$னத்தை விதிக்கும்போது,

*மாநவந்தி க்$_3$ருஹாதீ$_3$நி விப்ராதீ$_3$நாம் ப்ரகல்பயேத் |*
*க்$_3$ராமாதீ$_3$நாம் மத்$_4$ய ஏவ க்$_3$ருஹம் விஷ்ணோர் விஶேஷத: ||*
*தஸ்மிந்நேவ ஸப$_4$ாகூடம் ப்ரபாதீ$_3$நி ப்ரகல்பயேத் |*
*ஸ்ரீபூ$_4$ஸரஸ்வதீநாம் ச க்$_3$ருஹம் க$_3$ணபதேரபி ||*
*ப்ராச்யாமிந்த்$_3$ரக்$_3$ருஹம் கார்யம் த$_3$க்ஷிணஸ்யாம் யமாலயம் |*
*ப்ரதீச்யாம் வாருணம் வேஶ்ம உதீ$_3$ச்யாம் ஸௌம்யமாலயம் ||*
*ப்ராக்$_3$த$_3$க்ஷிணஸ்யாம் ஆக்$_3$நேயம் நிர்ருதேர் த$_3$க்ஷிணபஶ்சிமே*
*வாயோ: ப்ரத்யகு$_3$த$_3$க்$_3$தே$_3$ஶே ப்ராகு$_3$தீ$_3$ச்யாம் ஶிவாலயம் ||*
*ஸர்வாஸாம் தே$_3$வபத்நீநாம் தைஸ்ஸஹைவாலயம் ப$_4$வேத் |*
*ஆர்யாமாத்ருபிஶாசாநாம் ப$_3$ஹிர்க்$_3$ராமாத் ப்ரகல்பயேத் ||*
*பரித: பாலநார்த்$_2$தா$_2$ய ப்ராகாரம் காரயேத் ந்ருப: |*
*த்$_3$வாரதே$_3$ஶேऽத$_2$ துர்க்க$_3$ாயா: ஆலயம் ஸம்ப்ரகல்பயேத் ||*

[அந்தணர் முதலானுர்க்கு வீடுகள் முதலானவற்றை விசாலமானதாகச் சமைக்கவேண்டும். கிராமம் முதலானவற்றின் மத்தியில் விஷ்ணுவுக்குச் சிறப்புடன் கோயில் கட்டவேண்டும். அக்கோயிலிலே அனைவரும் கூடுமிடமான ஸப$_4$ாகூடத்தையும், தண்ணீர்ப்பந்தல் முதலானவற்றையும் அமைக்கவேண்டும். (விஷ்ணுவின் பத்தினி

களான) ஸ்ரீதேவி, பூதேவி, ஸரஸ்வதீதேவி, விஷ்ணுகணங் களுக்குப் பதியான விஷ்வக்ஸேனர் ஆகியவர்களின ஆலயத்தை யும, அக்கோயிலிலேயே அமைக்கவேணடும். இந்திரன் கோயிலைக் கிழக்கு திக்கிலும், யமனின் கோயிலைத தெற்கு திக்கிலும், மேற்கில் வருணன் கோயிலையும், வடக்கில் புதனின கோயிலையும், தென் கிழககில் அக்னிக்கும், தென்மேற்கில் நிர்ருதிக்கும், வடமேற்கில் வாயுவுக்கும வடகிழக்கில் சிவனுக்கும் ஆலயங்களையும் அமைக்க வேண்டியது. அந்தந்த தேவர்களின் பத்னிகளுக்கு அந்தந்த தேவர்களிருக்குமிடத்திலேயே ஆலயம் எழுப்பவேணடியது. ஆரயை, மாத்ருகணஙகள், பிஶாசஙகள ஆகியவற்றுக்கு கிராமத்துக்கு வெளியில் ஆலயம் அமைக்கவேண்டியது. இக் கோவிலகளை ரக்ஷிக்குமபொருட்டு மதிள்களை அரசன எழுப்ப வேண்டும். கிராமததின வாயிற்புறத்தில் துர்க்கைக்கு ஆலயம் அமைக்கவேண்டும] எனறு கிராமத்தின் மத்தியில் விஷ்ணுவுக்குச் சிறப்புடன் கோயில் கட்டவேண்டும் எனறும, சிவன் முதலான மற்ற தெய்வங்களுக்கு ஒவ்வொரு மூலையிலும், காளிக்கு வாயிற் புறத்திலும், மற்ற துர்தேவதைகளுக்கு கிராமத்தின வெளியிலும் கோயிலகள் அமைக்கவேண்டும என்றும் கூறியிருபபதிலிருந்து சிவன முதலான எல்லா தேவதைகளுக்கும் தலைவன விஷ்ணுவே என விளஙகுகிறது. இனறளவும் அகரஹாரங்களின் மத்தியில் ஹரிககும, வடகிழக்கு மூலையில் சிவனுக்கும, காளி முதலான துர்தெய்வஙகளுக்கு கிராமத்திற்கு வெளியிலும் கோயில் கள் அமைந்திருப்பது இவ்வனுஷடானத்தை வலியுறுத்துகிறது. இதனல், சிவனைப் பரதெய்வமாகக் கூறும சைவமதமும். துர்க்கையைப் பரதெய்வமாகக் கூறும ஶாக்தமதமும் ஶௌநகருக்கு அநபி₄மதம் எனவிளஙகுகிறது.

"அத: ப்ராத: ஸமுத்த₂ாய சிந்தயேத₃ாத்மநோ ஹிதம் |
நிர்க்₃குணம் நிரஹங்காரம் நாராயணமநாமயம் ||
ஸகு₃ணம் ச ஶ்ரியா யுக்தம் தே₃வம் தே₃வீம் ஸரஸ்வதீம ||"

[காலையிலெழுந்திருந்து தனக்கு நன்மையைச் சிந்திக்கக்கடவன; ப்ராக்ருத குணங்களற்றவனும், கலயாணகுணங்களுளளவனும், அஹங்காரமற்றவனும, அழிவற்றவனும், ஸ்ரீதேவியுடன கூடியவனு மான நாராயணனையும், ஸரஸ்வதீ தேவியையும் சிந்திக்கக் கடவன்.] எனறு ஆஶ்வலாயந ஸ்ம்ருதியில் [7] உள்ளதாகப் பரகாலமடஸ்வாமியின் ஹயஶிர உபாக்₂யானத்தில் (பக்கம் 245ல்)

காணப்படுவதிலிருந்து ஶௌநகஶிஷ்யரான ஆஶ்வலாயனரும் விஷ்ணுவையே பரம்பொருளாக நிஷ்கர்ஷித்தார் என்பதும், வேதம புகழ்ந்த வாக்தேவி எனப்படும ஸரஸ்வதீதேவி விஷ்ணு ப்த்னியாகவே அவர் காலத்தில் கருதப்பட்டு வந்தாள் எனபதும் விளங்குகிறது. போ₃ர்த₄ாயனர் முதலான மற்றும பலரும் ஸ்ரஸ்வதியை விஷ்ணுபத்னியாகவே வழஙகியிருப்பதைக்காட்டி, விஷ்ணுசித்தவிஜயம முதலத்தியாயத்தில் (இரண்டாம்பதிப்பு பக்கம் 1022-1025) விஷ்ணுவின அவதாரமாய், வித்யைக்கு அதிதேவதை யான ஹயக்ரீவரின் பத்னியான வாக்தேவியே ஶ்ருதிஸ்ம்ருதிகளில் பெரும்பாலும் ஸரஸ்வதியென வழங்கபபடுகிறாள் என்பதை நிலை நாட்டினோம். ஆகையால், இங்கும் ஸ்ரீபூ₄மிதேவிகளோடு சேர்த்துப் ப்டிக்கப்படும ஸரஸ்வதி விஷ்ணுபத்னியே என விளங்குகிறது. அந்தந்த தேவர்களின பத்னிகளுக்கு அந்தந்த தேவர்களோடு கூடவே ஆலயம எழுப்பவேண்டும் என்று இஙகு விதித்திருப்பதி லிருந்தும் இது வலியுறுத்தப்படுகிறது. விஷ்ணுதேவிகளோடு சேர்த்துப்படிக்கப்பட்டிருபபதிலிருந்தே இங்கு படிக்கப்படும் க₃ணபதி விஷ்ணுகணபதியான விஷ்வக்ஸேநரேயொழிய, சிவ கணபதியல்ல என்பதும் விளங்குகிறது. சிவகணபதி ப்ராசீன மான எந்த நூலிலும் காணப்படவில்லை என்று ஆராய்ச்சியாளர்கள் அறுதியிட்டுச் சொல்லுவதும அறியத்தக்கது. நிற்க. புத்ர ஸ்வீகாரததை விதிக்கும் எட்டாவது கண்டத்தில், புத்ரஸ்வீகாரத் திற்கு வேண்டியவற்றை விவரிக்கும்போது,

வாஸஸீ குண்ட₃லே ச₂த்ரமுஷ்ணீஷம் சாங்கு₃லீயகெள ।
ஆசார்யம் த₄ர்மஸம்யுக்தம் வைஷ்ணவம் வேத₃பாரக₃ம் ॥
ப₃ர்ஹி: கு₂மயம் சேத்₄மம் பாலாஶம் சாஜ்யமேவ ச ।

[இருவஸ்திரங்கள், இரு குண்டலங்கள், குடை, தலைப்பாகை, இரு மோதிரங்கள், வேதத்தைக் கரைகண்டவனாய், வைஷ்ணவனாய், தர்மத்தோடு கூடியவனான ஆசார்யன் (புரோஹிதன்), குசதர்ப்பம், பலாஶஸமித்து, நெய் ஆகியவற்றை (எடுத்துச் செல்லவேண்டும்)] என்று ஸ்வீகாரம் செய்துவைக்கவேண்டிய புரோஹிதன் தர்ம மறிந்தவனாய் வேதத்தைக் கரைகண்ட வைஷ்ணவனாயிருக்கவேண்டும் என விதித்தார். இதிலிருந்து வைஷ்ணவனே வைதிககார்யங்களில் புரோஹிதனாயிருக்கத்தக்கவன் என்னும் ஶௌநகஸித்தாந்தம் விளங்கிநிற்கிறது. பத்தாவது கண்டத்தில் ஶதாபி₄ஷேகவிதியை விவரிக்கும்போது,

கலஶாந் தந்துஸம்யுக்தாந் ப்₃ரஹ்மஸ்த₂ாநாதி₃தே₃ஶத: |
ஸ்த₂ாப்ய க₃ந்த₄ாதி₃பி₄: பூஜ்ய த்₄யாத்வா விஷ்ணும் ஸமாஹித: ||

ஸ்விஷ்டக்ருத₃ாதி₃ஶேஷம் ச ஹுத்வா ஹோமம் ஸமாப்ய ச|
ஹரிம் ப்ரணம்ய கலஶை: தே₃வஸ்யத்வாபி₄ஷேசயேத் ||....
ஆக்ருஷ்ணேநேத்ய்ருசாऽऽதி₃த்யம் விஷ்ணும் த்₃ருஷ்ட்வா க்ருதாஞ்ஜலி .... ||

ஹிரண்யரூப: ஸஹீதி வைஷ்ணவாயாஹிதாக்₃நயே ||....
பங்க்திம் புநாதி புத்ராத்₃யை: ஷஷ்டிம் வர்ஷஸஹஸ்ரகம்|
ஸ்வர்க்க₃லோகமதிக்ரம்ய விஷ்ணுலோகே மஹீயதே ||

[ப்ரஹ்மஸ்த₂ானம் முதலான இடங்களில நூலோடுகூடியவையான கலசங்களை, சாந்தியுடன விஷ்ணுவை தியானித்து கந்தம் முதலான வற்ருல் பூஜித்து ஸ்தாபித்து ... ஸ்விஷ்டக்ருத் முதலானவறறின சேஷத்தை ஹோமம் செய்து முடித்து, ஹரியை வணங்கி, கலசங் களினல அபிஷேகம் செய்யவேண்டியது.... "ஆகருஷ்ணே ந" என னும் ருக்கினல் அதிதியின் பிள்ளையான விஷ்ணுவை அஞ்ஜலியுடன ஸேவிதது..."ஹிரண்யரூப: ஸஹி" எனனும மந்திரத்தால, ஆஹிதாக்னி யான வைஷ்ணவனுக்குக கொடுதது...(ஶதாபிஷேகத்தை அநுஷ்டிபப வன) இருபததொரு தலைமுறைகளைப் பரிசுததப்படுத்துகிருன். அறுபதினயிரம வருடங்கள் ஸ்வர்க்கலோகததிலிருந்து, அதைத் தாண்டிச்சென்று விஷ்ணுலோகத்தில் சிறப்படைகிருன.] எனறு ஶதாபி₄ஷேககர்மத்தில் தியானிககத்தக்கவன் விஷ்ணுவேயென்றும், தானஙகொடுக்கத்தக்கவன வைஷ்ணவனேயெனறும, ஶதாபி₃ஷேகம் செய்துகொண்டவனுக்குப் பரமப₂லம் விஷ்ணுலோகப்ராப்தியென றும் கூறியிருப்பதிலிருந்தும் விஷ்ணுவே ஸர்வகர்மபோ₁க்தாவும் ப்ரபு₄வுமான பரமபொருள் என விளஙகுகிறது. அபமருத்யுஜயத்தை விவரிக்கும பதினேராவது கண்டத்தில்,

ஹுத்வாஷ்டோத்தரஸாஹஸ்ரமஷ்டோத்தரஶதம் து வா |
வ்யாஹ்ருத்யா ஸப்ரணவயா விஷ்ணும் த்₄யாயந் ஸமாஹித: ||....
அக்₃நே: பூர்வம் ப்ரதிஷ்ட₂ாப்ய தூ₃ர்வாஸ்தம்பே₄ ஹரிம் ஸ்மரந் |
தஸ்மிந் ஸ்தம்பே₄ ஹரிம் பூஜ்ய புருஷஸூக்தேந ப₄க்தித: ||

காணப்படுவதிலிருந்து மௌநகஶிஷ்யரான ஆஶ்வலாயனரும் விஷ்ணுவையே பரம்பொருளாக நிஷ்கர்ஷித்தார் எனபதும், வேதம புகழ்ந்த வாக்தேவி எனப்படும ஸரஸ்வதீதேவி விஷ்ணு ப்த்னியாகவே அவர் காலத்தில் கருதப்பட்டு வந்தாள் எனபதும் விளங்குகிறது. பே₃ாத₄ாயனர் முதலான மற்றும பலரும் ஸரஸ்வதியை விஷ்ணுபத்னியாகவே வழங்கியிருப்பதைக்காட்டி, விஷ்ணுசித்தவிஜயம் முதலததியாயத்தில் (இரண்டாம்பதிப்பு பக்கம் 1022-1025) விஷ்ணுவின் அவதாரமாய், வித்யைக்கு அதிதேவதை யான ஹயக்ரீவரின பத்னியான வாக்தேவியே ஶ்ருதிஸ்மருதிகளில் பெரும்பாலும் ஸரஸ்வதியென வழங்கபபடுகிருள என்பதை நிலை நாட்டினேம். ஆகையால், இங்கும் ஸ்ரீபூ₄மிதேவிகளோடு சேர்ததுப் ப்டிக்கப்படும ஸரஸ்வதி விஷ்ணுபத்னியே என விளங்குகிறது. அந்தந்த தேவர்களின பத்னிகளுக்கு அந்தந்த தேவர்களோடு கூடவே ஆலயம் எழுப்பவேண்டும் என்று இஙகு விதித்திருபபதி லிருந்தும் இது வலியுறுத்தப்படுகிறது. விஷ்ணுதேவிகளோடு சேர்த்துப்படிக்கப்பட்டிருபபதிலிருந்தே இங்கு படிக்கப்படும் க₃ணபதி விஷ்ணுகணபதியான விஷவக்ஸேநரேயொழிய, சிவ கணபதியல்ல எனபதும் விளங்குகிறது. சிவகணபதி ப்ராசீன மான எந்த நூலிலும் காணப்படவில்லை என்று ஆராய்ச்சியாளர்கள் அறுதியிட்டுச் சொல்லுவதும் அறியத்தக்கது. நிற்க. புதர ஸ்வீகாரத்தை விதிக்கும் எட்டாவது கண்டத்தில், புத்ரஸ்வீகாரத் திற்கு வேண்டியவற்றை விவரிக்கும்போது,

வாஸஸீ குண்ட₃லே ச₂த்ரமுஷ்ணீஷம் சாங்கு₃லீயகௌ |
ஆசார்யம் த₄ர்மஸம்யுக்தம் வைஷ்ணவம் வேத₃பாரக₃ம் ||
ப₃ர்ஹி: குஶமயம் சேத்₄மம் பாலாஶம் சாஜ்யமேவ ச |

[இருவஸ்திரங்கள், இரு குண்டலங்கள், குடை, தலைப்பாகை, இரு மோதிரங்கள், வேதத்தைக் கரைகண்டவனுய், வைஷ்ணவனுய், தர்மத்தோடு கூடியவனை ஆசார்யன் (புரோஹிதன்), குசதர்ப்பம், பலாஶஸமித்து, நெய் ஆகியவற்றை (எடுத்துச் செல்லவேண்டும்)] என்று ஸ்வீகாரம் செய்துவைக்கவேண்டிய புரோஹிதன் தர்ம மறிந்தவனுய் வேதத்தைக் கரைகண்ட வைஷ்ணவனுயிருக்கவேண்டும் என விதித்தார். இதிலிருந்து வைஷ்ணவனே வைதிககார்யங்களில் புரோஹிதனுயிருக்கத்தக்கவன் என்னும் மௌநகஸித்தாந்தம் விளங்கிநிற்கிறது. பத்தாவது கண்டத்தில் ஶதாபி₄ஷேகவிதியை விவரிக்கும்போது,

கலஶாந் தந்துஸம்யுக்தாந் ப்₃ரஹ்மஸ்த₂ாநாதி₃தே₃ஶத: ।
ஸ்த₂ாப்ய க₃ந்த₄ாதி₃பி₄: பூஜ்ய த்₄யாத்வா விஷ்ணும் ஸமாஹித: ॥

ஸ்விஷ்டக்ருத₃ாதி₃ஶேஷம் ச ஹுத்வா ஹோமம் ஸமாப்ய ச ।
ஹரிம் ப்ரணம்ய கலஶை: தே₃வஸ்யத்வாபி₄ஷேசயேத ॥....
ஆக்ருஷ்ணேநேத்ய்ருசாऽऽதி₃த்யம் விஷ்ணும் த்₃ருஷ்ட்வா க்ருதாஞ்ஜலி....: ॥

ஹிரண்யரூப: ஸஹீதி வைஷ்ணவாயாஹிதாக்₃நயே ॥...
பங்க்திம் புநாதி புத்ராத்₃யை. ஷஷ்டிம் வர்ஷஸஹஸ்ரகம் ।
ஸ்வர்க்க₃லோகமதிகரம்ய விஷ்ணுலோகே மஹீயதே ॥

[ப்ரஹ்மஸ்த₂ானம் முதலான இடங்களில் நூலோடுகூடியவையான கலசங்களை, சாந்தியுடன விஷ்ணுவை தியானித்து கநதம் முதலான வற்ருல் பூஜித்து ஸ்தாபித்து ... ஸ்விஷ்டக்ருத முதலானவற்றின் சேஷத்தை ஹோமம் செய்து முடித்து, ஹரியை வணஙகி, கலசங் களிறுல அபிஷேகம செய்யவேண்டியது.... "ஆக்ருஷ்ணேந" என் னும் ருக்கிறுல் அதிதியின் பிள்ளையான விஷணுவை அஞ்ஜலியுடன ஸேவித்து..."ஹிரண்யரூப: ஸஹி" எனனும மந்திரத்தால, ஆஹிதாக்னி யான வைஷ்ணவனுக்குக கொடுத்து...(ஶதாபிஷேகத்தை அநுஷடிப்ப வன) இருபததொரு தலைமுறைகளைப் பரிசுத்தப்படுத்துகிருன். அறுபதினுயிரம வருடங்கள் ஸ்வர்க்கலோகத்திலிருந்து, அதைத் தாண்டிச்சென்று விஷ்ணுலோகத்தில் சிறப்படைகிருன.] என்று ஶதாபி₄ஷேககர்மத்தில் தியானிக்கத்தக்கவன் விஷ்ணுவேயென்றும், தானஙகொடுக்கத்தக்கவன வைஷணவனேயென்றும, ஶதாபி₃ஷேகம செய்துகொண்டவனுக்குப் பரமப₂லம் விஷ்ணுலோகப்ராப்தியென றும் கூறியிருப்பதிலிருந்தும் விஷ்ணுவே ஸர்வகர்மபோ₄க்தாவும் ப்ரபு₄வுமான பரம்பொருள என விளங்குகிறது. அபமருத்யுஜயத்தை விவரிக்கும பதிஞேராவது கண்டத்தில்,

ஹுத்வாஷ்டோத்தரஸாஹஸ்ரமஷ்டோத்தரஶதம் து வா ।
வ்யாஹ்ருத்யா ஸப்ரணவயா விஷ்ணும் த்₄யாயந் ஸமாஹித: ॥....

அக்₃நே: பூர்வம் ப்ரதிஷ்ட₂ாப்ய தூ₃ர்வாஸ்தம்பே₄ ஹரிம் ஸ்மரந் ।
தஸ்மிந் ஸ்தம்பே₄ ஹரிம் பூஜ்ய புருஷஸூக்தேந ப₄க்தித: ॥

ஆக்3யயாऽऽவாஹயேத் தே3வம் ருசா து புருஷோத்தமம் ।
த்3விதீயயாஸநம் த3த்3யாத் பாத்3யம் சைவ த்ருதீயயா ॥
அர்க்4யம் சதுர்த்2யா தா3தவ்யம் பஞ்சம்யாசமநீயகம் ।
ஷஷ்ட்2யா ஸ்நாநம் ப்ரகுர்வீத ஸப்தம்யா வஸ்த்ரமேவ ச ॥
யஜ்ஞோபவீதமஷ்டம்யா நவம்யா க3ந்த4மேவ ச ।
புஷ்பம் த3ஶம்யா தா3தவ்யம் ஏகாத3ஶ்யா து தூ4பகம் ॥
த்3வாத3ஶ்யா தீ3பகம் த3த்3யாத் த்ரயோத3ஶ்யா நிவேத்3யகம் ।
சதுர்த3ஶ்யா நமஸ்காரம் பஞ்சத3ஶ்யா ப்ரத3க்ஷிணம் ॥
ஷோட3ஶ்யோத்3வாஸநம் குர்யாத் வாஸுதே3வம்
ஜக3த்3கு3ரும் ।

[சாந்தியுடையவனாய், விஷ்ணுவை தியானித்துக்கொண்டு, ப்ரணவத்தோடு கூடிய வ்யாஹ்ருதிகளாலே ஆயிரத்தெட்டு தடவை அல்லது நூற்றெட்டுத்தடவை ஹோமம் செய்து...அக்னியின் முன் தர்ப்பையாலான தூணில் ஹரியைப் ப்ரதிஷ்டைசெய்து தியானித்து, அதிலேயே புருஷஸூக்தத்தால் ஹரியைப் பூஜிக்கவேண்டியது. புருஷஸூக்தத்தின முதல் மந்திரத்தால பருஷோத்தமனை ஆவாஹனம் செய்வது; இரண்டாவதால ஆஸனமும், மூன்றுவதால் பாத்யமும, நாலாவதால் அர்க்யமும், ஐந்தாவதால் ஆசமநீயமும் கொடுப்பது; ஆறுவதால் ஸ்நாநம் செய்வது; ஏழாவதால் வஸ்திரம் சார்த்துவது; எட்டாவதால் பூணூலும், ஒன்பதாவதால் கந்தமும், பத்தாவதால் புஷ்பமும் சார்த்துவது; பதினோராவதால் தூ4பமும். பனிரண்டாவதால் தீபமும், பதின்மூன்றுவதால் நைவேத்3யமும் ஸமர்ப்பிப்பது; பதினாலாவதால் நமஸ்காரமும், பதினைந்தாவதால் ப்ரதக்ஷிணமும் செய்வது; பதினாறுவதால் ஜகந்நாதனை வாஸுதேவனை (தர்ப்பையினின்றும்) எழுந்தருளப் பண்ணவேண்டியது.] என்று புருஷஸூக்தத்தால் ஆராதிக்கத் தக்க பரம்பொருள் நாராயணனே என்று காட்டினார். போ3ாத4ாயனர் முதலான மற்றும பல மஹர்ஷிகளும் புருஷஸூக்தப்ரதிபாத்3யன் நாராயணனே என்று காட்டியிருப்பது முதலத்தியாயத்தில் புருஷஸூக்த வ்யாக்யானத்தில் விளக்கப்பட்டது. இவ்வண்ணமாகப் புருஷஸூக்தத்தை எந்த மஹர்ஷியும் மற்ற தேவதைகளின் பூஜையில் விநியோகிக்கவில்லை. இதிலிருந்து புருஷஸூக்தத்தால் காட்டப்படும பரம்பொருள் நாராயணனே என்பதே ஸகலமஹர்ஷி ஸித்தாந்தம் என விளங்குகிறது.

இந்த ஶௌநகஸ்ம்ருதியின் இருபத்து மூன்றாவது கண்டத்தில் மரணமடைந்த யதிகளுக்குச் செய்யவேண்டிய ஸம்ஸ்காரம் விவரிக்கப்படுகிறது. அக்கண்டத்தின் கடைசியிலுள்ள

இத₃ம் விஷ்ணுரிதி த்₃வாப்₄யாம் மூர்த்₄நி பி₄க்₃யேத வாக்₃யத: |
பரோ மாத்ரேத்ய்ருசைகயா ரஜோபி₄: பரிபூர்ய ச ||
க₃ர்த்தம் புருஷஸூக்தேந ஶ்ரீஸூக்தேநாபி₄மந்த்ர்ய ச |
அதோ தே₃வாதி₃ஷட்₃பி₄ஶ்ச ப்ரணம்ய ஹரிமச்யுதம் ||
நாஶௌசம் நோத₃கம் குர்யாத ந ஶ்ராத்₃த₄ாதீ₃ந் ஸமாசரேத்|
நாராயணப₃லிம் குர்யாத் விஷ்ணுலோகே மஹீயதே ||

[வார்த்தையில் நியமம் கொண்டவனாய், 'இத₃ம் விஷ்ணு:' என்று தொடங்கும் இரண்டு (விஷ்ணுஸூக்த) ரிக்குகளால் யதியின் தலையில் பிளக்கவேண்டியது. 'பரோ மாத்ரயா' என்னும் ஒரு (விஷ்ணுஸூக்த) ரிக்கால் குழியை மண்ணையிட்டு நிரப்பி, புருஷ ஸூக்தத்தாலும், ஶ்ரீ ஸூக்தத்தாலும் அபி₄மந்த்ரணம் செய்து, 'அதோ தே₃வா:' என்று தொடங்கும் ஆறு விஷ்ணுஸூக்த ரிக்குகளால் ஹரியாகிற அச்யுதனை வணங்கி நாராயண ப₃லியைச் செய்யவேண்டியது. ஆஶௌசம், (எள்ளோடு கலந்த) நீர் வார்ப்பது, ஶ்ராத்தம் முதலானவற்றை யதிகள் விஷயத்தில் அனுஷ்டிக்கக்கூடாது. இப்படிச் செய்பவன் விஷ்ணுலோகத்தில் சிறப்புறுவான்] என்னும் மந்திரங்களிலிருந்து, மோக்ஷத்திற்குரிய யதிகளை ஸம்ஸ்கரிக்கும்போது ஶ்ரீமந்நாராயணனை நேரே சொல்லும் ஶ்ரீஸூக்தம், புருஷஸூக்தம், விஷ்ணுஸூக்தம் முதலானவற்றிலுள்ள மந்திரங்களை ஓத வேண்டுமென்றும், ஹரியாகிற அச்யுதனை வணங்கவேண்டுமென்றும், நாராயண ப₃லியைச் செய்யவேண்டுமென்றும், இப்படிச் செய்பவனும் விஷ்ணுலோகத்தில் சிறப்புறுவான் என்றும் கூறியிருப்பதிலிருந்து, விஷ்ணு லோகத்தில் சிறப்புறுவதே மோக்ஷம் என்றும், அதை அளிக்க வல்லவன் ஶ்ரீ புருஷ விஷ்ணுஸூக்த ப்ரதிபாத்₃யனாய், ஹரி, அச்யுதன், விஷ்ணு என்னும் தனிப்பெயர்களால் விளங்குபவனான ஶ்ரீமந்நாராயணனே என்பதே ஶௌநகமஹர்ஷி ஸித்தாந்தம் என்று கையிலங்கு கனியாக விளங்குகிறது. ருக்₃வேத₃மந்திரங்களையே எடுத்துக்காட்டி அவை விஷ்ணுவைப்பற்றியவை என்று நிர்ணயிப்பது மற்ற ஸ்ம்ருதிகளைக் காட்டிலும் இந்த ஸம்ருதிக்குள்ள

தனிச்சிறப்பு என்பதும் உணரத்தக்கது. அடுத்ததான இருபத்து நாலாவது கண்டத்தில் ஆஹிதாக்₃னியாயிருப்பவன் வெளி தேசத்திற்குச் சென்று மரணமடைந்தால, அவனுக்குச் செய்ய வேண்டிய ஸம்ஸ்காரத்தைச் சொல்லுகிறது. அதில், "விஷ்ணுர் யோநிம" என்று தொடங்கும வைஷ்ணவ மந்திரங்களையும் புருஷ ஸூக்தத்தையும கொண்டு ஹோமம செய்யச் சொல்லியிருப்பதி லிருந்தும் மற்றும் பல கண்டங்களிலும் வைஷ்ணவ மந்திரங்களை விநியோகித்திருப்பதிலிருந்தும் இவ்விஷயம வலியுறுத்தப்படுகிறது. இக்கண்டத்தின் கடைசியில் "விஷ்ணும் ஸதா₃ ஸ்மரேத்" [விஷ்ணுவை எப்போதும் நினைக்கவேண்டியது] என்று விதித் திருப்பதிலிருநது, கர்மாராத்₄யனுய், அதனுலேயே கர்மஙகளில் எப்போதும் நினைக்கத்தக்கவனுயிருப்பவன விஷ்ணுவே என விளங்குகிறது. இருபத்தைந்தாவது கண்டத்தில் அப்₄யுத₃ய ஶ்ராத்₃த₄த்தை விரிவாக விதித்துவிட்டு,

*ப்ரஹ்மசர்யமத₄: ஶய்யாமபி கோ₃வர்த₄நோத்₃த₄ரம் ।*
*க்ருஷ்ணமேவ ஸதா₃ த்₄யாயந் தத்கீர்த்தநபராயண: ॥*

[(இந்த ஶ்ராத்தம் முடியும் வரையில்) ப்ரஹ்மசர்யத்தோடு இருக்கவேண்டும்; தரையில் படுக்கவேண்டும. கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்தவனை கிருஷ்ணனை எப்போதும் ஸங்கீர்த்தனம் செய்பவனுய், அவனையே தியானித்துக்கொண்டு இருக்கவேண்டும்.] எனனும் கடைசி ஶ்லோகத்தில், க்ருஷ்ண கீர்த்தனத்தையும், தியானத்தையும் அந்த ஶ்ராத்தத்திற்கு அங்க மாகச் சொலலியிருப்பதிலிருந்தும் இவ்விஷயம் வலியுறுத்தப்படு கிறது. கிருஷ்ணன் என்று பொதுவாகச் சொனனுல் போதா தென்று, அவனுடைய ஸர்வரக்ஷகத்வப் பெருமையைக் காட்டும் குன்றுகுடையாவெடுத்த விருத்தாந்தத்தையிட்டு விஶேஷித்திருப்ப தும குறிக்கொள்ளத்தக்கது. இனி, முதற்பாதம இருபத்தேழாவது கண்டத்தில் நாராயணப₃லி என்னும் கர்மத்தை விரிவாக விதிக்கு மிடத்திலும், இருபத்தெட்டாவது கண்டத்தில் மஹாஶாந்தியை விதிக்குமிடத்திலும் ப₄க₃வத்பரத்வம் விஶேஷமாக விளங்கா நிறகிறது. அக்கண்டங்களைக் காண்போமினி.

*ஶௌநகோஹம் ப்ரவக்ஷ்யாமி நாராயணப₃லிம் பரம் ।*
*சண்டா₃ளாத் உத₃காத் ஸர்ப்பாத் ப்₃ராஹ்மணாத்*
*வைத்₃யுதாத₃பி ॥....*

யதீநாம் சைவ யோகீ$_3$நாமந்யேஷாம் மோக்ஷகாங்க்ஷிணாம் ||
புண்யம் பாபக்ஷயார்த்த$_2$ாய த்$_3$வாத$_3$ஶேऽஹநி காரயேத் |
ஸம்வத்ஸராத் பரம் குர்யாத் சண்டா$_3$ளாத்$_3$யைர்ஹதஸ்ய ச ||
ஸபிண்டீ$_3$கரணாத் பூர்வம் விஷ்ணுபூஜாம் ஸமாசரேத் |
த்$_3$வாத$_3$ஶ்யாம் ஶ்ரவணே வாபி பஞ்சம்யாம் பர்வணோரபி ||
க்$_3$ருஹஸ்த$_2$ாந் வா யதீந் வாபி வைஷ்ணவாந்
த்$_3$வாத$_3$ஶோத்தமாந் ||
ஸ்நாதாநாஹூய க$_3$ர்த்தேஷு பாத$_3$ம் ப்ரக்ஷாள்ய வாரிணா |
க$_3$ந்த$_4$புஷ்பாதி$_3$கம் ஸர்வம் க்ரமாத் த்$_3$வாத$_3$ஶநாமபி$_4$: || .. ...
ஏதைரர்ச்ய த்$_3$விஜாந் பஶ்சாத் ஸ்ரீபூ$_4$மிஸஹிதம் ஹரிம் |
ஆத$_3$யயாவாஹ்ய புஷ்பேண விஷ்டரே ஹ்ருத$_3$யாத் பரபு$_4$ம் ||
பா$_4$நுமண்ட$_3$லதோ வாபி ப$_4$க்த்யா ஸர்வம் ஸமாஹித |
பாத்$_3$யாதி$_3$தீ$_3$பபர்யந்தம் க்ருத்வா ருக்$_3$பி$_4$ஶ்ச பௌருஷை: ||
விஶேஷம் ச தத$_2$ா வக்ஷ்யே கேஶவாத$_3$யைஶ்ச நாமபி$_4$: ||
அதோ தே$_3$வாதி$_3$ஷட்$_3$பி$_4$ஶ்ச பௌருஷை:
ஷோட$_3$ஶைஸ்தத$_2$ா |
த்$_3$வாத$_3$ஶாஷ்டாக்ஷராப்$_3$யாம் ச ஸமித$_3$ாஜ்யசருண்யபி || ...
அந்நேந ப்$_3$ராஹ்மணாந் போ$_4$ஜ்ய விஷ்ணுபூஜாம்
ஸமாப்ய ச || ..
புருஷஸூக்தேந தே$_3$வேஶம் ஸ்துத்வா கர்ம ஸமாப்ய ச || ...
தஸ்மாத் ஸர்வப்ரயத்நேந கு$_3$ருபூஜாம் ஸமாசரேத் |
ப்ராயஶ்சித்தம் து பாபாநாம் அந்யேஷாம் மோக்ஷஸாத$_4$நம் ||
தஸ்மாத் ஸர்வப்ரயத்நேந நாராயணப$_3$லிம் த்விமம் |
குர்யுர்த்$_3$விஜாத$_3$யஶ்சாந்யே தந்த்ரம ஶூத்$_3$ராநுலோமஜா: || ...

[மேலான நாராயணபலி என்னும் கர்மத்தை ஶௌநகராகிய நான் விவரிக்கிறேன். சண்டாளனிடமிருந்தோ, நீரினலோ, பாம்பினலோ, அந்தணனலோ, மின்னலாலோ (மற்றும் பல காரணங்களாலோ) து$_3$ர்மரணம் ஏற்பட்டாலும், யதிகள், யோகிகள், மற்றுமுள்ள மோக்ஷார்த்திகளுக்கும் பாபம் போவதற்காக இப் புண்யகர்மத்தைப் பன்னிரண்டாம் நாள் செய்யவேண்டியது. சண்டாளன் முதலானவரால் கொல்லப்பட்டவர்கள் விஷயத்தில் ஒரு வருடம் கழித்து இதைச் செய்யவேண்டியது. ஸபிண்ட

கரணத்திற்கு முன்போ, த்வாதஸியிலோ, ஶ்ரவண நக்ஷத்திரத்திலோ, பஞ்சமியிலோ, அமாவாஸ்யை, பௌர்ணமி ஆகிய பர்வகாலங்களிலோ விஷ்ணு பூஜையான இக்கர்மத்தைச் செய்யவேண்டியது. கிருஹஸ்தர்கள அல்லது யதிகளாயிருக்கும் சிறந்த பனிரண்டு வைஷ்ணவர்களை அழைத்து, ஸ்நானம் செய்த அவர்களுக்கு, (சுத்தமான) குழிகளில் நன்னீரால் (கேசவாதிகளான) பன்னிருநாமங்களைச் சொல்லித் திருவடிவிளக்கி, ஸம்பா₄வனைகளைச் செய்து அவர்களைப் பூஜித்து, அதற்குப்பின் ஸ்ரீபூ₄மிகளோடு கூடிய ஹரியை ஆராதிக்கவேண்டியது. ஸர்வேஶ்வரனை அவனை இருதயத்திலிருந்தோ, ஸூர்யமண்டலத்திலிருந்தோ, பக்தியோடு புருஷஸூக்தத்தின் முதல் மந்திரத்தைச் சொல்லி ஆஸனததில் ஆவாஹனம் செய்து, பாத்₃யம் முதலாக தீ₃பமீருக உள்ள எல்லா உபசாரங்களையும் (பதினோராவது கண்டத்தில சொல்லியபடி) புருஷஸூக்தரிக்குகளாலேயே செய்து... அதற்கும்மேல் கேசவன் முதலான பன்னிரு நாமங்களாலும், 'அதோ தே₃வா:' என்று தொடங்கும ஆறு விஷ்ணுஸூக்த ரிக்குகளாலும், புருஷஸூக்தத்தின் பதினறு ரிக்குகளாலும, த்₃வாத₃ஶாக்ஷரமந்திரத்தாலும், அஷ்டாக்ஷரமந்திரத்தாலும் ஸமித்துக்கள், நெய், சரு ஆகியவற்றை (அக்னியில் ஹோமம் செய்து)...அந்நத்தால் ப்ராஹ்மணர்களுக்கு போஜனம செய்வித்து விஷ்ணுபூஜையை முடித்து... புருஷஸூக்தத்தினல் தேவர் தலைவனை விஷ்ணுவைத் துதித்துக் கர்மத்தை முடித்து...ஆகையால், மிக முயற்சிசெய்து குருபூஜையைச் செய்யவேண்டியது. இந்த நாராயணப₃லியானது எல்லாப்பாபங்கட்கும் ப்ராயஶ்சித்தமாகவும், மோக்ஷஸாத₄னமாகவுமிருப்பது. ஆகையால் முதல் மூன்று வர்ணத்தவரும் இதை மிகமுயனறு செய்யவேண்டியது. சூத்ரர்களும, அநுலோமவிதி₄யினல் பிறநதவர்களும் இக்கர்மத்தை மந்திரமில்லாமல் தந்த்ரமாகவே அநுஷ்டிககவேண்டியது.] என்னும இருபத்தேழாவது கண்டத்திலுள்ள நாராயண ப₃லிவிதி₄யில் ஸ்ரீபூ₄மிஸஹிதனை ஹரியே இருதயகமலத்திலும், ஸூர்யமணடலததிலும வாழும் பரம்பொருள் என்றும், கேசவாதிநாமங்களும், த₃வாதஶாக்ஷரமந்திரமும், அஷ்டாக்ஷரமந்திரமும் எப்படி நேரே அவனைச் சொல்லுகினறவை எனபதில் விவாதமில்லையோ, அப்படியே புருஷஸூக்த விஷ்ணுஸூக்த மந்திரங்களும் அவனையே நேரே சொல்லுகின்றனவென்றும், அவனே தேவர் தலைவனெனறும், அவனுக்குப் பூஜையான நாராயண பலியென்னும் சிறந்த கர்மத்தில் வைஷ்ணவர்களே வரிப்பதற்குரியவர்களென்றும், அக்கர்மம் மோக்ஷஸாத₄னமாகவும் விளங்குகிறதென்றும் கோஷிக்கப்

படுவதிலிருந்து ப₄க₃வத்பரத்வம் வெள்ளிடை மலையாக விளங்குகிறது.

நாராயணப₃லிம் சேமம் ஹரே: ப்ரீதிகரம் ஶுப₄ம்।
ய: ப்ராஹ தஸ்மை விது₃ஷே ஶௌனகாய நமோ நம: ||
அஶுபே₄ஷு க்₃ரஹேஷ்வேவ க்₃ரஹகோபே ச பீடி₃தே।
து₃ர்நிமித்தே ச து₃ஸ்வப்னே து₃ர்பி₄க்ஷே வ்யாதி₄பீடி₃தே||
க்₃ருஹே வல்மீகஸம்பூ₄தௌ ரகதஸ்த்ரீது₃ர்ஶனேऽபி ச।
ஶரீரேऽபயக்₃நிதா₃க்₃தே₄ ச க்₃ருஹே த₃க்₃தே₄ऽசு₃நா ததா₂||
உன்மாத₃க்₃ரஹபீடா₃யாம் ரூஷிகேऽப்யர்த₂நாஶகே।
பா₄ர்யாவிரோத₄னே சாபி ஜனகோபஸமுத்₃ப₄வே||
ராஜகோபே மனோது₃:க்கே₂ தௌ₃ர்பா₄க்₃யே ஸர்வஸங்கடே।
ஜன்மர்க்ஷே க்₃ரஹணே து₃ஷ்டே ததா₂ நிக₃ளப₃ந்த₄னே||
பிஶாசாதே₃ஶ்ச பூ₄தானாம் ஸர்வாபஸ்மாரபீடி₃தே।
பரஜாபீ₄தௌ ப்ரஜாநாஶே த₄னத₄ான்யவிநாஶனே||
முஹூர்தகேப்யஶுபே₄ புத்ரே ஜாதே சைவாஶுபே₄திநே।
விபரீதே மஹோத்பாதே மஹாப₄யஸமுத்₃ப₄வே||
ஸர்வோபத்₃ரவநாஶார்த்த₂ம் ஸர்வகாமஸம்ருத்₃தி₄த₃ம்।
ஸ்நாத்வா ஸ்நானவிதா₄னேன தே₃வதே₃வம் ப்ரணம்ய ச||
ஸ்த₂லம் ஶுத்₃த₄ம் ஸமப்₄யுக்ஷ்ய கோ₃மயேனோபலிப்ய ச।
ஔபாஸநாக₃நிமாத₄ாய ஆக₄ாரம் ஜுஹுயாத தத:||
தத்ப்ராச்யாம் ஶாலித₄ான்யைஸ்து ராஶிம் க்ருத்வா தத: பரம்|
தந்துனா வேஷ்டிதம் கும்ப₄ம் ஜலை: ஶுத்₃தை₄ ப்ரபூர்ய ச||...
நவரத்னம் ஸுவர்ணம் ச கூ₃ர்சம் தூர்வம் வைஷ்ணவீம ஜபேத்।
நிக்ஷிப்ய துலஸீம தத்ர பரக்ஷிப்ய ச ததா₂ புன:||
ரஜதம சநத₃நம் சைவ ரக்தவஸ்த்ரேண வேஷ்டயேத|
தத்கும்ப₄ம் த₄ாந்யராஶௌ ச ந்யஸேதஷ்டாக்ஷரேண வை||
தத்பராச்யாம ஶாலித₄ானயைஶ்ச பீட₂ம் க்ருத்வா
ததூர்த்₄வத.।
குஶான தர்ப₄ாம்ஶ்ச ஸம்ஸ்திர்ய பஶ்சிமாபி₄முக₂ம் ஹரிம ||
ஸ்தா₂பயித்வா து தே₃வேஶம் த்₄யாயந் ஆவாஹ்ய ப₄க்தித ।
ஆஸனாத்₃யுபசாரைஶ்ச மந்த்ரமஷ்டாக்ஷரம் ஜபேத் ||

விதி4னைவார்ச்சயித்வா தம் ஹவி; ஸம்யக் நிவேதயே3த் ।
தத்ர பீடே2ऽத2வா ருக்மம் ந்யஸ்ய த்4யாயந் ஹரிம் பரம் ॥
ஆவாஹ்ய விதி4நா தே3வம் அர்ச்சயித்வா நிவேதயே3த் ।
ருக்மக3ர்பே4 ருக்மமயோ ருக்மவர்ணோ ஹரி: ஸ்வயம் ॥
ப3ஹுநா கிம் ப்ரலாபேந ருக்மம் விஷ்ணுரிதி ஸ்ம்ருதம் ।
தஸ்மாத் ருக்மேऽர்ச்சநம் குர்யாத் இதி பூர்வம் ஜநார்த்த3நம் ॥
விஷ்ணுஸூக்தேந தம் தே3வம் ப்ரணம்யார்ச்யாநுமாந்ய ச ।
ஆஸீந: ப்ராங்முகே2ऽக்3நிம் ச பரிஷிச்ய ப்ரணம்ய ச ॥
விஷ்ணோர்நுகம் தத3ஸ்யேதி ஹுத்வா ப4க்திஸமந்வித: ।
க3வ்யம் க்4ருதம் ஸமாதா3ய த்4யாயந் விஷ்ணும் ஸநாதநம் ॥
லக்ஷம் வாப்யயுதம் வாபி ஸஹஸ்ரம் வா ஶதாஷ்டகம் ।
ஜுஹுயாத ஸர்வஶாந்த்யர்த்த2ம் ஸர்வஸித்3த்4யர்த்த2
மேவ வா ॥
தத்தத்3தைவதகம் த்4யாத்வா ஜுஹுயாத் ஸத்3ருஶம் யதா2 ।
ஆதௌ3 மத்4யேऽவஸாநே ச தே3வம் பூர்வவத3ர்ச்சயேத் ॥
ஏவம் ஹுத்வாऽர்ச்சயித்வா ச ஸ்நாநகர்ம ஸமாரபே4த் ।
ஹுதம் து யாவத் தாவச்ச தத்கும்ப4ஸ்த2ஜலம் ததா2 ॥
ஸமாஹிதோ ஹரிம் த்4யாயந் தந்மந்த்ரேணாபி4மந்த்ரயேத் ।
ஹரிம் த்4யாத்வா ஸமாஸீந: ஆசார்ய: ப்ராங்முக2ஸ்தத: ॥
ப்ரோக்ஷயேத் மூலமந்த்ரேண ததோயைஶ்ச ஸஹஸ்ரகம் ।
ஶேஷதோயை: க்ருதஸ்நாநம் ஸர்வது3:க்க2நிவாரணம் ॥
ஏதத்ஸ்நாநஸமம் தீர்த்த2ம் ந பூ4தம ந ப4விஷ்யதி ।
யமுத3திஶ்ய க்ருதம் மந்த்ரீ ப்ரோக்ஷயேத் தம் ஜலேநவை ॥
தத்ர தே3ஷ:ப்ரஶாந்த: ஸ்யாத் ப்ரோக்ஷணேநாபி தேந வை ।
ஹுத்வா ஸ்நாநே க்ருதே சைவ ஶ்ரத்3த4ாப4க்திஸமந்வித: ॥
யத்3யதி3ச்ச2தி தத்ஸர்வம் லப4தே நாத்ர ஸம்ஶய: ।
கந்யார்த்தீ2 லப4தே கந்யாம் ராஜ்யார்த்தீ2 ராஜ்யமாப்நுயாத் ॥
வித்3யார்த்தீ2 லப4தே வித்3யாம் மோக்ஷார்த்தீ2
மோக்ஷமாப்நுயாத் ।
காமாநவாப்நுயாத் காமீ அர்த்த2ார்த்தீ2 அர்த்த2வாந் ப4வேத் ॥
த4ர்மார்த்தீ2 த4ர்மமாப்நோதி பாபீ பாபாத் ப்ரமுச்யதே ।
ஸித்3த்4யர்த்தீ2ஸி3த்4திமாப்நோதி து3:கீ2து3:க2ாத்ப்ரமுச்யதே ॥

மூலமந்த்ரேண ஹோமேந ஸர்வஸித்$_3$த்$_4$யர்த்த$_2$மேவ வா।
ஓம் நமோ நாராயணாயேதி மந்த்ரமேகம் பரம் ஸ்ம்ருதம்॥
ஓம் நமோ ப$_4$க$_3$வதே வாஸுதே$_3$வாயேத்யேதகம் பரம் ஸ்ம்ருதம்॥
மூலமந்த்ரமித$_3$ம் ப்ரோக்தம் ப்$_3$ரஹ்மணா பரமேஷ்டி$_2$நா॥
தயோரேகேந ஹோதவ்யம் ஸர்வஸம்பத்ஸம்ருத்$_3$த$_4$யே।
ஆசார்யத$_3$க்ஷிணாம த$_3$த்$_3$யாத் ச்ரத்$_3$த$_4$யா ச முதா$_3$ந்வித:॥

[ஹரிககு உகப்பை விளைப்பதாய், மங்களமானதான இந்த நாராயண பலியைச் சொன்ன பேரறிவாளரான ஸௌனகருககு நமஸ்காரம. நவக்ரஹங்கள் அஸுப$_1$ஸ்த$_2$ானத்திலிருக்கும்போதும், அந்த கிரஹங்களின கோபம் ஏற்பட்டிருக்குமபோதும், பீடைகள், கெட்ட நிமித்தங்கள், கெட்ட ஸ்வப்னங்கள், பஞ்சம, வியாதிபீடை, வீட்டில் புற்றுமுளைத்தல, ரக்தவர்ணமுள்ள ஸ்த்ரீயைக்காணல, ஸரீரம அல்லது வீடு நெருப்பால சுடப்படல, பைத்தியம் பிடித்தல, எலியினால் பொருடசேதம, மனைவியின விரோதம, ஜனங்களின விரோதம், ராஜ விரோதம, மனததுனபம, தௌர்ப்பாக்கியங்கள, ஸர்வஸங்கடங்கள, பிறநத நட்சத்திரத்தில் க்$_3$ரஹணமும், மற்ற தோஷங்களும உணடாவது, விலங்கிடப்படுவது, பிஸாசங்கள, துர்தேவதைகள ஆகியவற்றால பீடிக்கப்படுவது, குழநதைக்கு பயம, குழநதையின் நாசம, தனதானயங்கள அழிவது, கெட்ட தினத்தில, கெட்ட முஹூர்த்தத்தில் புததிரன உண்டாவது, விபரீதங்கள, பெரிய உற்பாதங்கள், மஹாப$_4$யங்கள் முதலானவை உணடாவது ஆகிய தீங்குகள நேருமபோதும, இந்த எல்லா உபத்ரவங்களும் அழிவதற்காகவும, எல்லா விருப்பங்களும் நிறைவதற்காகவும (மஹாஸாந்தியைப் பினவருமாறு செய்ய வேண்டியது.) முறைப்படி ஸநாநம் செய்து, தேவதேவனான விஷ்ணுவை வணங்கி, சுத்தஸ்தலத்தில நீர தெளித்துப பசுஞ சாணியால மெழுகி, ஔபாஸநாக்னியை எடுத்து ஆக$_4$ாரஹோமம செய்து, கிழக்குதிக்கில நெற்குவியலை வைத்து, நூலால சுற்றப் பட்ட கும்பத்தை சுத்தஜலத்தால் நிறைத்து,... நவரத்னத்தையும, பொன்னையும வைதது விஷ்ணுவைச் சொல்லுவதான காயத்ரியை ஜபிக்கவேண்டியது. துளஸியைக் கும்பத்திலிட்டு, வெள்ளி, சந்தனம ஆகியவற்றையுமிட்டு, சிவப்பு வஸ்திரத்தால் கும்பத்தைச் சுற்றிக் கட்டவேண்டியது. அஷ்டாக்ஷரத்தினால் அந்தக் கும்பத்தை நெற்

குவியலில் வைக்கவேண்டியது. அதற்குக் கிழக்கில் நெல்லாலே பீடம் செய்து, அதனமேல் குசங்களையும், தர்பபங்களையும் பரப்பி, மேற்கு நோக்கியபடி தேவா தலைவனை ஹரியை எழுந்தருளச்செய்து, பக்தியோடு ஆவாஹனம் செய்து, ஆஸனம் முதலான உபசாரங்களை யும் அளித்து அஷ்டாக்ஷரமந்திரத்தை ஜபிக்கவேண்டியது. அந்த தேவனை விதிப்படி அர்ச்சனம்செய்து, ஹவிஸ்ஸை நன்கு நிவேதனம் செய்யவேண்டியது. (ஹரியின் மூர்த்தியில்லாவிடில்) அந்தப் பீடத்தில் பொன்னை வைத்து மேலானவனை ஹரியை தியானித்து, விதிப்படி ஆவாஹனம செய்து அர்ச்சனம் செய்து, நிவேதனமளிக்க வேண்டியது. பொன்னிலிருப்பவனும், பொன்மயமானவனும், பொன்போன்ற ஒளி யுள்ளவனுமிருப்பவன் ஹரி: பல சொலலியென்! பொன்னனது விஷ்ணு ஸ்வரூபமே என்று ஸ்மருதிகளில் சொல்லப்படுகிறது ஆகையால், முற்கூறியபடி பொன்னில் ஜநார்த்தனனை ஆராதிக்கவேண்டியது. அந்த தேவனை விஷ்ணுஸூக்தத்தினுல் வணங்கி, அர்ச்சனம் செய்து, உப சாரங்களைச் செய்து, கிழக்கு முகமாக உட்கார்ந்து, அக்னியைப் பரிஷேசநம செய்து வணங்கி, **'விஷ்ணோர் நுகம்'** **"தத₃ஸ்ய"** என்று தொடங்கும இரு விஷ்ணுஸூக்த மந்திரங்களாலும பக்தியோடு கூடிய வனுய் ஹோமம் செய்து பழையோனை விஷ்ணுவை தியானம் செய்து, பசு நெய்யைக்கொண்டு லக்ஷம அலலது பதினுயிரம. அலலது ஆயிரம அல்லது நூற்றெட்டு தடவை முற்கூறிய எல்லா தோஷங் களுமம அழியும பொருட்டும, எல்லா விருபபங்களும் நிறைவேறும் பொருட்டும ஹோமம செய்யவேண்டும. அந்தந்த தேவதைகளைக் குறித்துச் செய்யும யாகஙகளில் முறைப்படி எபபடி அந்த தேவதை களை தியானித்து ஹோமம் செய்யவேண்டுமோ அப்படியே இக் கர்மத்தின் முதலிலும், நடுவிலும், முடிவிலும தேவனை நாராயணனை முற்கூறியபடி (தியானித்து ஹோமம் செய்து) ஆராதிக்கவேண்டும். இபபடி ஹோமாராதனம் செய்தபின ஸ்நாநகர்மத்தைத் தொடங்க வேண்டும. எவ்வளவு நேரம ஹோமம் செய்யப்பட்டதோ அவ்வளவு நேரம அத்தக் கும்பஜலத்தை ஹரியை தியானம் செய்துகொண்டு, அவருடைய மந்திரத்தினுல அபிமந்த்ரணம செய்யவேண்டியது. ஹரியை தியானித்துக் கிழக்குமுகமாய் வீற்றிருக்கும் ஆசார்யன் அந்த ஜலத்தைக் கொண்டு மூலமந்திரத்தினுல் ஆயிரம தடவை (சாந்திசெய்துகொள்பவனை) ப்ரோக்ஷணம் செய்யவேண்டியது. எஞ்சியிருக்கும் ஜலத்தால் (வீட்டிலிருக்கும) எல்லாப் பொருள்களை யும ப்ரோக்ஷிக்கவேண்டும். இந்த ஸ்நாநம எலலாத் துன்பங்களை யும் அழிப்பது. இந்த ஸ்நானத்திற்கு ஸமமானது இருந்ததுமில்லை;

வரப்போவதுமில்லை எவனுக்காக இந்த மஹாஶாந்தி செய்யப் படுகிறதோ, அவனை ஆசார்யன் அந்த ஜலத்தினால் ப்ரோக்ஷணம் செய்யவேண்டும். அதனால் ஸர்வதோஷமும் நீங்கும். ஶ்ரத்3த4ாப4க்திகளோடு இப்படி ஹோமம் செய்து ஸ்நாநம் செய்பவனுக்கு விரும்பியதெல்லாம் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. பெண், ராஜ்யம், கல்வி, த4ர்மார்த்த2 காமமோக்ஷங்கள் ஆகிய எதை விரும்பினாலும் கிடைக்கும், மஹாபாபியின் பாபங்களும் நீங்கும். மூலமந்திரஹோமத்தால் ஸித்திகளை விரும்பினவனுக்கு அவையும் கிடைக்கும். பெருந்துன்பமுற்றவன் துன்பற்றினின்று விடுபடுவான். "ஓம் நமோ நாராயணாய" என்னும் அஷ்டாக்ஷரமந்திரமும், "ஓம் நமோ ப4க3வதே வாஸுதே3வாய" என்னும் த்3வாத3ஶாக்ஷரமந்திரமும் எல்லா ஸித்திகளின் பொருட்டுமான மேலான மந்திரங்கள். பரமபதத்திலிருக்கும் ப்ரஹ்மத்தாலேயே இவ்விரு மூலமந்திரங்களும் உபதேசிக்கப்பட்டவை. எல்லாச் செலவங்களும் நிறையும்பொருட்டு இவ்விரண்டு மந்திரங்களில் ஒன்றினால் ஹோமம் செய்யவேண்டும். (காமம் முடிந்தவுடன்) ஶ்ரத்தையோடும், உகப்போடும் கூடியவனாய் ஆசார்யனுக்கு தக்ஷிணையை அளிக்கவேண்டும்.] என்று இருபத்தெட்டாவது கண்டத்தில் மஹாஶாந்தியை விதிக்கும்போதும், விஷ்ணுவை தேவதேவனாகவும், பொன்மயமானவனாகவும், அஷ்டாக்ஷரம், த்வாதஶாக்ஷரம், விஷ்ணுஸூக்தம், காயத்ரீ முதலானவற்றால் தியானிக்கத்தக்கவனாகவும், ஹோமம் செய்யத்தக்கவனாகவும் இப்படி மஹாஶாந்தியை அனுஷ்டிப்பவர்களுக்கு எல்லாப்பாபங்களையும், துன்பங்களையும் போக்குபவனாகவும், மோக்ஷமுள்ளிட்ட எல்லாப் பயன்களையும் அளிப்பவனாகவும் கோஷித்திருப்பதிலிருந்து விஷ்ணுவே ஶ்ருதிப்ரஸித்3த4னான பரம்பொருள் எனக்கையிலங்கு கனியாய் விளங்குகிறது.

இனி, க்ஷத்ரியனின் கர்மங்களை விளக்கும் இரண்டாவது பாதத்தை ஆராய்வோம். இருபத்தொரு கண்டமுள்ள இப்பாதத்தின் முதற்கண்டத்தில் இப்பாதத்தின் ஒவ்வொருகண்டத்திலும் விளக்கப்போகும் விஷயத்தைக் கிரமமாகச் சொல்லும்போது "நித்யம் விஷ்ணவர்ச்சநம் சைவ வக்ஷ்யேऽஹம் ஶௌநக: க்ரமாத்" என்று இருபத்தோராவது கண்டத்தில் க்ஷத்ரியன் தினந்தோறும் செய்ய வேண்டிய விஷ்ணுபூஜையைச் சொல்லப்போவதாக ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டது. ராஜாவுக்கு மஹாபிஷேகத்தை விதிக்கும் நாலாவது கண்டத்தில் "அத2 விஷ்ணவாலயே ரம்யே மண்ட3பம்

காரயேத் ஶுப₄ம்" என்று இவ்வபிஷேகத்திற்குரிய மங்களமான மண்டபத்தை அழகான **விஷ்ணுகோயிலில்** அமைக்கவேண்டும் என்று விதிக்கப்பட்டது. பதினைலாவது கண்டத்தில் ஒவ்வொரு திதியிலும் அரசன் தேவதையை அவரவர்க்குரிய மந்திரங்களைச் சொல்லிப் பூஜை செய்தால் ஒவ்வொரு பலன் கிடைக்கும் என்று கூறப்பட்டது. (1) பிரதமையில் பாவகனெனும் அக்னியைக்குறித்து மாது₄ச்ச₂ந்த₃ஸூக்தத்தைககொண்டு ஹோமம் செய்தால் அக்னி லோகம் பலனுகக் கிடைக்கும். (2) த்விதீயையில் ஹிரண்யக₃ர்ப்ப ஸூக்தத்தினுல பிரமனைப் பூஜிப்பதால் ப்ரஹ்மவர்ச்சஸத்தையும் எல்லா விருப்பங்களையும் அடைகிறுன். (3) திருதீயையில் குபேரனை (குபேர மந்திரத்தால்) பூஜிப்பதால் பணம கிடைக்கும். (4) சதுர்த்தியில் விநாயகனை அவனுககுரிய மந்திரத்தால் பூஜிப்ப தால் இடையூறுகள விலகி ஸுகம் உண்டாகும். (5) பஞ்சமியில் ஸ்ரீதேவியை ஸ்ரீஸூக்தத்தால் பூஜிப்பதால் எல்லா விருப்பங்களும், செல்வமும் எப்போதும நிறைவடையும். (6) ஷஷ்டியில் கந்தனை "க்ஷேத்ரஸ்ய பதிநா" என்னும் மந்திரத்தால் பூஜிப்பதால் வெற்றி கிடைக்கும். (7) ஸப்தமியில் "நமோ மித்ரஸ்ய" ஸூக்தத்தினுல் ஸூர்யனைப் பூஜிப்பதால் எல்லா விருப்பங்களையும் அடையலாம். (8) அஷ்டமியில் "இமா ருத்₃ராய" ஸூக்தத்தினுல் மஹேஶ்வரனைப் பூஜிப்பதால் எப்போதும் ஸுகமடையலாம். (9) நவமியில் துர்க்கையை "ஜாதவேத₃ஸே" என்னும் ஸூக்தத்தால் பூஜித்தால் எதிரிகள் அழிவர். (10) தசமியில் யமனை "யத்ர ராஜா" என்னும் மநதிரத்தால் பூஜித்தால் நீண்ட ஆயுளை அடையலாம். (11) ஏகாதசியில் "த்ராதாரம்" என்னும் மந்திரத்தால் இந்திரனைப் பூஜித்தால் இவ்வுலகில் க்ஷேமத்தையடைந்து மறுமையில் இந்திரலோகமடைந்து இன்புறுவான். (12)

த்₃வாத₃ஶ்யாம் து மஹாவிஷ்ணும் புருஷஸூக்தேந யோऽர்ச்சயேத் ।
ஸ நிர்வாணமவாப்நோதி பு₄க்த்வா காமாநமாநுஷாந் ॥

[த்வாதசியில் புருஷஸூக்தத்தினுல் மஹாவிஷ்ணுவைப் பூஜிப்பவன் அமாநுஷமான போகங்களை அநுபவித்து மோக்ஷமடைவான்] (13) த்ரயோதசியில் மன்மதனை (அவன் மந்திரத்தால்) பூஜிப்பதால் காந்தியை அடைவான். (14) சதுர்த்தசியில் அஶ்விநிகளை "அஶ்விநா" என்னும் ருக்கால் பூஜிப்பதால் ஆரோக்யத்தை அடைவான. (15) பஞ்சத₃ஶியான பௌர்ணமியில் ஸோமனை (சந்திரனை) "த்வம் ஸோமாஸி" என்னும் மந்திரத்தால் பூஜித்

தால் அரசன் அழகிய மனத்தை உடையவனுவான். இப்படிப் பதினைந்து திதிகளில் பதினைந்து தேவர்களுக்கு, அவரவர்களுக்குரிய மந்திரங்களால் பூஜையும், அதனால் கிடைக்கும் பலனும் கோஷிக்கப்பட்டது. இதில சிவன முதலான மற்ற தேவதைகளின பூஜையில் ஒவ்வொரு ஸூக்தத்தையோ மந்திரத்தையோ வினியோகித்ததுபோலே மஹாவிஷ்ணுபூஜையில புருஷஸூக்தத்தை விநியோகித்தபடியால், புருஷஸூக்தம் புருஷனை விஷ்ணுவைச் சொல்லுவதென்று விளங்குகிறது. புருஷஸூக்தம சிவனைச் சொல்லுகிறது என்னும் அபயதீக்ஷிதரின விதண்டாவாதம் மஹர்ஷிஸித்தாந்த விருத்தம என்றும விளங்குகிறது. மேலும, மற்ற தெய்வங்களின பூஜைக்கு இவ்வுலகப் பயனகளைப் பலனாகச் சொலலிவிட்டு, விஷ்ணுபூஜைக்கு அமாநுஷபோகத்தையும், மோக்ஷத்தையும பலனாகச் சொல்லியிருப்பதிலிருந்து விஷ்ணுவே மற்ற எல்லா தேவதைகளுக்கும மேலான பரமபொருள எனபதே மஹர்ஷிஸித்தாந்தம என விளங்குகிறது. "மோக்ஷமிச்சே₂த் ஜநார்த்த₃நாத" [மோக்ஷத்தை ஜநார்த்தனனிடமிருந்து விரும்பவேண்டும] என்னும பிரஸித்தமான மஹாஷிவசனமும் இங்கு காணத்தக்கது. வாயஸ ப₃லியை விளக்கும பத்தொன்பதாவது கண்டத்தில

*தத்வம் ஸத்யமிதி ஜ்ஞாத்வா ஸத்யரூபீ ஜநார்த்த₃ந:।*

[ஸத்யமே சிறந்ததென அறிந்து (செய்யவேண்டியது) ஜநார்த்தனன் ஸத்யமே வடிவெடுத்தவனன்றோ] என்று ஜநார்த்தனனை ஸத்யரூபியாகச் சொலலியிருப்பதிலிருந்தும் விஷ்ணுவே பரமபொருள் எனபது வலியுறுத்தப்படுகிறது. இனி, இந்த ஸ்மருதியின் கடைசியிலிருக்கும இருபத்தோராவது கண்டத்திலுள்ள விஷ்ணவர்ச்சனவிதியிலிருந்தும் விஷ்ணுபரத்வம் விசேஷமாக விளங்கிநிற்கிறபடியைக் காண்போம்.

*ஶௌநகோऽஹம் ப்ரவக்ஷ்யாமி நித்யம் விஷ்ணவர்ச்சநம் மஹத்।*

*(ப்ரவ: பாந்தமந்த₄ஸ இத்யருசாऽப்₄யர்ச்ய விஷ₄ாநத: ?)*
*ப்ரதிமாலக்ஷணம் சைவ ப்ரதிஷ்டா₂ம் சார்ச்சநம் தத₂ா।*
*ஶ்ருணு பு₃த்₃த்₄யா ஸமாயுக்த ஆஶ்வலாயந ஸுவ்ரத!॥*
*த்₃வாத₃ஶாங்கு₃லமாத்ரம் வாப்யஷ்டாங்கு₃லமத₂ாபி வா।*
*ஹைரண்ய முத்தமம் ப்ரோக்தம் ராஜதம் மத்₄யமம் தத₂ா॥*

தாம்ரகம் சாத4மம் ப்ரோக்தம் ஶைலஜம் சாத4மோத்தமம்।
த3ாரவம் மத்4யமம் சைவ சித்ராகாரம் படேऽத4மம் ॥
ஶங்க2சக்ரக3த3ாபத்3மவநமாலாவிபூ4ஷிதம் ।
பீதாம்ப3ரமுத3ாராங்க3ம் ப்ரஸந்நேந்து3நிப4ாநநம் ॥
ஶ்யாமலம் புண்ட3ரீகாக்ஷம் கிரீடேந விராஜிதம் ।
ஸ்ரீபூ4மிஸஹிதம் விஷ்ணும் பத்3மஸ்யோபரி ஸம்ஸ்தி2தம் ॥
ஸ்த2ாநமேவம் ப்ரத4ாநம் ஹி ப்ரதிமாயாம் ஹ்யத2ாஸநம் ।
ஸவ்யேந கடிமாலம்ப்3ய த3க்ஷிணைக்3ரம் ப்ரஸாரிதம் ॥
அப4யம் வா ப்ரயுஞ்ஜீத ஸவ்யஹஸ்தே க3த3ாத4ரம் ।
ஏவம்லக்ஷணஸம்யுக்தம் பி3ம்ப3ம் ஶில்பை: ஸுஶிக்ஷிதம் ॥
க்3ருஹீத்வா ஶில்பிஶாலாயா: க்3ருஹஸ்தே2ா ருத்விபி4: ஸஹ ।
நித4ாய ஸ்த2ாபநாத் பூர்வம் நவாஹே ஸப்த பஞ்ச வா ॥
த்ர்யஹே வா அஹ்நி வா குர்யாத்
அஶக்தோऽவாங்குரார்ப்பணம் ।
அதே2ாத்தராயணே புண்யே பூர்வபக்ஷே ஶுபே4 தி3நே ॥
ப்ரதிபச்ச த்3விதீயா ச பஞ்சமீ ஸப்தமீ தத2ா ॥
த3ஶம்யேகாத3ஶீ சைவ த்3வாத3ஶீ ச த்ரயோத3ஶீ ॥
பௌர்ணமாஸீ தத2ா ப்ரோக்தா ஆபஞ்சம்யஸிதஸ்ய து ।
பு3த4ஜீவஸிதேந்தூ3நாம் வாரா: பூஜ்யா: ஸுகர்மணி ॥
ரோஹிண்யதி3திபுஷ்யம் ச தர்யுத்தரா ஹஸ்தமேவ ச ।
வைஷ்ணவீ ரேவதீயோகே3 ஶோப4நா ராஶயஸ்தத2ா ॥
ஶுப4த்3ரேக்காணகாலே து ஶுப4ாம்ஶே து ஸுலக்3நகே ।
ஶுப4த்3ருஷ்டே ஸதி2தே ராஶௌ உப4யே வா
க்3ருஹார்ச்சநே ॥
யஜமாநாநுகூலே து ந்ருபக்3ராமாநுகூலத: ।
சதுரோ ருத்விஜோ வ்ருத்வா க்ருத்வா பூர்வேऽஹ்நி
பைத்ருகம் ॥
பஞ்சக3வ்யேந தோயேந ஸ்நாபயித்வாऽத2 ஶாயயேத் ।
ப்ராக்ஶீர்ஷம் ஸ்வர்ணஶஸ்த்ரேண த்3ருஷ்டிமுத்பாடயேத்
க்ரமாத் ॥
வஸ்த்ராப4ரணஸம்யுக்த: ஶில்பீ ஶில்பவிசக்ஷண: ।
த3த்வா ஸுவர்ணம் ஶில்பாய தே4நும் த3த்வா த்3விஜாதயே॥

புண்யாஹம் வாசயேத் விப்ரை: வைஷ்ணவைர்வேத$_3$பாரகை$_3$:।
ஸ்வஸ்யாத்மாநம் ச பி$_3$ம்ப$_3$ம் ச ப்ரணவேநாவலோகயேத்॥
ப்லுதம் ப்ரணவமுச்சார்ய கராப்$_4$யாம் பாத$_3$யோ:ஸ்ப்ருஶேத்।
நமஸ்தேऽர்ச்சே ஸுரேஶாதி$_3$ப்ரதிகே விஶ்வகர்மணு॥
ப்ரப$_4$ாவிதாஶேஷஜக$_3$த்த$_4$ாதரி துப்$_4$யம நமோ நம:।
த்வயி ஸம்பூஜயாமீஶம் நாராயணமநாமயம்॥
ரஹிதா ஸர்வதே$_3$ாஷைஸ் த்வம் ருக$_3$தி$_4$யுகதா ஸத$_3$ாப$_4$வ।
இத்யுகத்வாऽஷ்டாக்ஷரேணைவ க்ருத்வா கௌதுகப$_3$ந்த$_4$நம்॥
ஜலாதி$_4$வாஸநம் குர்யாத் பஞ்சப$_4$ாரகபூரிதே।
அத$_2$வா ப$_4$ாரமேகம் வா லோஹஜே ம்ருண்மயேபி வா॥
ஆவஹேத் ஜலஸம்பூர்ணே க$_3$ந்த$_4$புஷ்பஸமந்விதே।
ஆத$_3$ாய ப்ரதிமாமத்$_3$ப்$_4$ய: தீரம் நீத்வாऽர்ச்சயேத க்ரமாத்॥
அக்$_3$ரே ஸ்நாநார்த்த$_2$கலஶம் பஞ்சக$_3$வ்யேந மத்$_4$யமே।
பூர்வே க$_3$ந்தே$_4$ாத$_3$கம் ஸ்த$_2$ாப்ய யாம்யவாருணஸௌம்யகே॥
ஆக்$_3$நேயே நைர்ருதே வாயௌ ரௌத்$_3$ரே ச ஜலபூரிதாந்।
க்ருத்வா ந்யாஸம் ச ஸம்ஹாரம் க்$_4$ருதாரோபணமேவ ச॥
ஸுஶோப$_4$நம் ப$_4$வதவிதி ஸுகே$_3$ாத்ரம் ச ப$_4$வத்விதி।
ஸுமங்க$_3$லம் ப$_4$வத்விதி ஹஸதாப்$_4$யாம் பரிக்$_3$ருஹ்ய ச॥
பாதே$_3$ ப$_3$ாஹு ஶிர:ஸ்த$_2$ாநே தூ$_3$ர்வா ஆரோப்ய மந்த்ரத:।
அஷ்டாக்ஷரேண ஸம்ஸநாப்ய வஸ்த்ராத்$_3$யை: ஷட்$_3$பி$_4$:
அர்ச்ய ச॥

குஶகூர்ச்சேந ஸம்வேஷ்ட்ய வஸ்த்ரேணுவேஷ்ட்ய ஸர்வத:।
ஜலமத்$_4$யக$_3$தம் பீடே$_2$ ஶாயயேத் த$_3$க்ஷிணஶீர்ஷகம்॥
நகாராதி$_3$யகாராந்தம் ந்யஸிதவாக்ஷரபஞ்சகம்।
வ்யதீதாயாம் து ஶர்வர்யாம் ஆசார்யோ ருத்விபி$_4$ஸ்ஸஹ॥
அபராஹ்ணே து ஸம்ப்ராப்தே ஜலாது$_3$த்த$_2$ாப்ய மந்த்ரத:।
ஸ்நாப்ய திந்த்ரிணிவாரிபி$_4$: அலங்குருதய யத$_2$ாருசி॥
உத்த$_2$ாப்ய ஶாயயேத் தே$_3$வம் ஸ்த$_2$ண்டி$_3$லே
ஐந்த்$_3$ரஶீர்ஷகம்।

ஹேமபாத்ரே ஶராவே வா மது$_4$ வாதேதி மந்த்ரத:॥
ஹிரண்மயேந ஸூச்யா வா குஶாக்$_3$ரை: மது$_4$ஸர்ப்பிஷா।
சித்ரம் தே$_3$வேதி மந்த்ரேண குர்யாத் உந்மீலநம் க$_3$ருஹீ॥

உந்மீல்யமாஸே நேத்ரே து தே$_4$நுர்வை த$_3$க்ஷிணே ப$_4$வேத் ।
உத்தா$_2$ப்ய ஶயநாத் தே$_3$வம் ஸம்ஸ்தா$_2$ப்ய ஸ்நாப்ய பூர்வவத் ॥
ஸூக$_3$ந்த$_3$தோயஸம்பூர்ணை: கலஶை: நவபி$_4$: க்$_3$ருஹீ ।
க்ரமாத் புருஷஸூக்தேந ப்$_3$ரஹ்மாதீ$_3$ஶாநம்ருத்விபி$_4$: ॥
குஶாபி$_4$ராஸ்த்ருதே ஸம்யக் ஸ்த$_2$ண்டி$_3$லே ஐந்த்$_3$ரஶீர்ஷகம் ।
ஶாயயித்வா தத: ப்ராச்யாம் க்ருத்வா ஸ்த$_2$ண்டி$_3$லமுத்தமம் ॥
உலலேக$_2$நாதி$_3$ தஸ்மிம்ஸ்து க்ருத்வாஜ்யோத்பவநாந்தகம் ।
ஆஜ்யஸிக்தேத்$_4$மமாதா$_3$ய தத்$_3$விஷ்ணோரிதி மந்த்ரத: ॥
ஹுத்வாऽகா$_4$ராஜ்யபா$_4$கௌ$_3$ ச ஸ்ருவேணாஜ்யேந மந்த்ரத: ।
அதோ தே$_3$வா அவந்த்$_3$வ்ருக்$_3$பி$_4$: ஹுத்வா ஷட்$_3$பி$_4$ர் யதா$_2$க்ரமம் ॥
ப்ரதிகர்ம ஹுநேத$_3$ஷ்டௌ ஸ்ருவேணாஜ்யேந தே$_3$ஶிக: ।
ச$_3$ர்ப$_4$பும்ஸவஸீமந்தஜாதநாமாந்நசௌலகம் ॥
மௌஞ்ஜீப$_3$ந்த$_4$மஹாநாம்நீமஹாவ்ரதோபநிஷத$_3$ம் ததா$_2$ ।
கோ$_3$தா$_3$நம் ச ஸமாவர்த்தம் விவாஹம் ச யதா$_2$க்ரமம் ॥
ஹுத்வா புருஷஸூக்தேந ப்ரத்ய்ருசம் ஷோட$_3$ஶாஹுதீ: ।
ஸமாப்ய ஹோமஶேஷம் ச பூஜார்த்த$_2$ம் ஶயநாத் க்$_3$ருஹீ ॥
உத்திஷ்ட$_2$ ப்ரஹ்மணேத்ய்ருசா விஜ்ஞாப்ய தே$_3$வமாஹரேத் ।
வஷட் தே விஷ்ணவித்ய்ருசா ப்ரதிஷ்டா$_2$ப்ய ஸமாஹித: ॥
விஷ்ணுஸூக்தேந தே$_3$வேஶம் ஸ்துதிம் க்ருத்வாऽர்ச்சயேத் க்ரமாத் ।
ஆத்$_3$யயாऽऽவாஹயேத்$_3$தே$_3$வம் ருசா து புருஷோத்தமம் ॥
த்$_3$விதீயயாஸநம் த$_3$த்$_3$யாத் பாத்$_3$யம் சைவ த்ருதீயயா ।
அர்க்$_4$யம் சதுர்த்$_2$யா தா$_3$தவ்யம் பஞ்சம்யாசமநீயகம் ॥
ஷஷ்ட்$_2$யா ஸ்நாநம் ப்ரகுர்வீத ஸப்தம்யா வஸ்த்ரமேவ ச ।
யஜ்ஞோபவீதமஷ்டம்யா நவம்யா க$_3$ந்த$_4$மேவ ச ॥
புஷ்பம் த$_3$ஶம்யா தா$_3$தவ்யம் ஏகாத$_3$ஶ்யா து தூ$_4$பகம் ।
த்$_3$வாத$_3$ஶ்யா தீ$_3$பகம் த$_3$த்$_3$யாத் த்ரயோத$_3$ஶ்யா நிவேத்$_3$யகம் ॥
சதுர்த$_3$ஶ்யா நமஸ்காரம் பஞ்சத$_3$ஶ்யா ப்ரத$_3$க்ஷிணம் ॥
ஷோட$_3$ஶ்யோத்$_3$வாஸநம் குர்யாத் வாஸுதே$_3$வம் ஜக$_3$த்$_3$கு$_3$ரும் ।
குர்யாத$_3$ஷ்டாக்ஷரேணைவ ஸ்த்ரீஶூத்$_3$ரௌ ப்ரணவம் விநா ॥

ஆவாஹ்ய ஹ்ருதயாத் விஷ்ணும் தேவீப்யாம் விஷ்ணுமச்யுதம் ।
அர்ச்சயித்வா யதாபூர்வம் ஸம்யகுத்வாஸயேத் ஹ்ருதி ॥
பரிவாரம் ச ஹோமம் ச க்ருஹார்ச்சாயாம் ந சாசரேத் ।
ஸ்ரீஸூக்தேந ஸ்ரியம் சார்ச்ய யஜ்ஞஸூத்ரம் விநா க்ரமாத் ॥
ஸ்யோநாப்ருதிவீத்ய்ருசா பூமிமர்ச்ய ஸ்ரியம் யதா ।
சித்ராபாஸப்ரதிஷ்டாயாம் தர்ப்பணேந ஸமாசரேத் ॥
ஜலாதிவாஸநம் ஸ்நாநம் ப்ரோக்ஷணம் ச யதோசிதம் ।
ஆவாஹாத்யுபசாராணி புர:பீடே ஸமாசரேத் ॥
வஸ்த்ரபூஷணகோபூமிமாசார்யாய ப்ரதாபயேத் ।
யாகோபயோகத்ரவ்யம் ச தஸ்மை ஸர்வம் நிவேதயேத் ॥
ருத்விக்ப்யோ தக்ஷிணாம் தத்வா யதாசக்தி ஸமாஹித: ।
போஜயேத் பாயஸாந்நம் சவைஷ்ணவாந் த்வாதஸ த்விஜாந் ॥
வைஷ்ணவைஸ் ஸைரநுஜ்ஞாதோநித்யார்ச்சநமதாஹரேத் ।
ஏதத் விஷ்ணவர்ச்சநம் ஸம்யக் ப்ரதிஷ்டாவிதிஸம்யுதம் ॥
யேந ப்ரோக்தம் ஸதா தஸ்மை ஸௌநகாய நமோ நம: ॥

['ப்ரவ: பாந்த மந்தஸ' என்னும் ரிக்கினால் முறைப்படி பூஜை செய்து, விஷ்ணுவை தினந்தோறும அர்ச்சனம் செய்வதாகிற பெரிய கர்மத்தை ஸௌநகராகிய நான கூறுகிறேன். பரதிமா லக்ஷணத்தையும், ப்ரதிஷடையையும், அாச்சனத்தையும சொல்லப் போகிறேன. நல்லறிவோடுகூடிய நல்விரதமுள்ள ஆஶ்வலாயனனே! கேட்பாயாக. பிரதிமையானது பனிரண்டு அங்குலம் அலலது எட்டு அஙகுலம் அளவிருக்கவேண்டும் பொனனாலானது சிறநதது; வெளளியாலானது நடுத்தரம்; தாமிரத்தாலானது கீழத்தரம; கல்லினாலானது கீழத்தரஙகளில் சிறந்தது; மரததினாலானது நடுத்தரம்; வஸ்திரத்தில சித்திரமாக எழுதியது கீழ்த்தரம. சஙகம், சக்கரம், கதை, பத்மம், வநமாலை ஆகியவற்றால் அலங்கரிக்கப் பட்டதாய், பீதாம்பரமுடையதாய், (பரமபுருஷனுக்குரிய) அள வுடைய அஙகங்களையுடையதாய், தெளிந்த சநதிரன் போனற திருமுகத்தையுடையதாய், கருநிறமுளளதாய், தாமரைக்கண்க ளுளளதாய், கிரீடததினால் விளங்காநிற்பதாய, ஸ்ரீபூமிகளோடு கூடியதாய் பிரதிமை விளங்குவது முககியமானது. இனி, அதன நிலை வாணிக்கபபடுகிறது. இடதுகையினால் இடுப்பைத் தொட்டுக்

கொண்டு, வலதுகைவிரல்களை நீட்டிக்கொண்டிருக்கலாம். வலதுகை அபயமுத்ரையோடுமிருக்கலாம. இடதுகை கதையை தரித்துமிருக்க லாம். இத்தகைய லக்ஷணமுடைய நனகு அமைக்கப்பட்ட பிம்பத்தை ரித்துவிக்குகளோடு கூடிய கிருஹஸ்தன சில்பசாலையிலிருந்து எடுத்து, பிரதிஷ்டை செய்வதற்கு முன் (யாகசாலையில்) வைத்து ஒன்பது அல்லது ஏழு அல்லது ஐந்து அல்லது மூன்று அல்லது ஒருநாளாவது அங்குரார்ப்பணம் முதலானவற்றைச் செய்யவேண் டும். புண்ணியமான உத்தராயணத்தில், சுக்லபக்ஷத்தில் சுபதினத் தில் பிரதிஷ்டை செய்யவேண்டும. சுக்லபக்ஷ ப்ரதமை, த்விதீயை, பஞ்சமி, ஸப்தமி, தசமி, ஏகாதசி. த்வாதசி, த்ரயோதசி, பௌர்ணமி ஆகியவையும், கருஷ்ணபக்ஷத்தில் பஞ்சமிவரையிலும நல்ல திதிகள். புதன், வியாழன், (சுக்லபக்ஷம்) திங்கள் ஆகிய கிழமைகள் இந்த நற்கருமத்திற்குச் சிறந்தவை. ரோஹிணி, புனர்பூசம், பூசம், உத்தரபல்கு₃னி (உத்தரம), உத்தராஷாட₄ம் (உததராடம்), உத்தர ப்ரோஷ்ட₂பதம் (உத்தரட்டாதி). ஹஸ்தம். விஷ்ணுநக்ஷத்திரமான திருவோணம், ரேவதி ஆகிய நக்ஷத்திரங்களோடு கூடிய ராசி கள் சிறந்தவை. சுபமான த்₃ரேக்காண காலத்தில், சுபாம்ஶத்தில், நல்ல லக்னத்தில், சுபக்ருஹங்களால் பார்க்கப்பட்ட அல்லது அத்தகைய கிருஹங்கள் இருக்கப்பட்ட அல்லது இரண்டுமுள்ள ராசியில் பிரதிஷ்டை செய்வது, யஜமானனுக்கு அநுகூலமானதாய், அரசனுக்கும், கிராமத்துக்கும் அனுகூலமான தினத்தில் ப்ரதிஷ்டை செய்யவேண்டும. முந்தியதினத்தில் பித்ருதர்ப்பணம் செய்து, நாலு ருத்விக்குகளை வரித்து, பஞ்சகவ்யத்தினாலும் நீரினாலும் திருமஞ்ச னம் செய்து (பிரதிமையை) கிழக்கே தலையுடன் சயனிக்கச்செய்ய வேண்டியது. தங்கத்தாலான ஆயுதத்தால் முறைப்படி திருககண் களைத் திறக்கவேண்டும். சில்பசாஸ்திரமறிந்தவனும், நல்ல வஸ் திரம் ஆபரணமணிந்தவனுன சில்பி சில்பத்திற்கு ஸ்வர்ணத்தை அளித்து, அந்தணர்க்குப்பசுவையளித்து, வேதங்கரைகண்ட அந்தண ரான வைஷ்ணவர்களைக்கொண்டு புண்யாஹவாசனம் செய்விக்க வேண்டியது. தன்னையும், பிம்பத்தையும் ப்ரணவத்தைச் சொல்லிக் கொண்டு காணவேண்டியது. ப்ரணவத்தை ப்லுதஸ்வரததோடு உச்சரித்துத் தம கரஙகளாலே இருதிருவடிகளையும் தொடவேண்டி யது. "தேவதேவனுடைய பிரதிநிதியாயிருக்கும் * அர்ச்சையே! உனக்கு நமஸ்காரம். விச்வகர்மாவினால் *கௌரவிக்கப்பட்டவளாய், எல்லாவுலகுக்கும் தாயான உனக்குப் பலகால் வணக்கம்.

* அர்ச்சாஶப்தம் ஸ்த்ரீலிங்கமாகையாலே எல்லாப்பதங்களும் ஸ்த்ரீலிங்கமாயுள்ளன என்று உணரத்தக்கது.

அழிவற்றவனை நாராயணனை உனனிடத்தில் நான் திருவாரா தனம் செய்கிறேன. நீ எப்போதும் தோஷம் எதுவுமற்றவளாய் சிறபபுற்றவளாய் ஆவாயாக.'' எனறு கூறி, அஷடாக்ஷரததால ரக்ஷாபநதனத்தைச் செய்து, ஐந்து பாரம் தீரத்தம நிறைந்த பாத்திரத்தில் ஜலாதி$_4$வாஸனம் (நீரில் எழுந்தருளப்பண்ணுவது) செய்யவேண்டும. அல்லது ஒரு பாரம தீரததத்திலும் செய்யலாம. உலோஹபபாததிரத்திலாவது, மண்பாண்டததிலாவது ஜலத்தை நிறைத்து, கந்தம புஷபம ஆகியவற்றைச சேர்தது ஜலாதி$_4$வாஸனம செய்யவேணடும. அதற்குப் பின பிரதிமையை நீரிலிருந்து எடுத்துத் தரையில வைதது முறைப்படி அர்ச்சிக்கவேண்டும. முதலில ஸ்நானததின் பொருட்டான கலஶததையும், நடுவில பஞசக$_3$வ்ய கலசததையும், கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய திக்குகளிலும, தெனகிழக்கு, தெனமேற்கு, வடமேற்கு, வடகிழக்கு ஆகிய விதிக்கு களிலும கந்தோதககலசத்தையும் வைத்து, அவற்றில் நீரை நிறைத்து ந்யாஸம, ஸம்ஹாரம், க்$_4$ருதாரோபணம் ஆகிய செயலகளைசசெய்து, 'ஸுமோபா$_4$நம ப$_4$வது' என்றும, 'ஸுகே$_3$ாத்ரம ப$_4$வது' என்றும், 'ஸுமங்க$_3$ளம ப$_4$வது' என்றும சொலலி, கைகளாலே (பிரதிமையின) திருவடிகளையும, திருக்கைகளையும, திருமுடியையும பிடித்து, மந்திரத திலை தருபபையை வைத்து, அஷடாக்ஷரததிலை ஸ்நாநம செய் விதது, வஸதிரம முதலான ஆறு உபசாரங்களாலும ஆரச்சித்து, குஶகூர்ச்சத்திலை சூழச்செய்து, வஸ்திரத்தால எலலாபபுறமும் சுற்றி, தெற்கே தலையுள்ளதாக, நீரின நடுவில் பீடத்தில சயனிககச்செய்ய வேண்டியது. 'ந்' முதல் 'ய' (ப$_4$?) முடிய ஐந்து அக்ஷரங்களை ந்யாஸம செய்து, இரவு கழிந்தபின பிற்பகலில் ஆசார்யன ருத விககுகளோடுகூட மநதிரத்தைச்சொல்லி நீரிலிநந்து தேவனை எழுந் தருளச் செய்து, புளிநீரால் ஸ்நானம் செய்வித்து, ருசிககு (விதிககு) அனுகுணமாக அலஙகாரம் செய்து எழுந்தருளுவித்து கிழககே தலையாமபடி தரையில் சயனிக்கச்செய்யவேண்டியது. கருஹஸதனை ஆசாரயன பொறபாததிரத்திலோ, வேறு பாத்திரத்திலோ உளள தேன் கலநத நெய்யை 'மது$_4$வாதா' எனனும் மநதிரத்தையும, 'சித்ரம தே$_3$வாநாம்' எனனும மநதிரத்தையும ஓதி, பொன்மயமான ஊசியாலோ தாப்பை நுனியாலோ எடுத்து நேத்ரோந்மீலனததை (கண் திறப்பதை) செய்யவேண்டும. நேத்ரோன்மீலனத்திறகு ஒரு பசுவை தக்ஷிணையாகக கொடுக்கவேண்டும். க்$_3$ருஹஸத$_2$னை அர்ச்சகன் ஸ்த$_2$லாதி$_4$வாஸத்தினின்றும பிரமன முதலானர்ககும தலைவனை

தேவனை எழுந்தருளச்செய்து, முன்போல் நறுமண நீர் நிறைந்த ஒன்பது கலசங்களாலே முறைப்படி புருஷஸூக்தத்தாலே திருமஞ்சனம் செய்வித்து, குஶங்களால் நன்கு பரப்பப்பெற்ற தறையில் ருத்விக்குகளைகொண்டு கிழக்கே தலையாம்படி சயனம் செய்வித்து, அதற்குப்பின் கிழக்கில் சிறந்த தரையை ஸித்தப்படுத்தி, உல்லேக₂னம் தொடங்கி ஆஜ்ய உத்பவனம் ஈறாக அவ்விடத்தில் செய்து, நெய் நனைந்த ஸமிதை எடுத்து, 'தத்₃விஷ்ணோ:' என்னும் மந்திரத்தினால் ஹோமம் செய்து, பிறகு ஸ்ருவத்தினால நெய்யைக் கொண்டு மந்திரத்தைச்சொல்லி ஹோமம செய்து, 'அதோ தே₃வா அவந்து' என்று தொடங்கும ஆறு விஷ்ணுஸூக்தமந்திரங்களால முறைப்படி ஹோமம் செய்து ஆசார்யன கர்மந்தோறும் ஸ்ருவத்தினால் நெய்யையெடுத்து எட்டு தடவை ஹோமம் செய்யவேண்டும். க₃ர்ப்ப₄பும்ஸவனம, ஸீமந்தம, ஜாதகர்மம, நாமகரணம அந்நப்ராஶனம், சௌளம், மௌஞ்ஜீப₃ந்த₄ம, பெரும் பெயருடைய மஹாவ்ரதம, கே₃ாத₃ானம்,ஸமாவர்த்தம், விவாஹம ஆகியவற்றை முறைப்படி செய்விக்கவேண்டும்; புருஷஸூக்தத்தில் ஒவ்வொரு ருக்கினாலும் பதினாறு ஆஹூதிகள் ஹோமம் செய்து ஹோமஶேஷத்தை முடித்து, சயனத்தினின்றும் திருவாராதனத்தின் பொருட்டு, 'உத்திஷ்ட₂ ப்₃ரஹ்மணு' என்னும் ருக்கினால் விண்ணப்பம் செய்து தேவனை எழுந்தருளச் செய்யவேண்டும. மனஶ்ஶாந்தியுடையவனாய், 'வஷட்தேவிஷ்ணோ' என்னும் ருக்கினால் ப்ரதிஷ்டை செய்து, விஷ்ணு ஸூக்தத்தினால் தேவர்தலைவனைத் துதித்து முறைப்படி அர்ச்சனம செய்யவேண்டும். (புருஷஸூக்தத்தின்) முதல் மந்திரத்தால் தேவனை புருஷோத்தமனை ஆவாஹனம செய்யவேண்டும; இரண்டாவதால் ஆஸனமும், மூன்றாவதால் பாத்₃யமும், நாலாவதால் அர்க்₄யமும், ஐந்தாவதால் ஆசமனீயமும் கொடுக்கவேண்டும; ஆறாவதால் ஸ்நாநம் செய்யவேண்டும். ஏழாவதால் வஸ்திரம் சார்த்தவேண்டும், எட்டாவதால் பூணூலும், ஒனபதாவதால் கந்தமும், பத்தாவதால் புஷ்பமும் சார்த்தவேண்டும்; பதினோராவதால தூ₄பமும், பனிரண்டாவதால் தீபமும், பதினமூன்றாவதால் நைவேத்₃யமும் ஸமர்ப்பிக்கவேண்டும்; பதினாலாவதால் நமஸ்காரமும், பதினைந்தாவதால் ப்ரதக்ஷிணமும செய்யவேண்டும்; பதினாறாவதால் லோகநாதனை வாஸுதேவனை (ஹ்ருதயத்தில்) எழுந்தருளப்பண்ணவேண்டியது. ஸ்த்ரீசூத்ரர்கள் ப்ரணவமற்ற அஷ்டாக்ஷரத்தினாலேயே இவற்றைச் செய்யவேண்டியது. அச்யுதனை விஷ்ணுவை ஸ்ரீபூமிதேவிகளோடுகூட ஆவாஹனம் செய்து முன்

ஹரிப்ரஸாத3த்தை ப4க்தியுடன் ஶ்ராத்3த4த்தின்போது அளிப்பவனுடைய பித்ருக்கள் விஷ்ணுவின் பரமபத3த்தையே அடைகிறார்கள், பித்ருதே3வர்களுக்கு எம்பெருமானுடைய தீர்த்த2துளஸிகளைக் கொடுப்பவனுடைய பித்ருக்கள் கல்பகோடிகாலம் த்ருப்தியடைகிறார்கள் என்பதில் ஐயமில்லை. எந்த மூட4ன் ஶ்ராத்3த4காலத்தில் பித்ருக்களுக்கும், தே3வர்களுக்கும் ஹரிப்ரஸாத3த்தை அளிக்கவில்லையோ அவன் நரகத்தையே அடைவான். ஹரிக்கு அளிக்கப்பட்ட அந்நத்தையோ, ஸ்ரீபாத3தீர்த்த2த்தையோ, துளஸியையோ பித்ருக்களுக்கு அளிப்பதினால் பதினாயிரம் ஶ்ராத்3த4ம் செய்த ப2லனைப்பெறுகிறான். தே3வனை ஜநார்த்த3னனை ஸர்வயஜ்ஞ ஸ்வரூபியாக நினைத்து, வைஷ்ணவர்களான அந்தணர்களையே நிமந்த்ரணம் செய்து, ஶ்ராத்3த4த்தைச் சோம்பலில்லாமல் செய்யவேண்டும். மாதாபிதாக்களின் ஶ்ராத்3த4திதி2யில் வருஷந்தோறும் பார்வண ஶ்ராத்3த4ம் செய்யவேண்டும். இல்லாவிடில் வைஷ்ணவன் ப்3ரஹ்மஹத்தி தோ3ஷத்தை அடைவான் என்பதில் ஐயமில்லை. அமாவாஸ்யையிலும், க்ருஷ்ண பக்ஷத்திலும், பித்ருக்களுக்குரிய மங்க3ளகார்யங்கள் வரும்போதும், விஷ்ணுவின் ஆஜ்ஞையை நினைத்துக்கொண்டு ஶ்ராத்3த4த்தை முறைப்படி செய்யவேண்டும் மனிசரிற்கடையனை எவன் பித்ருயஜ்ஞத்தை முறைப்படி செய்யவில்லையோ, அவன் விஷ்ணுவின் ஆணையை மீறினபடியால் பதிதனாகிறான் என்பதில் ஐயமில்லை. ஶங்க2ம், சக்ரம், ஊர்த்4வபுண்ட்3ரம் முதலிய ஹரிக்கு இனிய அடையாளங்களோடு கூடிய அந்தணர்களையே எல்லாக் கர்மங்களிலும் பூஜிக்கவேண்டும். ஶ்ராத்3த4ம் (முதலிய நைமித்திக கர்மங்களைச்) செய்யாதவன். திருவாராத4னம் செய்யாதவன், (நித்ய) கர்மத்தை விட்டவன், வேத3மோதாதவன் ஆகியவர்களுடைய தொடர்பை வெகுதூரத்தில் விலக்கவேண்டும். அந்தணர்தலைவன் பித்ருக்களுக்கு ஶ்ராத்3த4த்தை ஏகாத3ஶியில் செய்யக்கூடாது. அதை த்3வாத3ஶியில் செய்யவேண்டும். உபவாஸதி3னத்தில் ஒருபோதும் செய்யலாகாது. வைஷ்ணவோத்தமனாயிருப்பவன் விஷ்ணுவின் அவதாரதி3னம் ஆசார்யர்களுடைய திருவத்4யயனதினம் ஆகியவற்றில் வைதி3கமான வைஷ்ணவேஷ்டியைச் செய்யவேண்டும். அடையத்தகாத ஸ்த்ரீயை அடைவது, பிறரை ஹிம்ஸிப்பது, புசிக்கத்தகாதவற்றை புசிப்பது, பொய்யுரைப்பது. திருடுவது ஆகியவற்றை மனத்தினாலும் செய்யலாகாது.

(சுருங்கக் கூறினால்,) (1) விஷ்ணுவின் தப்த ஶங்க2சக்ரங்களால் அடையாளமிடப்பெறுவது, (2) ஏகாத3ஶியில் உபவாஸமிருப்பது,

(3) ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை உடம்பில் த₄ரிப்பது, (4) விஷ்ணுமந்திரங்களை உபதே₃ஶம்பெறுவது, (5) தினந்தோறும் நெல்லிக்காய் நீரில் குளிப்பது, (6) தே₃வதாந்தரங்களை விலக்குவது. (7) எம்பெருமானை தியானிப்பது, (8) விஷ்ணுமந்திரங்களை ஜபிப்பது, (9) அவற்றால் ஹோமம் செய்வது, (10) ஹரியைத் துளஸியால் திருவாராத₄னம் செய்வது, (11) அவனது ப்ரஸாத₃தீர்த்த₂ங்களைப் புசிப்பது, (12) அவனடியார்களை ஆராதி₄ப்பது, (13) உபாயாந்தரங்களை வாஸனையோடு கைவிடுவது, (14) (மந்த்ரரத்னமான) த்₃வயத்தின் அர்த்த₂த்தை அநுஸந்தி₄ப்பது, (15) அவனது சரிதங்களைக் கேட்பது, (16) அவனது திருநாமங்களை ஸங்கீர்த்தனம் செய்வது, (17) அவனுக்குக் கைங்கர்யம் செய்வது, (18) நற்கருமங்களைச் செய்வது, (19) தீயகருமங்களை விலக்குவது, (20) விஷயாந்தரங்களைக் கைவிடுவது, (21) இயன்றவரையில் தா₃னம் செய்வது, (22) இந்திரியங்களை அடக்குவது, (23) உடலை வருத்துவதாகிற தவம்புரிவது, (24) (தே₃ஹமனங்களில்) ஶுத்₃த₄ருயிருப்பது, (25) நேர்மை, (26) பொறுமை, (27) இரக்கம், (28) நல்லோர்களோடு கூடியிருப்பது—ஆகிய இவை பரமைகாந்தித் தன்மைக்குக் காரணமாகின்றன. இத்தகைய பரமைகாந்தியே வைஷ்ணவனுவான். மாறுபட்டிருப்பவன் வைஷ்ணவனுகமாட்டான். பல ஶாஸ்த்ரங்களைக் கேட்டவனுயினும் வைஷ்ணவனல்லாதவன் முக்தியடையமாட்டான். குலந்தாங்கு சாதிகள் நாலிலும கீழ் இழிந்த சண்ட₃ாள ஜாதியில் பிறந்தவனுயினும், வைஷ்ணவன் விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைவான்.

## முடிவுரை

அரசனே! பரமைகாந்திநிலையை அளிப்பதாய், வேத₃த்தை விளக்குவதாய், மிகச்சிறந்ததான இந்த வைஷ்ணவ த₄ர்மஶாஸ்த்ரம் உனக்குச் சொல்லப்பட்டது. பரமாத்மாவால் விஷ்வக்ஸேநருக்கும் பிரமனுக்கும் உபதே₃ஶிக்கப்பட்டது இது. விஷ்வக்ஸேநரால் இது முற்காலத்தில் விக₂நஸமஹர்ஷிக்கு உபதே₃ஶிக்கப்பட்டது. விக₂நஸரால் ப்₄ருகு₃வுக்கும், ப்₄ருகு₃மஹர்ஷியால் வைவஸ்வதமனுவுக்கும், மனுவினுல் எனக்கும் உபதே₃ஶிக்கப்பட்டது. மனுவானவர் (பரமரஹஸ்யமான இது உபதே₃ஶக₃ம்யமாகையால்) பொதுப்படையான த₄ர்மஶாஸ்த்ரத்தைத் தான் செய்தார். அவர் உபதே₃ஶித்த விஶிஷ்டத₄ர்மஶாஸ்த்ரமே உனக்கு என்னுல் உபதே₃ஶிக்கப்பட்டது. மிகச்சிறந்ததாய், ஒத்ததும், மிக்கதுமில்லாத இந்த வைஷ்ணவ த₄ர்மஶாஸ்த்ரத்தை ப₄க்தியுடன் கேட்பவனும்,

ஶாந்தியுடன் சொல்பவனும் பரமைகாந்திநிலையை அடைவான் என்பதில் ஐயமில்லை. எல்லாப் பாபங்களினின்றும் நீங்கப்பெற்று, விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைவான். எவனொருவன் இதை விஷ்ணுவின் ஸந்நிதி₄யில் தினந்தோறும் ப₄க்தியுடன் கேட்கிறானோ, அவன் ஆயிரம் அஶ்வமேத₄யாக₃ம் செய்த ப₂லனைப் பெறுவான் என்பதில் ஐயமில்லை. ஹாரீதரால் சொல்லப்பட்ட இந்தப் பரமத₄ர்மஶாஸ்த்ரத்தை ஆராய்ந்து, அதன்படி விஷ்ணுவை ஆராதி₄ப்பவன் பரமைகாந்திநிலையை அடைகிறான். ஹாரீதரால் உபதே₃ஶிக்கப்பெற்ற இதைக் கேட்ட வைஷ்ணவோத்தமனான அம்ப₃ரீஷ மஹாராஜா, மேலான ப₄க்தியுடன் அவரை வணங்கினார். ''தேவரீரே மேலான த₄ர்மம்; தேவரீரே மேலான தவம்; தே₃வரீருடைய திருவடியிணையை அடைந்தால் எல்லா ஸித்₃தி₄களையும் அடையலாம்.'' என்று அந்த மஹரிஷியைத் துதித்து, பெருந்தவத்தோனான அந்த ராஜரிஷி, நற்கதியளிக்கும் பரமைகாந்திநிலையை, அவரது அருளாலே அடைந்தான். மிகச்சிறந்ததாய், குறையற்றதான எனது இந்தப் பரமைகாந்தி ஶாஸ்த்ரத்தை — ப₄ரத்₃வாஜர் முதலான மஹர்ஷிகளும், ஜநகர் முதலான அரசர்களும், ஸநகாதி₃யோகி₃களும், நாரத₃ர் முதலான தே₃வரிஷிகளும், வஸிஷ்ட₂ர் முதலான விஷ்ணு ப₄க்தர்களும், விஷ்வக்ஸேநர் முதலான நித்யஸூரிகளும் அறிந்து, இதை அநுஸரித்து ஸர்வேஶ்வரனைத் திருவாராத₄னம் செய்தனர். ஆகையால் வேத₃த்தை விளக்குவதாய், மிகச்சிறந்ததான இந்தப் பரமவைஷ்ணவ த₄ர்மஶாஸ்த்ரத்தை அறிந்தே, பரமைகாந்தியானவன் ஸர்வேஶ்வரனான விஷ்ணுவை ஆராதி₄க்கவேண்டும்.

வ்ருத்₃த₄ஹாரீதஸ்ம்ருதி நிறைவுற்றது.]

ஆக, இவ்வண்ணமாக விஷ்ணுபரத்வத்தை மிகத்தெளிவாகக் காட்டும் விஶிஷ்டபரமத₄ர்ம ஶாஸ்த்ரங்களில் தலைசிறந்ததான வ்ருத்₃த₄ஹாரீதஸ்ம்ருதியிற் சொல்லப்பட்ட பரமவைஷ்ணவ த₄ர்மங்களை விரிவாகக் கண்டோம். இதினுடைய ப₂லஶ்ருதிக்கு முன் உள்ள முடிவுப் பகுதியில காட்டப்பட்டிருக்கும் இருபத்தெட்டு பரமைகாந்தி கு₃ணங்களையும் அடைய, இந்த ஶாஸ்த்ரத்தை ஶ்ரத்₃தை₄யுடன் படித்துவரும் ஒவ்வொருவரும், இந்த ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டபடி, ஸாத₄ன பு₃த்₃தி₄யில்லாமல் ஸ்வயமப்ரயோஜந பு₃த்₃தி₄யுடன் இயன்றவரை முயலவேண்டும். இக்குணங்களில் ஒரு சிலவற்றையாவது பெற்ற அதி₄காரி எம்பெருமானுக்கு மிகவும் இனியவனாவான். அவனுக்கே ஸர்வேஶ்வரன் நிர்ஹேதுக க்ருபையாலே மோக்ஷமளிப்பான் என்பதில் ஐய

மில்லை. கடல்போன்ற மற்ற ஶாஸ்த்ரங்களின் ஸாரமாயிருக்கும் இந்த ஶாஸ்த்ரத்தில் சொன்ன இருபத்தெட்டு பரமைகாந்தி கு₃ணங்களையுமுடைய வைஷ்ணவர்திரள் இவ்வுலகில் பெருகட்டும் என்னும் ப்ரார்த்தனையோடு இந்த வ்ருத்₃த₄ஹாரீத ஸ்ம்ருதி நிர்ணயத்தை நிறைவுபடுத்தி, அடுத்தபடியாக ஸ்ரீஶாண்டி₃ல்ய விஶிஷ்ட பரம த₄ர்மஶாஸ்த்ரத்தில் நாராயண பரத்வமே நிலைநாட்டப்பட்டிருப்பதைக் காண்போம்.

## ஶாண்டி₃ல்ய ஸ்ம்ருதி நிர்ணயம்

இந்த ஸ்ம்ருதி 1902-ம் வருஷத்தில் தெலுங்கு லிபியில் கிரந்த முத்₃ராபக ஸபையாரால் அச்சிடப்பட்டுள்ளது. இதில் ஸாரமான பகுதிகளை அச்சிட்டு, அவற்றில் ப₄க₃வத்பரத்வம் நிலைநாட்டப்பட்டிருப்பதைக் காண்போம் இனி. இதன் முதல் அத்தியாயத்தின் தொடக்கத்தில்,

ஸ்ரீமத்தோத₃கி₃ரேர்மூர்த்₄நி ஸ்ரீமத்யாயதநே ஹரே: ।
ஶாண்டி₃ல்யம் ருஷிமாஸீநம ப்ரணமய முநயோऽப₃ருவந் ॥
ஸ்ரீமதே₃காயநம் ஶாஸ்த்ரம் ஶ்ருதம் கு₃ஹயம ஸநாதநம ।
ஜ்ஞாதம ச ஸர்வவேதா₃நாம் அநதஸஸாரமித₃ம த்விதி ॥
நிவருத்தம் வைதி₃கம் கர்ம யத் ப்ரோக்தம் ப₄வபே₄ஷஜம் ।
பஞ்சகாலாத்மகம் ஜ்ஞாநம் தச்ச ப்₃ரஹ்மைகதை₃வதம் ॥
குடும்ப₃ாஶ்ரமநிஷ்ட₂ாநாம் பஞசகாலநிஷேவிணும் ।
ஆசாரம் த்வந்முக₂ாம்பே₄ாஜாத ஶ்ரோதுமிச்ச₂ாமஹே வயம் ॥
ஶாண்டி₃ல்யோபி நமஸ்க்ருத்ய மங்க₃ளாயதநம் ஹரிம் ।
அப்₃ரவீத் ஸ முநிஶ்ரேஷ்ட₂ாந் ஶ்ரேஷ்ட₂காமா மஹாமுநி: ॥...
மஹாவிஸ்தாரரூபோऽயமாசார: பஞ்சகாலிநாம் ।
ஸங்க்ஷேபாத் ப்ரப்₃ரவீம்யத்₃ய யத₂ாஶாஸ்த்ரம் யத₂ாமதி ॥
ரஹஸ்யமேதத்₃ விஜ்ஞாநம ப₄க்தாநாம் ஹிதமேவ ச ।
அப்ரமாணமப₄க்தாநாம் ஸாரம் ஸர்வாக₃மேஷு ச ॥[1-1...8]

[வானமாமலையின் உச்சியில் ஹரியின் தி₃வ்யாலயத்தில் எழுந்தருளியிருந்த ஶாண்டி₃ல்ய மஹர்ஷியை வணங்கி, முனிவர்கள் ''பரமரஹஸ்யமானதாய், பழமையானதான ஏகாயநவேத₃ம் (உம்மிடமிருந்து) எங்களால் கேட்கப்பட்டது. எல்லா வேத₃ங்களினுடையவும் உட்பொருள் இதுவே என்றும் அறியப்பட்டது. ஸம்ஸார வியாதிக்கு மருந்

தென்று உம்மால் கூறப்பட்டதாய், வைதி₃கமாய் ஐந்து காலங்களில் செய்யப்படுவதான நிவ்ருத்தி த₄ர்மத்தையும், ப்₃ரஹ்மம் ஒன்றையே தெய்வமாகக்கொண்ட அவ்வறிவையும். க்₃ருஹஸ்த₂ாஶ்ரமத்திலிருப்பவர்களாய். பஞ்சகால த₄ர்மத்தைச் செய்பவர்களுடைய ஆசாரத்தையும் உமது முகத்தாமரையிலிருந்து கேட்க விரும்புகிறோம் நாங்கள்'' என்று கூறினர். சிறந்த ஆசாரத்தையுடைய மஹர்ஷியான ஶாண்டி₃ல்யரும் மங்க₃ளங்களுக்கு ஓர் இருப்பிடமான ஹரியை வணங்கி அந்த முனிவர் தலைவர்களைக் குறித்துச் சொல்லத் தொடங்கினர்...... பஞ்சகால பராயணர்களுடைய இவ்வாசாரம் மிக விரிவானது. ஶாஸ்த்ரத்திலுள்ளபடி என் அறிவுக்கு எட்டியவரையில், ரஹஸ்ய ஜ்ஞானமாயிருப்பதாய், ப₄க்தர்களுக்கு ஹிதமாய், ப₄க்தியற்றவர்களுக்கு அப்ரமாணமாய், ஸர்வாக₃மங்களிலும் ஸாரமாயிருக்கும் இந்த ஶாஸ்த்ரத்தைச் சுருக்கமாகக்கூறுகிறேன்] என்று கூறியிருப்பதிலிருந்து இந்த ஸ்ம்ருதியும் விஶிஷ்ட த₄ர்மங்களைச் சொல்லுவதென்று விளங்குகிறது.

ப்ரதிஷித்₃தே₄ஷ்வஸக்தம் யத் ஸக்தம் ஶப்₃தே₃ஷு
ஸாது₄ஷு ।
ப₄க₃வத்₃விஷயேஷ்வேவ ஶுத்₃த₄ம் தத்
ஶ்ரோத்ரமுச்யதே ॥...
பாஷண்ட₃பதிதாத்₃யேஷு ந பதந்தீ கதா₃சந ।
அருக்ஷா ஸமபதந்தீ த்₃ருக் ஶுத்₃த₄ா ப₄ாக₃வதாதி₃ஷு ॥
[1-13, 15]

[யாதொரு செவியானது கேட்கத்தகாததைக் கேட்பதில் ஈடுபடாமல், கேட்கத்தக்கதான ப₄க₃வத்₃விஷயமான நல்ல ஶப்₃த₃ங்களிலேயே ஈடுபடுகிறதோ, ஶுத்₃த₄மான அதுவே செவியெனப்படுகிறது....... ஒருபோதும் பாஷண்ட₃ர். பதிதர் முதலானோரைக் காணமல், ப₄ாக₃வதர் முதலான நல்லோரையே காண்பதாய், குற்றமற்றதாய், ஶுத்₃த₄மானதான கண்ணே கண்ணெனத்தக்கது] என்று செவிக்கும். கண்ணுக்கும் லக்ஷணம் ப₄க₃வத்₃ ப₄ாக₃வதர்களை விஷயமாகக் கொள்வதே என்று காட்டப்பட்டது.

''ஸா ஜிஹ்வா யா ஹரிம் ஸ்தௌதி தச்சித்தம் யத் த₃தர்ப்பிதம் ।
தாவேவ ச கரௌ ஶ்லாக்₄யௌ யௌ தத்பூஜாகரௌ
கரௌ ॥

[ஹரியைத் துதிப்பதே நாவாகும்; அவனை நினைப்பதே நெஞ்சாகும். அவனைப் பூஜிக்கும் சிறந்த கைகளே கைகளாகும்] முதலான மற்ற

ப்ரமாணங்களிலும் இவ்வர்த்த₂ம் சொல்லப்பட்டது. "புள்ளூரும் பொன்மலையைக் காணாதார் கண் என்றும் கண் அல்ல கண்டாமே" [11-7-1] "தொண்டர்க்கினியானைக் கேளாச்செவிகள் செவியல்ல கேட்டாமே" [11-7-2] "மாலை வணங்கி அவன் பெருமை பேசாதார் பேச்சென்றும் பேச்சல்ல கேட்டாமே" [11-7-3] "தோடார் நறுந் துழாய் மார்வனை ஆர்வத்தால் பாடாதார் பாட்டென்றும பாட்டல்ல கேட்டாமே" [11-7-4] "சங்கேந்தும் கையானைக் கைதொழாக் கையல்ல கண்டாமே" [11-7-5] "உள்ளாதார் உள்ளத்தை உள்ளமாக் கொள்ளாமே" [11-7-6] "நினையாதார் நெஞ்சு என்றும் நெஞ்சல்ல கண்டாமே" [11-7-7] "அறியாதார் என்றும் அறியாதார் கண்டாமே" [11-7-8] "ஆன்விடையேழன்றடர்த்தார்க்கு ஆளானாரல்லாதார் மானிடவர் அல்லரென்று என் மனத்தே வைத்தேனே" [11-7-9] என்று திருமங்கையாழ்வாரும் இவ்வர்த்த₂த்தை வ்யதிரேகத்தாலே கூறி உறுதிப்படுத்தினர்.

ப₄க₃வங்மந்தி₃ரே நிதயம் மாாஜநாதி₃கரியாபர:।
அலங்காராதி₃கரணே குஶலஶ்ச ஜக₃த்₃கு₃ரோ:॥
ப₄க₃வதபாத₃பூஜாயாம ஹவநே வநத₃நே தத₂ா।
ப்ரஸக்த: ஶாத₃த₄ஶாஸ்தராணும் ஸமஸகாராதி₃க்ரியாபர:॥
[1-28, 29]

[பரமபுருஷனின் திருக்கோயிலை சுத்தப்படுத்துவது முதலான தொண்டுகளைச் செய்பவனாய், லோகஸ்வாமியான அவனுக்கு அலங்காரம், உத்ஸவம் முதலானவற்றைச் செய்வதில் வல்லவனாய், அவனுக்குத் திருவடிக்குற்றேவல் செய்வதிலும், அவனைக்குறித்து ஹோமம் செய்வதிலும், வணங்குவதிலும் ஈடுபட்டவனாய், ஶாத்₃த₄ஶாஸ்த்ரங்களை ஏட்டில் எழுதிப் பரிஷ்கரிப்பது முதலான கிரியைகளில் ஈடுபட்டவன்] என்று பா₄க₃வதர்கள் செய்யவேண்டிய சில கைங்கர்யங்களும் காட்டப்பட்டன.

ப₄க₃வங்மந்தி₃ரம வருத்₃த₄ாங் பூஜ்யாங் அங்யாம்ஶ்ச
மங்க₃ளாங்।
ப்ரதிப்ரஸாரணம் மோஹாத் பூ₄மிக₃ாதம் பலாயநம॥
ஸர்வோபகரணாநாம் ச ஸாவேஷாம் பராணிநாம் தத₂ா।
ஸ்பர்ஶநம் லஙக₄நம் சைவ தத₂ாங்யா அபி து₃ஷ்க்ரியா:॥
விஷ்ணுஜய ப₄க₃வத்கர்மஸித்₃த₄யர் தத₂க₃மநே ரதம்।
தத₂ா பா₄க₃வதஸ்யார்த்த₂ஸித்₃த₄யாத்த₂ம் ச விஶேஷத:॥

ப்ரத₃க்ஷிணக்ரியாஸக்தம் தீர்த்த₂யாத்ராபரம் தத₂ா ।
த₃ர்ஶநார்த்த₂ம் ஹரேர்நித்யம் உத்ஸவாநுப₄வாய ச ॥
தே₃வாயதநயாத்ராயாம் அபி₄யுக்தம் ம்ருது₃க்ரமம் ।
மஹாபா₄க₃வதாநாம் ச கரஸம்ஸ்பர்ஶவர்ஜிதம் ॥
ஸத்₃ப₄க்தாநாமநந்யாநாம் பூஜார்த்த₂ம தூ₃ர்ஶநாய ச ।
ஸத்வரம் சைவமாதீ₃நி குர்வத் பாத₃த்₃வயம் ஶுப₄ம் ॥
[1-31...36]

[எந்தக் காலானது—ப₄க₃வானுடைய திருக்கோயிலேயும், மூத்தவர்களேயும், பூஜிக்கத்தக்கவர்களேயும், மற்ற மங்களப் பொருள்களேயும் குறித்து நீட்டுவது, மயக்கத்தாலே (கோயில் முதலானவற்றில்) குழிதோண்டுவது, அவற்றைக் கண்டு ஓடுவது, (ப₄க₃வத் ஸம்ப₃ந்த₄முள்ள) எல்லா உபகரணங்களேயும், பிராணிகளேயும் தொடுவது, அவற்றைத் தாண்டுவது, இதுபோன்ற மற்ற தீய கருமங்கள் ஆகியவற்றை விட்டு, பரமபுருஷனுக்குக் கைங்கர்யம் செய்வதற்காகவே நடப்பதில் ஈடுபடுவது, அதிலும் சிறப்பாக பா₄க₃வதர்களுடைய காரியஸித்₃தி₄யின் பொருட்டு நடப்பதில் ஈடுபடுவது, ப₄க₃வத் பா₄க₃வதர்களே ப்ரத₃க்ஷிணம் செய்வதில் ஈடுபடுவது, (ப₄க₃வத்ஸம்ப₃ந்த₄முள்ள) தீர்த்த₂யாத்திரையில் ஈடுபடுவது, தினந்தோறும் ஹரியை ஸேவிப்பதற்கும், அவனது உத்ஸவங்களே அனுப₄விப்பதற்கும் அவனது தி₃வ்யதே₃ஶ யாத்ரையில் ஈடுபட்டு மெள்ள நடப்பது, மஹாபா₄க₃வதர்களுடைய கைபடாமலிருப்பது, புறந்தொழாத நல்ல அடியார்களேப் பூஜிப்பதற்கும் காண்பதற்கும் வேகமாக நடப்பது முதலானவற்றில் ஈடுபடுகிறதோ, மங்க₃ளமான அக்கால்களே கால்களாகும்] என்று கால்கள் செய்யக்கூடாதவையும், செய்ய வேண்டியவையும் காட்டப்பட்டன,

ஸாக்ஷாத் ப்₃ரஹ்ம பரம தா₄ம ஸர்வகாரணமவ்யயம ।
தே₃வகீபுதர ஏவாந்யே ஸர்வே தத்கார்யகாரிண: ॥
தே₃வா மநுஷ்யா: பஶவ: பக்ஷிவருக்ஷஸரீஸ்ருபா: ।
*ஸர்வமேவ ஜக₃தத₄ாது: வாஸுதே₃வஸ்ய விஸ்த்ருதி: ॥
பரவருதतைஶ்ச நிவருத்தைஶ்ச ஸவர்க்க₃தை₃ர் மோக்ஷதை₃ரபி ।
ஆராத்₄யோ ப₄க₃வாநேகோ வேத₃த₄ாமைஸ்ஸநாதநை: ॥

---

*(பா)ஸர்வமேவ ஜக₃த்₃த₄ாதா வாஸுதே₃வ: ஸ வை ஸ்ம்ருத:

ஸ ஏவ ஸர்வதே₂ாபாஸ்ய: நாந்யஸ்ஸமஸாரதாரக: |
உபா₄ப்₄யாம் ஜ்ஞாநகர்மப்₄யாம ஆராத்₄யோ ப₄க₃வாந் ஹரி:||
தத₃ஜ்ஞாநமேவ விஜஞாநம தத்கர்ம பரமம ஶுப₄ம|
உப₄ாவபி வியுக்தௌ து ந தத்ஸம்ப்ராப்திகாரகௌ ||
யுக்தாப்₄யாம் ப₄க₃வதப்ராப்தி: ஸமஸாரப₂லமந்யதா₂ |
தச்ச₂ாஸ்த்ரமேவ ஸச்ச₂ாஸ்தரம் ததீ₃யா ஏவ பண்டி₃தா: ||
ஶோச்யா ஹி ப₄க₃வத்கர்மபரிசர்யாவிதி₄ம் விநா ||

[1-44...50]

[நேரே பரம்பொருளாயிருப்பவனும், தேஜோரூபியானவனும், ஸர்வ காரணமாய், அழிவற்றவனுயுள்ளவன் தே₃வகியின் பிள்ளையாய் அவதரித்த கண்ணனே. மற்ற அனைவரும் அவனுக்கு ஏவல் புரிகின்றவர்களே. தேவர், மனிதர், பஶுக்கள், பறவைகள், மரங்கள், பாம்புகள் ஆகிய அனைத்துமே உலகனைத்தையும் படைத்த வாஸுதே₃வனின் விரிவேயாகும். வேத₃த்தில் சொல்லப்பட்ட பழைமையான ப்ரவ்ருத்தி த₄ர்மங்களாலும், நிவ்ருத்தித₄ர்மங்களாலும், சுவர்க்கமளிக்கும் காம்யகர்மங்களாலும், மோக்ஷமளிக்கும் நிஷ்காம கர்மங்களாலும். ஆராதி₄கப்படுபவன் ப₄க₃வான் ஒருவனே. அவனே எல்லாப்படியாலும் உபாஸிக்கத்தக்கவன்; மற்ற எவனும் ஸம்ஸாரத்தைத் தாண்டுவிக்க வல்லவனல்லன். ஜ்ஞானம், கர்மம் எனும் இரண்டாலும் ஆராதி₄க்கப்படுபவன் ப₄க₃வானன ஹரியே. அவனைப் பற்றிய அறிவே விஜ்ஞானமாகும். அவன் விஷயமான கர்மமே மேலான மங்க₃ளமாகும. ஜ்ஞாந கர்மங்கள் தனித்தனியாக அவனை அடைய உபாயமாகமாட்டா; அவையிரண்டும் சேர்ந்தால்தான் ப₄க₃வானை அடையலாம்; இல்லாவிடில் ஸம்ஸார ப₂லமே கிடைக்கும். அவனைப்பற்றிய ஶாஸ்த்ரமே நல்ல ஶாஸ்த்ரமாகும். அவனடியார்களே அறிவாளிகள். ப₄க₃வானுக்குரிய கர்மத்திலும், கைங்கர்யத்திலும் ஈடுபடாதவர்கள் வருந்தத்தக்கவர்களேயன்றோ] என்று ப₄க₃வானின் பரத்வமும், அவனைப்பற்றிய ஜ்ஞாநம், கர்மம், அடியார்கள், ஶாஸ்த்ரம் முதலானவற்றின் சிறப்பும் மிகத் தெளிவாகப் பேசப்பட்டது.

ப₄க₃வத்கர்மஸித்₃த்₄யர்த்த₂ம் வ்யாவருத்தம் ப₄க₃வத்பரம |
அவிஷண்ணமநாயஸ்தம் அஹங்காரவிவர்ஜிதம் ||
அஸத்₃விஷயஸக்தாநாம இநத₃ரியாணுமஹர்நிஶம ||
த₃மகம் ஸர்வயத்நேந ப₃ாஹ்யாரம்ப₄விநிஸ்ப்ருஹம் ||

ஸர்வதா₃ ப₄க₃வத்₃ஜ்ஞாநஸம்ஸர்க்க₃விக₃தஜ்வரம் |
ப₄க₃வத்₃ப₄க்தஸத்₃வாக்யக₃ங்கா₃ஜலபவித்ரிதம் ||
ஸதா₃ர்த்த₂க்₃ராஹகம ஸூக்ஷ்மஜ்ஞாநரூபவிசாரகம் |
ஸமர்த்த₂மபரத்₄ருஷ்யம ச புஷ்டம் துஷ்டமஸங்கி₃ ச ||
ஏவமாதி₃கு₃ணோபேதம நிர்மலம் மந உச்யதே || [1-55...58]

[ப₄க₃வானுடைய கைங்கர்யம் நிறைவேறும்பொருட்டே செயல்படுவதும், ப₄க₃வானிடம் ஈடுபடுவதும், (தன் காரியம் நிறைவேறுதது குறித்து) வருத்தமடையாததும், களைப்படையாததும், அஹங்கார மற்றதும், ப்ராக்ருத விஷயங்களில் ஈடுபடும் இந்திரியங்களை மிக முயன்று அடககுவதும், ஶப்₃த₃ாதி₃களான வெளிவிஷயங்களில் ஆசையற்றதும், எப்போதும் ப₄க₃வானைப் பற்றிய ஜ்ஞானத்தின் ஸம்ப₃ந்த₄த்தால் தாபத்ரயங்கள் நீங்கப்பெற்றதும், பரமபுருஷனின் அடியார்களுடைய அருள்மொழிகளாகிற க₃ங்கா₃ஜலத்தினால் பரிஶுத்₃தி₄யடைந்ததும், நல்ல விஷயங்களையே அறிவதும், நுண்ணிய தத்வ ஜ்ஞாநம் பற்றிய ஆராய்ச்சிகளைச் செய்வதும், (அவற்றில் நல்ல முடிவுகாண) வல்லதும், (ப்ரதிபக்ஷிகளால்) அசைக்கவொண்ணததும், நல்லறிவினல் நிறைந்திருப்பதும், (இவ்வுலகப் பலன்களில் கிடைப்பது கொண்டு) திருப்திபெற்றிருப்பதும், கிடைக்காதவற்றில் பற்றில்லாததும், இத்தகைய பெருமைகள் பெற்றுக் குற்றமற்றிருப்பதுமான நெஞ்சே நெஞ்செனத்தக்கது.] என்று நல்ல நெஞ்சின் லக்ஷணம் ப₄க₃வத்₃ ப₄ாக₃வதர்களிடம் ஈடுபடுவதே என்று கூறப்பட்டது.

ஸ்வப₄ாவதோऽந்யதோ வாபி கேஷாஞ்சித் ஹேயதா ப₄வேத் |
நிஷித்₃த₄மிதி யத்₃த்₃ரவ்யம் வர்ஜ்யதே ஶாஸ்த்ரவர்த்மநா ||
ராஜஸம் தாமஸம சேதி தத் ஜ்ஞேயம பண்டி₃தைர் நரை: |
த்₃ரவ்யம ரஜஸ்தமோத்₄வஸ்தம வைஷ்ணவே கர்மவர்த்மநி ||
ஸமயோஜயதி யோ மோஹாத் தஸ்ய ஸா விப₂லா க்ரியா |
ஸ்வயம் யதி₃ தத₂ஶ்நீயாத் நிஷித்₃த₄ம் முக்₃த₄சேதந: ||
அஜாநந் ஹ்ருத₃யாந்தஸ்ஸ்த₂ம் பே₄க்தாரம் ந ஸ ஸாத்விக: ||
[1-65, 66, 67]

[இயல்வாகவோ. சில காரணங்களாலோ சில த்₃ரவ்யங்கள் தாழ்ந்தவையாகும். ஶாஸ்த்ர ரீதியில் யாதொரு த்₃ரவ்யமானது நிஷித்₃த₄மென்று விலக்கப்படுகிறதோ, அது ராஜஸமாகவும், தாமஸமாகவும் உள்ளதென அறிவாளிகளால் அறியத்தக்கது. ரஜஸ்தமோகு₃ணங்களால் கெடுக்கப்பட்ட

த்3ரவ்யங்களை வைஷ்ணவ கர்மங்களில் எவனொருவன் மயக்கத்தாலே உபயோகி3க்கிருனோ, அவனுக்கு அக்கர்மங்கள் பயனற்றவையாகின்றன. ஹ்ருத3யகமலத்திலிருக்கும் ஸர்வபே4ாக்தாவான பரமபுருஷனைக் கணிசியாமல் அறிவிலியான எவனொருவன் அத்தகைய நிஷித்3த4மான ஆஹாரங்களைப் புசிக்கிருனோ, அவன் ஸாத்விகனுகமாட்டான்.] என்று ராஜஸதாமஸங்களான த்3ரவ்யங்களை எக்கர்மங்களிலும் வைஷ்ணவன் உபயோக3ப்படுத்தக்கூடாதென்றும், அத்தகைய உணவுகளைப் புசிப்பது அந்தர்யாமியாகிய ப4க3வானை அவமதிப்பதாகும் என்றும், அவன் ஸாத்விகனுகான் என்றும் உணர்த்தியது குறிக்கொள்ளத்தக்கது.

அத்ரோக்த லக்ஷணேபேதம் கர்ம ப4ாக3வதம் பரம்।
ஸப்தஸம்ஶுத்3தி4ஸம்யுகதா பரிபூர்ணு ப4வேத் க்ரியா ॥
ஸப்தைதே விமலா ப4ாவா: ஶ்ரத்3த4ாவாநாரபே4த் க்ரியாம்।
ஆத4ாநாத்3யைர் விஶுத்3த4ாத்மா ஸமஸ்காரை: பஞ்சகாலிநாம் ॥
குர்யாத் ப்3ராஹ்மண ஏவைதத் த்ரைவித்3யோ வா விஶுத்3த4தீ4: ।
ஶ்ரத்3த4ாவாங் ப4க3வத்3த4ர்மே ராக3ாதி3ரஹிதேந்த்3ரிய: ॥
ப்3ராஹ்மணுங் பூஜயேங் நித்யம் பஞ்சகாலபராயணுங் ।
வஸ்த்ரகே3ாபூ4மிஹிரண்யாத்3 த4நதா4ந்யாதி3பி4ஸ் ததா2 ॥
தோஷயேத் பரயா ப4க்த்யா நித்யம ப4ாக3வதாங் நராங்।
ஸித்3தி4ர்ப4வதி வா நேதி ஸமஶயோऽச்யுதஸேவிநாம் ॥
ந ஸமஶயோऽஸ்தி தத்3ப4க்தபரிசர்யா ரதாதமநாம் ।
கேவலம் ப4க3வத்பாத3 ஸேவயா விமலம மந: ॥
ந ஜாயதே யதா2 நித்யம தத்3ப4க்தசரணுர்ச்சநாத ।
விஶிஷ்டகுலஸஞ்ஜாத: ஸம்ஸ்காரை: ஸம்ஸ்கருதோ நிஜை: ॥
தவரிதோ யதி3 ஸத்3த4ர்மே சரேத் க்ருசச்2ராணி ஶாந்ததீ4: ।
தபஶ்சர்த்துமஶக்தஶ்சேத் த4நவாங் த3ாநமாசரேத் ॥
உப4யோரப்யஶக்தஶ்சேத் நாமஸங்கீர்த்தநம் சரேத் ।
யதா2ஶக்தி தபஶ்சர்த்வா த3தவா சைவ யதா2ப3லம் ॥
ந்ருஸிமஹமூர்த்திம் தம் த்4யாத்வா ஜபேத் ஸாவாக4 ஶாந்தயே ।
உபவாஸாத் ததா2 த3ாநாத் ஸத்3ப4க்தாநாம் ச ஸேவநாத் ॥

ஸங்கீர்த்தநாத் ஜபாத் தாபாத் ஶ்ரத்₃த₄யா ஶுத்₃தி₄ம்
உபாஸீத நிரஸதோऽபி பஞ்சகாலபராயணாந ॥ [ருச்ச₂தி।
யதீ₃ச்சே₂த் ப₄க₃வத்கர்மஸேவயா பாபஶாந்தயே ।
பூர்வோகதாசாரஸமபந்நம் யுவாநம் க்₃ருஹமேதி₄நம் ॥
உததமை: க்ருதஸக்₂யம ச நீசஸேவாவிவர்ஜிதம் ।
ப்ரக₂யாதஶுத₃த₄சரிதம் ஸத்₃ப்₃ரஹ்மைகபராயணம் ॥
ப₄க₃வத்கர்மஸமஸகதம அர்த்த₂ஸந்தே₃ஹநோத₃கம் ।
ப்ரதிபாத₃நஸாமர்த்₂யயுகதம ஸதபுத்ரபதநிகம் ॥
உத₃ாரம ப₄கதிவிவஶம வஶீகருதஜக₃ஜ்ஜநம் ।...
ப₄க₃வத்₃ப₄கதியுகதேஷு த்₃ருஷ்டமாத்ரேஷு ஸுப்ரியம் ॥
ஸாது₄நாமுபகாராய வயாபருதம் க்லேஶவர்ஜிதம் ।...
ஏவமாதி₃கு₃ணோபேதம ஆசாாயம வரயேத த்₃விஜ: ॥
[1-91...105, 107, 110]

[இங்கு சொல்லப்பட்ட லக்ஷணங்கள் அமையப் பெற்றதே மேலான ப₄க₃வத் ஸம்ப₃ந்தி₄யான கர்மமாகும். ஏழுவிதமான பரிஶுத்₃தி₄களோடு கூடியதே நிறைவுள்ள கிரியையாகும். இவ்வேழும் குற்றமற்ற தன்மைகளாம். ஶ்ரத்₃தை₄யுடையவனுக இக்கர்மங்களைத் தொடங்க வேண்டும். பஞ்சகால பராயணர்க்குரிய ஸம்ஸ்காரங்களாலும் ஆத₄ாநம் முதலியவற்ருலும் பரிஶுத்₃தி₄பெற்ற நெஞ்சையும் அறிவையும் உடையவனுய், மூன்று வேத₃ங்களையும் ஓதிய ப்₃ராஹ்மணனும் இக்கர்மங்களைச் செய்யவேண்டும். ப₄க₃வானுக்குரிய இந்த த₄ர்மத்தில் ஊற்றமுடையவனுய், விஷயங்களில் ஆசை முதலியவற்றில் ஈடுபடாத இந்திரியங்களை உடையவனுய், பஞ்சகால பராயணர்களான அந்தணர்களை எப்போதும் ஆராதி₄க்கவேண்டும். வஸ்திரம், பசு, பூ₄மி, த₄னம், த₄ான்யம் முதலானவற்றை த₃ானம்செய்து, மேலான ப₄க்தியுடன் ப₄ாக₃வதர்களை எப்போதும் திருப்திசெய்விக்க வேண்டும். அச்யுதனுக்கு ஆட்பட்டிருப்பவர்களுக்கு மோக்ஷஸித்₃தி₄ கிடைக்குமோ கிடைக்காதோ என்ற ஐயம உண்டு. அவனடியார்க்கு ஆட்பட்டிருப்பவர்களுக்கு இவ்வையம் இல்லை. எப்போதும் ப₄ாக₃வதர்களுக்குத் திருவடிக்குற்றேவல் செய்வதால் மனம் குற்றமற்றதாக ஆவதுபோல், எப்போதும் ப₄க₃வானுக்குமாத்திரம் திருவடிக்குற்றேவல் செய்வதாலே ஆவதில்லை. உயர்ந்தகுலத்தில் உதி₃த்தவனுய், ஸ்வரூபாநுரூபமான ஸம்ஸ்காரங்களால் ஸம்ஸ்கரிக்கப்பெற்றவன் ப₄ாக₃வத த₄ர்மத்தில் த்வரையுடையவனுனல், அடங்கிய அறிவையுடையவனுய், க்ருச்ச்₂ரம் முதலான காயக்லேஶங்களைச் செய்யவேண்டும். அத்தகைய தவங்

களைச் செய்ய இயலாதவனுனல், த₄னவானுயிருப்பவன் த₃ானம் செய்யவேண்டும். இரண்டும் இல்லாவிடில், ப₄க₃வந்நாமஸங்கீர்த் தனம் செய்யவேண்டும். இயன்றவரையில் தவம்புரிந்து, ஶக்தியுள்ள வரையில் த₃ானமும்செய்து, எல்லாப் பாபங்களும் நீங்குவதற்காகப் பாபநாஶகனை நரசிங்கப்பெருமாளை தியானித்து, (அவனது மந்தி ரத்தை) ஜபிக்கவேண்டும். உபவாஸத்தினுலும், த₃ானத்தினுலும். நல்லடியார்களை ஆராதி₄ப்பதாலும், நாமஸங்கீர்த்தனத்தாலும், ஜபத் தினுலும், தாபஸம்ஸ்காரத்தாலும், ஶ்ரத்₃தை₄யினுலும் ஶுத்₃தி₄யடை கிருன். பஞ்சகால பராயணர்களான அடியார்கள் தள்ளினுலும், அதைப் பொருட்படுத்தாமல் அவர்களை ஆராதி₄க்கவேண்டும். அந்தணனெருவன் ப₄க₃வானுக்குரிய கர்மங்களை அநுஷ்டி₂த்துப் பாபம் நீங்கவேணும் என விரும்பினுைகில்—முற்கூறிய ஒழுக்கங்களை உடையவனுய், யௌவனவயஸ்ஸை உடையவனுய், க்₃ருஹஸ்த₂னுய், உயர்ந்தாரோடு நட்புடையவனுய், தாழ்ந்தவர்களுக்குத் தொண்டு புரியாதவனுய், உலகம் பரவிய நல்லொழுக்கத்தை உடையவனுய், நல்லோர்களையும் நாரணனையுமே புகலாகக்கொண்டவனுய், ப₄க₃ வானுக்குரிய கர்மங்களில் ஈடுபட்டவனுய், அர்த்த₂ ஸந்தே₃ஹங் களைப் போக்கடிக்கவல்லவனுய், (நல்ல விஷயங்களைத்) தெளிவாகச் சொல்லுவதில் வல்லவனுய், நல்ல பெண்டுபிள்ளைகளை உடைய வனுய், (உபதே₃ஶிப்பதில்) வண்மைமிக்கவனுய், ப₄க்திபரவஶனுய், உலகினரை வசப்படுத்தியவனுய், ப₄க₃வத்₃ப₄க்தியுடையவர்களைக் கண்டவுடனே மிக உகப்பவனுய், நல்லோர்களுக்கு உதவி செய்வதி லேயே ஈடுபட்டவனுய், அதனுல் ஆயாஸமடையாதவனுய், இது போன்ற நற்குணங்களையுடையவனை ஆசார்யனை ஆஶ்ரயிக்க வேண்டும்.] என்று ப₄க₃வத் கைங்கர்யம், ப₄ாக₃வத கைங்கர்யம் ஆகியவற்றின் பெருமைகளும், ஆசார்யலக்ஷணமும் விவரிக்கப்பட்டன.

த₃ாந்தம் ஶாநதம் மருது₃ம் ஸௌமயம் ப்ரஶாந்தம்
ப₄க₃வத்பரம் ।
ஸந்தப்தஹ்ருத₃யம் ப₄க்த்யா ஶகத்யா ஸர்வார்த்த₂ஸாத₄கம்॥
ஸம்வத்ஸரம் தத₃ர்த்த₄ம் வா மாஸத்ரயமத₂ாபி வா ।
பரீக்ஷ்ய விவிதே₄ாபாயை: க்ருபயா நிஸ்ஸ்பருஹோ வதே₃த் ॥
[1-114, 116]

[மனத்தையும், வெளிப்புலன்களையும் அடக்கியவனுய், மென்மை யுடையவனுய், கடுமையற்றவனுய், ஶாந்திபெற்றவனுய், ப₄க₃வா னிடம் ஈடுபட்டவனுய், ஸம்ஸாரத்தில் அடிக்கொதிப்புடைய நெஞ் சினனுய், ஆசார்யனுடைய காரியங்களை இயன்றவரையில் ப₄க்தி

யுடன் செய்பவனாக சிஷ்யன் அமைந்திருக்கிறனா என்று ஒருவருஷம் அல்லது ஆறுமாஸம். அல்லது மூன்றுமாஸம் பலவித₄மான உபாயங்களாலே பரீக்ஷித்து, அவனிடமிருந்து எந்தக் கைம்மாறையும் கருதாமல், கேவலக்ருபையாலே அவனுக்கு உபதே₃ஶிக்கவேண்டும்.] என்று ஶிஷ்யலக்ஷணமும், ஶிஷ்யனை ஆசார்யன் கைக்கொள்ள வேண்டிய முறையும் காட்டப்பட்டது.

ந ப்ரமாத்₃யேத் கு₃ரோ: ஶிஷ்ய: வாங்மந:காயகர்மபி₄: ।
அவிப₄ஜயாதமநாऽऽசாாயம வர்ததேதாஸ்மிந் யதா₂ऽச்யுதே॥
[1-118]

[மநோவாக்காயங்களால் சிஷ்யன் கு₃ருவுக்குத் தவறிழைக்கலாகாது. ப₄க₃வானிடத்திற்போலே, ஆசார்யனைத் தன்னிடமிருந்து வேறுபடுத்தாமல் வாத்திக்கக்கடவன்.] என்று சிஷ்யன் இருக்கவேண்டிய நிலையும் காட்டப்பட்டது.

ப₄க₃வத்கர்மநிரதை: ஸ்தோத்ரபூஜாஜபாதி₃பி₄: ।
அப்ரதிக்₃ராஹகை: த்யக்தவிவாதை₃: லோப₄வர்ஜிதை: ॥
ஸுஶீலை: ஜ்ஞாநஶீலைஶ்ச பா₃ஹ்யாந்தை: துல்யசேஷ்டிதை: ।
ஹ்ருத்₃யவேஷை: விஶுத்₃த₄ாந்தை: ப₄க₃வத்₃கு₃ணலாலஸை: ॥
ஸத்யவாக்₃பி₄: த₃யாஸாரை: ம்ருது₃சேஷ்டைரமத்ஸரை: ।
ப₄க்திபூதை: ஸதா₃சாரை: ஸதா₃ ஸஹ வஸேத்₃பு₃த₄: ॥
[1-122...124]

[துதி, பூஜை, ஜபம் முதலியவற்றைச் செய்துகொண்டு ப₄க₃வத் கைங்கர்யத்தில் ஈடுபட்டவர்களாய், பிச்சை ஏற்காதவர்களாய், விவாத₃ம் செய்யாதவர்களாய், பேராசையற்றவர்களாய், நல்லொழுக்கமுடையவர்களாய், அறிவு பெறுவதிலேயே ஊன்றியிருப்பவர்களாய், உள்ளும் புறமும் ஒருபடிப்பட ஒழுகுகின்றவர்களாய், நெஞ்சுக்கினிய வேஷத்தை உடையவர்களாய், குற்றமற்ற நெஞ்சினராய், ப₄க₃வத்₃ கு₃ணங்களில் போது போக்குகிறவர்களாய், உண்மையுரைப்பவர்களாய், கருணைமிக்கவர்களாய், மென்மையான செயல்களை உடையவர்களாய், மாத்ஸர்யமற்றவர்களாய், ப₄க்தியினால் பரிஶுத்₃தி₄பெற்றவர்களாய், நல்லோர்களின் ஆசாரத்தில் நிலை நிற்பவர்களான பெரியோர்களோடு, அறிவாளியானவன் எப்போதும் கூடி வாழவேண்டும்.] என்று ஸஹவாஸ யோக்₃யரான பெரியோர்களின் லக்ஷணமும் விவரிக்கப்பட்டது. ஆக, இவ்வளவால் முதல் அத்தியாயத்தின்

ஸாரமான பகுதிகள் விளக்கப்பட்டன. இனி, இரண்டாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் அபி₄க₃மன காலத்தைப்பற்றியும், ஸ்நாநத்தைப் பற்றியும் சொல்லவேண்டுமென்று முனிவர்களால் வினவப்பெற்று, ஶாண்டி₃ல்யர் உரைத்த விஷயங்களில் ஸாரமானவற்றைக் காண்போம்.

உச்சைஸ்ஸ்வரேண யோக₃ாந்தே ஸ்துத்வா ஸ்தோத்ரை:
உத₃ாரதீ₄: ।
வாஸுதே₃வாதி₃தே₃வாநாம் நாமநாம் ஸங்கீர்த்தநம் சரேத் ॥
ப்ராது₃ர்பா₄வக₃ணம சாபி ஸம்ஸ்மரேத் ஸாவஸித்₃த₄யே ।
கீர்த்தயேத் தத்₃கு₃ணாந ப₄கத்யா பரமாத்₃பு₄தசேஷ்டிதாந் ॥
அதந்த்₃ரிதஸ்ய ஸ்வாத₄யாயே யோக₃யுகதாத்மநஸ்ஸதா₃ ।
தத₃ப₄கத்யா ஸவிந்நதே₃ஹஸ்ய ஹ்யவஶ்யம நாமகீர்த்தநம ॥
[2-3, 4, 5]

[சிறந்த அறிவையுடையவன் 'யோக₃ம்' எனப்படும் தூக்கத்தின் முடிவில், உரத்த குரலில் துதிகளாலே எம்பெருமானைத் துதித்து, வாஸுதே₃வன் முதலான நாமங்களை ஸங்கீர்த்தனம் செய்யவேண்டும். விரும்பியதையெல்லாம் பெறும் பொருட்டு எம்பெருமானுடைய அவதார மூர்த்திகளையும் சிந்திக்கவேண்டும். அவர்களுடைய கு₃ணங்களையும், பரமாஶ்சர்யகரமான செயல்களையும் ப₄க்தியுடன் கீர்த்தனம் செய்யவேண்டும். வேதமோதுதலில் சோம்பலில்லாதவனாய், எப்போதும் பரமாத்மாவோடு தொடர்புள்ள நெஞ்சினனாய், அவனிடம் ப₄க்தியால் விகாரமடையும் தே₃ஹமுடையவனுக்கு, அநுப₄வ பரீவாஹமான (போக்கு வீடான) நாம ஸங்கீர்த்தனம் அவஶ்யமாகும்.] என்று காலையில் எழுந்திருந்தவுடன் நாம ஸங்கீர்த்தனம் செய்ய வேண்டியது அவஶ்யம் என்று காட்டப்பட்டது.

ஸமுத்₃ரக₃ாபக₃ாதே₃வக₂ாதவாபீஹ்ரத₃ாஶ்ரயே ।
ஸ்நாயாத் ஜலேऽந்யதே₃வாநாம ஸம்ஸர்கக₃பரிவர்ஜிதே ॥
ஸர்வைஸ்ஸமஸேவிதே ஸத்₃பி₄: த்₃ருஷ்டதோ₃ஷவிவர்ஜிதே ।
விஶுத்₃த₄தீரபூ₄ப₄ாகே₃ ஸ்நாயாத லகு₄நி வாரிணி ॥
[2-21, 22]

[வேறு தே₃வர்களுக்கு உரிமைப்படாதவையான, கடலைச் சென்றடையும் நதி₃, தே₃வர்களால் வெட்டப்பட்ட குளங்கள். பொய்கைகள் முதலானவற்றின் நீரில் குளிக்கவேண்டும். நல்லோர்களால் உபயோகிக்கப்படுவதாய், இம்மையில் தோ₃ஷத்தை விளைக்காததாய்,

**(ப்ரத்யக்ஷதோ$_3$ஷமற்றதாய்) பரிஶுத்$_3$த$_4$மான கரையுடையதான சிறு நீர்நிலையிலும் குளிக்கலாம்] என்று ஸ்நாநம் செய்யத்தக்க நீர்நிலை களைக் குறிக்கும்போது, அது தே$_3$வதாந்தர ஸம்ப$_3$ந்த$_4$மற்றதாயிருக்க வேண்டும் என்று கூறியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது.**

ஆஸநாத்$_3$யைர்யதா$_2$ஶக்தி ஸமப்$_4$யர்ச்ய ஜக$_3$த்$_3$கு$_3$ரும।
த்$_4$யாத்வா க$_3$ங்கா$_3$ம ஹரே: பாத$_3$ாத் பதமாநாம் ஸவமூர்த$_4$நி॥
பவித்ராத்$_3$யந்தகாப்$_3$லிங்க$_3$மந்த்ரைஸஸிஞ்சேத் கராத் கிரந்।
த்$_4$யாயந்நேவ பரம ப்$_3$ரஹ்ம யதா$_2$ஶக்தி நிமஜ்ஜ்ய ச।'
[2-37, 38]

**[லோகநாத$_2$னை எம்பெருமானை ஆஸநம் முதலானவற்றை ஸமர்ப் பித்து இயன்றவரையில் பூஜித்து, அவனுடைய திருவடியிலிருந்து க$_3$ங்கை$_3$ தன் தலையில் விழுவதாக தியானித்து, ''பவித்ரம்'' என்று தொடங்கும மந்திரத்தை முடிவில் கொண்ட ஜலத்தைச் சொல்லும் வேத$_3$மந்திரங்களைச் சொல்லிக்கொண்டு, கைகளால் நீரை இறைத்துக்கொண்டு, இயன்றவரையில் நீரில் மூழ்கி பரப்$_3$ரஹ்ம மாகிற அவனை தியானித்துக்கொண்டு ஸ்நாநம் செய்யவேண்டும்.] என்று ஸ்நாநம் செய்யவேண்டிய முறையும் விளக்கப்பட்டது.**

புண்யக்ஷேத்ரஸமுத்$_3$பூ$_4$தாம ம்ருத$_3$மாதா$_3$ய வைஷ்ணவீம।
ப்ரணவாத்$_3$யேந மூலேந கர்மாரம்ப$_4$ம் புநர்ஜபேத்॥
ஆஹ்ருத்யாம்பு$_3$ பவித்ரேண க்ருத்வா ஸவ்யகரோத$_3$ரே।
கர்மாரம்பே$_4$ண மந்த்ரேண மருத$_3$மாலோட$_3$யேத தத:॥
ப்$_3$ரஹ்மணு ததஸமீக்ருதய த்$_4$யாயேத் தே$_3$வம் ஸநாதநம்।
ப்ரதே$_3$ஶிந்யா ஸமாதா$_3$ய கிஞ்சித் ஶிரஸி தா$_4$ரயேத்॥
லலாடபா$_3$ஹுஹ்ருத$_3$யேஷவார்ஜவேந ப்ரதீ$_3$பவத்।
க்ருத்வோர்த்$_4$வபுண்ட்$_3$ராந் நாம்நாம ச சதுர்ணும
ந்யாஸமாசரேத்॥
படே$_2$த் த்$_3$வாத$_3$ஶகம நாம்நாம் தத்தத்ஸ்தா$_2$நேஷு
யோ த்$_3$விஜ:।
ப$_4$வேத் ஸ்நாநப$_2$லம தஸ்ய ம்ருதா$_3$ தஸ்ய தி$_3$நே தி$_3$நே॥
தத ஆசமய விதி$_4$வத் அபி$_4$ஜ்ஞாதீ$_3$மஶ்ச தர்ப்பயேத்।
நமோந்தை: ப்ரணவாத்$_3$யைஶ்ச பித்ருணும்
கேவலைஸ்ஸ்வகை:॥
சதுர்மந்த்ரேண ஸமப்ரோக்ஷய பீத்வா தேநாபி$_4$மந்த்ரிதம।
ஜலமாசம்ய மூலேந த$_3$த$_3$யாதா$_3$ர்க$_4$யம் பராத்மநே॥

மர்த்யகூ₂ாதேऽபி வா ஸ்நாயாத் அத்₃ப்₄ய உத்₃த்₄ருத்ய
தந்ம்ருத₃ம் ।
த்₄யாத்வா க்ஷீரார்ணவம் தச்ச நித்யம் ஶிஷ்டநிஷேவிதம்॥...
ஆரநாளம் ந ஸேவேத கத₃ாசித ப₄க₃வதபர: ।
ஸுராகல்பம ஹி தத ஜஞேயம தஸமாத் யத்நேந வர்ஜயேத்॥
[2-42...49, 57]

[புண்யக்ஷேத்ரத்திலிருந்து உண்டான விஷ்ணு ஸம்ப₃ந்த₄முள்ள மண்ணை எடுத்து, ப்ரணவத்தை முதலாகக்கொண்ட மூலமந்திரத்தால், ம்ருததிகா ஸ்நாநமாகிற கர்மத்தைத் தொடங்குவதற்காக ஜபிக்கவேண்டும். பவித்ரத்தால் நீரை எடுத்து இடதுகையின் நடுவில் வைத்து, முற்கூறிய மூலமந்திரத்தால் மண்ணைக் குழைக்கவேண்டியது. வேதமந்திரத்தால் அதை ஸமமாகச் செய்து, பழையோனை எம்பெருமானை தியானிக்கவேண்டும். ஆள்காட்டி விரலாலே சிறிது மண்ணை எடுத்து, தலையில் த₄ரிக்கவேண்டும். பிறகு, நெற்றியிலும், கைகளிலும், நெஞ்சிலும் நேராக தீ₃பம்போலே மண்ணை த₄ரிக்க வேண்டும். ஊர்த்₄வபுண்ட்₃ரமாக முற்கூறிய நாலு இடங்களிலும் த₄ரித்து, (வாஸுதே₃வன் முதலான) நாலு வ்யூஹமூர்த்திகளுக்கும் அவற்றில் ந்யாஸத்தைச் செய்யவேண்டும். தி₃னந்தோறும் பன்னிரண்டு ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை அவ்வவற்றிற்குரிய இடங்களில் த₄ரித்து, கேஶவன் முதலான பன்னிருநாமங்களை அவற்றில் அநுஸந்தி₄ப்பவனுக்கு,தினந்தோறும் ம்ருத்திகாஸ்நாநம்செய்த ப₂லன் ஏற்படுகிறது. அதன்பிறகு முறைப்படி ஆசமநம்செய்து,தே₃வரிஷி தர்ப்பணம் செய்யவேண்டும். ப்ரணவத்தை முதலிலும், நமஸ்ஸை இறுதியிலும் கொண்ட பித்ருமந்த்ரங்களாலே பித்ருதர்ப்பணத்தையும் செய்ய வேண்டும். வ்யூஹமந்த்ரங்களாலே ப்ரோக்ஷித்துக்கொண்டு, அதனுல் மந்திரிக்கப்பெற்ற நீரைப்பருகி ஆசமநம் செய்து, மூலமந்திரத்தினுல் பரமாத்மாவுக்கு அர்க்₄யமளிக்கவேண்டும். மனிதர்களால் வெட்டப்பட்டதாய், நல்லோர்களால் எப்போதும் உபயோகி₃க்கப் படுவதான நீர்நிலையைத் திருப்பாற்கடலாக தியானித்து, அதன் நீரிலிருந்து மண்ணை எடுத்து முற்கூறியபடி அதிலும் ம்ருத்திகா ஸ்நாநம் செய்யக்கடவன். ப₄க₃வானிடம் ஈடுபட்டவன் – கஞ்சி, அல்லது புளித்த நீரை ஒருபோதும் உபயோகி₃க்கலாகாது. அது கள்ளுக்கு ஸமானமானதன்றோ. ஆகையால் அதை முயன்ருகிலும் விலக்கவேண்டும்.] என்று ம்ருத்திகாஸ்நாநம் செய்யும் முறையும் விளக்கப்பட்டது.

ந குர்யாத3ார்த்3ரவஸ்த்ரேண கர்ம ப4ாக3வதம் பு3த4: ।
ந த3க்ஷிணாமுகோ2ா஽ஶுத்3த4: பைஶாசம் தது3த்3ாஹ்ருதம் ॥
[2-59]

[அறிவாளியானவன் ப4க3வத்ஸம்ப3ந்த4முள்ள கர்மத்தை ஈரத்துணி யுடுத்தவனாய்ச் செய்யலாகாது. தெற்குத்திக்கைப் பார்த்திருப்பவனாகவும், ஶுத்3தி4யற்றவனாகவும் அதைச் செய்யக்கூடாது. செய்தால். அது பிஶாசங்களுக்கு உரியதாகச் சொல்லப்படுகிறது.] என்று ப4க3வானுக்குரிய கர்மங்களைச் செய்யும்போது, பூ4தப்ரேதபிஶாசங்களுக் குரிய கர்மங்களைச் செய்யும் முறையில் செய்யலாகாது என்று நிஷேதி4க்கப்பட்டது.

பூஜாயாம் ஸ்நாநகாலே ச போ4ஜநே ஜபகர்மணி।
அவைஷ்ணவாநாம் ஜந்தூநாம் த3ர்ஶநாத்3யம் விவர்ஜயேத்॥
நித்யம் தீர்த்தே2ாத3கஸ்நாயீ தர்ப்பயந் தத்ர தஜ்ஜலை: ।
ஶ்ரத்3த4யா ப4க3வந்மந்த்ரை: ஸித்3த4: ஸ்யாத3சிராத் த்3விஜ:॥
[2-63, 64]

[பூஜையின்போதும், ஸ்நாநகாலத்திலும், உண்ணும்போதும், ஜபிக்கும் போதும், விஷ்ணுஸம்ப3ந்த4மற்ற ஜந்துக்களைப் பார்ப்பது முதலியவற்றை விலக்கவேண்டும். இருபிறப்பாளனாயிருப்பவன் தினந்தோறும் (ப4க3வத்3 ப4ாக3வதஸம்ப3ந்த4ம் பெற்று) புனிதமான நீரில் குளிப்பவனாய், அந்த நீரைக்கொண்டே ப4க3வந்மந்திரங்களாலே ஶ்ரத்3தை4 யுடன் தர்ப்பணம் செய்பவனானால் விரைவிலேயே மோக்ஷஸித்3தி4 யடைகிறான்.] என்று மோக்ஷத்தை விரும்புகிறவன் விலக்கவேண்டியவையும், செய்யவேண்டியவையும் காட்டப்பட்டன.

அபி4க3ச்சே2ச்ச தே3வேஶம் ஸுஸ்நாதஸ்ஸோர்த்4வ புண்ட்3ரக: ।
ஸுப்ரக்ஷாளிதபாத3ஶ்ச ஸ்வாசாந்த: ஸம்யதேந்த்3ரிய: ॥
[2-66]

[நன்கு குளித்து ஊர்த்4வபுண்ட்3ரமிட்டுக்கொண்டவனாய், கால்களை நன்கு விளக்கிக்கொண்டவனாய், நன்கு ஆசமனம் செய்தபின், புலன்களை அடக்கிக்கொண்டு தே3வர்தலைவனை அணுகவேண்டும்.] என்று அபி4க3மநாராத4னத்தின் பொருட்டுப் பரமபுருஷனை அணுக வேண்டிய முறை விளக்கப்பட்டது.

ந ரக்தக்ருஷ்ணமலிநம் வாஸோऽபி பரிதா₄ய ச।
ந ச ஶங்கயகர: ஶஸ்த்ரீ ந யாயாத் ப₄க₃வத₃க்₃ருஹம ||
ப்ரணம்ய த₃ண்ட₃வத₃பூ₄மௌ உத்த₂ாயோத்த₂ாய தந்மநா:|
ஸ்வாத்₄யாயவத₃ந: குர்யாத் அஷ்டாங்கே₃ந நமஸ்க்ரியாம||
நமஸ்குர்வந் ப்ரதிதி₃ஶம் வாக்₃யதோ த்₄யாநதத்பர:।
அஸமஸக்தகர: கைஶ்சித மந்த₃ம் குர்யாத் ப்ரத₃க்ஷிணம||
த்₃விசதுஷ்ஷட்₃த₃ஶாஷ்டாத்₃யை: தே₃வம் குர்யாத்
ப்ரத₃க்ஷிணம।
தே₃வஸ்ய நிகடே கார்யம ஸத்₃பி₄ர்ஜாநுப்ரத₃க்ஷிணம் ||
சக்ரவத் ப்₄ராமயேத் நாங்க₃ம பருஷட₂ப₄ாக₃ம ந த₃ர்ஶயேத்|
ஸந்நிதௌ₄ தே₃வதே₃வஸ்ய ந சோச்சை: ப்ரலபேத் தத₂ா ||
நித₄ாய த₃ண்ட₃வத் தே₃ஹம் ப்ரஸார்ய சரணௌ கரௌ।
ப₃த்₃த்₄வா முகுளவத் பாணீ ப்ரணமோ தண்ட₃ஸமஜ்ஞித: ||
பாதௌ₃ ஶிரஸ் தத₂ா ஹஸ்தௌ நிகுஞ்ச்ய முகுளாகருதீ।
மநோபு₃த்₃த்₄யபி₄மாநைஶ்ச ப்ரணமோऽஷ்டாங்க₃-
ஸம்ஜ்ஞித: ||...
ஸர்வத்ர த்₃ருஷ்ட்வா தே₃வேஶம் ஜிதந்த இதி மந்தரகம।
த்₃வாத₃ஶார்ணம் ஜபேந்மந்த்ரம பீ₄தவத் பூர்வமாநத: ||
மத்க்ருதாநி ச கர்மாணி மதீ₃யமஹமசயுத।
தவைவ ந மமேதீஷ்டம் நமோ ப₄க₃வதேதி ச ||
ப்ரத₃க்ஷிணநமஸ்காரஜபத்₄யாநார்ச்சநஸ்துதீ:।
தத்கர்ம தத்₃கு₃ணேத்₃கே₄ாஷை: விநா நாதராங்யத₃ாசரேத் ||
பாத₃ப்ரஸாரணம வ்யாக்₂யாம் விஷ்டரம் சாவகுண்ட₂நம।
ந குர்யாத் ப₄க₃வத்₃கே₃ஹே ஹாஸம கண்ட₂த்₄வநிம் தத₂ா ||
பே₄ாஜநம் ஸ்வாபமுத்₃கே₃ாஷம் தாமபூ₃லம் கேஶவேஶாத₄நம।
சூ₂த்ராத்₃யம் ச தத₂ாந்யாஶ்ச ந குர்யாதுல்ப₃ணக்ரியா: ||
ப்ரத₃க்ஷிணே ப்ரணமே ச பூஜாயாம ஹவநே தத₂ா।
ந கண்ட₂க₃தவஸ்த்ரஸ்ஸ்யாத் த₃ர்ஶநே கு₃ருதே₃வயோ: ||
ப₄க₃வந்மந்தி₃ரே வ்ருத்₃த₄ாந் பூஜ்யாநபி விஶேஷத:।
விநா ப₄ாக₃வதஶ்ரேஷ்ட₂ாந் ப்ரணமாத்₃யைர் ந சார்சசயேத்||
கு₃ரோர்க்₃ருஹே தே₃வக்₃ருஹே புஷ்பவாட்யாம் கூ₂வாம்
குலே।

க்ருபணம சோலபு₃ணம் கர்ம வர்ஜயேத₃பி ஸம்ஸதி₃ ||
ஜப்த்வா ऽபி₄க₃மநம மந்த்ரம் ஆசசயித்வா யதா₂விதி₄ |
ஆஸநார்க₄யாதி₃பி₄ர்பே₄ாகை₃: ப₄க்த்யா பரமபாவனை: ||
அபி₄க₃மய ஜக₃ந்நாத₂ம த்₄யாயந்நேவ ஸநாதநம் |
ஜபேத் யதா₂பு₃லம ப்ராத: ஸஹஸ்ரஶதஸங்க்₂யயா ||

[2-69...75, 77...86]

[சிவந்த, அல்லது கறுத்த அல்லது அழுக்கான துணியை உடுத்தோ, வெறுங்கையனாகவோ, ஆயுத₄மேந்தியவனாகவோ எம்பெருமானுடைய திருக்கோயிலுக்குப் போகக்கூடாது. த₃ண்ட₃ம்போலே பூ₄மியில் விழுந்து எம்பெருமானிடமே நெஞ்சு செலுத்தி, வேத₃மோதியவனாய், பலகால் எழுந்து ஒவ்வொரு திக்கிலும நமஸ்காரம் செய்பவனாய், அஷ்டாங்க₃ நமஸ்காரம் செய்யவேண்டும். பிறகு, மௌனத்தோடு த்₄யானத்தில் ஈடுபட்டு, பிறரோடு கைக்கோர்த்துக் கொள்ளாமல், மெள்ள நடந்து ப்ரத₃க்ஷிணம் செய்யவேண்டும். இரண்டு, நாலு, ஆறு, எட்டு, பத்து முதலான இரட்டைப்படையாக எம் பெருமானை ப்ரத₃க்ஷிணம் செய்யவேண்டும். நல்லோர்கள் எம்பெருமானுக்கு அருகில் முழந்தாளால் ஊர்ந்து ப்ரத₃க்ஷிணம் செய்யவேண்டும். தே₃வதே₃வனுடைய ஸந்நிதி₄யில் தே₃ஹத்தைச் சக்கரம்போலே சுழற்றக்கூடாது. உடலின் பின்பகுதியைக் காண்பிக்கலாகாது. உரக்கக் கூச்சலிடலாகாது. த₃ண்ட₃ம்போலே உடலைக் கீழே விழவிட்டு, கைகால்களை நீட்டி, இருகைகளையும் மொட்டுபோலே கூப்புவது த₃ண்ட₃ ப்ரணமம் எனப்படுகிறது. இரண்டு கால்களையும், தலையையும், இரு கைகளையும் மொட்டுப் போலே வணக்கி, மனம், பு₃த்₃தி₄, அபி₄மானங்களையும் ஒடுக்குவதே அஷ்டாங்க₃ ப்ரணமம் எனப்படுகிறது...தே₃வர்தலைவனை எங்கும் கண்டு, ஜிதந்தே என்னும் ருக்₃வேத₃கி₂ல மந்திரத்தையும், த்₃வாத₃ஶாக்ஷர மந்திரத்தையும், ப₄யத்தோடு முன்சொன்ன எண்ணிக்கையில் ஜபிக்கவேண்டும். "அச்யுதனே! என்னால் செய்யப்பட்ட எல்லாச் செயல்களும், என்னுடைமைகளும், நானும் உன் உகப்புக்கே ஆனவையேயொழிய என் ஆநந்த₃த்திற்காக ஏற்பட்டவையல்ல" என்று எண்ணி, "நமோ ப₄க₃வதே" என்று அநுஸந்தி₄த்துக்கொண்டு, ப்ரத₃க்ஷிணம் நமஸ்காரம், ஜபம், த்₄யாநம், அர்ச்சனம், துதிகள் முதலிய ப₄க₃வத் கர்மங்களை — அவனுடைய கு₃ணஸங்கீர்த்தனம் தவிர வேறு எதிலும் ஈடுபடாமல் அநுஷ்டி₂க்கவேண்டும். எம் பெருமானுடைய ஸந்நிதி₄யில் — காலை நீட்டிக்கொண்டிருப்பது,

ஊர்வம்பு பேசுவது, ஆஸநமிட்டுக்கொள்வது, முக்காடிடுவது, உரக்கச்சிரிப்பது, கூச்சலிடுவது ஆகியவற்றைச் செய்யலாகாது. உண்பது, உறங்குவது, முழங்குவது, தாம்பூலமிட்டுக்கொள்வது, மயிரைச் சீர்திருத்துவது, குடை பிடித்துக்கொள்வது முதலிய ஸ்வார்த்த₂மான செயல்களைச் செய்யலாகாது. ப்ரத₃க்ஷிணம் செய்யும் போதும், வணங்கும்போதும், ஆராத₄னம் செய்யும்போதும், ஹோமம் செய்யும்போதும், ஆசார்யனையும், எம்பெருமானையும் காணும் போதும் உத்தரீயத்தைக் கழுத்தில் அணிந்திருக்கக்கூடாது. ப₄க₃வத்₃ ப₄க்தியில் தலைசிறந்தவர்களைத் தவிர மற்றவர்களை, மிகவும் பூஜிக்கத் தக்க முதியவர்களைக்கூட — நமஸ்காரம் முதலியவற்றைச்செய்து ப₄க₃வத்ஸந்நிதி₄யில் ஆராதி₄க்கக்கூடாது. ஆசார்ய க்₃ருஹத்திலும், எம்பெருமானுடைய ஸந்நிதி₄யிலும், பூந்தோட்டத்திலும், பசுக்களின் கூட்டத்தின் நடுவிலும், ஸபை₄ நடுவிலும், கொடிய ட₃ாம்பி₄க கார்யங்களை விலக்கவேண்டும். மந்திரத்தை ஜபித்துவிட்டு, முறைப் படி அபி₄க₃மநகாலத்தில் ஆராத₄னம் செய்துவிட்டு. பரமபாவன மான ஆஸநம், அர்க்₄யம் முதலான உபசாரங்களைச் செய்து ஜக₃ந் நாத₂னை ஆராதி₄த்து, பழையோனை அவனை தியானித்துக்கொண்டே, காலைவேளையில் நூறு, அல்லது ஆயிரம் என்னும் கணக்கில் இயன்ற வரையில் ப₄க₃வந் மந்திரத்தை ஜபிக்கவேண்டும்.] என்று, ப₄க₃வத் ஸந்நிதி₄யில் செய்யவேண்டிய ப்ரத₃க்ஷிணம், நமஸ்காரம், ஜபம் முதலானவற்றின் முறைகளும், விலக்கவேண்டிய காரியங்களும் விளக்கப்பட்டன.

ஆபீட₂ாங்மௌலிபர்யந்தம் பஶ்யத: புருஷோத்தமம் ।
ஜபத: பாதகாங்யாஶு நஶ்யந்தி ஸப₂லா: க்ரியா: ॥ [2-89]

[பீட₂த்திலிருந்து தொடங்கி, கிரீடம் வரையில் புருஷோத்தமனை ஸேவித்து, அவனது மந்திரத்தை ஜபிப்பவனுடைய பாபங்கள் உடனே அழிகின்றன. அவனுடைய செயல்களெல்லாம் பயனுடையவை யாகின்றன.] என்று, முற்கூறியபடி நடப்பவனுக்குக் கிடைக்கும் ப₂லனும் பேசப்பட்டது. இனி, மூன்றுமத்தியாயத்தில் உள்ள ஸார மான ஶ்லோகங்களைக் காண்போம்.

உபாத₃ாநவிதி₄யைக் கூறவேண்டும் என்று முனிவர்களால் கேட்கப்பெற்ற ஶாண்டி₃ல்ய முனிவர், மூன்றும் அத்தியாயத்தில் அதைக் கூறத் தொடங்குகிறார்.

மண்டபாநி ஸுரமயாணி பத்₃மோத்பலவநாநி ச।
க்ரீடா₃ர்த₂ம் தே₃வகீஸூநோ: ஆட்₄யோ ப₄க்த்யா
ப்ரகல்பயேத்॥
துலஸீவாடிகா யத்ர யத்ர வா கமலாலய:।
பஞ்சகாலபரா யதர தத்ரஸ்தே₂ா ப₄க₃வாந் ஹரி:॥
ஸதூ₃ர்வைரக்ஷதைர்நித்யம அப்₄யாச்ய குஸுமத்₂ருமாந்।
துளஸீம் சாஹரேத பதரபுஷ்பாத்₃யாந் வாக்₃யத: ஶுசி:॥
ஸவயம ஸம்வர்த₄ய துளஸீம் த்₃வாத₃ஶாக்ஷரவித்₃யயா।
யேऽர்ச்சயந்தி ஜக₃ந்நாத₂ம் ஶ்வேதத்₃வீபம் ப்ரயாந்தி தே॥
த₃ணட₃ப்ரணமமபி வா காரயேத் புஷ்பவாடிகாம்।
அபி வா துளஸீமாத்ரம் க்ருதக்ருத்யஸ்ஸசேதந:॥
அஙகயேத் ஶஙக₂சக்ராப்₄யாம் சூதாத்₃யாம்ஶ்சமப-
காதி₃காந்॥
துளஸீவாடிகாம குர்யாத் ஶங்க₂சக்ராம்பு₃ஜாக்ருதிம்।
வருக்ஷகு₃ல்மலதாதீ₃நாம் அச்யுதாராமஜந்மநாம்॥
குர்யாத் நாமாநி தே₃வஸ்ய தே₃வ்யா லக்ஷ்மயாஸ்தத₂ா
ஹரே:
ஈஹமாநஶ்சரேந்நித்யம் கத₂ாசிந்நாலஸோ ப₄வேத்॥
[3-9...16]

[தே₃வகியின் பிள்ளையான கண்ணன் விளையாடுவதற்கு உறுப்பாக— அழகிய மண்டபங்களையும், தாமரை, நெய்தல் முதலிய சிறந்த பூக்கள் மலரும் தோட்டங்களையும் பணமுள்ளவன் ப₄க்தியுடன் அமைக்கவேண்டும். அருகம்புல், அக்ஷதை முதலியவற்றைக்கொண்டு தினந்தோறும் பூஞ்செடிகளை அர்ச்சித்து, மௌனமுடையவனாய், பரிஶுத்₃த₄னாய் துளஸியைப் பறிக்கவேண்டும். துளஸியைத்தாமே வளர்த்து த்₃வாத₃ஶாக்ஷரமந்திரத்தை அநுஸந்தி₄த்து ஜக₃ந்நாத₂னை ஆராதி₄ப்பவர்கள் ஶ்வேதத்₃வீபத்தை அடைகிறார்கள். (துளஸியால் அர்ச்சனம் செய்யமுடியாவிடில்) பூந்தோட்டத்தில் த₃ண்ட₃ப்ரணமமாவது செய்யவேண்டும். அறிவாளியாயிருப்பவன் துளஸியை மாத்திரமாவது த₃ண்ட₃ப்ரணமம்செய்து வணங்கினால் கடமையைச் செய்தவனாகிறான். மாமரம் முதலிய பழம்தரும் மரங்களையும், சம்பகம் முதலான பூத்தரும் மரங்களையும் ஶங்க₂ம், சக்ரம் முதலானவற்றால் அடையாளமிடவேண்டும். ஶங்க₂ம், சக்ரம், தாமரை ஆகியவற்றின் அமைப்பில் துளஸித்தோட்டத்தை அமைக்கவேண்டும்.

அச்யுதனுக்குரிய தோட்டத்தில் விளையும் மரம் செடி கொடிகளுக்கு எம்பெருமானுடைய திருநாமங்களையும், பெரியபிராட்டியாருடைய திருநாமங்களையுமே வைக்கவேண்டும். அவற்றைப் போஷிப்பதில் எப்போதும் முயற்சியுடையவனாயிருக்கவேண்டும். ஒருபோதும் சோம்பல் கொள்ளலாகாது.] என்று ப$_4$க$_3$வானுக்கு அவரவர் ஶக்திக்குத் தக்கபடி கோயில், நந்த$_3$வனம் முதலானவற்றை அமைத்து அவற்றைப் பரிபாலிக்கும் முறையும் விளக்கப்பட்டது.

ப$_4$க$_3$வந்தப தத$_2$ா விப்ராந் பஞ்சகாலபராயணாந் |
ப$_4$க$_3$வந்மந்தி$_3$ரம் சைவ புண்யதீர்த்த$_2$ாநி ஸர்வதா$_3$ ||
த்$_3$விஷதஶ்சைவ நாத$_3$த்$_3$யாத் நிக்ஷிபதஸ்யாபஹாரிண: |
ப்ராதிலோமயாச்ச ஜாதேப்$_4$ய: தத$_2$ா சாந்ருதஜீவிந: ||
உத்$_3$யதம் த்வபி நாத$_3$த்$_3$யாத அந்யதே$_3$வாவலம்பி$_3$ந: |
க்ரமாக$_3$தைர் த$_4$நைர்வாபி ஸ்வக்ஷேத்ராராமஸம்ப$_4$வை: |
ப$_4$க$_3$வத்$_4$ப$_4$க்திபூதேப்$_4$யோ விப்ரேப்$_4$யோ யாசிதைஸ்து வா ||
[3-32...35]

[ப$_4$க$_3$வானையும், பஞ்சகாலபராயணர்களையும், ப$_4$க$_3$வானுடைய கோயிலையும், புண்யதீர்த்த$_2$ங்களையும் துவேஷிப்பவர்களிடமிருந்தும், கொடுத்து வைத்ததை அபஹரிப்பவர்களிடமிருந்தும், ப்ரதிலோம ஜாதியிற் பிறந்தவர்களிடமிருத்தும், பொய்சொல்லிப் பிழைப்பவனிடமிருந்தும் எதையும் வாங்கக்கூடாது. மற்ற தே$_3$வதைகளிடம் ஈடுபட்டவனிடமிருந்து—தனது வயல், தோட்டம் முதலானவற்றிலிருந்து நல்ல வழியில் ஸம்பாதி$_3$க்கப்பட்ட பணத்தைக்கொண்டும், ப$_4$க$_3$வானிடம் ப$_4$க்தியினால் பரிஶுத்$_3$த$_4$ப்படுத்தப்பட்ட அந்தணர்களிடமிருந்து யாசித்துப் பெறப்பட்ட பணத்தைக்கொண்டுங்கூட, உயர்ந்த பொருளாயிருப்பதையும் வாங்கக்கூடாது.] என்று எவரிடமிருந்து பொருளைப் பெறக்கூடாது என்று காட்டப்பட்டது.

ப$_4$க$_3$வத்$_3$ப$_4$க்தியுக்தேப்$_4$யோ யத$_2$ாஶ்வஸ்தநிகோ ப$_4$வேத் |
உபாத$_3$ாய யத$_2$ாலாப$_4$ம் கர்மாரம்ப$_4$ம ப்ரயோஜயேத் ||[3-42]

[ப$_4$க$_3$வானிடம் ப$_4$க்தியுடையவர்களிடமிருந்து அன்றன்றைக்கு வேண்டிய அளவுக்கு மாத்திரம் பெற்று, பெற்றதைக்கொண்டே மேல் கர்மத்தைத் தொடங்கவேண்டியது.] என்று பொருளை ஸம்பாதி$_3$க்கவேண்டிய முறையும் காட்டப்பட்டது.

அலாபே4 ஸர்வபே4ாக3ாநாம் உத3கேநாபி பூஜித:।
ப்ரயச்ச2த்யமலம லோகம் ப4க்திபூதாந்தராத்மநாம்॥
ஜாதயா ஶௌத்3த4வமஶே து பா4ர்யயா ஸ்வாநுகூலயா।
ஸத்3ப4க்திபூதயா நித்யம காரயேத் த்3ரவ்யஸாத4நம்॥
ஶாகாமபு3பி4ாவா ந்யாயாப்தை: ப4க்த்யா ஸம்பூஜயேத்
ஹரிம॥ [3-52,...54]

[எம்பெருமானுக்கு எல்லா வித4மான பே4ாக்3யவஸ்துக்களேயும் பெற்று அளிக்கமுடியாவிடில், தீர்த்த2த்தைக்கொண்டு ஆராதி4க்கப் பட்டாலும், ப4க்தியுடைய நெஞ்சினர்க்கு எம்பெருமான் அப்ராக்ருத லோகத்தை அளிக்கிருன். நல்ல குடிப்பிறப்பை உடையவளாய், தனக்கு அநுகூலேயாயிருப்பவளாய், நல்லோர்களிடம் ப4க்தியினுலே பரிஶுத்3தி4பெற்றிருப்பவளான மனேவியைக்கொண்டு எம்பெருமானுக் குரிய சமையல் முதலியவற்றைச் செய்யவேண்டும். நியாயமான வழியில் பெற்ற காய்கறிகள், தீர்த்த2ம் ஆகியவற்றைக் கொண்டாவது ப4க்தியோடு ஹரியை ஆராதி4க்க வேண்டும்.] என்று—"பத்ரம் புஷ்பம்" என்று கீ3தையில் கண்ணன்தானும் "பரிவதில்" திருவாய்மொழி யில் நம்மாழ்வாரும் அருளிய ரீதியில் எம்பெருமான் ஆராத4னேக்கு எளியன், அன்புக்கே வசப்படுபவன் என்று காட்டப்பட்டது.

ஸதீநாம் யோஷிதாம தே3ஹோ யதே2ாபகரணம் ப4வேத்।
ப4ர்த்ருணும், ப4க3வத்3ப4க்ததே3ஹ: தத்3வத் ஜக3த்3கு3ரோ:॥
[3-62]

[பதிவ்ரதையான மனேவியின் ஶரீரம் கணவனுக்கு எப்படி பே4ாகே2ாப கரணமாகிறதோ, அப்படியே, பா4க3வதர்களுடைய திருமேனியும் லோகநாத2னுக்கு பே4ாகே3ாபகரணமாகிறது.] என்று எம்பெருமா னுக்கும், பா4க3வதர்களுக்குமுள்ள ப4ர்த்ருபா4ர்யா ஸம்ப3ந்த4மும் காட்டப்பட்டது,

மார்த்த3வம் ஹ்ரீ: த3யா க்ஷாந்தி: அத்3ரோஹ:
ஸர்வஜந்துஷு।
ஏவமாதி3கு3ணு: பும்ஸாம் யதா3ா ஸ்யு: ஸத்வஸம்ப4வா:॥
ஜாநீயாத் யோகஃயமாத்மாநம் ததா3ா பா4க3வதே விதெ4ள।
உத்ஸ்ருஜ்ய ப4க3வத்கர்ம பா3ாஹ்யகர்மபராயண:॥
குடும்ப3ஸகதோ மூட4ாத்மா ராஜஸோ நேஹ ஸம்மத:।
ரஜஸா தமஸா வாபி யோ யதா3ா கலுஷீக்ருத:॥

அமேத்₄யத்₃ரவ்யவந்நார்ஹ: தத₃ா கர்மணி வைஷ்ணவே ||
ஏவம் ஸத்₃கு₃ணஸம்பந்நா மஹாபா₄ாக₃வதப்ரியா: ।
குடும்பி₃நோபி கர்த்தவ்யம் கர்ம குர்யுரதந்த்₃ரிதா: ||
உத்த₂ாய பூர்வம் க₃ருஹிணீ ஸ்நாதா யதமாநஸா: ।
ஸ்நுஷாது₃ஹித்ருபுதராத்₃யாந் யத₂ார்ஹம
ஶிக்ஷிதாம் நயேத் ||
ஊர்த்₄வபுண்ட்₃ரத₄ரா: ஶுத்₃த₄ா: வஸ்த்ராப₄ரணபூ₄ஷிதா: ||
ஸ்வாசாந்தா: ப்ரயதா தே₃வமபி₄க₃ச்சே₂யுராத்₃ருதா: ।
த்ரிஸந்த்₄யம காரயேத் ப₃ாலாந் ப்ரணமம் தே₃வபாத₃யோ:||
புத்ர: ப்ரேஷ்ய: தத₂ா ஶிஷ்ய: இத்யேவம் ச நிவேத₃யேத ||
க்₃ருஹிணீப்ரமுக₂ாஸ்ஸர்வா: கூ₃ாயந்த்ய: புருஷோத்தமம் ।
ப₃ாலக்ரீட₃ாதி₃சரிதை: கர்ம குாயுர தந்த்₃ரிதா: ||
பஶுபுத்ராதி₃கம் ஸாவம் க₃ருஹோபகரணநி ச ।
அங்கயேத் ஶங்க₂சக்ராப்₄யாம் நாம குர்யாச்ச வைஷ்ணவம்।
காரயித்வா ஸுவர்ணேந பஞ்சாயுத₄க₃ணம் ஹரே: ।
ப₃த்₄நீயாத் கண்ட₂தே₃ஶே து ப₃ாலாநாம் ஸூதிகாக்₃ருஹே ||
ந முத்₃ரயேத₃ாஸநாநி ஶயநாநி மஹீதலம் ।
ஸ்த₂ாபயேத் க்ஷேத்ரமத்₄யே து ஶிலாம சக்ராதி₃
முத்₃ரிதாம ||
முக்தாமணி ஸுவர்ணத்₃யை: கருத்வா சக்ராதி₃ பூ₄ஷணம் ।
யத₂ார்ஹம் பி₃ப்₄ருயுஸ்ஸாவே புமாமஸ: ஸ்த்ரீஜநோऽபி வா ||
வ்ருத்₃த₄ப₃ாலாதுராதீ₃நாம் பூர்வாஹ்ணே பே₄ாஜநம் ப₄வேத்।
யத₂ாப₃லம் ஸமப்₄யர்ச்ய ஸாக்₃நிம் தே₃வம ததோऽஶநம ||
[3-68...81]

[மென்மை, லஜ்ஜை, கருணை, பொறுமை, எந்தப் பிராணிக்கும் துரோகம் செய்யாமை முதலான ஸாத்விகமான நற்குணங்கள் தனக்கு உண்டாகும் பொழுதே பகவத₃ாராத₄னத்திற்குத் தன்னைத் தகுதிபெற்றவனாக அறியக்கடவன். ப₄க₃வானுக்குரிய காரியங்களை விட்டு வேறு காரியங்களில் ஈடுபட்டவனாய், குடும்பத்திலேயே பற்றுடையவனை அறிவிலி ரஜோகு₃ணம் மிக்கவனாகையால் ப₄க₃வத₃ாராத₄னத்திற்குத் தகுதிபெற்றவனல்லன். ரஜோகு₃ணம் அல்லது தமோகு₃ணத்தால் கலங்கிநிற்கும்போது, அஶுத்₃த₄த்₃ரவ்யம்போலே, அவன் ப₄க₃வதாராத₄னத்திற்குத் தகுதியற்றவன்

அவ்வண்ணமே நற்குணம் நிறைந்தவர்களாய், மஹாபா₄க₃வதர் களுக்கு இனியவர்களான குடும்பி₃களும் (நித்யம்) செய்யவேண்டிய ப₄க₃வதா₃ராத₄னத்தைச் சோம்பலில்லாமல் செய்ய வேண்டும். குடும்பத்தலைவியானவள் (தலைவனுக்கு) முன்னதாகவே எழுந்திருந்து, நன்கு குளித்து, மனத்தை அடக்கியவளாய், மணைட்டுப்பெண், பெண், பிள்ளை முதலானோரை அவரவர்க்குரிய முறையில் ஶா₂த்₃த₄ ராகச் செய்யவேணடும். அனைவரும் ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை த₄ரிப் பவர்களாய், ஶா₂த்₃த₄ராய், வஸ்திரம் ஆப₄ரணம் முதலியவற்றால் அலங்கரிக்கப்பெற்றவர்களாய், நன்கு ஆசமனம் செய்தவர்களாய், புலனடக்கமுள்ளவர்களாய், ஆத₃ரவோடு எம்பெருமானை (திருவா ராத₄னத்தின் பொருட்டு) அணுகவேண்டும். மூன்று அந்திப்போது களிலும் சிறுவர்களை எம்பெருமானுடைய திருவடிகளில் வணங்கச் செய்யவேண்டும். 'இவன் பிள்ளை' 'இவன் வேலைக்காரன்' 'இவன் ஶிஷ்யன்' என்று அவர்களை அறிமுகப்படுத்தி ஸமர்ப்பிக்கவேண்டும். குடும்பத்தலைவி முதலானோர் அனைவரும், (க்ருஷ்ண) பா₃லக்ரீடை₃ முத லான சரிதங்களைக் கூறிப் புருஷோத்தமனைப் பாடிக்கொண்டு, சோம்ப லில்லாமல் தத்தம் காரியங்களைச் செய்யவேண்டும். பஶு, புத்ரன் முதலான அனைவரையும், வீட்டிலுள்ள உபகரணங்களையும் ஶங்க₂ சக்ரங்களால் அடையாளம் செய்து, வைஷ்ணவமான திருநாமத்தை யும் வைக்கவேண்டும். ஹரியின் பஞ்சாயுத₄ங்களைப் பொன்னால் செய்வித்து, ப்ரஸவ அறையிலேயே குழந்தைகளுக்கு அவற்றைக் கட்டவேண்டும். (கால்படுமாகையால்) ஆஸநங்கள், படுக்கைகள், தரை முதலானவற்றை (ஶங்க₂சக்ரங்களால்) அடையாளம் செய்யக் கூடாது. வயலின் நடுவில் சக்ரம் முதலானவற்றால் அடையாளமிடப் பெற்ற திருவாழிக்கல்லை நடவேண்டும். முத்தாலேயோ, பொன் முதலானவற்றாலேயோ சக்ரம் முதலானவற்றை ஆப₄ரணங்களாகச் செய்து ஆண்களும், பெண்களுமாகிய அனைவரும் தக்கபடி த₄ரிக்க வேண்டும். கிழவர்கள், சிறுவர்கள், நோயாளிகள் முதலானோர்க்கு முற்பகலில் உணவளிக்கவேண்டும். அக்₃னியையும், எம்பெருமானை யும் ஶக்திக்கு அனுகு₃ணமாக ஆராதி₄த்து, அதற்குப் பிறகு உண்ணவேண்டும்.] என்று திருவாராத₄னம் செய்யவேண்டிய அதி₄காரிகள் யாரென்றும், அவர்கள் நடக்கவேண்டிய முறைகளும் காட்டப்பட்டது,

க₃ருஹோபகரணம ஸர்வம் முஸலோலூக₂லாதி₃கம் |
ப்ரக்ஷாலயேத் ஜக₃ந்நாத₂யாகே₃ாபகரணனி ச ||

யாக3ார்த்த2ம் தே3வதே3வஸ்ய பாகார்த்த2ம் சாம்பு3 பாவநம।
ஸ்த2ாபயேத பாத3ஹஸ்தாதி3ஶௌத்3த்4யர்த்த2ம் ச
ப்ருத2க பருத2க் ॥ [3-83, 84]

[உலக்கை, உரல் முதலான வீட்டிற்கு வேண்டிய உபகரணங்கள் அனைத்தையும், எம்பெருமானின் திருவாராத4னத்திற்கு உறுப்பான வட்டில்கள் முதலியவற்றையும் நீரால் விளக்கவேண்டும். எம்பெருமானுடைய திருவாராத4னத்திற்கும், சமையலுக்கும், கைகால்கள் விளக்குவதற்கும் பரிஶுத்3த4மான தண்ணீரைத் தனித்தனியாக வைத்திருக்கவேண்டும்.] என்று திருவாராத4னத்திற்கு வேண்டிய உபகரணஶுத்3தி4யும் விளக்கப்பட்டது.

ருத்3ராதி3வ்யபதே3ஶிங்ய: யாஶ்ச க3ாவ: தத3ங்கிதா: ।
பயஸதாஸாமகர்மண்யம லீட4ம யத்ஸவிஷைரபி ॥ [3-129]

[ருத்3ரன் முதலான மற்ற தெய்வங்களின் பெயரை உடையவையும், அவர்களது அடையாளங்களைக் கொண்டவையுமான பசுக்களின் பாலும், பாம்பு முதலான விஷஜந்துக்களால் தீண்டப்பெற்ற பாலும் திருவாராத4னத்திற்கு உதவாதது.] என்று திருவாராத4னத்திற்குப் பால் தர உதவாத பஶுக்களில் தே3வதாந்தர ஸம்ப3ந்த4முடையவற்றையும் எடுத்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

சந்த3ரஸூர்யோபராகே3 ச ப்ராதுர்ப4ாவதி3னேஷு ச ।
மாஸர்க்ஷேஷு ஸமர்க்ஷேஷு விஶேஷாராத4நம் ஹரே: ॥
[3-133]

[சந்திரஸூர்யக்3ரஹணங்களின்போதும், எம்பெருமானுடைய அவதாரதி3னங்களின்போதும், மாஸத்திருநக்ஷத்திரங்களிலும், வருஷ திருநக்ஷத்திரங்களிலும் எம்பெருமானுக்கு விஶேஷமான ஆராத4னம் செய்யவேண்டும்.] என்று விஶேஷதிருவாராத4னம் செய்யவேண்டிய காலம் காட்டப்பட்டது.

ஸூபக்வேஷு ச ஸர்வேஷு பரிம்ருஜ்யாமபு3நா க2லம ।
ஊர்த்4வபுண்ட்3ரைரலங்க்ருத்ய நயேத் யாக3ாலயம் ஹவி:॥...
ப்ரவிஶ்ய ப4க3வத்3கே3ஹம் தீ3பம ப்ரஜ்வாலய கே3ஹிநீ ।
காங்க்ஷந்தீ ப4ர்த்துராயாநம் திஷ்டே2த் ஸபரிசாரிகா ॥...
ப4க3வத்3ப4க்தியுக்தா ச தத2ா ப4ாக3வதப்ரியா ॥
[3-137, 139, 144]

[எல்லா உணவுகளும் சமைக்கப்பெற்றவுடன், நீரால் பாத்திரங்கள் எல்லாவற்றையும் துடைத்து, ஊர்த்₄வபுண்ட்₃ரத்தால் அலங்கரித்து, உணவைத் திருவாராத₄னம் செய்யவேண்டிய இடத்திற்கு எடுத்துச் செல்லவேண்டும்...குடும்பத்தலைவி எம்பெருமானது கோயிலினுள் நுழைந்து விளக்கை ஏற்றி, பரிசாரிகைகளோடு கூடியவளாய், கணவன் வரவை எதிர்பார்த்திருக்கவேண்டும்...ப₄கவத்₃ப₄க்தியுடைய வளாகவும், ப₄ாக₃வதர்களுக்கு இனியவளாகவும் இருக்கவேண்டும்.] என்று திருவாராத₄னத்திற்காகக் குடும்பத்தலைவி செய்யவேண்டிய செயல்கள் விளக்கப்பட்டன.

விலோப₄யந் ஸதா₃ த்₃ருஷ்டாத்₃ருஷ்டார்தத₂வசனை:
ஸ்த்ரியம் ।
ப₄க₃வத்கர்மஸித்₃த்₄யர்த்த₂ம் நயேதா₃த்மாநுகூலதாம் ॥
புத்ராந் ப்₄ருத்யாந் களத்ரம் ச ப₄க்தமாஶ்ரிதமேவ ச ।
நிதயம் குர்யாது₃பாயேந ப₄க₃வத்₃ப₄க்திப₄ாவிதாந் ॥
[3-162, 163]

[இம்மை மறுமைப் பலன்களை உறுதியளிக்கும் வசனங்களாலே மனைவியை எப்போதும் வஶப்படுத்தி, திருவாராத₄னத்தின் பொருட்டுத் தனக்கு அநுகூலையாக ஆக்கிவைக்கவேண்டும். பிள்ளைகள், வேலைக் காரர்கள், மனைவி, அன்புடையவன், சிஷ்யன் ஆகியவர்களை எவ் வுபாயத்தினாலாவது எப்போதும் எம்பெருமானிடம் ப₄க்தியுடையவர் களாகச் செய்யவேண்டும்.] என்று குடும்பத்தலைவன் குடும்பத்தி லுள்ள மற்றவர்களை எப்படியாவது எம்பெருமானிடம் அன்புடைய வர்களாக ஆக்கவேண்டும் என்றும் விதி₄க்கப்பட்டது.

யதா₂ஶாஸ்த்ரமுபாதா₃நமாசரேத் பே₄ாக₃நிஸ்ஸ்ப்ருஹ: ।
ப₄க₃வத்₃த₄ர்மலாபே₄ந த்ருப்தோ யஸ்ஸ ஸுகீ₂ ப₄வேத் ॥
[3-168]

[இம்மையின்பங்களில் ஆசையற்றவனாய், ஶாஸ்த்ர முறைப்படி உபாதா₃னம் (திருவாராத₄னத்திற்கான த்₃ரவ்யங்களைச் சேகரித்தல்) செய்யவேண்டும். எம்பெருமானுக்குத் திருவாராத₄னம் செய்வதாகிற த₄ர்மம் ஸித்₃தி₄க்கிறது என்று திருப்தி பெற்றவனாயிருப்பவன் (இம்மையிலும், மறுமையிலும்) இன்பமடைவான்.] என்பதீறாக மூன்றும் அத்தியாயத்தில் திருவாராத₄னத்தின் பொருட்டு உபா தா₃னம் செய்யவேண்டிய முறை இவ்வண்ணமாக விளக்கப்பட்டது. இனி, நான்காம் அத்தியாயத்தில்,

உபாத₃ாநப்ரகாரோऽயம் ஸமயகு₃க்தஸ் ஸமாஸத:।
இஜ்யாசாரம் ப்ரவக்ஷ்யாமி யதா₂வத₃நுபூர்வஶ: ॥ [4-1]

[உபாத₃ாநமுறை இவ்வண்ணமாகச் சுருக்கமாகவும், விளக்கமாகவும் சொல்லப்பட்டது. கிரமமாக முறைப்படி இஜ்யாராத₄னத்தைப் பற்றிச் சொல்லுகிறேன்] என்று தொடங்கி விளக்கப்பட்டுள்ள இஜ்யாவிதி₄யில் ஸாரமான பகுதிகளைக் காண்போம்.

வேதி₃பூ₄மயாதி₃பூ₄தேஷு ஹ்ருத்₃யர்க்கே யோऽர்ச்சயேத் ஹரிம।
வ்யக்தாயதநஸம்ஸ்தா₂நே நார்ஹஸ்ஸ த்வர்ச்சநாவிதௌ₄ ॥ [4-6]

[யாக₃வேதி₃, பூ₄மி முதலான பஞ்ச பூ₄தங்கள், ஹ்ருத₃யம், ஸூர்யமணடலம் ஆகியவற்றில் எம்பெருமானை ஆராதி₄க்கும் உபாஸகன், திருக்கோயிலில் உள்ள அர்ச்சாமூர்த்தியை அர்ச்சிக்கத் தகுதியற்றவன்.] என்று- கர்மங்களை அங்க₃மாகக் கொண்டு ஸாத₄ந ப₄க்தியை அநுஷ்டி₂ப்பவர்களுக்கு அர்ச்சாமூர்த்தியைத் திருவாராத₄நம் செய்ய அதி₄காரமில்லை என்று காட்டப்பட்டது. இதிலிருந்து எம்பெருமானையே உபாயமாகப் பற்றியவர்களே அர்ச்சாமூர்த்தியை ஆராதி₄க்கலாம் என விளங்குகிறது.

ஸர்வபூ₄தேஷு தே₃வேஷு நரப்ரதிக்ருதௌ ததா₂।
மநுஷ்யாக்ருதிதே₃வேஷு ந காரயம் பூஜநம் பு₃தை₄: ॥
து₄ங்வந்தரிமுகா₂: கேசித் அமரப்ரக்₂யஶகதய:।
மநுஷ்யாக்ருதயோ தே₃வா நோபாஸ்யாஸ்தே கதா₃சந ॥
பராது₃ர்ப₄ாவாதி₃பி₄ர்தே₃வம் மத்ஸ்யகூர்மாதி₃பி₄ர்விநா।
அஶுத்₃தே₄ஷ்வர்ச்சயந் மூடோ₄ நாப்நோதி பரமம பத₃ம ॥
திர்யக்த்வம மாநுஷத்வம் வா மத்ஸ்யாத்₃யம் ஸ்வேச்ச₂யா ஹரி: ।
ய ஆஸ்தி₂தஸ்ஸ ஏவாஸௌ தீ₃பாத்₃தீ₃ப இவோதி₃த: ॥
வ்யக்தாயதநயோர்நித்யம் அர்ச்சயேத் புருஷோத்தமம்।
ஸாவதா₄நோ ப₄வேத்₃ப₄க்த்யா ப்₄ருத்யோ ந்ருப இவாந்திகே॥
அந்யத்ராப்யர்ச்சயந் மந்த்ரீ பூஜாகாலே ஜநார்த₃நம।
தத்ரஸ்த₂ம் ப₄ாவயேத்₃தே₃வம ஸர்வைஶ்வர்யஸமந்விதம் ॥
பரீக்ஷ்ய பே₄ாக₃ாநாத₃ாய நீத்வாப்யம்ருதரூபதாம்।
ப்ரஹ்வாங்கோ₃ பீ₄தவத்₃பே₄ாகை₃: ததீ₃யைஸ்தந்மயோऽர்ச்சயேத் ॥

தத்ராऽபி₄க₃மநே பூர்வம த்₃வயமந்த்ரார்த்த₂த₃ர்ஶநாத் ।
ஸாக்ஷாத₂பி₄முக₂ம தே₃வம ப₄ாவயித்வாऽர்ச்சயேத்₃ வஶீ ॥
ப₄க₃வத்₃வத₃நாமபோ₄ஜஸ்யந்த₃மாநாமருதோத₃தி₄ம।
பிப₃ந்நிவ மஹாஹ்லாத₃மத்₄யஸ்த₂: பூஜயேத் ப்ரபு₄ம்॥
ப₄க்தஸந்த₃ர்ஶநபரீதயா நாநாபூ₄தைரிவாயதை: ।
நேத்ரபாதை: ப₄க₃வத: ஸ்வாதமாநம் ஶூசிதாம் நயேத்॥
[4-18...27]

[எல்லா பூ₄தங்களிடமும், மற்ற தெய்வங்களிடமும், மனிதனின் சிலேயிலும், மனிதவுருக்கொண்ட மற்ற தெய்வங்களிடமும் அறிவாளி கள் ஆராத₄னத்தைச் செய்யக் கூடாது. தே₃வர்களையொத்த ஶக்தி யுடைய த₄ந்வந்தரி முதலான மனிதவுருக் கொண்ட தே₃வர்களை ஒரு போதும் உபாஸிக்கக் கூடாது. மத்ஸ்யம், கூர்மம் முதலான எம் பெருமானுடைய ஸாக்ஷாத₂வதாரங்களைத் தவிர, அஶுத்₃த₄ர்களான மனிதவுருக்கொண்ட ஆவேஶாவதாரங்களை ஆராதி₄க்கும் அறிவிலி பரமபத₃மடையான். தன் ஸங்கல்பத்தாலே மீன் முதலான விலங் காகவோ, (ராமன் முதலான) மனிதனுகவோ எம்பெருமான் அவதரிக்கும்போது, விளக்கிலிருந்து தோன்றிய விளக்குப் போலே அவனே ப்ரகாஶிக்கிறுன். திருக்கோயில்களில் எப்போதும் புருஷோத்தமனையே ஆராதி₄க்கவேண்டும், ப₄க்தியோடு ஆராதி₄க்கும் போது அருகிலிருக்கும் அரசனிடம் வேலைக்காரன் போலே தவறு நேராதபடி கவனமாயிருக்கவேண்டும். எம்பெருமானுக்குத் திருவாரா த₄னம் செய்யும்போது மந்திரங்களைக் கொண்டு அவனது பரிகரங் கள் முதலானவற்றை ஆராதி₄க்கும் சமயத்திலும், அப்பரிகரங் களிடம் அந்தர்யாமியாய், ஸர்வைஶ்வர்யத்தோடு கூடியிருக்கும் எம் பெருமானை தியானிக்கவேண்டும். அவனுக்குரிய அமுதுபடி சாத்துப் படி முதலான போ₄க₃ங்களை நன்கு ஆராய்ந்து கைக்கொண்டு, அவற்றை அமுதமாக ப₄ாவித்து, வணங்கிய உடம்பை உடைய வனய், அவனது போ₄க₃ங்களைக் கொண்டு அவனையே தியானித்து ப₄யத்துடன் ஆராதி₄க்கவேண்டும். அதில் முதலில் அபி₄க₄மநா ராத₄னத்தின்போது, திருமந்திரத்தின் பொருளை உணர்ந்து, எம் பெருமானை நேரே தியானித்துக் கொண்டு, புலன்களை அடக்கிய வனய் ஆராதி₄க்கவேண்டும்; எம்பெருமானுடைய திருமுகத்தாமரை யினின்றும் பெருகும் அமுதக்கடலைப் பருகுமவன் போலே பேரானந்தத்தினுள்ளிருந்து திருவாராத₄னம் செய்யவேண்டும். அடியவனைக் கண்ட உகப்பால் ஒன்று பத்து நூருகப் பெருகிய எம் பெருமானுடைய தடங்கண்ணேக்குகளாலே தன்னைப் பரிஶுத்₃த₄

ருக்கிக்கொள்ளவேண்டும்.] என்று ஸாக்ஷாத$_3$வதாரங்களே ஆராதி$_4$க்கத்தக்க அர்ச்சாமூர்த்திகள் என்பதும், ஆராதி$_4$ப்பவனுடைய மனநிலை எவ்வண்ணம் இருக்கவேண்டும் என்பதும் விளக்கப்பட்டது.

யதா$_2$ யுவாநம ராஜாநம் யதா$_2$ ச மத$_3$ஹஸ்திநம் |
யதா$_2$ ப்ரியாதிதி$_2$ம யோக$_3$யம் ப$_4$க$_3$வந்தம
ததா$_2$ऽர்ச்சயேத் ||...
புராऽபி$_4$க$_3$மநம் மந்த்ரை: ப்ரணவாத்$_3$யைர்யதா$_2$விதி$_4$ |
அபி$_4$க$_3$மயைவ தே$_3$வேஶம் ஆஸநாத்$_3$யை: ஸமர்ச்சயேத் ||
அஷ்டதா$_4$ நிஹிதை: மந்த்ரை: சாதுராத்ம்யபத$_3$ஸ்தி$_2$தை: |
ப$_4$க$_3$வத்பராபகை: ஶுத்$_3$தை$_4$ரிஜ்யாமந்த்ரை: ஸமர்ச்சயேத் ||
ஸ்நாநபோ$_4$கை$_3$ஸ்ஸமப்$_4$யர்ச்ய தி$_3$வயாலங்காரமண்டி$_3$தம |
அலங்காராஸநம் த$_3$த்வா தி$_3$வயை: ஸ்ரக்சந்த$_3$நாதி$_3$பி$_4$: ||
போ$_4$கை$_3$: ஸுஸம்ஸ்க்ருதைர்தே$_3$வம் ஆசசிதம
பா$_4$வயேத் பரம் |
ஸதீவ பரியப$_4$ர்த்தாரம் ஜநநீவ ஸ்தநந்த$_4$யம் |
ஆசாாயம ஶிஷயவந்மித்ரம மிதரவலலாலயேத் ஹரிம் ||
ஸ்வாமிதவேந கு$_3$ருதவேந ஸுஹ்ருத்தவேந ச ஸர்வதா$_3$ |
பித்ருதவேந ததா$_2$ பா$_4$வ்யோ மாத்ருதவேந ச மாத$_4$வ: ||
ஸுஸ்நாதம் ஸ்வநுலிப்தம ச ஸரக்$_3$விணம ச ஸ்வலங்க்ருதம் |
ஸந்நுதம விவிதை$_4$: ஸதோத்ரை: போ$_4$ஜ்யாஸநக$_3$தம் விபு$_4$ம ||
அவஶயம மது$_4$பர்க்கேண மத்$_4$வாஜ்யத$_3$தி$_4$யோகி$_3$நா |
அர்சசயேது$_3$த$_3$கேநாபி கவதி$_2$தேந ப$_2$லாதி$_3$பி$_4$: ||
மத்$_4$வாஜ்யம த$_3$தி$_4$ ஸம்யோஜ்ய யஜதே யோ ஜநார்த$_3$நம் |
அயம் ஸம்ஸ்ருஜ்யதே தேந ஸ்ரீமதா மது$_4$பர்க்கவத் ||...
ஶாகக$_3$ந்த$_4$ப$_2$லோபேதை: கு$_3$ட$_3$த$_3$த்$_4$யாஜ்யஸம்யுதை: |
அந்நை: ப்ரபூ$_4$தை: தே$_3$வேஶம விவிதை$_4$:
ப்ருத$_2$க$_3$ர்ச்சயேத் ||...
ப்ராப்தாந் பா$_4$க$_3$வதாந் தத்ர கு$_3$ருபூர்வாந் யதா$_2$விதி$_4$ |
அர்ச்சயேத் பரயா ப$_4$க்த்யா த்$_3$ரவயைரர்க்$_4$யாதி$_3$பி$_4$ஸ்ததா$_2$ ||
வாஸோபி$_4$ர்பூ$_4$ஷணோப$_4$க்ஷ்யை: த$_4$நதா$_4$ந்யாதி$_3$பி$_4$ஸ்ததா$_2$ |
ஶ்ரத்$_3$த$_4$யா தே$_3$வமப்$_4$யர்ச்ய த$_3$த$_3$யாத் தாந்
தே$_3$வஸந்நிதௌ$_4$ ||

ஆராத4னத்துக்கு உதவாது. விஶேஷ திருவாராத4னகாலம் (498). (22) குடும்பத்தலைவி திருவாராத4னத்தின்பொருட்டுச் செய்யவேண்டியவை. குடும்பத்தலைவனின் கடமை (499). (23) 3. இஜ்யாவிதி4. உபாஸகர்களுக்குத் திருவாராத4னத்தில் அதி4காரமில்லை (500). (24) ஸாக்ஷாத்3வதாரங்களே ஆராதி4க்கத்தக்கவை. ஆராதி4ப்பவனின் மனநிலை (502). (25) ப4க3வத்3ப4ாக3வதாராத4ந மஹிமை, ஆராத4னமில்லாமையால் ஏற்படும் அநர்த்த2ம் (502 – 512). (26) அவைஷ்ணவர்களின் தாழ்வும், உண்ணும் விஷயத்தில் நிஷித்3த4ங்களும் (512). (27) எம்பெருமானுக்கு அமுதுசெய்ததையே உண்ணவேண்டும் உண்ணும்முறை (514). (28) ப4க்தலக்ஷணம். 4. ஸ்வாத்4யாயம். ஸ்வாத்4யாய காலத்திலேயே வெளியில் செல்லவேண்டும் (514 – 519). (29) யாத்திரையில் பு3த்3த4ர், உருத்திரன் முதலானோரின் ஆலயங்களை அணுகலாகாது. யாத்திரையில் விலக்கவேண்டியவையும், செய்யவேண்டியவையும் (520). (30) மறந்தும் புறந்தொழாத பஞ்சகாலபராயணர்களுடைய பெருமை (520). (31) கர்மஜ்ஞாநப4க்திகள் வைஷ்ணவர்கள் அனைவர்க்குமே இருக்கவேண்டியவை (521) (32) ஶாஸ்த்ர விஶ்வாஸத்தின் பெருமையும், அதுஉள்ளவன் இருக்கும் நிலையும் (522). (33) 5. யோக3லக்ஷணம். யோகி3யின் பெருமை, த்3வாத3ஶாக்ஷரப் பெருமை, ஏகாத3ஶீவ்ரத மஹிமை (523-525). (34) யோக3காலம். ப4க3வத்கர்மத்தில் ஈடுபட்டவர்களுடைய சிறப்பும், மற்றவர்களுடைய தாழ்வும் (526, 527). (35) தூக்கத்தின் நடுவில் எழுந்தால், ப4க3வந்நாமஶ்ரவணம், கீர்த்தனம், அநுஸந்த4ானம் ஆகியவற்றையே செய்யவேண்டும். (527). (36) த்3வாத3ஶாக்ஷர ஶப்3த3ார்த்த2வைப4வம்; ஸ்வாத்4யாய யோக3ங்களின் பெருமை, பஞ்சகால பராயணர்களின் பெருமை (527-530).

ஆக, இவ்வண்ணம் விளக்கப்பட்ட (1) அபி4க3மனம் (2) உபாத3ானம் (3) இஜ்யை (4) ஸ்வாத்4யாயம் (5) யோக3ம் என்னும் ஐந்து காலங்களில் செய்யப்படும் ப4க3வதா3ராத4னத்தை ஸ்ரீவைஷ்ணவனாகப் பிறந்த ஒவ்வொருவனும் இயன்ற வரையில் செய்யவேண்டும்; இந்த நிஷ்டை2யுடைய ஓர் ப4ாக3வதோத்தமனுடைய அபி4மானத்திலாவது ஒதுங்கி வாழவேண்டும் என்பது இந்த த4ர்மஶாஸ்த்ரத்திலிருந்து நாம் அறியும் ஸாரமாகும்.

இனி, ப4க3வத்பரத்வத்தையும், ப4ாக3வதர்களுக்குரிய விஶிஷ்ட த4ர்மங்களையும் காட்டும் பராஶரவிஶிஷ்ட பரம த4ர்மஶாஸ்த்ரத்தைக் காண்போம்.

# பராசரவிசிஷ்ட பரமத₄ர்ம சாஸ்த்ரம்



## முன்னுரை

"**ஸ ஹோவாச வ்யாஸ: பாராஶர்ய:**" [தைத்திரீய ஆரண்யகம ப்ரஶ்நம்-1, அனுவாகம்-9] [*பராஶரரின் புததிரரான அப்படிப்பட்ட வியாஸரன்றே சொன்னர்.*] என்று வேத₃ம வேத₃வ்யாஸரைப் புகழும்போது அவரைப் *பராஶரரின் புததிரர் என்று புகழ்நதது.* இவர் செய்தருளியவையாகப் பிரஸித்திபெற்றவை வேத₃பூர்வப₄ாக₃விவரணமான பராஶர ஸ்மருதியும், வேத₃ததின் உத்தரப₄ாக₃ விவரணமான ஸ்ரீ விஷ்ணுபுராணமும ஆகும். அத்தகைய ஸ்ரீ விஷ்ணுபுராணத்தின முதல் அம்ஶம் முதல் அததியாயத்தில்,

**"புராணஸம்ஹிதாகர்த்தா ப₄வாந் வத்ஸ ப₄விஷ்யதி।**
**தே₃வதாபாரமார்த்₂யம் ச யத₂ாவத்₃வேத்ஸ்யதே ப₄வாந்॥"**
[1-1-26]

[குழந்தாய் ! நீ புராண ஸம்ஹிதையைச செய்பவனுகக கடவாய். தே₃வதைகளில் எது பரம்பொருள் என்னும் உண்மையையும் நீ உள்ளபடி உணர்வாய்.] என்று புலஸ்த்யராலும, பாட்டனரான வஸிஷ்ட₂ராலும் வரமளிக்கபபட்ட பெருமையை உடையவராக இம்மஹர்ஷி காட்டப்படுகிறுர். இங்கு 'புராண ஸமஹிதா' என்னும் பத₃த்தைக் கர்மத₄ாரயஸமாஸமாகக கொளளாமல், த்₃வந்த்₃வமாகக்கொண்டால் புராணம், ஸம்ஹிதை எனும் இரண்டுக்கும இவர் ஆசிரியராகக் கூறப்படுகிறுர் என விளங்கும. பராஶரஸ்ம்ருதி என்றும், பராஶரஸம்ஹிதை என்றும வழங்கும் ஸ்ம்ருதியே இங்கு ஸம்ஹிதா ஶப்₃த₃த்தால் சொலலப்படுவதாகக் கொள்வதில் குறையிலலே. "**மந்வத்ரி விஷ்ணு**" [1-4] என்று யாஜ்ஞவல்கயரால் எடுக்கப்படும் ஸ்ம்ருதிகளில் பராஶர ஸ்ம்ருதியும காணப்

படுகிறது; பாத்₃மபுராண உத்தரக₂ண்டம் 263ம் அத்தியாயத்தில எடுக்கப்பட்ட "**வாஸிஷ்ட₂ஞ் சைவ ஹாரீதம் வ்யாஸம் பாராஶரம் தத₂ா| ப₄ாரத்₃வாஜம் காஶ்யபம் ச ஸாத்விகா முக்திதா₃: ஶுப₄ா: ||**" என்னும் வசனத்தில பராஶரஸ்ம்ருதியும் ஸாத்விகஸ்ம்ருதிகளில் ஒன்ருக எடுக்கப்பட்டுள்ளது. இந்தப் பராஶர ஸம்ருதியின் கல்கத்தா, பமபாய், பூனு பதிப்புகளில பரம்பொருளைபபற்றிய குறிப்புகள இலலாவிடிலும், இபபராஶர ஸ்மருதியின் உத்தரப₄ாக₃மாக எண்ணப்படும் பராஶரவிஶிஷ்ட பரமத₄ர்ம ஶாஸ்த்ரத்தில் ஸ்ரீ விஷ்ணுபுராணததிற்போலே பரதே₃வதாநிஷ்கர்ஷமும், விஷ்ணு ப₄கதர்கள கைககொள்ளவேணடிய பஞ்சஸம ஸ்காரம் முதலான விஶிஷ்டமான சிறநத த₄ர்மஙகளும், ப₄க₃வதா₃ராத₄ன ப்ரகாரங்களும், உதஸவபரகாரங்களும விரிவாக வர்ணிக்கப்படுவதைக காண்கிருேம. பூர்வாசார்யர்கள் பலரால இதில் உள்ள ஶ்லோகங்கள் ப்ரமாணமாக எடுக்கப்பட்டிருபபதையும காணகிருேம். துருஷ்கர்களின் படையெடுப்பால் விஶிஷ்டத₄ர்மங்களை அநுஷ்டி₂பபாரில்லாமற்போனபடியால வடநாட்டில மற்ற பரமத₄ாம ஶாஸ்த்ரங்களுககுப்போலே இந்தப பரமத₄ர்ம ஶாஸ்த்ரத்திற்கும விஶேஷ ப்ரசாரமில்லாமற்போய்விட்டது என்று கருத இடமுள்ளது. தென்னுட்டில இந்த விஶிஷ்ட பரமத₄ர்மஶாஸ்த்ரத்திற்சொன்ன பஞ்சஸமஸ்காரம் முதலானவற்றை ஸ்ரீ வைஷ்ணவர்கள ஆயிரக்கணககான வருஷங்களாகக் கடைப்பிடித்து வருவதைக காணகிருேம். ஆகையால், இந்த ஶாஸ்த்ரத்தின் ப்ராமாண்யத்தில் ஐயமுற இடமில்லை. இந்த த₄ர்மஶாஸ்த்ரத்தை க₃ரந்த₂முத்₃ராபக ஸபை₄யார் கி. பி. 1901-ம் ஞு தமிழில் அர்த்த₂த்துடன் வெளியிட்டிருக்கிருர்கள்.

இதன் கர்த்தாவான பராஶரருககு அப்பெயர் வந்ததின் காரணத்தை — "**பராந் - ப₂ாஹ்யகுத்₃ருஷ்டீந் ஸம்யக் ப்ரமாண தர்க்கை: ஆஶ்ருணுதி இதி பராஶர:**" [வேத₃த்துக்

குப் புறமபான பா₃ஹ்யர்களும, வேத₃த்திற்கு அபார்த்த₂ம் சொலலும் குத்₃ருஷ்டிகளுமாகிற **பரர்களை** ப்ரமாண தர்க் கஙகளாலே **நன்கு ஹிம்ஸிக்கிறாராகையாலே** (*ஶ*ரு-ஹிம்ஸா யாம் என்று த₄ாது) **பராஶரராகிறர்.**] என்னும் வ்யுத்பத் தியின்மூலம ஸ்ரீ விஷ்ணுபுராண வ்யாக்₂யாதாவான ஸ்ரீ விஷ்ணுசிததர் எனும எஙகளாழ்வானும, "(பரா*ஶ*ரம்) வைதி₃க பக்ஷததுக்கு *ஶ*த்ருக்களான பா₃ஹ்யகுத்₃ருஷ்டி களை ப்ரமாண தாககங்களாகிற *ஶ*ரங்களாலே ஹிமஸியா நினறுன என்றுகவுமாம; அத₂வா; ஆந்தர*ஶ*த்ருக்களான ராக₃த₃வேஷாதி₃களை *ஶ*மத₃மாதி₃களாலே ஹிம்ஸியா நினறுன் என்றுகவுமாம" என்று ப₄ாரதாதி₃ தனி*ஶ்*லோ கத்தில் பெரியவாச்சான்பிள்ளையும் காட்டினுர்கள்.

இப்படிப் புராண ஸமஹிதைகளைச் செய்து வைதி₃க த₃ர்*ஶ*னத்துக்குப் பரமோபகாரம் செயததாலேயே "**தஸ் மை நமோ முநிவராய பரா*ஶ*ராய**" என்று ஆளவந்தாரால் இவர் மிக மதிக்கப்பட்டார். அவர் திருவுள்ளமறிந்த எம் பெருமானுரது நியமனத்தாலே, கூரத்தாழ்வான் திருக் குமாரருககுப பரா*ஶ*ரப₄ட்டர் என்று இப்பரா*ஶ*ரரின் திருநாமம வைக்கப்பட்டது. இத்தகைய பரா*ஶ*ர மஹர்ஷி அருளிய பரமத₄ாம *ஶ*ாஸ்த்ரத்தைத் தமிழில் பொருளோடு அளிக்கிறோம் இங்கு.

**मुनय ऊचुः—**

**विस्तरेण समाख्याहि हरिसंश्रयणं परम्।**
**कथमाश्रयणं नृणां कथमाराधनं विभोः॥ १॥**

**முநய ஊசு:—**

**விஸ்தரேண ஸமாக்₂யாஹி ஹரிஸம்*ஶ்*ரயணம் பரம் ।**
**கத₂மா*ஶ்*ரயணம் ந்ருணும் கத₂மாராத₄நம் விபே₄ா: ||** 1.

மைத்ரேயர் முதலான முனிவர்கள் ஸ்ரீபரா*ஶ*ரமஹர்ஷி யிடம் ஸாமாந்யத₄ர்மங்களைப் பரா*ஶ*ரஸ்ம்ருதியின் பூாவ ப₄ாக₃த்திலிருந்து கேட்டறிந்தபின், அவை நேரே மோக்ஷ

ஸாத₄நமல்லாமையாலே, நேரே மோக்ஷஸாத₄நமான ப₄க₃வத்ஸமாஶ்ரயணத்தையும், ப₄க₃வதா₃ராத₄னத்தையும பற்றி அறியவிரும்பியவர்களாய், பின்வருமாறு கேட்டார்கள்:-

நம் விரோதி₄களைப் போக்கி இஷ்டத்தை அளிக்கவல்ல ஹரியாகிற எம்பெருமானைச் சிறப்பாக ஆஶ்ரயிக்கும விதி₄யும், அதற்கு உறுப்பாகச் செய்யவேண்டிய வையும், ஆஶ்ரயித்தபின் அவனை ஆராதி₄க்கும வகை களுமாகிற சிறந்த த₄ர்மங்களை விரிவாகச் சொல்லுவீர்.

श्रीपराशर उवाच—

वक्ष्यामि मुनयः सर्वे विष्णोराश्रयणक्रियाम्।
मन्त्रदीक्षाविधिश्चैव तस्य पूजाविधिं तथा॥२॥

ஸ்ரீபராசர உவாச—

**வக்ஷ்யாமி முநயஸ் ஸர்வே விஷ்ணோராஶ்ரயணக்ரியாம் ।**
**மந்த்ரதீ₃க்ஷாவிதி₄ஞ்சைவ தஸ்ய பூஜாவிதி₄ம் தத₂ா॥** 2.

ஸ்ரீபராஶர ப₄க₃வான் கூறலுற்றார்,—

முனிவர்களே! ஸர்வவ்யாபகனான விஷ்ணுவை ஆஶ்ர யிக்கும் வழியையும, அதற்கு உறுப்பான மந்த்ரம், தீ₃க்ஷா விதி₄ ஆகியவற்றையும், அவனை ஆராதி₄க்கும் முறையை யும் கூறப்போகிறேன; கேட்பீர்களாக.

आद्यं तु शङ्खचक्रादिधारणं वैष्णवं स्मृतम्।
पुण्ड्रं नामक्रिया चैव मन्त्रश्चैवार्चनं हरेः॥३॥
संस्काराः पञ्च कर्तव्या ब्राह्मणस्य विधानतः।

**ஆத்₃யம் து ஶங்க₂சக்ராதி₃தா₄ரணம் வைஷ்ணவம் ஸ்ம்ருதம் ।**
**புண்ட்₃ரம் நாமக்ரியா சைவ மந்த்ரஶ்சைவார்ச்சநம் ஹரே: ॥** 3.
**ஸம்ஸ்காரா: பஞ்ச கர்த்தவ்யா ப்₃ராஹ்மணஸ்ய விதா₄நத: ॥**

ப₄க₃வானை ஆஶ்ரயிப்பது பின்வரும் ஐந்து ஸம்ஸ் காரங்களடங்கியது:—(1) ஸ்வாமியான விஷ்ணுவின் அடை யாளங்களாகிற ஶங்க₂சக்ரங்கள் முதலானவற்றை த₄ரிப்

பது (தாபஸம்ஸ்காரம்). (2) ஶேஷியான அவன் திருவடி களின் ஆகாரமாயிருக்கும் ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை த₄ரிப்பது (புண்ட்₃ரஸம்ஸ்காரம்). (3) ஸ்வாமியான அவனது திரு நாமத்தை அவனுககு அடியான் என விளங்கும்படி தா₃ஸ பத₃த்தைச் சோதது த₄ரிததல் (நாமஸம்ஸகாரம்). (4) அவனுக்கும் நமககும உண்டான உறவையும் உபாயோபே யங்களேயும உணர்த்தும மந்தரத்தை அநுஸந்தி₄த்தல் (மந்த்ரஸம்ஸ்காரம). (5) தனது ஶேஷத்வம ஸித்₃தி₄ப்ப தறகாக ஶ்ரீமந்நாராயணனே ஆராதி₄த்தல் (யாக₃ஸமஸ் காரம). இவை ஐந்தும (வேத₃ம் முதலான) ஶாஸ்த்ரங்களில் சொன்னபடி ப்₃ராஹ்மணன் முதலான அனைவர்க்கும் அவஶ் யம் அனுஷ்டி₂க்கவேண்டிய பஞ்சஸமஸகாரங்களாகும்.

**विना यज्ञोपवीतेन विना चक्रस्य धारणात् ॥ ४ ॥**
**विना द्वयेनैव विप्रः चण्डालत्वमवाप्नुयात् ।**

**விநா யஜ்ஞோபவீதேந விநா சக்ரஸ்ய த₄ாரணாத் ॥ 4.**
**விநா த்₃வயேந வை விப்ரஶ் சண்ட₃ாளத்வமவாப்நுயாத் ।**

சக்ரத₄ாரணமாகிற தாபஸமஸ்காரமும், த்₃வயாநுஸந் த₄ாநமாகிற மந்த்ரஸமஸ்காரமும இல்லாதவன், பூணூல் இல்லாத அந்தணன் போலே உடனே நீசனுவான்.

**विधिना शङ्खचक्रादिधारणं चोर्ध्वपुण्ड्रकम् ॥ ५ ॥**
**उपवीतं शिखाबन्धं विप्रस्य सततं स्मृतम् ।**
**चक्रलाञ्छनहीनस्य विप्रत्वं निष्फलं भवेत् ॥ ६ ॥**

**விதி₄நா ஶங்க₂சக்ராதி₃த₄ாரணம் சோர்த்₄வபுண்ட்₃ரகம் ॥ 5.**
**உபவீதம் ஶிக₂ாப₃ந்த₄ம் விப்ரஸ்ய ஸததம் ஸ்ம்ருதம் ।**
**சக்ரலாஞ்ச₂நஹீநஸ்ய விப்ரத்வம் நிஷ்ப₂லம் ப₄வேத் ॥ 6.**

சாஸ்திரங்களில் சொல்லிய கிரமப்படி ஶங்க₂ம், சக்ரம் முதலிய ஆயுத₄ங்களே த₄ரிக்கும் தாபஸம்ஸ்காரம், ஊர்த்₄வ புண்ட்₃ரத₄ாரணமாகிற புண்ட்₃ரஸம்ஸ்காரம, பூணூலே த₄ரிப்பது, ஶிகை₂யை வைத்துக்கொள்வது ஆகியவை

எக்காலத்திலும் அந்தணனுக்கு அவஶ்யமானவை என்று த₄ர்மஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டது. திருவாழியின் சின்னமில்லாதவனுடைய ப்₃ராஹ்மணதவம பயனற்றது.

**अचक्रधारिणं विप्रं यः श्राद्धे भोजयेन्नरः।**
**रेतोमूत्रपुरीषादीन् स पितृभ्यः प्रयच्छति ॥७॥**

**அசக்ரத₄ாரிணம் விப்ரம் யஶ்ஶ்ராத்₃தே₄ பே₄ாஜயேந்நர:।**
**ரேதோமூத்ரபுரீஷாதீ₃ந் ஸ பித்ருப்₄ய: ப்ரயச்ச₂தி ॥** 7.

சக்ராங்கனமிலலாத அந்தணனை ஶ்ராத்₃த₄த்தில் நிமந்த்ரணம்செய்து பே₄ாஜனம் செய்விப்பவன், ஶுக்லம், மூத்ரம, மலம முதலானவற்றைத் தன் பிதருககளுககுக கொடுத்தவனுகிறுன.

**शङ्खचक्रोर्ध्वपुण्ड्रादिरहितो ब्राह्मणाधमः।**
**स जीवन्नेव चण्डालः सर्वकर्मबहिष्कृतः ॥८॥**

**ஶங்க₂சக்ரோர்த்₄வபுண்ட்₃ராதி₃ரஹிதோ ப்₃ராஹ்மணுத₄ம:।**
**ஸ ஜீவந்நேவ சண்ட₃ாளஸ் ஸர்வ கர்ம ப₃ஹிஷ்க்ருத: ॥** 8.

ஶங்க₂சக்ரத₄ாரணம் ஊர்த்₄வபுண்ட்₃ரத₄ாரணம் முதலான பஞ்சஸம்ஸ்காரமில்லாதவன் அந்தணரிற்கடையோனுய், உயிரோடிருக்கும்போதே நீசனேயானவனுய், எல்லா வைதி₃ககர்மங்களுக்கும் புறம்பானவனுகிறுன்.

**तस्मात् चक्रादिसंस्काराः कर्तव्या मुनिसत्तमाः।**
**चक्रलाञ्छनहीनेन कृतं कर्म च निष्फलम् ॥९॥**

**தஸ்மாத் சக்ராதி₃ஸம்ஸ்காரா: கர்த்தவ்யா முநிஸத்தமா:।**
**சக்ர லாஞ்ச₂ந ஹீநேந க்ருதம் கர்ம ச நிஷ்ப₂லம் ॥** 9.

முனிவர் தலைவர்களே! சக்ரம முதலான சின்னமற்றவன் செய்யும் காரியங்கள் பயனற்றவையாகையாலே, சக்ராதி₃த₄ாரணம் முதலான ஐந்து ஸம்ஸ்காரங்களையும் அவஶ்யம் செய்துகொள்ளவேண்டும்.

### தாபஸம்ஸ்காரத்தின் க்ரமம்

स्नात्वा शुभेऽह्नि पूर्वाह्णे सम्यगभ्यर्च्य केशवम्।
स्नातं शिष्यं समाहूय कृतकौतुकमङ्गलम्॥ १० ॥
आचार्यो विधिवत्कुर्यात् चक्रपुण्ड्रादिसत्क्रियाम्।

ஸ்நாத்வா ஶுபே4ऽஹ்நி பூர்வாஹ்ணே ஸம்யக3ப்4யர்ச்ய கேஶவம்|
ஸ்நாதம் ஶிஷ்யம் ஸமாஹூய க்ருதகௌதுக மங்க3ளம் || 10.
ஆசார்யோ விதி4வத் குர்யாத் சக்ரபுண்ட்3ராதி3ஸத்க்ரியாம் |

மங்க3ளமான திதி2 வாரம முதலானவற்றோடு கூடிய தி3னத்தில், ஆசார்யன் முற்பகலில ஸ்நாநம் முதலான நிதயகர்மங்களை அநுஷ்டி2த்து, ப4க3வானுக்குத் திருவாராத4னம ஸமர்ப்பிதது, ஸ்நாநம் செய்தவனும் பரிஶுத்3த4னுமிருக்கிற சிஷ்யனை அழைத்து, அவனுக்குக் கங்கணம் கட்டி, ஶாஸ்த்ரமுறைப்படி பஞ்சஸமஸ்காரங்களைச் செய்யககடவன.

कारयेत् शङ्खचक्रादिहेतिप्रतिकृतीः शुभाः॥ ११ ॥
स्वर्णराजतताम्रादिद्रव्यैः कुर्याद्यथोचितम्।

காரயேத் ஶங்க2 சக்ராதி3 ஹேதிப்ரதிக்ருதீஶ் ஶுபா4: || 11.
ஸ்வர்ணராஜத தாம்ராதி3த்3ரவ்யை: குர்யாத் யதோ2சிதம் |

சக்ராங்கனத்திற்காக, பொனனலாவது, வெள்ளியினலாவது, தாம்ரத்தினலாவது, தன் ஶக்திக்குத் தக்கபடி ஆசார்யன் ஶங்க2ம, சக்ரம் முதலான ஆயுத4ங்களின் ப்ரதிமைகளை அழகியவையாகச் செய்துவைக்கவேண்டும்.

शङ्खं चक्रं गदां खड्गं शार्ङ्गं पञ्चायुधं क्रमात्॥ १२ ॥
स्नाप्य पञ्चामृतैः शुद्धैः पूजयेत्पुरतो हरेः।
तत्तत्प्रकाशकैर्मन्त्रैः पूजयेत्कुसुमादिभिः॥ १३ ॥

ஶங்க2ம் சக்ரம் க3த3ாம் க2ட்3க3ம் ஶார்ங்க3ம் பஞ்சாயுத4ம் க்ரமாத் || 12.
ஸ்நாப்ய பஞ்சாம்ருதைஶ் ஶுத்3தை4: பூஜயேத் புரதோ ஹரே: |
தத்தத்ப்ரகாஶகைர் மந்த்ரை: பூஜயேத் குஸுமாதி3பி4: || 13.

(1) சங்கு (2) சக்ரம் (3) க₃தை₃ (4) வாள் (5) வில என்கிற ப₄க₃வானுடைய ஐந்து ஆயுத₄ங்களுக்கும, பரிஶுத்₃த₄மான பஞ்சாம்ருததததைககொண்டு முறைப்படி திருமஞ்சனம் செயது, அந்தந்த ஆயுத₄ங்களின பெருமைகளைச் சொல்லும மந்திரங்களை அநுஸந்தி₄த்துக்கொண்டு, புஷ்பம், தூ₄பம், தீ₃பம முதலியவற்ருல் எமபெருமான் முன்னிலையிலே அவற்றுக்குத் திருவாராத₄னம் செய்ய வேண்டும்.

**पुरतोऽग्निं प्रतिष्ठाप्य स्वगृह्योक्तविधानतः।**
**इध्माधानादिपर्यन्तं ताम्बूलञ्च निवेदयेत् ॥ १४ ॥**

**புரதோऽக்₃நிம் ப்ரதிஷ்ட₂ாப்ய ஸ்வக்₃ருஹ்யோக்த வித₄ாநத: ।**
**இத்₄மாத₄ாநாதி₃ பர்யந்தம் தாம்பூ₃லஞ்ச நிவேத₃யேத் ॥ 14.**

அதன்பின், தனக்கு முன்னே அக்₃னிப்ரதிஷ்டை₂யைச் செய்து, அந்த அக்னியில தததம் க்₃ருஹ்ய ஸூத்ரததில் சொனனமுறையில் ஸமித்துககளால் இத்₄மாத₄ாநஹோமம் வரையில செயது, தாம்பூ₃லத்தையும் நிவேத₃னம் செய்ய வேண்டும்.

**पश्चात् पञ्चायुधान्यग्नौ प्रक्षिप्य च यथाविधि।**
**जुहुयात् हेतिमन्त्रैश्च शिष्येण सहितो गुरुः ॥ १५ ॥**
**नमस्कुर्यात् ततो भक्त्या देवदेवं जनार्दनम्।**

**பஶ்சாத் பஞ்சாயுத₄ாந்யக்₃நௌ ப்ரக்ஷிப்ய ச யதா₂விதி₄ ।**
**ஜுஹுயாத் ஹேதி மந்த்ரைஶ்ச ஶிஷ்யேண ஸஹிதோ கு₃ரு:॥ 15.**
**நமஸ்குர்யாத் ததோ ப₄க்த்யா தே₃வதே₃வம் ஜநார்த்த₃நம் ।**

பின்பு, அந்த அக்₃னியில் அந்த ஐந்து ஆயுத₄ங்களையும் கிரமமாக இட்டு, அந்த ஆயுத₄ங்களின் பெருமையைச் சொல்லும் மந்திரங்களினுல ஆசார்யன் முறைப்படி ஹோமம் செய்யவேண்டும். அதன்பின் ஶிஷ்யனேடு கூடியவனுய், தே₃வதே₃வனுன ஸ்ரீமந் நாராயணனே ப₄க்தியோடு நமஸ்கரிக்கக்கடவன.

प्राङ्मुखं तु समासीनं शिष्यं मन्त्रजलाप्लुतम्॥ १६॥
प्रतपेच्छङ्खचक्रादिहेतिभिः प्रयतो गुरुः।
पवित्रेणाङ्कयेत् पूर्वं बाहुमूलं तु दक्षिणम्॥ १७॥
शङ्खेन प्रतपेत् सव्यं गदया फालमध्यमम्।
तथा खड्गेन हृदयं शार्ङ्गेणैव तु मस्तकम्॥ १८॥
प्रतप्य विमलाकारैः स्नाप्य पञ्चामृतैर्गुरुः।
संपूज्य पूर्ववत् पश्चात् होमशेषं समापयेत्॥ १९॥

ப்ராங்முக$_2$ந்து ஸமாஸீநம் ஶிஷ்யம் மந்த்ரஜலாப்லுதம் || 16.
ப்ரதபேச்ச$_2$ங்க$_2$ சக்ராதி$_3$ ஹேதிபி$_4$: ப்ரயதோ கு$_3$ரு: |
பவித்ரேணாங்கயேத் பூர்வம் பா$_3$ஹுமூலந்து த$_3$க்ஷிணம் || 17.
ஶங்கே$_2$ந ப்ரதபேத் ஸவ்யம் க$_3$த$_3$யா பா$_2$லமத்$_4$யமம் |
தத$_2$ா க$_2$ட்$_3$கே$_3$ந ஹ்ருத$_3$யம் ஶார்ங்கே$_3$ணைவ து மஸ்தகம் || 18.
ப்ரதப்ய விமலாகாரைஸ் ஸ்நாப்ய பஞ்சாம்ருதைர் கு$_3$ரு: |
ஸம்பூஜ்ய பூர்வவத் பஶ்சாத்$_3$தே$_4$ாமஶேஷம் ஸமாபயேத் || 19.

குடம் முதலிய பாத்திரத்தில் நீரை நிறைத்து, அதை மந்திரங்களைக்கொண்டு பரிசுத்தமாக்கி, அந்நீரினால் சிஷ்யனை ஸ்நாநம செய்வித்து, கிழக்கு நோக்கி உட்காரச் செய்து, ஆசாரயன் நியமமுடையவனாய், அக்$_3$னியில் காய்ச்சப்பட்ட பஞ்சாயுத$_4$ங்களைக்கொணடு சிஷ்யனுக்கு அடையாளமிடவேண்டும. முதலில் சககரத்தினால் வலது தோளிலும், ஶங்க$_2$த்தினால் இடது தோளிலும், க$_3$தை$_3$யினால நெற்றியிலும், கததியினால் மார்பிலும, வில்லினால் தலையிலும் அடையாளமிடவேண்டும். அஜ்ஞாநத்தை அழிககும் பரமபவித்ரமான இவ்வாயுத$_4$ங்களாலே இவ்வண்ணம் அடையாளம் செய்தபின், அவைகளுககு ஆசாரயன் பஞ்சாம்ருதத்தினால் முனபோல் திருமஞ்சனமும், திருவாராத$_4$னமும் செய்து, ஹோமத்தை முடிக்க வேணும்.

एवं तापक्रियां कुर्यात् शङ्खचक्रादिहेतिभिः।
प्रथमं तापसंस्कारस्तापसैर्मुनिभिः स्मृतः॥ २०॥
सर्वाश्रमेषु वसतां स्त्रीणां च द्विजसत्तमाः।

ஏவம் தாபக்ரியாம் குர்யாத் ஶங்க₂சக்ராதி₃ஹேதிபி₄: ।
ப்ரத₂மம் தாபஸம்ஸ்காரஸ்தாபஸைர் முநிபி₄ஸ்ஸ்ம்ருத: ॥ 20.
ஸர்வாஶ்ரமேஷு வஸதாம் ஸ்த்ரீணாஞ்ச த்₃விஜஸத்தமா: ।

இவ்வண்ணமாக ஶங்க₂ம் சக்ரம் முதலான பஞ்சாயுத₄ங்களாலே தாபம் என்னும் ஸம்ஸ்காரத்தைச் செய்ய வேண்டும். அந்தணர் தலைவர்களே! தபஸ்விகளான முனிவர்கள் இத்தாப ஸம்ஸ்காரத்தைப் பஞ்சஸமஸ்காரங்களில் முதலாவதாக எண்ணுகிறார்கள். இதை எந்த ஆஶ்ரமத்திலுள்ளவர்களும், ஸ்த்ரீகளுங்கூடச் செய்து கொள்ளவேண்டும்.

कर्मसंस्कारसिद्ध्यर्थं जातकर्मादि कारयेत्॥ २१॥
मन्त्रसंस्कारसिद्ध्यर्थं मन्त्रदीक्षाविधिं तथा।

கர்மஸம்ஸ்காரஸித்₃த்₄யர்த்த₂ம் ஜாதகர்மாதி₃ காரயேத் ॥ 21.
மந்த்ரஸம்ஸ்காரஸித்₃த்₄யர்த்த₂ம் மந்த்ரதீ₃க்ஷாவிதி₄ம் தத₂ா ।

ஜாதகர்மம் முதலான ஸம்ஸ்காரங்களில்லாதவன் செய்யும் யாக₃ம் முதலானவை பலனளிக்கமாட்டாவாகையால், முதலில் அந்த ஸம்ஸ்காரங்களை செய்யப்பெற்றவனுக்கே யாக₃ம் முதலான கர்மங்களைச்செய்ய அதி₄காரமுண்டு. அதுபோலவே, இந்தப் பஞ்சஸம்ஸ்காரங்களைப் பெறாதவனுக்கு, திருவஷ்டாக்ஷரம் முதலான மந்த்ரங்கள மோக்ஷத்தை அளிக்கமாட்டாவாகையால், இந்த ஸம்ஸ்காரங்களைப் பெற்றவனுக்கே அம்மந்திரங்களைப் பெற்று அநுஸந்தி₄க்க அதி₄காரமுண்டு.

उद्वाहसमये स्त्रीणां पुंसां चैवोपनायने॥ २२॥
चक्रादिधारणं प्रोक्तं मन्त्रैः पञ्चायुधस्य च।

உத்₃வாஹஸமயே ஸ்த்ரீணும் பும்ஸாஞ்சைவோபநாயநே ॥ 22.
சக்ராதி₃த₄ாரணம் ப்ரோக்தம் மந்த்ரை: பஞ்சாயுத₄ஸ்ய ச।

இதி ஸ்ரீ பராஶர ஸ்ம்ருதௌ உத்தரகூண்டே₃ விஶிஷ்ட பரமத₄ர்ம ஶாஸ்த்ரே, தாபஸம்ஸ்கார வர்ணநம் நாம ப்ரதூமாத்₄யாய: ॥

பெண்களுக்கு விவாஹமானவுடனும், ஆண்களுக்கு உபநயனமானவுடனும, அந்தந்த மந்த்ரங்களை முன்னிட்டுக் கொண்டு பஞ்சாயுத₄ங்களை த₄ரிப்பது விதிக்கப்படுகிறது.

ஸ்ரீ பராஶரஸ்ம்ருதியின் உத்தரகூண்ட₃மான
விஶிஷ்ட பரமத₄ர்ம ஶாஸ்த்ரதில் தாபஸம்ஸ்கார வர்ணனம் என்கிற
முதல் அத்தியாயம் முற்றிற்று.

## 2-வது அத்தியாயம்

### 1. புண்ட்₃ரஸம்ஸ்காரத்தின் க்ரமம்

श्रीपराशर उवाच—

**अतः परं प्रवक्ष्यामि पुण्ड्रधारणमुत्तमम्।**
**यस्य धारणमात्रेण सर्वतीर्थफलं लभेत्॥ १॥**

ஸ்ரீபராஶர உவாச—

அத:பரம் ப்ரவக்ஷ்யாமி புண்ட்₃ரத₄ாரணமுத்தமம்।
யஸ்ய த₄ாரணமாத்ரேண ஸர்வதீர்த்த₂ப₂லம் லபே₄த் ॥ 1.

தாபஸம்ஸ்காரத்தை நிரூபித்தபின்பு, மிகச்சிறந்த புண்ட்₃ரத₄ாரணமாகிற ஸம்ஸ்காரம் பற்றிக் கூறுகிறேன். இந்த ஸம்ஸ்காரம் பெற்றவன், க₃ங்கை₃முதலான எல்லாத் தீர்த்தங்களிலும ஸ்நாடியதாலுண்டாகும ப₂லனைப்பெறுவான்.

**पूर्वाह्णे पूर्ववत् स्नात्वा संपूज्य मधुसूदनम्।**
**शिष्यं स्नातमलङ्कृत्य पुण्ड्रधारणमादिशेत्॥ २॥**

பூர்வாஹ்ணே பூர்வவத் ஸ்நாத்வா ஸம்பூஜ்ய மது₄ஸூத₃நம்।
ஶிஷ்யம் ஸ்நாதமலங்க்ருத்ய புண்ட்₃ரத₄ாரணமாதி₃ஶேத் ॥ 2.

முதல் அத்தியாயத்தில் சொல்லியதுபோல் காலையில் நீராடி எம்பெருமானை ஆராதி₄த்து, நீராடியவனாய், நல்ல வஸ்த்ரம் ஆப₄ரணங்கள் முதலானவற்றால் அலங்கரிக்கப் பெற்றவனாயுள்ள சிஷ்யனைப் புண்ட்₃ரஸம்ஸ்காரம் பெற்றுக் கொள்ளும்படி நியமிக்கவேணடியது.

**स्थण्डिले सैकते वाऽपि ह्युपलिप्य ततो गुरुः ।**
**द्वादशैतानि पुण्ड्राणि लिखेत् तस्मिन् यथाक्रमम् ॥ ३ ॥**

**ஸ்த₂ண்டி₃லே ஸைகதே வாபி ஹ்யுபலிப்ய ததோ கு₃ரு: ।**
**த்₃வாத₃ஶைதாநி புண்ட்₃ராணி லிகே₂த் தஸ்மிந் யதா₂க்ரமம்॥3.**

புல் பூண்டுகளில்லாத தரையிலாவது, மணற்பிரதேசத்திலாவது, கோ₃மயத்தினால் (பசுஞ்சாணியினால்) மெழுகிய இடத்தில், கிழக்கு முதலான தி₃க்குகளில் முறையே கேசவன் முதலான பனிரண்டு ஊர்த்₄வபுண்ட்₃ரங்களையும் எழுதவேண்டியது.

**अष्टपुण्ड्राण्यष्टदिक्षु मध्ये चत्वारि विन्यसेत् ।**
**व्याहरन् सर्वपुण्ड्रेषु केशवादीन् यथाक्रमम् ॥ ४ ॥**
**आवाहनार्घ्यपाद्यैश्च धूपदीपनिवेदनैः ।**
**संपूज्याग्निं प्रतिष्ठाप्य होमं पूर्ववदाचरेत् ॥ ५ ॥**
**पौरुषेण च सूक्तेन केशवाद्यैश्च नामभिः ।**
**मूलमन्त्रेण वै हुत्वा होमशेषं समापयेत् ॥ ६ ॥**

**அஷ்டபுண்ட்₃ராண்யஷ்டதி₃க்ஷு மத்₄யே சத்வாரி விந்யஸேத் ।**
**வ்யாஹரந் ஸர்வபுண்ட்₃ரேஷு கேஶவாதீ₃ந் யதா₂க்ரமம் ॥ 4.**
**ஆவாஹநார்க்₄யபாத்₃யைஶ்ச தூ₄பதீ₃பநிவேத₃நை: ।**
**ஸம்பூஜ்யாக்₃நிம் ப்ரதிஷ்டா₂ப்ய ஹோமம் பூர்வவதா₃சரேத் ॥ 5.**
**பௌருஷேண து ஸூக்தேந கேஶவாத்₃யைஶ்ச நாமபி₄: ।**
**மூலமந்த்ரேண வை ஹுத்வா ஹோமஶேஷம் ஸமாபயேத் ॥ 6.**

அதில், கிழக்கு தென்கிழக்கு முதலான எட்டு தி₃க்குகளில் எட்டு புண்ட்₃ரங்களையும், நடுவில் (விதி₃க்குகளை

விட்டு) கிழக்கு முதலான நாலு தி₃க்குகளில் நாலு புண்ட்₃ரங்களையும ஆகப் பனிரண்டு ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை எழுதி, அவற்றில் எழுதிய முறையிலேயே கேசவன் முதலாக தா₃மோத₃ரனீருகப் பனிரண்டு திருநாமங்களை ஆவாஹநம்பண்ணி, அவர்கள திருநாமங்களைக்கொண்டே அர்க்₄யம், பாத்₃யம், ஆசமநீயம, தூ₄பம, தீ₃பம் முதலியவைகளால் ஆராதி₄த்து, பழம முதலாகத் தாமபூ₃லமீருகக் கண்டருளபபண்ணி, அதன்பின் முன் அத்₄யாயத்தில் சொன்னபடி அவரவர் க்₃ருஹ்ய ஸூத்ரததின்படி அக்₃நிப்ரதிஷ்டை₂பண்ணி, புருஷஸூக்த மந்திரங்களாலும், கேஶவன் முதலான பன்னிருநாமங்களாலும், திருமந்திரத்திறைலும் ஹோமததை ஸமபூர்ணமாகச் செய்துமுடிக்க வேண்டும்.

प्रदक्षिणं ततः कुर्यात् नमस्कुर्याच्च भक्तितः।
पुण्ड्राणि धारयेच्छिष्यमासीनं विनयान्वितम्॥ ७॥
नमस्कृत्य ततः शिष्यो गुरुं सर्वगुणान्वितम्।
तदाप्रभृति पुण्ड्राणि मृदा धार्याणि नित्यशः॥८॥

**ப்ரத₃க்ஷிணம் தத: குர்யாந் நமஸ்குர்யாச்ச ப₄க்தித:।**
**புண்ட்₃ராணி த₄ாரயேச்சி₂ஷ்யமாஸீநம் விநயாந்விதம்॥ 7.**
**நமஸ்க்ருத்ய ததஶ்ஶிஷ்யோ கு₃ரும் ஸர்வகு₃ணாந்விதம்।**
**தத₃ாப்ரப்₄ருதி புண்ட்₃ராணி ம்ருத₃ா த₄ார்யாணி நித்யஶ:॥ 8.**

அதற்குப்பின், ஆசார்யன் ப₄கதியுடன் அக்₃னிககு ப்ரத₃க்ஷிண நமஸகாரங்களைபபண்ணி, வணக்கத்துடன் தன் அருகில உட்கார்ந்திருக்கும் சிஷ்யனுககு, மேலே சொல்லப்போகிற முறையில் ஊர்த்₄வபுண்ட்₃ரத₄ாரணம் செய்விக்கவேண்டியது. சிஷ்யனும், தனககு அறிவளித்தவனை, ஆசார்யகு₃ணங்களனைத்தும நிறைந்தவனை கு₃ருவுக்கு தண்டன் ஸமர்பபித்து, அன்றுமுதல வெள்ளை மண்ணல் ஊர்த்₄வபுண்ட₃ரங்களை த₄ரிக்கக்கடவன்.

आदाय वैष्णवे क्षेत्रे मृत्तिकां विमलां शुभाम्।
मूलमन्त्रेणाभिमन्त्र्य चोर्ध्वपुण्ड्राणि धारयेत्॥ ९॥
ललाटादिषु चाङ्गेषु केशवादीन् यथाक्रमम्।

ஆதா₃ய வைஷ்ணவே க்ஷேத்ரே ம்ருத்திகாம் விமலாம் ஶுபா₄ம்।
மூலமந்த்ரேணாபி₄மந்த்ர்ய சோர்த்₄வபுண்ட்₃ராணி தா₄ரயேத்॥ 9.
லலாடாதி₃ஷு சாங்கே₃ஷு கேஶவாதீ₃ந்ய தா₂க்ரமம்।

அந்த மண்ணை எம்பெருமான் உகந்த தி₃வ்யதே₃ஶங்களிலிருந்து எடுதது, வெண்மையாய், ம்ருது₃வாய், மணமுடையதாம்படி பக்குவம்செய்து, திருமந்திரத்தினல் அபி₄மந்த்ரணம்செய்து, நெற்றி முதலான அவயவங்களில அதைககொண்டு ஊர்த்₄வபுண்ட்₃ரமாக தா₄ரித்து, அவைகளில் கேஶவன் முதலான பன்னிருமூர்த்திகளை முறையே ஆவாஹனம செய்யவேண்டும்.

ஊர்த்₄வபுண்ட்₃ரலக்ஷணம்

द्व्यङ्गुलं त्र्यङ्गुलं वापि ह्यन्तरालं प्रकल्पयेत्॥ १०॥
पार्श्वमङ्गुलमात्रं स्यादूर्ध्वपुण्ड्रस्य लक्षणम्।

த்₃வ்யங்கு₃லம் த்ர்யங்கு₃லம் வாபி ஹ்யந்தராளம் ப்ரகல்பயேத்॥10.
பார்ஶ்வமங்கு₃லமாத்ரம் ஸ்யாதூ₃ர்த்₄வபுண்ட்₃ரஸ்ய லக்ஷணம்।

இடையில் இரண்டு அங்கு₃லமாவது, மூன்ருங்குலமாவது இடைவெளிவிட்டு, இரு பக்கங்களிலும் ஒவ்வோரங்கு₃லம் அகலமுடையதாய் தா₄ரிக்கப்பட்டது ஊர்த்₄வபுணட்₃ரம் எனப்படும்.

हरेः पादाकृतिं रम्यं सुपार्श्वं सुमनोहरम्॥ ११॥
नासिकामूलमारभ्य ललाटान्तञ्च विन्यसेत्।
एवं सर्वाणि पुण्ड्राणि सच्छिद्राण्येव धारयेत्॥ १२॥

ஹரே: பாதா₃க்ருதிம் ரம்யம் ஸுபார்ஶ்வம் ஸுமநோஹரம்॥ 11.
நாஸிகாமூலமாரப்₄ய லலாடாந்தஞ்ச விந்யஸேத்।
ஏவம் ஸர்வாணி புண்ட்₃ராணி ஸச்சி₂த்₃ராண்யேவ தா₄ரயேத்॥ 12.

ஹரிபாத₃ாக்ருதியாய், அழகியதாய், ஒழுங்கான பக்கங்களை உடையதாய், நெஞ்சுக்கு மிகவினியதான ஊர்த்₄வபுண்ட₃ரததை, நாஸிகாமூலம என்று ஸாஸ்த்ர ஸித்₃த₄மான மூக்கின மூன்ருவது ப₄ாக₃த்தில் தொடங்கி, நெற்றிககட்டு வரையில அழகாக த₄ரிககவேண்டும். இப்படியே மற்ற ஊர்த்₄வபுணட்₃ரங்களையும் இடைவெளி யுடையதாகவே த₄ரிக்கவேணடும்.

**இடைவெளியில்லாத ஊர்த்₄வபுண்ட்₃ரத்துக்கு நிஷேத₄ம்**

**प्रमाणहीनं बद्धाग्रमच्छिद्रं च विवर्जयेत्।**
**अच्छिद्रमूर्ध्वपुण्ड्रं तु यः करोति विमूढधीः॥१३॥**
**तेनैव हि धृतः संयक् शुनः पादो न संशयः।**
**तस्मात् छिद्रान्वितं पुण्ड्रं ब्राह्मणः सततं धरेत्॥१४॥**

**ப்ரமாணஹீநம் ப₃த்₃த₄ாக்₃ரமச்சி₂த்₃ரஞ்ச விவர்ஜயேத்।**
**அச்சி₂த்₃ரமூர்த்₄வபுண்ட்₃ரந்து ய: கரோதி விமூட₄தீ₄:॥ 13.**
**தேநைவ ஹி த்₄ருதஸ் ஸம்யக் ஶுந: பாதோ₃ ந ஸம்ஶய:।**
**தஸ்மாச்சி₂த்₃ராந்விதம் புண்ட்₃ரம் ப்₃ராஹ்மணஸ் ஸததம் த₄ரேத்॥ 14.**

கீழ்ச்சொன்ன அளவுகளில மாறுபட்டதாகவோ, நுனி சேர்ந்ததாகவோ, இடைவெளியில்லாததாகவோ ஊர்த்₄வபுண்ட்₃ரததை த₄ரிககக்கூடாது. இநத லக்ஷண மறியாத அறிவிலி, இப்படித் தவருன முறையில அதை த₄ரித்தாளுகில், அவன் நாயின் காலையே நன்கு த₄ரிததுக் கொண்டவனுவான் என்பதில் ஐயமில்லை. ஆகையால, அந்தணன் எப்போதும் ஊர்த₄வபுண்ட்₃ரத்தை முற்கூறிய படி இடைவெளி முதலான லக்ஷணங்கள உடையதாகவே த₄ரிககவேண்டும்.

**வைதி₃ககர்மங்களில் ஊர்த்₄வபுண்ட்₃ரத₄ாரணவிதி₄**

**सन्ध्याकाले जपे होमे स्वाध्याये पितृतर्पणे।**
**श्राद्धे दाने च यज्ञे च धारयेदूर्ध्वपुण्ड्रकम्॥१५॥**

**ஸந்த்₄யாகாலே ஜபே-ஹோமே ஸ்வாத்₄யாயே பித்ருதர்ப்பணே।**
**ஶ்ராத்₃தே₄ தா₃நே ச யஜ்ஞே ச தா₄ரயேதூ₃ர்த்₄வ-**
**புண்ட்₃ரகம் || 15.**

தினந்தோறும் முக்காலங்களிலும் அனுஷ்டி₂க்க வேண்டிய ஸந்த்₄யாவந்த₃னத்தின்போதும், ஜபம், ஹோமம், வேதா₃த்₄யயநம பாவகாலங்களில செய்யவேண்டிய பிதருதர்ப்பணம, ஶ்ராத்₃த₄ம, தா₃நம், ப₂லனை உத்₃தே₃ஶித்துச்செய்யும யாக₃ம் முதலான நித்ய நைமித்திக காம்ய கர்மங்களை, ஊர்த்₄வபுண்ட்₃ரமணிந்தபின்பே அநுஷ்டி₂ககவேண்டும்.

**ஊர்த்₄வபுண்ட்₃ரமில்லாமல் செய்யும் கர்மம்**
**ப₂லமின்றியொழிகை**

**ऊर्ध्वपुण्ड्रं तु विप्राणां सन्ध्यानुष्ठानकर्मवत्।**
**श्राद्धकाले विशेषेण कर्ता भोक्ता च न त्यजेत्॥ १६॥**
**ऊर्ध्वपुण्ड्रविहीनस्तु कर्म यत्किञ्चिदाचरेत्।**
**तत्सर्वं विफलं यायादिष्टापूर्तमपि द्विजाः॥ १७॥**

**ஊர்த்₄வபுண்ட்₃ரந்து விப்ராணும் ஸந்த்₄யாநுஷ்ட₂ாந கர்மவத்।**
**ஶ்ராத்₃த₄காலே விஶேஷேண கர்த்தா போ₄க்தா ச ந**
**த்யஜேத் ॥ 16.**
**ஊர்த்₄வபுண்ட்₃ரவிஹீநஸ்து கர்ம யத்கிஞ்சித₃ாசரேத்।**
**தத் ஸர்வம் விப₂லம் யாயாதி₃ஷ்டாபூர்த்தமபி த்₃விஜா: ॥ 17.**

அந்தணனுககு, ஸந்த₄யாவந்த₄னம்போலே ஊர்த்₄வ புண்ட்₃ரத₄ாரணமும மிகவும அவஶ்யமானது. அதிலும், ஶ்ராத்₃த₄காலத்தில், ஶ்ராத்₃த₄த்தைச் செய்பவனும், அதில் பு₄ஜிக்கிறவனும், ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை விடாமல் த₄ரிக்கவேணடும். ஊர்த்₄வபுண்ட்₃ரமில்லாதவன் செய்த நித்யநைமித்திகாதி₃ கர்மங்களும், யாகம் முதலான காம்ய கர்மஙகளும், குளம்வெட்டுதல் முதலான புண்யகர்மங்களும் ப₂லமில்லாமற்போய்விடும்.

ஊர்த்₄வபுண்ட்₃ரமற்ற ஶரீரத்தைக் காணலாகாது

यच्छरीरं मनुष्याणां ऊर्ध्वपुण्ड्रविवर्जितम् ।
द्रष्टव्यं नैव तत् गात्रं श्मशानसदृशं हि तत् ॥ १८ ॥

யச்ச₂ரீரம் மநுஷ்யாணும் ஊர்த்₄வபுண்ட்₃ரவிவர்ஜிதம் ।
த்₃ரஷ்டவ்யம் நைவ தத் கா₃த்ரம் ஶ்மஶாநஸத்₃ருஶம் ஹி தத் ॥ 18.

ஊர்த்₄வபுண்ட்₃ரமில்லாத ஶரீரம் சுடுகாட்டை ஒத்த தாகையாலே அதைப் பார்க்கவே கூடாது.

ஊர்த்₄வபுண்ட்₃ரத₄ாரண ப₂லம்

मृदमादाय कृष्णायास्तुलस्या मूलसंभवाम् ।
धारयेदूर्ध्वपुण्ड्राणि तस्याः फलमनन्तकम् ॥ १९ ॥
यत्तु दिव्यं हरेः क्षेत्रं मृदमादाय तत्र वै ।
धारयेदूर्ध्वपुण्ड्राणि त्रिसन्ध्यासु द्विजोत्तमाः ॥ २० ॥

ம்ருத₃மாத₃ாய க்ருஷ்ணுயாஸ் துலஸ்யா மூலஸம்ப₄வாம் ।
த₄ாரயேதூ₃ர்த்₄வபுண்ட்₃ராணி தஸ்யா: ப₂லமநந்தகம் ॥ 19.
யத்து தி₃வ்யம் ஹரே: க்ஷேத்ரம் ம்ருத₃மாத₃ாய தத்ர வை ।
த₄ாரயேதூ₃ர்த்₄வபுண்ட்₃ராணி த்ரிஸந்த்₄யாஸு த்₃விஜோத்தமா: ॥ 20.

அந்தணர் தலைவர்களே! க்ருஷ்ணதுளஸியின் வேர்ப் பற்றிலிருக்கும மண்ணையாவது, கோயில, திருமலை, பெருமாள கோயில, திருநாராயணபுரம முதலான தி₃வ்ய தே₃ஶங்களிலுள்ள மண்ணையாவது கொண்டு காலை, நண் பகல், மாலை ஆகிய மூன்று ஸந்த்₄யாகாலங்களிலும் ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை த₄ரிப்பவன் அநந்தமான ப₂லனை அடைவான்.

மற்ற புண்ட்₃ரங்களை த₄ரிப்பதின் ப₂லன்

अच्छिद्रमूर्ध्वपुण्ड्रं वा त्रिपुण्ड्रं यस्तु धारयेत् ।
स जीवन्नेव शूद्रत्वमाशु गच्छत्यसंशयम् ॥ २१ ॥

அச்சி₂த்₃ரமூர்த்₄வபுண்ட்₃ரம் வா த்ரிபுண்ட்₃ரம் யஸ்து
த₄ாரயேத் ।
ஸ ஜீவந்நேவ ஶூத்₃ரத்வமாஶு க₃ச்ச₂த்யஸம்ஶயம் ॥ 21.

இடைவெளியில்லாத ஊர்த₄வபுண்ட்₃ரத்தையோ, திரி (திர்யக்) புண்ட்₃ரத்தையோ த₄ரிப்பவன் (அந்தணப்பிறப்புடையவனுயினும்) இந்த ஜன்மத்திலேயே வைதி₃க கர்மங்களுக்குத் தகுதியற்ற ஶூத்₃ரனுகிவிடுவான் என்பது உறுதி.

த்ரிபுண்ட்₃ரத₄ாரியோடு ஸஹவாஸம் கூடாது

कपालदेहभस्मास्थिशुक्तिपाषाणधारिणम् ।
त्रिपुण्ड्रधारिणं विप्रं चण्डालमिव संत्यजेत् ॥ २२ ॥

கபாலதே₃ஹப₄ஸ்மாஸ்தி₂ ஶுக்திபாஷாணத₄ாரிணம் ।
த்ரிபுண்ட்₃ரத₄ாரிணம் விப்ரம் சண்டா₃ளமிவ ஸந்த்யஜேத் ॥ 22.

மண்டையோடு, பிணச்சாமபல், எலும்பு, சங்கு, சிவலிங்க₃க்கல் இவைகளையோ, த்ரிபுண்ட்₃ரத்தையோ த₄ரிப்பவனை, சண்டாளனைப்போலே விலக்கவேணடும்.

த்ரிபுண்ட்₃ரத₄ாரியான அந்தணன் தே₃ஶப்₄ரஷ்டம் செய்யத்தக்கவன்

अग्निदं गरदं चैव लिङ्गपाषाणधारिणम् ।
तिर्यक्पुण्ड्रधरं विप्रं राजा राष्ट्रात् प्रवासयेत् ॥ २३ ॥

அக்₃நித₃ம் க₃ரத₃ஞ்சைவ லிங்க₃பாஷாணத₄ாரிணம் ।
திர்யக்புண்ட்₃ரத₄ரம் விப்ரம் ராஜா ராஷ்ட்ராத்
ப்ரவாஸயேத் ॥ 23.

வீட்டில் நெருப்பு வைப்பவன், உணவிலும் நீரிலும் விஷத்தைக் கலப்பவன், சிவலிங்க₃த்தை த₄ரிப்பவன், திரிபுண்ட்₃ரத்தை த₄ரிப்பவன் ஏனும் இத்தகைய அந்தணர்களை அரசன் தன் ராஜ்யத்திலிருந்து வெளியேற்ற வேண்டும்.

த்ரிபுண்ட்₃ரத₄ாரிக்கு கோ₃ஷ்டி₂யில் நிஷேத₄ம்

तिर्यक्पुण्ड्रधरो विप्रः पङ्क्तिमध्ये स्थितो यदि।
सा पङ्क्तिर्ब्रह्महत्यायां युज्यते नात्र संशयः॥ २४॥

तिर्यक्पुण्ड्रधरो विप्रो यत्र तिष्ठति दुर्मतिः।
स देशः पापसंभूतिः श्मशानसदृशो भवेत्॥ २५॥

திர்யக்புண்ட்₃ரத₄ரோ விப்ர: பங்க்திமத்₄யே ஸ்தி₂தோ யதி₃।
ஸா பங்க்திர் ப்₃ரஹ்மஹத்யாயாம் யுஜ்யதே நாத்ர ஸம்ஶய: ॥ 24.

திர்யக்புண்ட்₃ரத₄ரோ விப்ரோ யத்ர திஷ்ட₂தி து₃ர்மதி:।
ஸ தே₃ஶ: பாபஸம்பூ₄திஶ் ஶ்மஶாநஸத்₃ருஶோ ப₄வேத்॥ 25.

திரிபுண்ட்₃ரத₄ாரியான அந்தணனோடே ஒரு வரிசையில நின்றவர்கள் அனைவரும் ப்₃ரஹ்மஹத்தி தோ₃ஷத்தை அடைவார்கள் என்பதில் ஐயமில்லை. தன் த₄ர்மததை விட்டுத தீயறிவுடையவனாய் த்ரிபுண்ட்₃ரத்தை த₄ரித்த அந்தணன் வாழும் தேஶம பாபமுடையதாய், சுடுகாட்டை ஒத்ததாகும்.

த்ரிபுண்ட்₃ரத₄ாரித்₃விஜனுக்கு த₃ண்ட₃னை

ब्राह्मणः कुलजो विद्वान् तिर्यक्पुण्ड्रधरो यदि।
तं गर्दभं समारोप्य राजा राष्ट्रात् प्रवासयेत्॥ २६॥

ப்₃ராஹ்மண: குலஜோ வித்₃வாந் திர்யக்புண்ட்₃ரத₄ரோ யதி₃।
தம் க₃ர்த்த₃ப₄ம் ஸமாரோப்ய ராஜா ராஷ்ட்ராத் ப்ரவாஸயேத்॥ 26.

நற்குலத்தில், கல்வியுடையவனாகப் பிறந்த அந்தணனும் திர்யக்புண்ட்₃ரத்தை த₄ரித்தானாகில், அரசன், அவனைக் கழுதையின்மேல் ஏற்றி தே₃ஶப்₄ரஷ்டம செய்யவேண்டும்.

तस्मात्तु ब्राह्मणो नित्यमूर्ध्वपुण्ड्रं हि धारयेत्।
ऊर्ध्वपुण्ड्रेण संसिद्धिं लभते नात्र संशयः॥ २७॥

தஸ்மாத்து ப்₃ராஹ்மணோ நித்யமூர்த்₄வபுண்ட்₃ரம் ஹி
த₄ாரயேத் ।
ஊர்த்₄வபுண்ட்₃ரேண ஸம்ஸித்₃தி₄ம் லப₄தே நாத்ர
ஸம்ஶய: ॥ 27.

ஆகையால், ப்₃ராஹ்மணன் ஊர்த்₄வபுண்ட்₃ரத்தையே த₄ரிக்கவேண்டும். அதனால எல்லா ஸித்₃தி₄யையும அடைவான் என்பதில் ஐயமில்லை.

ஊர்த்₄வபுண்ட்₃ரங்களின் ஸ்த₂ாநமும், அளவும், தே₃வதைகளும் (28-41)

ऊर्ध्वपुण्ड्रप्रमाणानि स्थानानि मुनिसत्तमाः।
व्यूहभेदेन नामानि वक्ष्यामि च पृथक् पृथक्॥ २८॥

ஊர்த்₄வபுண்ட்₃ரப்ரமாணாநி ஸ்த₂ாநாநி முநிஸத்தமா: ।
வ்யூஹபே₄தே₃ந நாமாநி வக்ஷ்யாமி ச ப்ருத₂க் ப்ருத₂க் ॥ 28

முனிவர்களே! இனி, ஊர்த்₄வபுண்ட்₃ரங்களின் அளவுகளையும், இடங்களையும், அவைகளின் நாமங்களையும் தனித் தனியாகச் சொல்லுகிறேன்.

चतुस्त्रिद्व्यङ्गुलं वापि विस्तारं परिकल्पयेत्।

சதுஸ்த்ரித்₃வ்யங்கு₃லம் வாபி விஸ்தாரம் பரிகல்பயேத் ।

நாலு அங்கு₃லமாவது, மூன்று அங்கு₃லமாவது, இரண்டு அங்கு₃லமாவது, அவரவர் ஶரீரம், அந்தந்த இடங்களுக்குத் தக்கபடி உயரமுள்ளவையாக ஊர்த்₄வ புண்ட்₃ரங்களை த₄ரிக்கவேண்டும்.

ललाटे केशवायेति चतुरङ्गुलमायतम्॥ २९॥
चतुश्चक्रधरं देवं शुद्धजाम्बूनदप्रभम्।

லலாடே கேஶவாயேதி சதுரங்கு₃லமாயதம் ॥ 29.
சதுஶ்சக்ரத₄ரம் தே₃வம் ஶுத்₃த₄ஜாம்பூ₃நத₃ப்ரப₄ம் ।

நெற்றியில் நாலு அங்கு₃லம் உயரமுள்ளதாக ஊர்த்₄வ புண்ட்₃ரத்தை த₄ரித்து, அதில்—(நாலு கைகளில்) நாலு சககரங்களையுடையவனாய், அழுக்கற்ற தங்கமபோல் ஒளியுள்ளவனான் கேஶவனை "கேஶவாய நம:" என்னும் மந்திரத்தினால் ஆவாஹநம செய்யவேண்டும். (இத்திருமண் காப்பிற்குக் கேஶவன் என்றே பெயர். மற்ற திருமண் காப்புகளும அவ்வவவிடங்களில ஆவாஹநம் செய்யபபடும் நாராயணன் முதலானாரின் பெயரையே உடையவை.)

नाभौ नारायणायेति धारयेत्तु दशाङ्गुलम्॥ ३०॥
चतुःशङ्खधरं देवं इन्दीवरदलप्रभम्।

நாபௌ₄ நாராயணாயேதி த₄ாரயேத் து த₃ஶாங்கு₃லம் ॥ 30.
சதுஶ்ஶங்க₂த₄ரம் தே₃வம் நீலஜீமூதஸந்நிப₄ம் ।

கொப்பூழின் மேலே, நடு வயிற்றில, (நாலு கைகளில்,) நாலு ஶங்க₂ங்களையும், நீலமேக₄ம்போன்ற காந்தியையும் உடைய நாராயணனை "நாராயணாய நம:" என்னும் மந்திரத்தினால் பத்து அங்கு₃லம் உயரமுள்ளதாக த₄ரிகக வேண்டும்.

हृदये माधवायेति न्यसेदष्टाङ्गुलं तथा॥ ३१॥
चतुर्गदाधरं देवमिन्दीवरदलप्रभम्।

ஹ்ருத₃யே மாத₄வாயேதி ந்யஸேத₃ஷ்டாங்கு₃லம் தத₂ா ॥ 31.
சதுர்க்க₃த₃ாத₄ரம் தே₃வமிந்தீ₃வரத₃ளப்ரப₄ம் ।

மார்பில்—கருநெய்தல் போன்ற ஒளியையும்,(கைகளில்) நாலு க₃தை₃களையும் உடைய மாத₄வனை "மாத₄வாய நம:" என்னும் மந்திரத்தைச் சொல்லி, எட்டு அங்கு₃லம் உயரமுள்ளதாக த₄ரிக்கவேண்டும்.

गोविन्दायेति कण्ठे च धारयेत् चतुरङ्गुलम्॥ ३२॥
चतुर्धनुर्धरं देवं कोटिचन्द्रसमप्रभम्।

**கே₃ாவிந்த₃ாயேதி கண்டே₂ ச த₄ாரயேச்சதுரங்கு₃லம் ॥ 32.**
**சதுர்த்த₄நுர்த்த₄ரம் தே₃வம் கோடிசந்த்₃ரஸமப்ரப₄ம் ।**

கோடிசந்திரர்களை ஒத்த ஒளியையும், கைகளில் நாலு வில்களையும உடைய கே₃ாவிந்த₃னை "கே₃ாவிந்த₃ாய நம:" என்னும மந்திரததினுல் நாலு அங்கு₃லம் உயரமுள்ள தாகக் கழுத்தில் த₄ரிக்கவேண்டும்.

**विष्णुं च दक्षिणे कुक्षौ धारयेत्तु दशाङ्गुलम्॥३३॥**
**चतुर्हलधरं देवं पद्मकिञ्जल्कसन्निभम्।**

**விஷ்ணுஞ்ச த₃க்ஷிணே குக்ஷௌ த₄ாரயேத்து த₃ஶாங்கு₃லம் ॥ 33.**
**சதுர்ஹலத₄ரம் தே₃வம் பத்₃மகிஞ்சல்கஸந்நிப₄ம் ।**

தாமரைப்பூவின் தாதுவைப்போன்ற நிறத்தையும், கைகளில் நாலு கலப்பைகளையும் உடைய ஸ்ரீவிஷ்ணுவை "ஸ்ரீவிஷ்ணவே நம:" என்னும மந்திரத்தைச்சொல்லி, பத்து அங்கு₃லம உயரமுளளதாக வயிற்றின் வலது பக்கத்தில் த₄ரிக்கவேண்டும்.

**मधुसूदनं बाहुमध्ये न्यसेदष्टाङ्गुलं तथा॥३४॥**
**चतुर्मुसलभृद्देवं अरविन्दाभमेव च।**

**மது₄ஸூத₃நம் பா₃ஹுமத்₄யே ந்யஸேத₃ஷ்டாங்கு₃லம் தத₂ா ॥ 34.**
**சதுர்முஸலப்₄ருத்₃தே₃வம் அரவிந்த₃ாப₄மேவ ச ।**

தாமரைப்பூவைப்போன்ற ஒளியையும், கைகளில் நாலு உலக்கைகளையும உடைய மது₄ஸூத₃னனை, "மது₄ஸூத₃நாய நம:" என்னும் மந்திரத்தை அநுஸந்தி₄த்து, எட்டு அங்கு₃லம் உயரமுள்ளதாக வலது பு₄ஜத்தில் த₄ரிக்க வேண்டும்.

**त्रिविक्रमायेति चांसे धारयेच्चतुरङ्गुलं ॥३५॥**
**चतुःखड्गधरं देवं ज्वलदग्निसमप्रभम्।**

த்ரிவிக்ரமாயேதி சாம்ஸே த₄ாரயேச்சதுரங்கு₃லம் ॥ 35.
சது:க₂ட்₃க₃த₄ரம் தே₃வம் ஜ்வலத₃க்₃நிஸமப்ரப₄ம் ।

ஒளிவீசும் அக்₃னியை ஒத்த தேஜஸ்ஸையும், கைகளில் நாலு கததிகளேயும உடைய திரிவிக்கிரமனே "தரிவிகரமாய நம:" என்னும் மந்திரத்தால் வலது தோளில் நாலு அங்கு₃லம் உயரமுளளதாக த₄ரிக்கவேண்டும்.

वामनं वामकुक्षौ तु धारयेत्तु दशाङ्गुलम् ॥ ३६ ॥
चतुर्वज्रधरं देवं तरुणादित्यसन्निभम् ।

வாமநம் வாமகுக்ஷௌ து த₄ாரயேத் து த₃ஶாங்கு₃லம் ॥ 36.
சதுர்வஜ்ரத₄ரம் தே₃வம் தருணாதி₃த்யஸந்நிப₄ம் ।

இளஞ்சூரியன் போனற ஒளியையும், கைகளில் நாலு வஜ்ரங்களேயும உடைய வாமநனே "வாமநாய நம:" என்னும மந்திரத்திஞல் வயிற்றின் இடது புறத்தில் பத்து அங்கு₃லம் உயரமுளளதாக த₄ரிக்கவேணடும.

श्रीधरं बाहुमध्ये तु न्यसेदष्टाङ्गुलं तथा ॥ ३७ ॥
पट्टसायसभृद्देवं पुण्डरीकाभमेव च ।

ஶ்ரீத₄ரம் ப₃ாஹுமத்₄யே து ந்யஸேத₃ஷ்டாங்கு₃லம் தத₂ா ॥ 37.
பட்டஸாயுத₄ப்₄ருத்₃தே₃வம் புண்ட₃ரீகாப₄மேவ ச ।

வெண தாமரையை ஒத்த ஒளியையும், கைகளில் நாலு பட்டஸம் என்னும் ஆயுத₄ங்களேயும் உடைய ஶ்ரீத₄ரனே "ஶ்ரீத₄ராய நம:" என்னும மநதிரத்தைச் சொல்லி எட்டு அங்கு₃லம் உயரமுள்ளதாக இடது பு₄ஜத்தில் த₄ரிக்க வேண்டும்.

हृषीकेशं तु वामांसे धारयेत् चतुरङ्गुलम् ॥ ३८ ॥
चतुर्मुद्गरभृद्देवं विद्युद्गणसमप्रभम् ।

ஹ்ருஷீகேஶம் து வாமாம்ஸே த₄ாரயேச்சதுரங்கு₃லம் ॥ 38.
சதுர்முத்₃க₃ரப்₄ருத்₃தே₃வம் வித்₃யுத்₃க₃ணஸமப்ரப₄ம் ।

மின்னற்கூட்டம் போன்ற ஒளியையும், கைகளில் நாலு உழல்தடிகளேயும் உடைய ஹ்ருஷீகேஶனை "ஹ்ருஷீகேஶாய நம:" என்னும மந்திரத்தைக்கொண்டு வலது தோளில் நாலு அங்கு$_3$லம் உயரமுள்ளதாக த$_4$ரிக்க வேண்டும.

**पृष्ठे तु पद्मनाभेति धारयेच्चतुरङ्गुलम् ॥ ३९ ॥**
**सर्वायुधधरं देवं कोटिसूर्यसमप्रभम् ।**

**ப்ருஷ்டே$_2$ து பத்$_3$மநாபே$_4$தி த$_4$ாரயேச்சதுரங்கு$_3$லம் ॥ 39.**
**ஸர்வாயுத$_4$த$_4$ரம் தே$_3$வம் கோடி ஸூர்யஸமப்ரப$_4$ம் ।**

கோடி ஸூர்யர்களே ஒதத ஒளியையும், கைகளில் எலலா ஆயுத$_4$ங்களேயும் உடைய பத்$_3$மநாப$_4$னே "பத்$_3$ம நாப$_4$ாய நம:" என்னும் மந்திரத்தைச் சொல்லி, முதுகின் கீழே நடுவில் நாலு அங்கு$_3$லம உயரமுளளதாக த$_4$ரிக்க வேண்டும்.

**ककुदे दामोदरेति धारयेत् चतुरङ्गुलम् ॥ ४० ॥**
**चतुष्पाशधरं देवं इन्द्रगोपसमप्रभम् ।**

**ககுதே$_3$ தா$_3$மோத$_3$ரேதி த$_4$ாரயேச்சதுரங்கு$_3$லம் ॥ 40.**
**சதுஷ்பாஶத$_4$ரம் தே$_3$வமிந்த்$_3$ரகோ$_3$பஸமப்ரப$_4$ம் ।**

பட்டுப்பூச்சியை ஒத்த நிறத்தையும், கைகளில் நாலு பாஶாயுத$_4$ங்களேயும் உடைய தா$_3$மோத$_3$ரனே "தா$_3$மோத$_3$ராய நம:" என்னும் மந்திரத்தை அநுஸந்தி$_4$த்து, கழுத்துப் பிடரியில் நாலு அங்கு$_3$லம் உயரமுள்ளதாக த$_4$ரிக்க வேண்டும்.

**नमोऽस्तु वासुदेवाय मूर्ध्नि चैवं त्रयोदशम् ॥ ४१ ॥**

**நமோ஽ஸ்து வாஸுதே$_3$வாய மூர்த்$_4$நி சைவம் த்ரயோத$_3$ஶம் ॥41.**

இப்படி த$_4$ரித்து மிகுந்த திருமண் காப்பை "வாஸுதே$_3$வாய நம:" என்று அநுஸந்தி$_4$த்து சிரஸ்ஸில் த$_4$ரிக்க வேண்டும்.

ஊர்த்₄வபுண்ட்₃ரம் அணிந்த சரீரத்தின் பெருமை

**धारणादूर्ध्वपुण्ड्रस्य शरीरं मन्दिरं हरेः।**
**तस्मात्तु सततं धार्यं ऊर्ध्वपुण्ड्रं द्विजोत्तमैः॥४२॥**

**த₄ாரணாதூ₃ர்த்₄வபுண்ட்₃ரஸ்ய ஶரீரம் மந்தி₃ரம் ஹரே:।**
**தஸ்மாத்து ஸததம் தா₄ர்யமூர்த்₄வபுண்ட்₃ரம்**
**த்₃விஜோத்தமை:॥ 42.**

(கேஶவன் முதலான பன்னிரண்டு திருநாமங்களை யுடைய) இந்த ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை அணிந்துள்ள ஶரீரம், அக்காரணத்தாலேயே ஸர்வேஶ்வரனுக்குக் கோயிலாயுள்ளது. ஆகையால் சிறப்புற்ற அந்தணர் முதலானோர் ஊர்த்₄வபுண்ட்₃ரங்களையே அணியக்கடவர்கள்.

ஊர்த்₄வபுண்ட்₃ரமில்லாவிடில் தோ₃ஷம்

**ऊर्ध्वपुण्ड्रं विना यस्तु सन्ध्याकर्मादिकं चरेत्।**
**तत् सर्वं राक्षसैर्नीतं जपहोमादिकं तथा॥४३॥**

**ஊர்த்₄வபுண்ட்₃ரம் விநா யஸ்து ஸந்த்₄யாகர்மாதி₃கம் சரேத்।**
**தத் ஸர்வம் ராக்ஷஸைர் நீதம் ஜபஹோமாதி₃கம் தத₂ா॥ 43.**

ஊர்த்₄வபுண்ட்₃ரம த₄ரிக்காமல, ஸந்த்₄யாவந்த₃னம், மந்த்ர ஜபம, ஹோமம் முதலான நித்ய நைமித்திக கர்மங்களை அநுஷ்டி₂த்தாலும், அவற்றை ராக்ஷஸர்கள் கொண்டு போவார்கள். (அவை ராக்ஷஸர்களையே சேருமாகையால, தே₃வர்கள் அவற்றால் திருப்தியடையமாட்டார்கள் என்றபடி.)

**ते शवाः पुरुषा लोके येषां हृदि न केशवः।**
**केशवार्पितचित्ता ये न शवा न पुनर्भवाः॥४४॥**

**தே ஶவா: புருஷா லோகே யேஷாம் ஹ்ருதி₃ ந கேஶவ:।**
**கேஶவார்ப்பிதசித்தா யே ந ஶவா ந புநர்ப்ப₄வா:॥ 44.**

கேஶவனை நெஞ்சிற்கொள்ளாத மனிதர்கள் (பரமாத்மாவாகிற உயிர் இல்லாத) ஶவங்களே (பிணங்களே) யாவர்கள். கேஶவனை நெஞ்சிற்கொண்டவர்களோவெனில் (பரமாத்மாவாகிற உயிரை உடையவர்களாகையால்) ஶவங்களல்லர். மோக்ஷமடைபவர்களாகையாலே, இவ்வுலகில் மறுபடியும் பிறப்பை அடையார்கள்.

## 2. நாமஸம்ஸ்காரத்தின் க்ரமம்

**नामकर्म प्रवक्ष्यामि पापनाशनमुत्तमम् ।**
**जातकर्मणि वा क्षौरे तथा मौञ्जीनिबन्धने ॥ ४५ ॥**
**मन्त्राध्ययनकाले वा नाम कुर्याद्विधानतः ।**

நாமகர்ம ப்ரவக்ஷ்யாமி பாபநாஶநமுத்தமம் ।
ஜாதகர்மணி வா க்ஷௌரே தத₂ா மௌஞ்ஜீநிப₃ந்த₄நே ॥ 45.
மந்த்ராத்₄யயநகாலே வா நாம குர்யாத்₃ விதா₄நத: ।

பஞ்சஸம்ஸ்காரங்களில மூன்றுவதான நாமஸம்ஸ்காரத்தைப்பற்றி இனிக் கூறுகிறேன். அது எல்லாப்பாபங்களேயும் போக்கக்கூடியது. எல்லாவற்றிலும சிறந்தது. இந்த ஸம்ஸ்காரத்தை, ஜாதகர்மம் செயயும்போதாவது, சௌளம் (குடுமிவைத்தல்) செய்யும்போதாவது, உபநயநகாலத்திலாவது, இககாலங்கள் தபபினல் மந்த்ரோபதேஶகாலத்திலாவது, மேலே சொல்லப்போகிற முறைப்படி செய்யவேண்டும.

**वासुदेवादयो ये च मूर्तयः केशवादयः ॥ ४६ ॥**
**मत्स्यकूर्मादयो व्यूहाः विभवाश्च तथाऽपरे ।**
**तेषामन्यतमं नाम दद्याद्वाऽन्यं शुभाह्वयम् ॥ ४७ ॥**

வாஸுதே₃வாத₃யோ யே ச மூர்த்தய: கேஶவாத₃ய: ॥ 46.
மத்ஸ்யகூர்மாத₃யோ வ்யூஹா வி₄பவாஶ்ச தத₂ாऽபரே ।
தேஷாமந்யதமம் நாம த₃த்₃யாத்₃வாऽந்யம் ஶுப₄ாஹ்வயம் ॥ 47.

நாமஸம்ஸ்காரமாவது பெயரிடுதல். அப்படிப்பெய ரிடும்போது, வாஸுதே₃வன் முதலான வ்யூஹமூர்த்திக ளென்ன, கேஶவன் நாராயணன் முதலான வ்யூஹாந்தர மூர்த்திகளென்ன. மத்ஸ்யம, கூர்மம், வராஹம முதலான விப₄வாவதாரமூர்த்திகளென்ன, ஸ்ரீ ரங்க₃நாத₂ன், ஸ்ரீநிவா ஸன், வரத₃ராஜன் முதலான அர்ச்சாவதாரமூர்த்திக ளென்ன இவர்களில் தான் விரும்பிய ஒரு மூர்த்தியின் திருநாமத்தையாவது, வேறு மங்க₃ளமான (ஶட₂கோபன் ராமாநுஜன் முதலான ஆழ்வார்கள் ஆசார்யர்களுடைய) திருநாமத்தையாவது இடவேண்டும.

**अभ्यर्च्य विधिवद्विष्णुं नाममूर्तिमनुस्मरन्।**
**आवाहनार्घ्यपाद्यैश्च धूपदीपादिभिस्तथा॥ ४८॥**
**गन्धपुष्पादिनाभ्यर्च्य जुहुयाच्च विधानतः।**

**அப்₄யர்ச்ய விதி₄வத்₃ விஷ்ணும் நாமமூர்த்திமநுஸ்மரந்।**
**ஆவாஹநார்க்₄யபாத்₃யைஶ்ச தூ₄பதீ₃பாதி₃பி₄ஸ்தத₂ா ॥ 48.**
**க₃ந்த₄புஷ்பாதி₃நாப்₄யர்ச்ய ஜுஹுயாச்ச விதா₄நத:।**

ஆசார்யன முதலில் எம்பெருமானுக்குத் திருவாரா த₄னம ஸமாப்பிதது, அடுத்தபடியாக சிஷ்யனுக்கு இடப் போகிற திருநாமத்தை உடைய மூர்த்தியை தியானிதது, அந்த மூர்ததியைக் கலஶததிலாவது கூர்ச்சத்திலாவது ஆவாஹநம் செயது, அர்க்₄யம், பாத்₃யம், ஆசமநீயம் ஆகியவற்றை ஸமர்ப்பித்து, தூ₄பம, தீ₃பம், ச₂தரம் (குடை), சாமரம ஆகியவற்றை ஸமர்ப்பிதது, திருமாலை, சந்த₃னம், திருவாப₄ரணம் முதலானவைகளால் அலங் கரித்து, இவவண்ணம் ஷோட₃ஶோபசாரங்களைக்கொணடு ஆராதி₄தது, நாமகரணத்திற்சொல்லிய முறைப்படி அக₃னியில் ஹோமம் செய்யவேண்டும.

चक्रादिधारणं यत्र यत्र वा नामकर्म च ॥ ४९ ॥
तन्मासाधिपतेर्नाम मासपेषु प्रशस्यते ।
मूर्तयः केशवाद्याश्च मार्गशीर्षादिमासपाः ॥ ५० ॥

சக்ராதி₃த₄ாரணம் யத்ர யத்ர வா நாமகர்ம ச ॥ 49.
தந்மாஸாதி₄பதேர் நாம மாஸபேஷு ப்ரஶஸ்யதே ।
மூர்த்தய: கேஶவாத்₃யாஶ்ச மார்க்க₃ஶீர்ஷாதி₃மாஸபா: ॥ 50.

கேஶவன் முதலாக தா₃மோத₃ரனீருகவுள்ள பன்னிரு மூர்த்திகளும, மார்கழி முதல் கார்த்திகை ஈருகவுள்ள பன்னிரு மாதங்களுக்கும் தே₃வதைகள. ஆகையால் அந்த மூர்த்திகளின் திருநாமங்களை இடும்போது, எந்த மாஸத்தில் தாபஸமஸ்காரம் அல்லது நாமகரணம் செய்யப் படுகிறதோ, அந்த மாஸத்திற்கு தே₃வதையான மூர்த்தி யின் திருநாமத்தை இடுவது மிகச்சிறந்தது.

या तन्मासपतेर्मूर्तिः तत्र तां देशिकः स्वयम् ।
परिक्रम्य नमस्कृत्य ह्यावाह्य पुरतो हरेः ॥ ५१ ॥
तन्मूर्तिं मनसा ध्यात्वा नाम तस्याः प्रचोदयेत् ।

யா தந்மாஸபதேர் மூர்த்திஸ் தத்ர தாம் தே₃ஶிகஸ் ஸ்வயம் ।
பரிக்ரம்ய நமஸ்க்ருத்ய ஹ்யாவாஹ்ய புரதோ ஹரே: ॥ 51.
தந்மூர்த்திம் மநஸா த்₄யாத்வா நாம தஸ்யா: ப்ரசோத₃யேத் ।

கேஶவன் முதலான திருநாமங்களை இடும்போதும, அந்த மாஸத்திற்கு அதி₄பதியின் மூர்த்தியை ப₄க₃வத் ஸந்நிதி₄க்கு எதிரில் ஆவாஹநம் செய்து, முன் சொன்ன எல்லா உபசாரங்களையும, ப்ரத₃க்ஷிண நமஸ்காரங்களையும் செய்து, அந்த மூர்த்தியை நெஞ்சில் தியானித்து, ஆசாரி யன் அத்திருநாமத்தை சிஷ்யனுக்கு இடவேண்டும்.

नाम वैष्णवताहेतुः मुख्य इत्युच्यते बुधैः ॥ ५२ ॥
योजयेन्नाम दासान्तं भगवन्नामपूर्वकम् ।
तथा भागवतानां च नाम स्यात् नामपूर्वकम् ॥ ५३ ॥

நாம வைஷ்ணவதாஹேதுர் முக்₂ய இத்யுச்யதே பு₃தை₄: || 52.
யோஜயேந்நாம த₃ாஸாந்தம் ப₄க₃வந்நாமபூர்வகம் |
தத₂ா ப₄ாக₃வதாநாஞ்ச நாம ஸ்யாந்நாமபூர்வகம் || 53.

இதி ஶ்ரீபராஶர ஸ்ம்ருதௌ உத்தரக₂ண்டே₃
விஶிஷ்ட பரமத₄ர்ம ஶாஸ்த்ரே.
புண்ட்₃ர நாம ஸம்ஸ்காரவர்ணநம் நாம த்₃விதீயோऽத்₄யாய: ||

நாமமிடும்போது, முதலில் ப₄க₃வந்நாமத்தையும் கடைசியில தா₃ஸபத₃த்தையும் (ஸ்ரீக்ருஷ்ணதா₃ஸன் என்பதுபோலே) சேர்ககவேண்டும். ப₄ாக₃வதர்களுடைய நாமத்தை இடுமபோதும், முதலில் அவர்களுடைய திருநாமத்தையும், கடைசியில் தா₃ஸபத₃த்தையும் (ஸ்ரீராமாநுஜதா₃ஸன் என்பதுபோலே) சேர்க்கவேண்டும. ப₄க₃வத்ஸமப₃ந்த₄ம் பெற்று வைஷ்ணவனுவதற்கு இந்த நாமஸமஸ்காரம் முக்கியமான காரணமாகும். (இது இல்லாவிடில் வைஷ்ணவத்வம் கிடையாது). இவ்விஷயத்தை ஸ்வரூபஜ்ஞானமுள்ள அறிவாளிகள் கூறுகிருர்கள்.

ஸ்ரீ பராஶரஸ்ம்ருதியின் உத்தரக₂ண்ட₃மான
விஶிஷ்ட பரமத₄ர்ம ஶாஸ்த்ரத்தில் புண்ட்₃ர நாம ஸம்ஸ்காரவர்ணநம்
என்கிற இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.

## 3-வது அத்தியாயம்

### மந்த்ரஸம்ஸ்காரத்தின் க்ரமம்

**श्रीपराशर उवाच—**

**अथातः संप्रवक्ष्यामि मन्त्रदीक्षाविधिं परम् ।**

ஶ்ரீபராஶர உவாச—

அத₂ாதஸ் ஸம்ப்ரவக்ஷ்யாமி மந்த்ரதீ₃க்ஷாவிதி₄ம் பரம் |

ஸ்ரீபராஶரப₄க₃வான் ரிஷிகளைப் பார்த்துச் சொல்லுகிருர்,—நாமஸம்ஸ்காரத்தைச் சொன்னபிறகு, அதற்குப் பின் செய்யவேண்டிய மந்த்ரஸம்ஸ்காரம் செய்யும் முறையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

पूर्वाह्णे विधिवत् स्नात्वा अर्चयेत् पुरुषोत्तमम् ॥ १ ॥
स्नातं शिष्यं समाहूय होमं कुर्याद्विधानतः ।
मन्त्रद्वयेन जुहुयात् आज्यमष्टोत्तरं शतम् ॥ २ ॥
वैष्णव्या चैव गायत्र्या मूलमन्त्रेण देशिकः ।
तथा पुरुषसूक्तेन विष्णुमन्त्रेण देशिकः ॥ ३ ॥
हुत्वा प्रदक्षिणं कृत्वा सशिष्यः प्रणमेद्गुरुः ।

பூர்வாஹ்ணே விதி₄வத் ஸ்நாத்வா அர்ச்சயேத்
புருஷோத்தமம் ॥ 1.
ஸ்நாதம் ஶிஷ்யம் ஸமாஹூய ஹோமம் குர்யாத் வித₄ாநத: ।
மந்த்ரத்₃வயேந ஜுஹுயாத₃ாஜ்யமஷ்டோத்தரம் ஶதம் ॥ 2.
வைஷ்ணவ்யா சைவ கா₃யத்ர்யா மூலமந்த்ரேண தே₃ஶிக: ।
ததா₂ புருஷஸூக்தேந விஷ்ணுமந்த்ரேண தே₃ஶிக: ॥ 3.
ஹுத்வா ப்ரத₃க்ஷிணம் க்ருத்வா ஸஶிஷ்ய: ப்ரணமேத்₃ கு₃ரு: ।

உத₃யத்திலிருந்து 6 நாழிகை வரையில் உள்ள காலம் பூர்வாஹ்ணம் எனப்படும். மந்திரோபதே₃ஶம் செய்யும் ஆசார்யன், தான் காலையில் எழுந்திருந்து, (ப₄க₃வந்நாம ஸ்மரணம், பல் துலக்குதல் தொடக்கமாக) ஸ்நாநம், ஸந்த்₄யா வந்த₃னமீருகவுள்ள காலைக்கடன்களைப் பூர்வாஹ்ணத்தில் முடித்துக்கொண்டு, பின்பு புருஷோத்தமனை ஸ்ரீமந் நாராயணனுக்குத் திருவாராத₄னம் செய்யவேணடும். அதற்குப்பின் முற்கூறிய காலைக்கடன்களைச் செய்து முடித்த சிஷ்யனை அழைத்துத் தன் ஸமீபத்தில் வைததுக் கொணடு, பாஞ்சராத்ரம் முதலான ஶாஸ்த்ரங்களில் சொல்லிய விதி₄ப்படி ப்ரதிஷ்டை₂ செய்யப்பட்ட அக்₃னியில், திருமந்திரம், த்₃வயம, விஷ்ணு கா₃யத்ரி ஆகிய மந்திரங்கள் ஒவ்வொன்றுலும் 108 தரமும், புருஷஸூக்தத்தின் ருக்குக்களாலும், விஷ்ணு-ஷடா₃க்ஷரி முதலான வைஷ்ணவ மந்திரங்களாலும் நெய்யினுல் இயன்றவரையில் ஹோமம் செய்து, பின்பு அவ்வக்₃னியை சிஷ்யனும தானுமாக ப்ரத₃க்ஷிணம் செய்து த₃ண்டன் ஸமர்ப்பிக்கவேண்டியது.

ततः कलश आधाय पवित्रजलसंभृते ॥ ४ ॥
तुलसीं गन्धदूर्वाग्रे कौशेयं गौरसर्षपम् ।
अभिमन्त्र्य द्वयेनाथ मूलमन्त्रेण मन्त्रवित् ॥ ५ ॥
तेन संमार्जयेत् शिष्यं मन्त्ररत्नेन देशिकः ।
संमार्जयेच्च तं शिष्यं मूलमन्त्रमनुस्मरन् ॥ ६ ॥
प्राशयेत्सलिलं पश्चात् त्रिवारं मन्त्रविच्च तम् ।

தத: கலஶ ஆத₄ாய பவித்ரஜலஸம்ப்₄ருதே ॥ 4.
துளஸீம் க₃ந்த₄தூ₃ர்வாக்₃ரே கௌஶேயம் கௌ₃ரஸர்ஷபம் ।
அபி₄மந்த்ர்ய த்₃வயேநாத₂ மூலமந்த்ரேண மந்த்ரவித் ॥ 5.
தேந ஸம்மார்ஜயேச்சி₂ஷ்யம் மந்த்ரரத்நேந தே₃ஶிக: ।
ஸம்மார்ஜயேச்ச தம் ஶிஷ்யம் மூலமந்த்ரமநுஸ்மரந் ॥ 6.
ப்ராஶயேத் ஸலிலம் பஶ்சாத் த்ரிவாரம் மந்தரவிச்ச தம் ।

அடுத்தபடியாக, மந்திரமறிந்த ஆசாரியன், பரிஶுத்₃த₄மான ஒரு கலஶத்தில், காவேரி முதலான புண்யதீர்த்த₂ங்களின் ஜலத்தை நிறைத்து, அதில் திருத்துழாய், சந்தனம், அருகமபுல்நுனி வெண்கடுகு ஆகியவற்றைச் சேர்த்து, பட்டு வஸ்திரத்தைச் சுற்றி, திருமந்திரத்தாலும், த்₃வயமந்திரத்தாலும் அபி₄மந்திரித்து, அந்த ஜலத்தால அம்மந்திரங்களை அநுஸந்தி₄த்துக்கொண்டு சிஷ்யனை ப்ரோக்ஷித்து, அந்த ஜலத்தை மூன்று தரம் ப்ராஶநம் பண்ணிவைககவேண்டும்.

मूर्ध्नि हस्तं विनिक्षिप्य दक्षिणं ज्ञानदक्षिणम् ॥ ७ ॥
सव्यं च हृदये न्यस्य कृपया वीक्षयेद्गुरुः ।

மூர்த்₄நி ஹஸ்தம் விநிக்ஷிப்ய த₃க்ஷிணம் ஜ்ஞாநத₃க்ஷிணம் ॥ 7.
ஸவ்யஞ்ச ஹ்ருத₃யே ந்யஸ்ய க்ருபயா வீக்ஷயேத்₃ கு₃ரு: ।

ஆசார்யன் ஜ்ஞானமளிக்கும் தனது வலது கையை சிஷ்யனுடைய தலையில் பொருந்தும்படி வைத்து, இடது கையை அவன் மார்பில் வைத்து, த₃யையுடையவனாய சிஷ்யனைப் பார்ககவேணும்.

**स्वाचार्यं हृदये ध्यात्वा जप्त्वा गुरुपरंपराम् ॥ ८ ॥**
**ततः संप्रार्थयेत् देवीं सर्वलोकेश्वरीं प्रियाम् ।**

**ஸ்வாசார்யம் ஹ்ருத₃யே த்₄யாத்வா ஜப்த்வா கு₃ருபரம்பராம் ॥ 8.**
**தத꞉ ஸம்ப்ரார்த்த₂யேத்₃ தே₃வீம் ஸர்வலோகேஶ்வரீம் ப்ரியாம் ।**

அதன்பிறகு, ஆசார்யன் தனக்கு மந்திரோபதே₃ஶம் செய்த ஆசார்யனை நெஞ்சில் தியானித்து, ஸ்ரீ த₄ரன் ஈருகவுள்ள கு₃ருபரம்பரையை அநுஸந்தி₄த்து, பின்பு— எல்லாவுலகங்களுக்கும் ஸ்வாமினியாய், சேதனர் விஷயத்தில் இனியதையே செய்பவளான பெரியபிராட்டியாரைப் பின்வருமாறு பிரார்த்தி₂க்கக்கடவன்.

**माता त्वं सर्वलोकानां सर्वलोकेश्वरप्रिये ॥ ९ ॥**
**श्रायस्वैनमद्येमं अपराधशतैर्वृतम् ।**
**एवं रमां पुरस्कृत्य पश्चात् देवं समाश्रयेत् ॥ १० ॥**

**மாதா த்வம் ஸர்வலோகாநாம் ஸர்வலோகேஶ்வரப்ரியே ॥ 9.**
**ஶ்ராயயஸ்வைநமத்₃யேமம் அபராத₄ஶதைர்வ்ருதம் ।**
**ஏவம் ரமாம் புரஸ்க்ருத்ய பஶ்சாத் தே₃வம் ஸமாஶ்ரயேத் ॥ 10.**

"ஸ்ரீமஹாலக்ஷ்மியே! ஸர்வேஶ்வரன் சேதனருடைய பாபங்களைப்பார்த்து, அவர்களை த₃ண்டி₃க்க முற்படும் போது, இச்சேதனன் பல குற்றங்களைச்செய்து அவனுக்கு அருகில் வரவும் தகுதியில்லாதவனாயிருக்கிறான். தேவரீர்— யாரேனும், எவ்விதமான பிழையைச் செய்தபோதிலும், அவற்றைப் பொறுத்து, அவர்கள் அனைவர்க்கும் எவராலும் ஒரு தீங்கும் வாராதபடி காக்கும் மாதாவாயிருக்கிறீர். ஸர்வலோகேஶ்வரனை அவனுக்கும், தாம் சொன்னதை மறுக்கவொண்ணாதபடி நெஞ்சுக்கு இனியவளாயிருக்கிறீர். ஆகையால், இவனுடைய குற்றங்களைப் பொறுப்பித்து, இவனை இன்று ஸர்வேஶ்வரன் திருவடிகளில் ஆஶ்ரயிப்பிக்க வேணும்" என்று ஆசார்யன் பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு, பிறகு ஸர்வேஶ்வரனைப் பற்றக்கடவன்.

### த்₃வய மந்த்ரோபதே₃ஶம்

नारायण दयासिन्धो वात्सल्यगुणसागर।
त्राह्येनं पापिनं देव कृपया समुपागतम्॥ ११ ॥
एवं प्रपद्य देवेशं आचार्यकृपया स्वयम्।
स्वाचार्यं हृदये ध्यात्वा मन्त्रमध्यापयेद्गुरुः॥ १२ ॥

நாராயண த₃யாஸிந்தே₄ா வாத்ஸல்யகு₃ணஸாக₃ர ।
த்ராஹ்யேநம் பாபிநம் தே₃வ க்ருபயா ஸமுபாக₃தம் ॥ 11.
ஏவம் ப்ரபத்₃ய தே₃வேஶம் ஆசார்யக்ருபயா ஸ்வயம் ।
ஸ்வாசார்யம் ஹ்ருத₃யே த்₄யாத்வா மந்த்ரமத்₄யாபயேத்
கு₃ரு: ॥ 12.

“எல்லா ஜனங்களுக்கும் தாய் தந்தை முதலான எல்லா உறவினருமிருக்கும ஸ்ரீய:பதியான நாராயணனே! கருணைப்பெருங்கடலே! வாத்ஸல்யகு₃ணக்கடலே! எப்போதும் பாவமே செய்து பாவியான இவன் தேவரீருடைய கருணையால் இப்போது திருமுன்பே வந்திருக்கிறான்; இவனைக்காத்தருள்வீர்!” என்று தனது ஆசார்யனுடைய க்ருபையைப் பற்றுசாகக்கொண்டு தான் ஸர்வேஶ்வரனிடத்தில் ப்ரபததிபண்ணி, தன்னுடைய ஆசார்யனை நெஞ்சில் தியானித்துக்கொண்டு, ஆசார்யன் சிஷ்யனுக்கு மந்திரததை உபதே₃ஶம் செய்யவேண்டும்.

### த்₃வய மாஹாத்ம்யம்

समानोत्कृष्टरहितं संसारोच्छेदनं परम्।
सर्वदं सर्वपापघ्नं महाप्रियतमं विभोः॥ १३ ॥
अध्यापयेन्मन्त्ररत्नं सर्षिच्छन्दोधिदैवतम्।
सन्यासञ्च समुद्रञ्च सार्थमध्यापयेत् स्वयम्॥ १४ ॥
विनापि न्यासमुद्रे च विना छन्दोधिदैवते।
यस्योच्चारणमात्रेण सर्वसिद्धिफलं लभेत्॥ १५ ॥

**ஸமாநோத்க்ருஷ்டரஹிதம் ஸம்ஸாரோச்சே2த3நம் பரம் |**
**ஸர்வத3ம் ஸர்வபாபக்4நம் மஹாப்ரியதமம் விபே4ா: ||** 13.
**அத்4யாபயேந்மந்த்ரரத்நம் ஸர்ஷிச்ச2ந்தே3ாதி4தை3வதம் |**
**ஸந்யாஸஞ்ச ஸமுத்3ரஞ்ச ஸார்த்த2மத்4யாபயேத் ஸ்வயம் ||** 14.
**விநாபி ந்யாஸமுத்3ரே ச விநா ச2ந்தே3ாதி4தை3வதே |**
**யஸ்யோச்சாரணமாத்ரேண ஸர்வஸித்3தி4ப2லம் லபே4த் ||** 15.

இந்த த்3வயமந்திரமானது தனக்கு ஒத்ததும் மிக்கதுமான மந்திரம எதுவுமில்லாமையால் மந்தரரத்னம் எனப்படுவது. இதை ஒருகால் உச்சரித்தவனுககு ஸம்ஸாரத்தை அடியோடு அறுத்துவிடும்; எல்லா நன்மைகளையும் அளிக்கும். எலலாப் பாபங்களையும் போக்கிவிடும். இம்மந்திரம் எம்பெருமானுக்கு மிகவும் இனியது. இம்மந்திரத்தை ரிஷி, ச2ந்த3ஸ்ஸு, தே3வதை, அங்க3ந்யாஸகரந்யாஸங்கள், முத்3ரை ஆகியவற்றுடன் அர்தத2த்தோடு ஆசார்யன் உபதே3ஶிக்கவேண்டும். அங்க3ந்யாஸம, கரந்யாஸம், முத்3ரை, ச2ந்த3ஸ்ஸு, தே3வதை ஆகியவைகளில்லாமல் வெறும் மந்திரததை மாத்திரம் உச்சரித்தாலுங்கூட எல்லாப் ப2லன்களையும் அடைவான்.

**த்3வயம் ஓதாதவன் வைதி3கனாகான்**

**अनधीत्य द्वयं मन्त्रं न विप्रो वैदिको भवेत्।**
**मन्त्ररत्नेन रहितं ब्राह्मणं दूरतस्त्यजेत्॥१६॥**

**அநதீ4த்ய த்3வயம் மந்த்ரம் ந விப்ரோ வைதி3கோ ப4வேத் |**
**மந்த்ரரத்நேந ரஹிதம் ப்3ராஹ்மணம் தூ3ரதஸ் த்யஜேத் ||** 16.

த்3வயமந்திரத்தை நியமத்துடன் ஆசார்யனிடமிருந்து எவன் ஓதவில்லையோ, அவன் ப்3ராஹ்மணகுலத்தில் பிறந்தவனானாலும், வேத3த்தில் சொல்லப்பட்ட எந்தக் கர்மத்துக்கும அதி4காரமில்லாத அவைதி3கனாவான். ஆகையால், அத்தகையவனை தூ3ரத்தில் விட்டு விலகிச்செலல வேண்டும்.

த்₃வயமும் திருமந்திரமும் உபதேசிக்கவேண்டும்

अध्यापयेत् द्वयं मन्त्रमाचार्यः शिष्यवत्सलः।
अध्यापयेत् ततः पश्चात् मन्त्रमष्टाक्षरं तथा॥१७॥

அத்₄யாபயேத் த்₃வயம் மந்த்ரமாசார்யஶ்ஶிஷ்யவத்ஸல:।
அத்₄யாபயேத் தத: பஶ்சாத் மந்த்ரமஷ்டாக்ஷரம் தத₂ா॥ 17.

ஆசார்யன் சிஷ்யனிடத்தில் பிரீதியுடையவனாய், த்₃வயமந்திரத்தை முதலில உபதே₃ஶித்து, அதற்குப்பின் அஷ்டாக்ஷரமந்திரத்தை உபதே₃ஶிக்கவேண்டும்.

தாபஸம்ஸ்காரமில்லாமல் மந்த்ரோபதே₃ஶம் கூடாது

अचक्रधारिणं विप्रं योऽध्यापयति देशिकः।
स गुरुर्नरकं याति कल्पकोटिशतं द्विजाः॥१८॥

அசக்ரத₄ாரிணம் விப்ரம் யோऽத்₄யாபயதி தே₃ஶிக:।
ஸ கு₃ருர் நரகம் யாதி கல்பகோடிஶதம் த்₃விஜா:॥ 18.

ரிஷிகளே! எந்த ஆசார்யன் தாபஸம்ஸ்காரமில்லாத அந்தணனுக்கு மந்திரத்தை உபதே₃ஶிக்கிருனே, அவன் நரகத்தை அடைந்து, பல கல்பங்கள் அங்கேயே உழல்வான்.

तस्मात् तापादिसंस्काराः सर्वमन्त्रेषु सत्तमाः।
अध्यापयेत् ततः पश्चात् अन्यथा नरकं व्रजेत्॥१९॥

தஸ்மாத் தாபாதி₃ஸம்ஸ்காராஸ் ஸர்வமந்த்ரேஷு ஸத்தமா:।
அத்₄யாபயேத் தத: பஶ்சாத் அந்யத₂ா நரகம் வ்ரஜேத்॥ 19.

ரிஷிஶ்ரேஷ்டர்களே! ஆகையால், தாபம், புண்ட்₃ரம் முதலான கீழ்ச்சொன்ன ஸமஸ்காரங்கள் செய்தபின்பே திருமந்த்ரம் த்₃வயம் முதலான எல்லா மந்திரங்களையும் உபதே₃ஶிக்கவேண்டும். இல்லையேல் நரகத்தை அடைவான்.

ஒரே நாளில் பஞ்சஸம்ஸ்காரங்கள்

एकस्मिन् दिवसे वापि कृत्वा तापादिसंस्क्रियाः।
पृथक् पृथक् चानुपूर्व्या सर्वं कुर्यादतन्द्रितः॥ २०॥

ஏகஸ்மிந் தி₃வஸே வாऽபி க்ருத்வா தாபாதி₃ஸம்ஸ்க்ரியா:।
ப்ருத₂க் ப்ருத₂க் சாநுபூர்வ்யா ஸர்வம் குர்யாத₃தந்த்₃ரித:॥ 20.

தாபம் முதலிய எல்லா ஸம்ஸ்காரங்களையும் ஒரே தினத்திலாவது முற்கூறிய கிரமப்படி தனித்தனியே ஒன்றும் விடாமல் சோம்பலில்லாமல் செய்யவேண்டும்.

சிஷ்யனிருக்கவேண்டிய முறை

अधीत्य मन्त्रमाचार्यं पूजयेद् भक्तितो द्विजः।
आचार्याधीनवृत्तिस्तु यावज्जीवं भवेत् सदा॥ २१॥

அதீ₄த்ய மந்த்ரமாசார்யம் பூஜயேத் ப₄க்திதோ த்₃விஜ:।
ஆசார்யாதீ₄நவ்ருத்திஸ்து யாவஜ்ஜீவம் ப₄வேத் ஸதா₃॥ 21.

சிஷ்யன் மந்திரத்தை நியமத்துடன் கற்றபின்பு, ஆசார்யனை ப₄க்தியோடு ஆராதி₄க்கக்கடவன். பிறகு, ஆயுளுள்ளவரையில் எப்போதும் ஆசார்யனுக்குப் பரதந்த்ரமானவனாகவே இருக்கக்கடவன.

होमशेषं समाप्याथ ब्राह्मणान् भोजयेत् शुभान्।
यावच्छरीरपातं तु द्वयमावर्तयेन्मनुम्॥ २२॥

ஹோமஶேஷம் ஸமாப்யாத₂ ப்₃ராஹ்மணாந் போ₄ஜயேத் ஶுபா₄ந்।
யாவச்ச₂ரீரபாதம் து த்₃வயமாவர்த்தயேந் மநும்॥ 22.

இதி ஸ்ரீபராஶர ஸ்ம்ருதௌ உத்தரகா₂ண்டே₃
விஶிஷ்ட பரமத₄ர்ம ஶாஸ்த்ரே,
மந்த்ர ஸம்ஸ்காரவர்ணநம் நாம த்ருதீயோऽத்₄யாய:॥

சிஷ்யனுக்கு மந்திரோபதே₃ஶம் செய்தபின்பு ஹோம ஶேஷத்தை ஆசார்யன் செய்துமுடித்து, நல்லொழுக்க முள்ள அந்தணர்களுக்கு அமுது செய்விக்கவேண்டியது. சிஷ்யனும சரீரமுள்ளவரையில் எப்போதும் த்₃வயமந்தி ரத்தை அநுஸந்த₄ாநம் செய்யக்கடவன்.

ஸ்ரீ பராஶரஸ்ம்ருதியின் உத்தரக₂ண்ட₃மான
விஶிஷ்ட பரமத₄ர்ம ஶாஸ்த்ரத்தில் மந்த்ர ஸம்ஸ்கார வர்ணநம்
என்கிற மூன்றும் அத்தியாயம் முற்றிற்று.

## 4-வது அத்தியாயம்

### யாக₃ஸம்ஸ்காரத்தின் க்ரமம்

श्रीपराशर उवाच—

शुभकाले विधानेन प्रणिपत्य ततो गुरुम्।
अस्य प्रसादलब्धं तु गृहीत्वा विग्रहं हरेः॥१॥
श्रीभूमिनीलासहितं सायुधं सपरिच्छदम्।
अर्चयेद्विग्रहं नित्यं यावत्कालमतन्द्रितः॥२॥

ஸ்ரீ பராசர உவாச—

ஶுப₄காலே வித₄ாநேந ப்ரணிபத்ய ததோ கு₃ரும்।
அஸ்ய ப்ரஸாத₃லப்₃த₄ம் து க்₃ருஹீத்வா விக்₃ரஹம் ஹரே:॥ 1.
ஸ்ரீபூ₄மிநீளாஸஹிதம் ஸாயுத₄ம் ஸபரிச்ச₂த₃ம்।
அர்ச்சயேத் விக்₃ரஹம் நித்யம் யாவத்காலமதந்த்₃ரித:॥ 2.

ஸ்ரீபராஶரர் சொல்லுகிறார்:— தாபம் முதல் மந்த்ரம் ஈறுகவுள்ள நாலு ஸம்ஸ்காரங்களும் ஆனபிறகு, சுப₄ மான திதி₂ வார நக்ஷத்திரங்கள் கூடிய தி₃னத்தில் காலே யில் நித்யகர்மங்களை அனுஷ்டி₂த்த பின்பு ஆசார்ய ஸந்நிதி₄யில் த₃ண்ட₃ன் ஸமர்ப்பித்து, அவன் அநுக்₃ர ஹித்துத் தந்த ப₄க₃வானுடைய அர்ச்சாவிக்₃ரஹத்தை,— ஸ்ரீ பூ₄மிநீளாதே₃விகளென்ன, ஶங்க₂சக்ரங்கள் முதலான ஆயுத₄ங்களென்ன, அநந்தன் முதலான பரிஜனங்க ளென்ன, ச₂த்ரம், சாமரம் முதலான பரிச்ச₂த₃ங்களென்ன,

இவற்றுடன் கூட எழுந்தருளப்பண்ணிக்கொண்டு, ஆயு ளுள்ளவரையிலும் சோம்பலில்லாமல திருவாராத₄னம் செய்யக்கடவன். (ப₄க₃வானுடைய திருவாராத₄னமே யாக₃ம் எனப்படுகிறது.)

श्रौतस्मार्तागमोक्तानां गृहीत्वा संमतं गुरोः।
अर्चयेत् श्रद्धया नित्यं देवं दहरवासिनम्॥ ३॥

ஶ்ரௌதஸ்மார்த்தாக₃மோக்தாநாம் க்₃ருஹீத்வா ஸம்மதம் கு₃ரோ:।
அர்ச்சயேச்ச்₂ரத்₃த₄யா நித்யம் தே₃வம் த₃ஹரவாஸிநம்॥ 3.

வேத₃ங்களிலும், த₄ர்மஶாஸ்தரங்களிலும், ஸ்ரீ பாஞ்ச ராத்ர வைக₂ாநஸாக₃மங்களிலும் சொலலப்பட்ட திருவாரா த₄னக்ரமங்களில், தன் ஆசார்யன் உகந்ததொரு க்ரமத் தினல் ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனை ஶ்ரத்₃தை₄ யுடன் தினந்தோறும் அந்த அர்ச்சையில் ஆராதி₄ககக் கடவன்.

अर्चयेत् पूर्ववत्स्नात्वा हरेः संपूज्य विग्रहम्।
होमं कुर्यात् विधानेन श्रीमदष्टाक्षरेण वै॥ ४॥
मन्त्रद्वयेन च तथा होतव्यं विधिना हविः।
सूक्तेन च तथा होमः पौरुषेण विधीयते॥ ५॥
शतमष्टाक्षरात् होमः मन्त्राभ्यां च तथोदितः।
सूक्तेन प्रत्यृचं होमः होतव्यं विधिना हविः॥ ६॥
तत्तन्नाम्ना तथैवैकमुद्दिश्यावरणान् सुरान्।
हुत्वा प्रदक्षिणं कृत्वा नमस्कृत्य जनार्दनम्॥ ७॥
तस्मै तद्विग्रहं दत्वा वृत्तिं संयक् प्रचोदयेत्।

அர்ச்சயேத் பூர்வவத் ஸ்நாத்வா ஹரேஸ் ஸம்பூஜ்ய விக்₃ரஹம்।
ஹோமம் குர்யாத் வித₄ாநேந ஸ்ரீமத₃ஷ்டாக்ஷரேண வை॥ 4.
மந்த்ரத்₃வயேந ச தத₂ா ஹோதவ்யம் விதி₄நா ஹவி:।
ஸூக்தேந ச தத₂ா ஹோம: பௌருஷேண விதீ₄யதே॥ 5.

ஶதமஷ்டாக்ஷராத் ஹோமோ மந்த்ராப்₄யாஞ்ச தத₂ாதி₃த: ।
ஸூக்தேந ப்ரத்ய்ருசம் ஹோமோ ஹோதவ்யம் விதி₄நா ஹவி:॥ 6.
தத்தந்நாம்நா ததை₂வைகம் உத்₃தி₃ஶ்யாவரணாந் ஸுராந் ।
ஹுத்வா ப்ரத₃க்ஷிணம் க்ருத்வா நமஸ்க்ருத்ய ஜநார்த₃நம் ॥ 7.
தஸ்மை தத்₃விக்₃ரஹம் த₃த்வா வ்ருத்திம் ஸம்யக் ப்ரசோத₃யேத்।

ஆசார்யன் காலைக் கடன்களை அநுஷ்டி₂த்தபின்பு, சிஷ்யனுக்கு எழுந்தருளப்பண்ணிகொடுக்கவேண்டிய விக்₃ரஹத்துக்குத் திருவாராத₄னம் கண்டருளப்பண்ணி, விதி₄பூர்வகமாக ப்ரதிஷ்டை₂ பண்ணப்பட்ட அக்₃னியில், ஸ்ரீமத₃ஷ்டாக்ஷரத்திலும், ஷட₃க்ஷர்த்₃வாத₃ஶாக்ஷரங்களாலும், புருஷஸூக்தத்திலும் ஹவிஸ்ஸை ஹோமம் செய்யவேண்டியது. அதில் திருவஷ்டாக்ஷரத்திலும், ஷட₃க்ஷரத்₃வாத₃ஶாக்ஷரங்களாலும் நூறு நூறு தடவையும, புருஷஸூக்தத்தினுடைய பதினறு ருக்குகளினல் பதினறு தடவையும் நியமத்துடன் ஹவிஸ்ஸை ஹோமம் செய்யவேண்டும. விமானபாலகர்கள், ஸுத₃ர்ஶநாநந்த க₃ருட₃ாதி₃கள் ஆகிய ஆவரணதே₃வதைகளைக குறித்து ஒவ்வொருதடவை அவர்கள் திருநாமத்தைச் சொல்லி ஹோமம செய்யவேண்டும். ஹோமம் முடிந்த பின்பு அர்ச்சாமூர்த்தியையும, அக₃னியையும ப்ரத₃க்ஷிணம் செய்து த₃ண்ட₃ன் ஸமர்ப்பித்து, அந்த தி₃வ்யமங்க₃ள விக₃ரஹத்தை சிஷ்யனுக்கு எழுந்தருளப பண்ணிக் கொடுத்து, எப்போதும ஆராதி₄க்கும்படி நன்ருக உபதே₃ஶிக்கக்கடவன்.

यज्ञकर्मविधानेन संयक् स्नात्वा गुरुस्तथा ॥८॥
याजयेत् वैष्णवं भक्त्या वैष्णवान् परितोषयेत् ।
யஜ்ஞகர்மவித₄ாநேந ஸம்யக் ஸ்நாத்வா கு₃ருஸ்தத₂ா ॥ 8.
யாஜயேத் வைஷ்ணவம் ப₄க்த்யா வைஷ்ணவாந் பரிதோஷயேத் ।

ஆசார்யன். மாத்₄யாஹ்நிக ஸ்நானத்தைச்செய்து, அப்போதே முற்கூறியபடி வைஷ்ணவனை சிஷ்யனைக் கொணடு ப₄க₃வத₃ாராத₄னமாகிற யாக₃த்தைச் செய்விக்க

வேண்டும். அதன்பின் ப₄க்தியோடு ஸ்ரீ வைஷ்ணவர்களை அமுது செய்விக்கவேண்டியது.

एवं यागान्तसंस्काराः कर्तव्या विधिवत् द्विजाः ॥९॥
ब्राह्मणानां विशेषेण पारमैकान्त्यसिद्धये ॥ ९½ ॥

ஏவம் யாக₃ாந்தஸம்ஸ்காரா: கர்த்தவ்யா விதி₄வத் த்₃விஜா: ॥ 9.
ப்₃ராஹ்மணாநாம் விஶேஷேண பாரமைகாந்த்யஸித்₃த₄யே ॥9½॥

இதி.........யாக₃ ஸம்ஸ்காரவர்ணநம் நாம சதுர்த்தோ₂ऽத்₄யாய: ॥

மஹர்ஷிகளே! இவ்வண்ணமாகத் தாபம் முதல் யாக₃ம் வரையிலுமான ஸம்ஸ்காரங்களை அனைவரும் முறைப்படி செய்துகொள்ளவேணும். ப₄க₃வானுக்கு மிக நெருங்கிய பரமைகாந்தியாவதற்காக அந்தணர்களும் இதை விஶேஷித்துச் செய்துகொள்ளவேணும்.

ஸ்ரீ பராஶர ஸ்ம்ருதியின் உத்தரக₂ண்ட₃மான
விஶிஷ்ட பரமத₄ர்ம ஶாஸ்த்ரத்தில் யாக₃ ஸம்ஸ்காரவர்ணநம்
என்னும் நாலாம் அத்தியாயம் முற்றிற்று.

## 5-வது அத்தியாயம்

### பகவதா₃ராத₄னமும் ஆஶ்ரமத₄ர்மமும்

श्रीपराशर उवाच—

नित्यमभ्यर्चयेद्विष्णुं पुराणं पुरुषोत्तमम् ।
अप्सु व्योम्नि तथार्चायां वह्नौ हृदि तथा गुरौ ॥१॥
त्रिकालमर्चयेत् देवं प्रीतिमान् सुविशेषतः ।

ஸ்ரீபராஶர உவாச—

நித்யமப்₄யர்ச்சயேத்₃ விஷ்ணும் புராணம் புருஷோத்தமம் ।
அப்ஸு வ்யோம்நி தத₂ார்ச்சாயாம் வஹ்நௌ ஹ்ருதி₃ தத₂ா கு₃ரௌ ॥ 1.
த்ரிகாலமர்ச்சயேத் தே₃வம் ப்ரீதிமாந் ஸுவிஶேஷத: ।

ஸர்வவ்யாபியாய், புருஷோத்தமனாய், அநாதி₃யான வனான ஸ்ரீமந் நாராயணனை, ஜலத்திலும், ஆகாயத்திலும், அர்ச்சாவிக்₃ரஹத்திலும், அக்₃னியிலும், ஹ்ருத₃யத்திலும், ஆசார்யனிடத்திலும் தினந்தோறும் மூன்று காலங்களிலும் அன்போடு திருவாராத₄னம் செய்யவேண்டும்.

स्नानकाले हरिं सम्यक् पूजयेत् जलशायिनम्॥ २॥
सन्ध्याकाले तथा व्योम्नि पूजयेत् रविमण्डले।
प्रतिमास्वर्चयेत् देवं अग्नौ होमैस्तथा प्रभुम्॥ ३॥
प्राणाग्निहोत्रसमये जपेदष्टाक्षरं बुधः।
अष्टोत्तरशतं वापि ह्यष्टाविंशतिमेव वा॥ ४॥
यथाशक्ति जपेन्मन्त्रं नित्यमेवमतन्द्रितः।
तदर्थं चिन्तयेन्नित्यं यावद्देहनिपातनम्॥ ५॥

ஸ்நாநகாலே ஹரிம் ஸம்யக் பூஜயேஜ்ஜலஶாயிநம் ‖ 2.
ஸந்த்4யாகாலே தத2ா வ்யோம்நி பூஜயேத் ரவிமண்ட3லே ।
ப்ரதிமாஸ்வர்ச்சயேத் தே3வமக்3நௌ ஹோமைஸ் தத2ா
ப்ரபு4ம் ‖ 3.
ப்ராணுக்3நிஹோத்ரஸமயே ஜபேத3ஷ்டாக்ஷரம் பு3த4: ।
அஷ்டோத்தரஶதம் வாபி ஹ்யஷ்டாவிம்ஶதிமேவ வா ‖ 4.
யத2ாஶக்தி ஜபேந்மந்த்ரம் நித்யமேவமதந்த்3ரித: ।
தத3ர்த்த2ம் சிந்தயேந்நித்யம் யாவத்3தே3ஹநிபாதநம் ‖ 5.

ஜலத்தில் திருவாராத4னமாவது:— ஸ்நான காலத்தில், ஜலத்தில் பள்ளிகொண்டிருக்கும் பெருமாளை நன்கு ஆராதி4ப்பதேயாகும். ஆகாயத்தில் திருவாராத4னமாவது:— ஸந்த்4யாவந்த3னம் செய்யும்போது ஆகாயத்தில் ஸூர்ய மண்ட3லத்தில் ஆராதி4ப்பதேயாகும். அர்ச்சாவிக்3ரஹத்தில் திருவாராத4னம் செய்வதாவது:— அவ்விக்3ரஹத்தில் அர்ச்சனம் முதலானவற்றைச் செய்வது. அக்3னியில் திருவாராத4னம் செய்வதாவது:— அக்3னியில் ஸர்வேஶ்வரனைக் குறித்து ஹோமம் செய்வதேயாகும். ஹ்ருத3யத்தில் திருவாராத4னம் செய்வதாவது:— உண்ணத் தொடங்குகையில் “ ப்ராணய ஸ்வாஹா ” என்று தொடங்கும் மந்திரங்களைச் சொல்லி ப்ராணுஹுதி செய்யும் ஸமயத்தில் ஹ்ருத3யத்திலுள்ள எம்பெருமானுக்கு அன்னமிடுவதன்மூலம் அவனை ஆராதி4ப்பதேயாகும். சரீரம் விடுமவரையில்

தினந்தோறும் திருவஷ்டாக்ஷரத்தை நூற்றெட்டு தரமாவது, (இயலாவிடில்) இருபதடெட்டு தரமாவது தன் ஶக்திக்கு ஏற்றவாறு சோமபலில்லாமல் ஜபித்து, அதன் அர்த்த$_2$த்தைச சிந்திக்கக்கடவன்.

**अलाभे प्रतिमायां तु शुचौ देशे मनोहरे।**
**स्थण्डिले पुरुषं ध्यात्वा पूजयेन्मनसैव तु ॥६॥**

**அலாபே$_4$ ப்ரதிமாயாம் து ஶுசௌ தே$_3$ஶே மநோஹரே।**
**ஸ்த$_2$ண்டி$_3$லே புருஷம் த்$_4$யாத்வா பூஜயேந்மநஸைவ து॥ 6.**

அர்ச்சாவிக்$_3$ரஹம் கிடைக்காவிடில், பரிசுத்தமாய், அழகான இடத்தில் பரமபுருஷ சித்திரத்தை எழுதி, அதில் அவனை மனத்தால் தியானிக்கவேண்டும்.

**जपेत् द्वयं मन्त्ररत्नं ध्यायन् सर्वगतं हरिम्।**

**ஜபேத் த்$_3$வயம் மந்த்ரரத்நம் த்$_4$யாயந் ஸர்வக$_3$தம் ஹரிம்।**

ஸர்வவ்யாபியான பரமாத்மாவை தியானித்துக் கொண்டு, மந்திரங்களிற் சிறந்த த்$_3$வயமந்திரத்தை ஜபிக்க வேண்டும்.

**விலக்கப்படவேண்டியவர்கள்**

**पाषण्डिनः पाशुपतान् विकर्मस्थान् अनीश्वरान् ॥७॥**
**न संभाषेत सततं वाङ्मात्रेणापि नार्चयेत्।**

**பாஷண்டி$_3$ந: பாஶுபதாந் விகர்மஸ்த$_2$ாநநீஶ்வராந்॥ 7.**
**ந ஸம்ப$_4$ாஷேத ஸததம் வாங்மாத்ரேணாபி நார்ச்சயேத்।**

ப$_4$க$_3$வானையும், ப$_4$ாக$_3$வதர்களையும் த்$_3$வேஷிக்கும் பாஷண்டி$_3$களோடும், பஶுபதி மதத்தைச் சேர்ந்த சைவர்களோடும், கர்மப்$_4$ரஷ்டர்களோடும், தெய்வம் இல்லை என்னும நாஸ்திகர்களோடும் எப்போதும் பேசவே கூடாது. அவர்களை ஏற்றிச் சொல்லவும் கூடாது.

### அந்தணனின் லக்ஷணம்

**उपवीतं शिखाबन्धं ऊर्ध्वपुण्ड्रं तथैव च॥८॥**
**पद्माक्षमालां कौशेयं सततं धारयेत् द्विजः।**

**உபவீதம் ஶிக₂ாப₃ந்த₄மூர்த்₄வபுண்ட்₃ரம் ததை₂வ ச॥ 8.**
**பத்₃மாக்ஷமாலாம் கௌஶேயம் ஸததம் த₄ாரயேத் த்₃விஜ:।**

அந்தணனுயிருப்பவன் பூணூலும், குடுமியும், ஊர்த்₄வ புண்ட்₃ரமும, தாமரைமணிமாலையும், வெள்ளை வஸ்திரமும் எப்போதும் த₄ரிக்கவேண்டும்.

### நாலு ஆஶ்ரமங்களின் லக்ஷணம்

**एकोपवीतं धार्यं स्यात् यतीनां ब्रह्मचारिणाम्॥९॥**
**गृहस्थानां वनस्थानां उपवीतद्वयं विदुः।**

**ஏகோபவீதம் த₄ார்யம் ஸ்யாத் யதீநாம் ப்₃ரஹ்மசாரிணும்॥ 9.**
**க்₃ருஹஸ்த₂ாநாம் வநஸ்த₂ாநாமுபவீதத்₃வயம் விது₃:।**

ஸந்யாஸிகளும், ப்₃ரஹ்மசாரிகளும் ஒரு பூணூலும், க்₃ருஹஸ்த₂ர்களும் வாநப்ரஸ்த₂ர்களும் இரு பூணூல்களும் த₄ரிக்கவேண்டும்.

**मौञ्जीमजिनदण्डौ च ब्रह्मचारी धरेत् सदा॥१०॥**

**மௌஞ்ஜீமஜிநத₃ண்டௌ₃ ச ப்₃ரஹ்மசாரீ த₄ரேத் ஸத₃ா॥ 10.**

முஞ்ஜம் என்னும் புல்லினுல் பின்னப்பட்ட மௌஞ்ஜீ என்பதை அரையிலும், க்ருஷ்ணுஜினத்தை மார்பிலும், பலாஶம் முதலான வ்ருக்ஷங்களிலிருந்து எடுத்த த₃ண் ட₃த்தைக் கையிலும் ப்₃ரஹ்மசாரி எப்போதும் த₄ரிக்க வேண்டும்.

**कटिसूत्रं च कौपीनं शुक्लवस्त्रद्वयं शुभम्।**
**वलयाद्यङ्गुलीयादि गृहस्थानां विधीयते॥११॥**

கடிஸூத்ரஞ்ச கௌபீநம் ஶுக்லவஸ்த்ரத்₃வயம் ஶுப₄ம் ।
வலயாத்₃யங்கு₃லீயாதி₃ க்₃ருஹஸ்த₂நாம் விதீ₄யதே ॥ 11.

அரைநாண், கௌபீநம் (கோவணம்), அழகான இரண்டு வெள்ளை வேஷ்டிகள், கைவளை, மோதிரம் முதலான ஆப₄ரணங்கள் ஆகியவை க்₃ருஹஸ்த₂ர்களால த₄ரிக்கத்தக்கவையாக விதி₄க்கப்பட்டன.

श्मश्रुलोम जटा चैव तथा वल्कलधारणम् ।
चीराजिनतपोऽरण्यं वनस्थस्य विधीयते ॥ १२ ॥

ஶ்மஶ்ருலோம ஜடா சைவ தத₂ா வல்கலத₄ாரணம் ।
சீராஜிநதபோऽரண்யம் வநஸ்த₂ஸ்ய விதீ₄யதே ॥ 12.

மீசை மயிர், ஜடை ஆகியவற்றை க்ஷவரம் செய்யாமல் வளர்த்தல், அரையில் மரவுரியை த₄ரித்தல், உத்தரீயத்திற்கு மரவுரியாவது, மான்தோலாவது த₄ரித்தல், தவம் புரிதல், காட்டில் வஸித்தல் ஆகியவை வாநப்ரஸ்த₂னுக்கு விதி₄க்கப்பட்டது.

त्रिदण्डमुपवीतं च शिक्यं काषायमम्बरम् ।
कमण्डलुर्भैक्ष्यचर्या यतीनां तु विधीयते ॥ १३ ॥

த்ரித₃ண்ட₃முபவீதஞ்ச ஶிக்யம் காஷாயமம்ப₃ரம் ।
கமண்ட₃லுர் பை₄க்ஷசர்யா யதீநாம் து விதீ₄யதே ॥ 13.

த்ரித₃ண்ட₃ம், பூணூல், வஸ்த்ரத்தாலான பி₄க்ஷா பாத்ரம், காஷாயவஸ்த்ரம, கமண்ட₃லு, பி₄க்ஷையெடுத்தல் ஆகியவை ஸந்யாஸிகளுக்கு விதி₄க்கப்பட்டது.

விலக்கப்படவேண்டியவை

साधारणं तु सर्वेषां धर्मं तु मुनिभिः स्मृतम् ।
अभक्ष्यभक्षणं हिंसा परस्त्रीष्वभिलाषिता ॥ १४ ॥
परेषां दोषकथनं अनर्थाय प्रकल्पते ।

ஸாத₄ாரணம் து ஸர்வேஷாம் த₄ர்மம் து முநிபி₄ஸ்ஸ்ம்ருதம்।
அப₄க்ஷ்யப₄க்ஷணம் ஹிம்ஸா பரஸ்த்ரீஷ்வபி₄லாஷிதா ॥ 14.
பரேஷாம் தோ₃ஷகத₂நமநர்த்த₂ாய ப்ரகல்பதே।

இவர்கள் அனைவர்க்குமே நிஷித்₃த₄கர்மங்களைச் செய்யாதொழிவது பொதுவான த₄ர்மம். அவையாவன:- புசிக்கத்தகாதவற்றைப் புசிப்பது, பிறரை நலிவது, பிறர் மனைவியரை விரும்புவது, பிறர் குற்றங்களைச் சொல்லுவது ஆகியவை என முனிவர்கள் கூறுகிறார்கள். இவை அனைவர்க்குமே அநர்த்த₂த்தை விளைப்பவை.

पूर्वाश्रमात् तुरीयस्तु नारीसङ्गं विसर्जयेत् ॥ १५ ॥
गृहस्थश्च वनस्थश्च स्वदारनिरतावुभौ ।

பூர்வாஶ்ரமாத் துரீயஸ்து நாரீஸங்க₃ம் விஸர்ஜயேத் ॥ 15.
க்₃ருஹஸ்த₂ஶ்ச வநஸ்த₂ஶ்ச ஸ்வதா₃ரநிரதாவுபௌ₄।

முன் இரு ஆஶ்ரமங்களிலிருந்து ஸந்யாஸாஶ்ரமத்தை ஏற்கும்போது தனது மனைவியையும் விட்டுவிடவேணடும். க்₃ருஹஸ்த₂னும், வாநப்ரஸ்த₂னும் தங்கள் மனைவியரிடம் மாததிரம் ஈடுபட்டிருககவேண்டும்.

வர்ணாஶ்ரமத₄ர்மங்களை அநுஷ்டி₂த்தே தீரவேண்டும்

श्रुतिस्मृत्युदितं सम्यक् नित्यमाचारमाचरेत् ॥ १६ ॥

ஶ்ருதிஸ்ம்ருத்யுதி₃தம் ஸம்யக் நித்யமாசாரமாசரேத் ॥ 16.

அந்தந்த வர்ணாஶ்ரமங்களுக்கு ஶ்ருதிஸ்ம்ருதிகளில் சொலலப்பட்டிருககும ஆசாரங்களை அவரவர் எப்போதும் அனுஷ்டி₂க்கவேண்டும்.

பாஷண்டி₃லக்ஷணம்

श्रुतिस्मृत्युदितं नित्यं यस्तु नाचरति द्विजः ।
स पाषण्डीति विज्ञेयः सर्वकर्मसु गर्हितः ॥ १७ ॥

**ஶ்ருதிஸ்ம்ருத்யுதி3தம் நித்யம் யஸ்து நாசரதி த்3விஜ:।**
**ஸ பாஷண்டீ3தி விஜ்ஞேயஸ் ஸர்வகர்மஸு ஊ3ர்ஹித:॥** 17.

ஶ்ருதிஸ்ம்ருதிகளில் அவரவர்க்கு விதி4க்கப்பட்ட கர்மங்களை எந்த த்3விஜன் அநுஷ்டி2க்கவில்லையோ, அவன் பாஷண்டி3யெனப்படுகிறன். அவன் எககர்மத்திலும் கலந்துகொள்ளத் தகுதியில்லாதவன்.

### ப்3ரஹ்மசாரி தினந்தோறும் செய்யவேண்டிய கர்மம்

**सायं प्रातः समिद्धोमः स्वाध्यायाध्ययनं जपः।**
**गृहस्थानां गृहे भैक्षविधिस्तु ब्रह्मचारिणाम्॥ १८॥**

**ஸாயம் ப்ராதஸ் ஸமித்3தே4ாமஸ் ஸ்வாத்4யாயாத்4யயநம் ஜப:।**
**க்3ருஹஸ்தா2நாம் க்3ருஹே பை4க்ஷவிதி4ஸ்து**
**ப்3ரஹ்மசாரிணாம்॥** 18.

காலையிலும், மாலையிலும் பலாஶஸமித்தினல் ஹோமம் செய்வதாகிற ஸமித்3ாத4ாநம், வேத3ாத்4யயனம், க3ாயத்ரீ, திருவஷ்டாக்ஷரம் முதலான மஹாமந்திரங்களின் ஜபம், க்3ருஹஸ்த2ர்களின் க்3ருஹங்களிலே யாசித்து அன்னம் பெறுதல் ஆகியவற்றை ப்3ரஹ்மசாரிகள் தினந்தோறும் செய்யவேண்டும்.

### க்3ருஹஸ்த2ன் தினந்தோறும் செய்யவேண்டிய கர்மம்

**सायं प्रातश्च जुहुयात् अग्निहोत्रं सदा गृही।**
**तथैव पञ्चयज्ञादि यज्ञहोमं समाचरेत्॥ १९॥**

**ஸாயம் ப்ராதஶ்ச ஜுஹுயாத3க்3நிஹோத்ரம் ஸதா3 க்3ருஹீ।**
**ததை2வ பஞ்சயஜ்ஞாதி3 யஜ்ஞஹோமம் ஸமாசரேத்॥** 19.

க்3ருஹஸ்த2ன் தினந்தோறும காலையிலும் மாலையிலும் அக்3நிஹோத்ரம செய்யக்கடவன். தினந்தோறும் (1) ப்3ரஹ்மயஜ்ஞம், (2) தே3வயஜ்ஞம், (3) பித்ருயஜ்ஞம், (4) பூ4தயஜ்ஞம், (5) மனுஷ்யயஜ்ஞம என்னும் பஞ்சமஹா யஜ்ஞங்களையும் செய்யக்கடவன். (1) ப்3ரஹ்மயஜ்ஞமாவது–

'ப்₃ரஹ்ம' எனப்படும் வேத₃த்தை ஓதுதல். (2) தே₃வ யஜ்ஞமாவது–ஔபாஸநஹோமம. (3) பித்ருயஜ்ஞமாவது–பிதருதர்ப்பணம். (4) பூ₄தயஜ்ஞமாவது–காக்கை முதலிய ஜீவராசிகளுககு அன்னமாகிற ப₃லியிடுதல். (5) மநுஷ்ய யஜ்ஞமாவது – அதிதி₂யை (விருந்தாளியைப்) பூஜித்தல். அப்படியே த₃ர்ஶபூர்ணமாஸம் முதலான யஜ்ஞங்களையும் செய்யக்கடவன்.

### ஸந்யாஸி தினந்தோறும் செய்யவேண்டிய கர்மம்

**स्नानं त्रिसन्ध्यमपि हि यतीनां तु विधीयते।**
**जपमौनतपोयोगब्रह्मचर्यदमास्तथा॥ २० ॥**
**कामक्रोधौ तथा लोभमोहमानमदांस्त्यजेत्।**
**मत्सरद्वेषरूक्षोक्तिनिद्रालस्यादि वर्जयेत्॥ २१॥**

**ஸ்நாநம் த்ரிஸந்த்₄யமபி ஹி யதீநாம் து விதீ₄யதே।**
**ஜபமௌநதபோயோக₃ ப்ரஹ்மசர்யத₃மாஸ் தத₂ா॥** 20.
**காமக்ரோதௌ₄ தத₂ா லோப₄மோஹமாநமதா₃ம்ஸ்த்யஜேத்।**
**மத்ஸரத்₃வேஷரூக்ஷோக்தி நித்₃ராலஸ்யாதி₃ வர்ஜயேத்॥** 21.

**இதி ஸ்ரீபராஶர ஸ்ம்ருதௌ ...... ப₄க₃வத₃ாராத₄நாஶ்ரமத₄ர்மவர்ணநம் நாம பஞ்சமோऽத்₄யாய: ॥**

ஸங்யாஸியானவன் — காலை, நடுப்பகல், மாலை ஆகிய மூன்றுவேளைகளிலும் ஸ்நானம் செய்யவேணும். திரு வஷ்டாக்ஷரம் முதலிய மஹாமந்திரங்களை ஜபிக்கவேணும. வீண் வார்த்தை பேசலாகாது. ஶரீரம் இளைக்குமபடி உபவாஸம் முதலானவற்றைச் செய்யவேணும். பரமாத்மா வினிடத்தில் ப₄க்தி செய்யவேண்டும. ஸதரீகளோடு எவ் விதமாகவும் பழகக்கூடாது. இந்திரியங்களை அவற்றின் வழியில் செல்லாமல் அடக்கவேண்டும். உறவினர்களிட மும், பணம் முதலானவற்றிலும் பற்று வைக்கக்கூடாது. எவரையும் கோபிக்கக்கூடாது. பிறர் பொருளை விருமப லாகாது. அழியும் உலகை நிலையாக எண்ணி மயங்க லாகாது. பிறர் பரிஹஸிப்பதால் வெட்கப்படக்கூடாது.

பிறர் மேன்மையில் பொறுமைப்படக்கூடாது. எவரிடமும் த்3வேஷம் கொள்ளக்கூடாது. பிறர் மனம நோவ வார்த்தை சொல்லக்கூடாது. தகாத காலத்தில் தூக்கத்தையும, சோம்பலையும் விட்டுவிடவேண்டும.

**ஸ்ரீ பராஶர ஸ்ம்ருதியின் உத்தரக2ண்ட3மான விஶிஷ்ட பரமத4ர்ம ஶாஸ்த்ரத்தில் 'ப4க3வதா3ராத4னமும் ஆஶ்ரமத4ர்மமும்' என்னும் ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.**

# 6-வது அத்தியாயம்

## விரிவான திருவாராத4ன க்ரமம்

**श्रीपराशर उवाच—**

**विस्तरेण ब्रवीम्यत्र विष्णोराश्रयणक्रियाम् ।**

ஸ்ரீபராஶர உவாச—

**விஸ்தரேண ப்3ரவீம்யத்ர விஷ்ணோராஶ்ரயணக்ரியாம் ।**

**ஸ்ரீபராஶர மஹர்ஷி கூறுகிறார்:—** ரிஷிகளே! யாக3 ஸம்ஸ்காரத்தைப் பற்றிய நாலாம அத்தியாயத்தில் சுருக்கமாகச் சொன்ன திருவாராத4ன கரமத்தை இவ்வத்தியாயத்தில் விரிவாகச் சொல்லுகிறேன், கேளுங்கள்.

**उत्थाय पश्चिमे याम आचम्य प्रयतात्मवान् ॥ १ ॥**
**निवेशिते शुचौ देशे समासीनः सुखासने ।**
**आत्मानं स्वशरीरं च परेशमनुचिन्तयेत् ॥ २ ॥**

**உத்த2ாய பஶ்சிமே யாம ஆசம்ய ப்ரயதாத்மவாந் ।** 1.
**நிவேஶிதே ஶுசௌ தே3ஶே ஸமாஸீந: ஸுகா2ஸநே ।**
**ஆத்மாநம் ஸ்வஶரீரம் ச பரேஶமநுசிந்தயேத் ॥** 2.

இரவின் நான்காவது யாமமான ப்3ராஹ்ம முஹூர்த்தத்தில் எழுந்திருந்து, கைகால்களை சுத்திசெய்துகொண்டு ஆசமனம்செய்து, எறும்பு முதலான புழு பூச்சிகள் இல்லாத பரிஶுத்3த4மான இடத்தில் மென்மையான ஆஸனத்தை இட்டு, அதில் வீற்றிருந்து, மனத்தை இதர விஷயங்களில் செல்லாதபடி அடக்கி, பிறகு தன்னையும், தன் ஶரீரத்தையும், தனக்கு ஸ்வாமியான பரமாத்மாவையம் பற்றிச் சிந்திக்கக்கடவன்.

ஶரீரத்தைச் சிந்திக்கும் வித₄ம்

शुक्रशोणितसंभूतं शरीरं पाञ्चभौतिकम् ।
शब्दादिविषयोपेतैः युतं एकादशेन्द्रियैः ॥ ३ ॥
अव्यक्तबुद्ध्यहङ्कारदशकार्यगुणैर्युतम् ।
वसामूत्रपुरीषास्थिचर्ममांससिरायुतम् ॥ ४ ॥
द्विषद्भिः कामकाराद्यैरनिशं पीडितान्तरम् ।
तापत्रयमहाज्वालवह्निभिः परिवेष्टितम् ॥ ५ ॥
ईषणात्रयतृष्णाभिर्निबद्धं मलपूरितम् ।
द्विसप्ततिसहस्राभिर्नाडीभिः परिवेष्टितम् ॥ ६ ॥

ஶுக்ரஶோணிதஸம்பூ₄தம் ஶரீரம் பாஞ்சபௌ₄திகம் ।
ஶப்₃தா₃தி₃விஷயோபேதைர் யுதமேகாத₃ஶேந்த்₃ரியை: ॥ 3.
அவ்யக்தபு₃த்₃த்₄யஹங்காரத₃ஶகார்யகு₃ணைர்யுதம் ।
வஸாமூத்ரபுரீஷாஸ்தி₂சர்மமாம்ஸஸிராயுதம் ॥ 4.
த்₃விஷத்₃பி₄: காமகாராத்₃யைரநிஶம் பீடி₃தாந்தரம் ।
தாபத்ரயமஹாஜ்வாலவஹ்நிபி₄: பரிவேஷ்டிதம் ॥ 5.
ஈஷணாத்ரயத்ருஷ்ணாபி₄ர்நிப₃த்₃த₄ம் மலபூரிதம் ।
த்₃விஸப்ததிஸஹஸ்ராபி₄ர் நாடீ₃பி₄: பரிவேஷ்டிதம் ॥ 6.

இந்த ஶரீரமானது 'ஶுக்லம்' என்கிற புருஷனுடைய வீர்யத்திலும், 'ஶோணிதம்' என்கிற ஸ்த்ரீயினுடைய ரஜஸ்ஸிலும் உண்டானது; ப்ருதிவீ, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாஶம் ஆகிய ஐந்து பூதங்களின் பரிணமமாயிருப்பது. ஸ்பர்ஶம், ரஸம், ரூபம், க₃ந்த₄ம், ஶப்₃த₃ம் எனும் விஷயங்களை (முறையே) அறியும் மெய், வாய்(நா), கண், மூக்கு, செவி என்னும் ஐந்து ஞானேந்திரியங்கள், வாக்கு, கை, கால், மலவிஸர்ஜநேந்த்₃ரியம், மூத்ரவிஸர்ஜநேந்த்₃ரியம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்கள், இவற்றை நியமிக்கும் மனம் ஆகிய பதினொரு இந்திரியங்களோடும் கூடியிருப்பது. மூலப்ரக்ருதி, அதிலிருந்து தோன்றும் பு₃த்₃தி₄ எனப்படும

மஹான், அதிலிருந்து தோன்றும் அஹங்காரம, ஶப்₃த₃ ஸ்பர்ஶ ரூப ரஸ க₃ந்த₄ தன்மாத்ரைகளைந்து, அத்தன்மை களைந்து ஆகிய அஹங்காரகார்யங்களான பத்து,ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களாகிற முக்குணங்கள் ஆகியவற்ருேடு கூடியது. வஸை (சவ்ர்நீர்), மூத்ரம், மலம், எலும்பு, தோல, மாம் ஸம், நரம்பு ஆகியவற்ருேடும் கூடியது. ஆத்மாவுக்கு எதிரிகளான காம க்ரோத₄ லோப₄ மோஹ மத₃ மாத்ஸர்யங் களாகிற அரிஷட்₃வர்க்க₃ங்களால் எப்போதும் பீடிக்கப் பட்ட நெஞ்சையுடையது. ஆத்₄யாத்மிகம், ஆதி₄ தை₃விகம், ஆதி₄பௌ₄திகம என்னும் தாபத்ரயங்களாகிற பெரியசோதியைக்கொண்ட நெருப்புகளாலே சூழப் பெற்றது. புத்ரேஷணை (மக்கள்மேல் பாசம்), வித்தேஷணை (பணத்தின்மேல் பாசம), தா₃ரேஷணை (மனைவியின்மேல பாசம்) என்னும் ஈஷணைத்ரயங்களாகிற ஆஶாபாஶங் களாலே கட்டப்பட்டிருக்கிறது; தோ₃ஷங்கள் நிறைந் திருப்பது. எழுபத்தீராயிரம நாடிகளாலே சுற்றப்பட்டிருக் கிறது—என்று இவ்வண்ணமாக ஶரீரத்தின் தாழ்வையும, நிலையின்மையையும, இதன தொடர்பினல் ஆத்மாவுக்கு ஏற்படக்கூடிய கேட்டையும் சிந்திக்கக்கடவன்.

### ஆத்மாவைச் சிந்திக்கும் வித₄ம்

हृत्पुण्डरीकमध्येऽत्र वसामि प्रभया ज्वलन्।
देहेन्द्रियमनःप्राणधीभ्योऽन्योऽनन्यसाधनः॥७॥
पञ्चविंशात्मको नित्यो मकारार्थः समाधिमान्।
भगवच्छेषभूतोऽहमनन्यार्होऽचितः परः॥८॥
निर्विकारो ह्यणुर्नित्यः प्रकृतेरव्ययः परः।
अजडोऽव्यक्तरूपश्च ज्ञानानन्दस्वरूपभाक्॥९॥
एकरूपो व्याप्तिशीलः क्षेत्री क्षेत्रज्ञ एव च।
ज्ञाता कर्ता च भोक्ता च अहंप्रत्ययगोचरः॥१०॥

अदाह्योऽक्लेद्यकोऽच्छेद्यो ह्यशोष्योऽक्षर एव च।
एवं देहेन्द्रियाद्यन्यमात्मानं सततं स्मरेत्॥ ११॥

ஹ்ருத்புண்ட₃ரீகமத்₄யேऽத்ர வஸாமி ப்ரப₄யா ஜ்வலந்।
தே₃ஹேந்த்₃ரியமந:ப்ராணதீ₄ப்₄யோऽந்யோऽநந்யஸாத₄ந: ॥ 7.
பஞ்சவிம்ஶாத்மகோ நித்யோ மகாரார்த்த₂ஸ் ஸமாதி₄மாந்।
ப₄க₃வச்சே₂ஷபூ₄தோऽஹமநந்யார்ஹோऽசித: பர: ॥ 8.
நிர்விகாரோ ஹ்யணுர் நித்ய: ப்ரக்ருதேரவ்யய: பர:।
அஜடோ₃ऽவ்யக்தரூபஶ்ச ஜ்ஞாநாநந்த₃ஸ்வரூபப₄ாக் ॥ 9.
ஏகரூபோ வ்யாப்திஶீல: க்ஷேத்ரீ க்ஷேத்ரஜ்ஞ ஏவ ச।
ஜ்ஞாதா கர்த்தா ச போ₄க்தா ச அஹம்ப்ரத்யயகோ₃சர: ॥ 10.
அதா₃ஹ்யோऽக்லேத்₃யகோऽச்சே₂த்₃யோ ஹ்யஶோஷ்யோऽக்ஷர ஏவ ச।
ஏவம் தே₃ஹேந்த்₃ரியாத்₃யந்யமாத்மாநம் ஸததம் ஸ்மரேத் ॥11.

மிகத்தாழ்ந்த இந்த ஶரீரத்தில் ஹ்ருத₃ய கமலத்தின் நடுவில் ஞானரூபமான ஒளியாலே விளங்காநிற்பவனாய் நான் வாழ்கிறேன். மிகத்தாழ்ந்ததாய், ஸ்தூ₂லமாகக்காண்கிற முற்கூறிய ஶரீரம, இதைக்காட்டிலும நுண்ணிய இந்திரியங்கள், இவற்றை நியமிககும் மனம, இவை ஓய்ந்த போதும் காணபபடும மனம், இவற்றைக்காட்டிலும் சிறந்ததாய், ஆத்மாவிற்கு த₄ர்மமாயிருப்பதான அறிவு ஆகிய அனைத்தைக்காட்டிலும் வேறாய், வேறெதையும் எதிர்பாராமல் (விளக்கைப்போல்) தானே பிரகாசிப்பவனாயிருக்கிறேன். ப்ரக்ருதி மஹத₃ஹங்காரங்கள் மூன்று, ஐந்து தந்மாத்ரைகள், ஐந்து பூ₄தங்கள, பதினொரு இந்திரியங்கள் ஆகிய இருபத்துநாலு அசேதந தத்துவங்களுக்கும் மேற்பட்ட இருபத்தைந்தாவது சேதந தத்துவமாயிருப்பவன். இருபத்தைந்தாம அக்ஷரமான மகாரத்திற்குப் பொருளாயிருக்கும் ஞானஸ்வரூபி. தோற்றமும, அழிவுமில்லாத நித்யன். ஸமாதி₄யில் காணத்தக்கவன். ப₄க₃வானுக்கே அடிமைப்பட்டிருபபவன். வேறு எவர்க்கும் அடிமையா

யிருக்கத் தகாதவன். அறிவற்ற அசேதனத்தைக காட்டிலும் வேறுபட்டவன். அது எப்படியெனில்: விகாரமுள்ளதாய், பெரிதாய், ஸ்வரூப ஸ்வப₄ாவ நாஶமுள்ளதாகக் காணப்படும் அசேதன தத்துவங்கள் அனைத்தைக் காட்டிலும வேறுபட்டு, விகாரமற்றவனாய், அணுவாய், ஸ்வரூப ஸ்வப₄ாவநாஶமில்லாமலிருப்பவன். ஜட₃மாகையால் தானே பிரகாசியாத அசேதனததைப்போலேயல்லாமல் தானே பிரகாஶிககும் அஜட₃மாயிருப்பவன். அசித்தைக் காண்பது போலே இந்திரியங்களால் காணமுடியாதவன்; ஜ்ஞானம், ஆனந்த₃ம் ஆகியவற்றையே ஸவரூபமாகப்பெற்றவன. பலவித₄மாயிருக்கும அசிததைப் போலல்லாமல் எப்போதும் ஒருவித₄மாகவே இருப்பவன். அசேதனங்கள் அனைத்திலும் உள்நுழைந்து வியாபிக்க வல்லவன். ஶரீரததை உடையவன்; ஶரீரத்தை அறிபவன். ப₂லன்களை அறிபவனாகவும், அவற்றை அடைவதற்கான உபாயங்களை அநுஷ்டி₂ப்பவனாகவும, அப்ப₂லன்களை அடைந்து அனுப₄விபபவனாகவும இருப்பவன். "அஹம்" என்று தோற்றுவதால அச்சொல்லுக்கு பொருளாயிருப்பவன். நெருப்பால் எரிககவும், நீரினல் நனைக்கவும், ஆயுத₄ங்களால் பிளக்கவும, காற்றினல் உலர்ததவும் தகாதவனாய், அதனாலேயே எதனாலும அழிக்கமுடியாதவன். இவ்வண்ணமாக தே₃ஹம் இந்த்₃ரியம முதலானவற்றைக் காட்டிலும வேறுபட்டவனாகத் தன ஆத்மாவை எப்போதும் சிந்திக்கவேண்டும்.

ஈஶ்வர சிந்தனத் தொடக்கம்

**इत्यात्मानं दृढं ज्ञात्वा स्वात्मेशमनुचिन्तयेत् ।**
**परे व्योम्नि परेशानं तथा व्यूहादिभेदतः ॥ १२ ॥**

**இத்யாத்மாநம் த்₃ருட₄ம் ஜ்ஞாத்வா ஸ்வாத்மேஶமநுசிந்தயேத் ।**
**பரே வ்யோம்நி பரேஶாநம் தத₂ா வ்யூஹாதி₃பே₄த₃த: ॥ 12.**

இவ்வண்ணமாக ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை நன்கு அறிந்து, அதற்குப்பின் தனக்கு ஸ்வாமியாய், பரமபத₃த்தில பரரூபதததுடனும், திருப்பாற்கடல் முதலான வ்யூஹ ஸத₂ானங்களில வ்யூஹரூபங்களுடனும, மற்றும் விப₄வம், அநதர்யாமி, அர்ச்சை என்னும ரூபங்களுடன் கூடியவனுய் எழுந்தருளியிருக்கிறவனுய், எல்லாவுயிர்கட்கும் நாத₂னுன பரமாத்மாவைச் சிந்திக்கக்கடவன்.

லீலாவிபூ₄தி சிந்தநம்

अण्डमण्डगतान् लोकान् तदन्तर्गतविग्रहान् ।
तदंशांशसमूहं तदन्तर्यामित्वमात्मनः ॥ १३ ॥
दशोत्तरानावरणान् तदन्तस्थचराचरान् ।
प्रधानं पुरुषं चैव त्रिगुणं तत्र संभवम् ॥ १४ ॥

**அண்ட₃மண்ட₃க₃தாந் லோகாந் தத₃ந்தர்க₃தவிக்₃ரஹாந் ।**
**தத₃ம்ஶாம்ஶஸமூஹம் தத₃ந்தர்யாமித்வமாத்மந: ॥ 13.**
**த₃ஶோத்தராநாவரணாந் தத₃ந்தஸ்த₂சராசராந் ।**
**ப்ரதா₄நம் புருஷம் சைவ த்ரிகு₃ணம் தத்ர ஸம்ப₄வம் ॥ 14.**

எம்பெருமானுடைய லீலாவிபூ₄தியான (விளையாட்டுக்கு உறுப்பாயிருககும செல்வமான) ப்₃ரஹ்மாண்ட₃த்தையும், அதிலுள்ள எல்லா உலகங்களையும், அடியாரை ரக்ஷிப்பதற்காக அங்கங்கு எழுந்தருளியிருக்கும் அவதாரங்களையும், அவ்வவதாரங்களின் அமஶபூ₄தரான அம்ஶ ஆவேஶ அவதாரங்களையும், தனது ஹ்ருத₃யகமலத்தில எழுந்தருளியிருககும அந்தர்யாமியையும, ஒன்றைக் காட்டிலும் ஒன்று பதது மடஙகு அதிகமாயிருப்பதாய் அண்ட₃த்தைச் சூழ்ந்து கொண்டிருககும் ப்ருதி₂வீ, ஜலம், அக்₃னி, வாயு, ஆகாஶம, அஹங்காரம், மஹான் என்னும் ஏழு ஆவரணங்களையும், அவ்வணட₃த்திலுள்ள பஶு, பக்ஷி முதலான அசையும் பொருள்களையும, மரம், செடி முதலான அசையாப் பொருளகளையும, இவை எல்லாவற்றுக்கும் காரணமான

மூலப்ரக்ருதியையும், அதிலுள்ள ஸத்வரஜஸ்தமோகு₃ணங் களேயும், அதில அழுந்தியிருக்கும ஜீவஸமூஹததையும சிந்திக்கக்கடவன்.

நித்யவிபூ₄தி சிந்தனம்

तमसस्तत् परं शुद्धं हिरण्मयमनामयम् ।
परमं वैष्णवं लोकं नित्यानन्दसुखावहम् ॥ १५ ॥
तत्र संवाहिनीं दिव्यां विरजां वेदसंभवाम् ।
तत्र शुद्धं परं व्योम ह्यनन्तममृताह्वयम् ॥ १६ ॥
निर्मलं नित्यमजडं अनन्तसुखदं सुखम् ।
तत्र स्थितान्यनेकानि स्थानानि सुखवन्ति च ॥ १७ ॥
तत्र जानपदग्रामनगराणि महान्त्यपि ।
सर्वे हिरण्मयास्तत्र सर्वे वेदमयाः शुभाः ॥ १८ ॥
अप्राकृततया नित्याः पुनरावृत्तिवर्जिताः ।

தமஸஸ் தத் பரம் ஶுத்₃த₄ம் ஹிரண்மயமநாமயம் ।
பரமம் வைஷ்ணவம் லோகம் நித்யாநந்த₃ஸுகா₂வஹம் ॥ 15.
தத்ர ஸம்வாஹிநீம் தி₃வ்யாம் விரஜாம் வேத₃ஸம்ப₄வாம் ।
தத்ர ஶுத்₃த₄ம் பரம் வ்யோம ஹ்யநந்தமம்ருதாஹ்வயம் ॥ 16.
நிர்மலம் நித்யமஜட₃மநந்தஸுக₂த₃ம் ஸுக₂ம் ।
தத்ர ஸ்தி₂தாந்யநேகாநி ஸ்தா₂நாநி ஸுக₂வந்தி ச ॥ 17.
தத்ர ஜாநபத₃க்₃ராமநக₃ராணி மஹாந்த்யபி ।
ஸர்வே ஹிரண்மயாஸ் தத்ர ஸர்வே வேத₃மயாஶ் ஶுப₄ா: ॥ 18.
அப்ராக்ருததயா நித்யா: புநராவ்ருத்திவர்ஜிதா: ।

'தமஸ்' எனப்படும முற்கூறிய மூலப்ரக்ருதிக்குமேல், ஶுத்₃த₄ஸத்வமயமாய், பொன்போலே மிகவழகியதாக விளங்குவதாய், ப்ரளயம் முதலான தொல்லைகள் அற்றதாய், அனைத்திலும் உயர்ந்ததாய், எப்போதும் பேரானந்த₃த்தை விளைப்பதான பரமபத₃ம் என்கிற ஸ்ரீவைஷ்ணவலோகத்தைச் சிந்திக்கக்கடவன். அவ்வுலகில், வேத₃பர்வதத்தினின்றும் பெருகுகிற விரஜை என்னும்

பெயரையுடைய மிகச்சிறந்த நதியைச் சிந்திக்கக்கடவன். அதன் கரையில்,—தேஜோமயமாய், அளவில்லாமல் பரந் திருப்பதாய், மோக்ஷம் என்று சொல்லப்படுகிற பரமா காஶம் உள்ளது. அதற்கு உத்பத்தி, விநாஶம் முதலிய தோ₃ஷங்களில்லை; அது ஸ்வயம ப்ரகாஶமாய், அங்குள்ள வர்களுக்கு எல்லையற்ற இன்பத்தைக் கொடுப்பதாய், மிக அனுகூலமாயிருக்கும. அங்கு, மிகவும் ஸௌக₂த்தை விளக்கும் பல ஸ்த₂ானங்கள் உள்ளன. அங்கு பல தே₃ஶங்களும, க்₃ராமங்களும்,பெரிய நக₃ரங்களும் உள்ளன. அங்குள்ள புருஷர்கள் அனைவரும பொன்போல் அழகு மிக்கவர்களாய், எப்போதும் வேத₃மோதும் ஶாந்தமூர்த்தி களாய், ப்ரக்ருதி ஸம்ப₃ந்த₄மற்றிருக்கையாலே பிறப்பிறப்பு அற்றவர்களாய், இந்த ப்ரக்ருதி மண்ட₃லத்திற்குத் திரும்பி வராதவர்களாய் அங்கேயே இருந்துகொண்டு ப₄க₃வத₃னுப₄ வம் செயதுகொண்டிருக்கிறார்கள் — இவ்வனைத்தையும் சிந்திக்கக்கடவன்.

ஶ்ரீவைகுண்ட₂ நக₃ர சிந்தநம்

तन्मध्ये नगरं दिव्यं वैकुण्ठं नाम नामतः ॥ १९ ॥
चन्द्रकान्तमयैर्नित्यैः विमानैर्बहुभिर्वृतम् ।
सर्ववर्णमयैः सौधैः नानारत्नैश्च शोभितम् ॥ २० ॥
दिव्यरत्नमयैः शुभ्रैः प्राकारैर्गोपुरैर्युतम् ।
नानामणिमयैर्दीप्रगृहपङ्क्तिभिरावृतम् ॥ २१ ॥
शक्रचापौघसङ्काशैः प्रांशुभिः सौधैः समुच्छ्रितम् ।
विवस्वत्कोटिसङ्काशैः तोरणैरुपशोभितम् ॥ २२ ॥
सुधाकरसहस्राभैः पुरुषैरुपशोभितम् ।
सर्वे चतुर्भुजाः शुद्धाः स्वात्मेशसमविग्रहाः ॥ २३ ॥
शङ्खचक्रधराः सर्वे स्रग्विणः पीतवाससः ।
अनुरज्यन्ति देवेशं भक्त्या भृत्यरसेन वै ॥ २४ ॥

प्रातरुद्यत्सहस्रांशुकोटीशतसमप्रभाः ।
सर्वे लक्षणसंपन्नाः पद्महस्ताः चतुर्भुजाः ॥ २५ ॥
अनिशं भक्तिभिः श्रीशमर्चयन्ति च केशवम् ।
आरूढयौवनाः सर्वे नार्यश्च पुरुषास्तथा ॥ २६ ॥

தந்மத்₄யே நக₃ரம் தி₃வ்யம் வைகுண்ட₂ம் நாம நாமத:॥ 19.
சந்த்₃ரகாந்தமயைர் நித்யைர் விமாநைர் ப₃ஹுபி₄ர் வ்ருதம் ।
ஸர்வவர்ணமயைஸ் ஸௌதை₄ர் நாநாரத்நைஶ்ச
ஶோபி₄தம் ॥ 20.
தி₃வ்யரத்நமயைஶ் ஶுப்₄ரை: ப்ராகாரைர் கோ₃புரைர் யுதம் ।
நாநாமணிமயைர் தீ₃ப்ரக்₃ருஹபங்க்திபி₄ராவ்ருதம் ॥ 21.
ஶக்ரசாபௌக₄ஸங்காஶை: ப்ராக்₃ரைஸ் ஸௌதை₄ஸ்
ஸமுச்ச்₂ரிதம் ।
விவஸ்வத்கோடிஸங்காஶைஸ் தோரணைருபஶோபி₄தம் ॥ 22.
ஸுதா₄கரஸஹஸ்ராபை₄: புருஷைருபஶோபி₄தம் ।
ஸர்வே சதுர்பு₄ஜாஶ் ஶுத்₃த₄ாஸ் ஸ்வாத்மேஶ
ஸமவிக்₃ரஹா: ॥ 23.
ஶங்க₂சக்ரத₄ராஸ் ஸர்வே ஸ்ரக்₃விண: பீதவாஸஸ: ।
அநுரஜ்யந்தி தே₃வேஶம் ப₄க்த்யா ப்₄ருத்யரஸேந வை ॥ 24.
ப்ராதருத்₃யத்ஸஹஸ்ராம்ஶுகோடீஶதஸமப்ரப₄ா: ।
ஸர்வே லக்ஷணஸம்பந்நா: பத்₃மஹஸ்தாஶ் சதுர்பு₄ஜா: ॥ 25.
அநிஶம் ப₄க்திபி₄ஶ் ஶ்ரீஶமர்ச்சயந்தி ச கேஶவம் ।
ஆரூட₄யௌவநாஸ் ஸர்வே நார்யஶ்ச புருஷாஸ் தத₂ா ॥ 26.

அந்த விபூ₄தியின் நடுவில் 'ஶ்ரீவைகுண்ட₂ம்' என்னும் நக₃ரம் உண்டு. அது — சந்த்₃ரகாந்தமணிகள் இழைத்த அழிவற்ற பல விமானங்கள் நிறைந்துள்ளது. பல ரத்னங்களிழைத்த பலநிறமுடைய மாடமாளிகைகள் கூடியது. அத்தகைய கோ₃புர ப்ராகாரங்களையும் உடையது. பல மணிகளிழைக்கப்பெற்று விளங்கும் வரிசையான வீடுகள் உடையது. இந்திரன் வில்போன்ற மிகவுயர்ந்த உப்பரிகைகளால் உயர்ந்து விளங்குவது. கோடி ஸூர்யப்ரகாஶமுள்ள தோரணங்களால் அலங்கரிக்கப்பெற்றது.

ஆயிரக்கணக்கான சந்திரர்களின் ஒளியுள்ள புருஷர்கள் நிறைந்தது. அங்குள்ளாரனைவரும பரமாத்மாவைப்போன்ற திருமேனியுடையவர்களாய், நாலு கைகளை உடையவர்களாய், பரிஶுத்₃த₄ராய், ஶங்க₂சக்ரங்கள், வனமாலை, பீதாமப₃ரம் ஆகியவற்றை அணிந்தவர்களாய், ப₄க்தியுடன் கைங்காயம செய்து எம்பெருமானை உகப்பிக்கின்றனர். நூறு கோடி உத₃யஸூர்யன்போல் ஒளியுள்ளவர்களாய், ஸர்வலக்ஷணமும உடையவர்களாய், தாமரையேந்திய நாலு திருக்கைகளையுடையவர்களாய், ஶ்ரிய:பதியான ஸ்ரீமந் நாராயணனைப் பேரன்பு கொண்டவர்களாய் ஆராதி₄க்கிருர்கள். அங்குள்ள ஸ்த்ரீபுருஷர்கள் அனைவரும் நித்யயௌவனமுடையவர்களாய் ஶாஶ்வதமான அப்பரமபத₃த்தில் ப₄க₃வத் கைங்கர்யம்செய்து உகக்கின்றனர். இவவனைத்தையும சிந்திக்கக்கடவன்.

### வைகுண்ட₂ மந்தி₃ர (கோயில்) வர்ணநம்

**मोदन्ते परमे व्योम्नि शाश्वते प्रभुकिङ्कराः ।**
**तन्मध्ये मन्दिरं दिव्यं प्रासादशतसङ्कुलम् ॥ २७ ॥**
**मणिप्राकारसंशोभि चतुर्द्वारसमन्वितम् ।**
**चण्डादिद्वारपालैश्च कुमुदाद्यैश्च रक्षितम् ॥ २८ ॥**
**नानारत्नमयैर्दिव्यैः गृहमुख्यैश्च शोभितम् ।**

**மோத₃ந்தே பரமே வ்யோம்நி ஶாஶ்வதே ப்ரபு₄கிங்கரா: ।**
**தந்மத்₄யே மந்தி₃ரம் தி₃வ்யம் ப்ராஸாத₃ஶதஸங்குலம் ॥ 27.**
**மணிப்ராகாரஸம்ஶோபி₄ சதுர்த்₃வாரஸமந்விதம் ।**
**சண்ட₃ாதி₃த்₃வாரபாலைஶ்ச குமுத₃ாத்₃யைஶ்ச ரக்ஷிதம் ॥ 28.**
**நாநாரத்நமயைர் தி₃வ்யைர் க்₃ருஹமுக்₂யைஶ்ச ஶோபி₄தம் ।**

அந்த வைகுண்ட₂நக₃ரத்தின் நடுவில், அநேக மண்டபங்கள், ரத்தினங்களிழைத்த ப்ராகாரங்கள் ஆகியவற்ருேடு கூடியதாய், நாலு கோபுரவாசல்களையுடையதான கோயில்

இருக்கிறது. சண்டடூன் ப்ரசண்டடூன், பத்ரன் ஸுபத்ரன், ஜயன் விஜயன், தாதா விதாதா ஆகிய எண்மரும (இருவரிருவராக நாலு வாசல்களிலும) த்வாரபாலகர்களாகவும், குமுதன், குமுதாக்ஷன், புண்டரீகன், வாமனன், ஶங்குகர்ணன், ஸர்வநேத்ரன், ஸுமுகன், ஸுப்ரதிஷ்டன் ஆகிய எண்மரும் கணாதிபாகளாகவுமிருந்து அககோயிலை ரக்ஷிக்கின்றனர். அககோயில் பல ரத்தினங்களிழைதத பல மாளிகைகளாலும் விளங்காநிற்கிறது.

திருமாமணி மண்டப வர்ணநம்

**मध्ये मणिमयं दिव्यं सहस्रस्तम्भसंयुतम् ॥ २९ ॥**
**नानारत्नवितानौघैः चित्रितं सुसुखास्पदम् ।**
**दिव्यचन्दनकर्पूरैः कुङ्कुमाद्यैः सुशोभितम् ॥ ३० ॥**
**दिव्याप्सरोगणैर्नित्यैः सेवितं सततं शुभैः ।**

**மத்யே மணிமயம் திவ்யம் ஸஹஸ்ரஸ்தம்பஸம்யுதம் ॥ 29.**
**நாநாரத்நவிதாநௌகைஶ் சித்ரிதம் ஸுஸுகாஸ்பதம் ।**
**திவ்யசந்தநகர்ப்பூரை: குங்குமாத்யைஸ் ஸுஶோபிதம் ॥ 30.**
**திவ்யாப்ஸரோகணைர் நித்யைஸ் ஸேவிதம் ஸததம் ஶுபை: ।**

அந்தககோயிலின் நடுவில் ஒரு திருமாமணி மண்டபம் உள்ளது. அது ஆயிரம தூணகளைக்கொணடது. பல விதமான ரத்தினங்களால் இழைக்கப்பெற்ற மேற்கட்டிகளால் விசித்திரமாயுள்ளது. பேரானந்தத்திற்கு இருப்பிடமாயிருப்பது. அப்ராக்ருதமான சந்தனம், பச்சைக் கர்ப்பூரம், குங்குமம முதலான வாஸனை திரவியங்களால் நறுமணம் மிக்கது. மிக அழகானவராய், அப்ராக்ருதராய், அழிவற்றவரான அப்ஸரஸ்ஸுககளாலே அலங்கரிக்கப் பெற்றது.

திவ்ய ஸிம்ஹாஸந வர்ணநம்

**मध्ये सिंहासनं दिव्यं धर्माद्यैः सूरिभिर्वृतम् ॥ ३१ ॥**
**वेदत्रयमयं दिव्यं साङ्गोपाङ्गपरिच्छदम् ।**

तन्मध्येऽष्टदलं पद्मं अष्टाक्षरमयं परम् ॥ ३२ ॥
अकारः कर्णिका तत्र स्वरव्यञ्जनसंयुतः ।

மத்₄யே ஸிம்ஹாஸநம் தி₃வ்யம் த₄ர்மாத்₃யைஸ்
ஸூரிபி₄ர்வ்ருதம் ॥ 31.
வேத₃த்ரயமயம் தி₃வ்யம் ஸாங்கே₃ாபாங்க₃பரிச்ச₂த₃ம் ।
தந்மத்₄யேऽஷ்டத₃ளம் பத்₃மம் அஷ்டாக்ஷரமயம் பரம் ॥ 32.
அகார: கர்ணிகா தத்ர ஸ்வரவ்யஞ்ஜநஸம்யுத: ।

அந்தத் திருமாமணிமண்டபத்தின் நடுவில் தி₃வ்ய ஸிம்ஹாஸனமொன்று உள்ளது. த₄ர்மம், ஜ்ஞாநம், வைராக்₃யம, ஐஶ்வர்யம், அத₄ர்மம், அஜ்ஞாநம், அவை ராக்₃யம், அனைஶ்வர்யம என்னும் (எட்டுக்கும் அபி₄மானி தே₃வதைகளாகையாலே அவவெட்டுப்) பெயர்களைக் கொண்ட நித்யஸூரிகளாகிற காலகளை உடையது அது; மூன்றுவேத₃மயமாய், அப்ராக்ருதமாயிருப்பது; வேத₃த்தின் அங்கே₃ாபாங்க₃ங்களை அலங்காரமாகக்கொண்டது. அந்த ஸிமஹாஸனத்தின் நடுவில், அஷ்டாக்ஷர ஸ்வரூபமாய், மிகச்சிறந்ததாய், எட்டு இதழ்களைக்கொண்ட தாமரை இருக்கிறது. உயிரெழுத்துக்களோடும், மெய்யெழுத்துக் களோடும கூடிய அகாரம் அத்தாமரையின் கர்ணிகை யாய் (கொட்டையாய்) விளங்குகிறது.

### பரவாஸுதே₃வ வர்ணநம்

तस्मिन् अनन्तपर्यङ्के फणारत्नविचित्रिते ॥ ३३ ॥
ध्यायेत् निविष्टमात्मेशं ईश्वर्या जगतः श्रिया ।
इन्दीवरदलश्यामं पद्मपत्रनिभेक्षणम् ॥ ३४॥
श्लक्ष्णनासं लसद्गण्डसुभ्रूवल्लियुगान्वितम् ।
प्रातरुद्यत्सहस्रांशुप्रायकुण्डलशोभितम् ॥ ३५ ॥
संपूर्णचन्द्रप्रतिमस्मितयुक्तशुभाननम् ।
महाहनुं प्रोन्नतांसं दीर्घबाहुचतुष्टयम् ॥ ३६ ॥

महोरस्कं स्निग्धवर्णं कोमलावयवोज्ज्वलम् ।
सुस्निग्धनीलकेशान्तमन्तराकबरीकृतम् ॥ ३७ ॥
शङ्खचक्रगदाखड्गशार्ङ्गाद्यैरायुधैर्युतम्।
अर्कबिम्बसहस्राभकिरीटेन विराजितम् ॥ ३८ ॥
दिव्यचन्दनलिप्ताङ्गं पीतवस्त्रं शुभाह्वयम् ।
युवाकुमारं दिव्याङ्गं शुद्धसत्त्वमनोहरम् ॥ ३९ ॥
कौस्तुभोद्भासितोरस्कं वनमालाविभूषितम् ।
केयूरहारकटकनूपुराद्यैरलङ्कृतम् ॥ ४० ॥
स्निग्धरक्तारविन्दाभपादहस्ताम्बुजान्वितम् ।
कन्दर्पकोटिलावण्यजगन्मोहनविग्रहम् ॥ ४१ ॥
समानोत्कृष्टरहितं रूपौदार्यगुणादिभिः ।
प्रातरुद्यत्सहस्रांशुसदृशा स्वेन तेजसा ॥ ४२ ॥
तस्यैव सदृशी देवी शीलरूपगुणादिभिः ।
सर्वलक्षणसंपन्ना सर्वाभरणभूषिता ॥ ४३ ॥
सुधाब्धिफेनसङ्काशदिव्यवस्त्रेण शोभिता ।
सुस्निग्धनीलकुटिलकेशभारैः सुशोभिता ॥ ४४ ॥
चतुर्भुजैर्विराजन्ती केयूराङ्गदभूषणैः ।
हेमपद्मं मातुलिङ्गं उद्वहन्ती करद्वये ॥ ४५ ॥
इतराभ्यां वहन्ती सा भर्तुः पादाम्बुजद्वयम् ।
एवं भूमिश्च नीला च पार्श्वयोः समुपस्थिते ॥ ४६ ॥
गृहीतचामरा दिव्याः शक्तयोऽष्टदलेषु च ।
विमलोत्कर्षिणी ज्ञाना क्रिया योगा तथैव च ॥ ४७ ॥
प्रह्वी सत्या तथेशाना महिष्यः समुपस्थिताः ।
एवं वैकुण्ठनाथोऽसौ राजते परमे पदे ॥ ४८ ॥

सेव्यमानः सदा नित्यैः मुक्तैः भोगपरायणैः ।
एवं विचिन्तयेन्नित्यं परे व्योम्नि महेश्वरम् ॥ ४९ ॥

தஸ்மிந் அநந்தபர்யங்கே ப2ஹுரத்நவிசித்ரிதே ॥ 33.
த்4யாயேந்நிவிஷ்டமாத்மேஶம் ஈஶ்வர்யா ஜக3த: ஶ்ரியா ।
இந்தீ3வரத3ளஶ்யாமம் பத்3மபத்ரநிபே4க்ஷணம் ॥ 34.
ஶ்லக்ஷ்ணநாஸம் லஸத்க3ண்ட3 ஸுப்4ரூவல்லியுகா3ந்விதம் ।
ப்ராதருத்3யத்ஸஹஸ்ராம்ஶு ப்ராயகுண்ட3ல ஶோபி4தம் ॥ 35.
ஸம்பூர்ணசந்த்3ரப்ரதிம ஸ்மிதயுக்தஶுப4ாநநம் ।
மஹாஹநும் ப்ரோந்நதாம்ஸம் தீ3ர்க்க4ப3ாஹுசதுஷ்டயம் ॥ 36.
மஹோரஸ்கம் ஸ்நிக்3த4வர்ணம் கோமலாவயவோஜ்ஜ்வலம் ।
ஸுஸ்நிக்3த4நீலகேஶாந்த மந்தராகப3ீக்ருதம் ॥ 37.
ஶங்க2சக்ரக3த3ாக2ட்3க3 ஶார்ங்க3ாத்3யைராயுதை4ர்யுதம் ।
அர்க்கபி3ம்ப3ஸஹஸ்ராப4 கிரீடேந விராஜிதம் ॥ 38.
தி3வ்யசந்த3நலிப்தாங்க3ம் பீதவஸ்த்ரம் ஶுப4ாஹ்வயம் ।
யுவாகுமாரம் தி3வ்யாங்க3ம் ஶுத்3த4ஸத்த்வமநோஹரம் ॥ 39.
கௌஸ்துபே4ாத்3ப4ாஸிதோரஸ்கம் வநமாலாவிபூ4ஷிதம் ।
கேயூரஹாரகடக நூபுராத்3யைரலங்க்ருதம் ॥ 40.
ஸ்நிக்3த4ரக்தாரவிந்த3ாப4 பாத3ஹஸ்தாம்பு3ஜாந்விதம் ।
கந்த3ர்ப்பகோடிலாவண்ய ஜக3ந்மோஹநவிக்3ரஹம் ॥ 41.
ஸமாநோத்க்ருஷ்டரஹிதம் ரூபௌத3ார்யகு3ணைதி3பி4: ।
ப்ராதருத்3யத்ஸஹஸ்ராம்ஶு ஸத்3ருஶா ஸ்வேந தேஜஸா ॥ 42.
தஸ்யைவ ஸத்3ருஶீ தே3வீ ஶீலரூபகு3ணைதி3பி4: ।
ஸர்வலக்ஷணஸம்பந்நா ஸர்வாப4ரணபூ4ஷிதா ॥ 43.
ஸுத4ாப்3தி4பே2நஸங்காஶ தி3வ்யவஸ்த்ரேண ஶோபி4தா ।
ஸுஸ்நிக்3த4நீலகுடில கேஶப4ாரைஸ் ஸுஶோபி4தா ॥ 44.
சதுர்பு4ஜைர் விராஜந்தீ கேயூராங்க3த3பூ4ஷணை: ।
ஹேமபத்3மம் மாதுலிங்க3முத்3வஹந்தீ கரத்3வயே ॥ 45.
இதராப்4யாம் வஹந்தீ ஸா ப4ர்த்து: பாத3ாம்பு3ஜத்3வயம் ।
ஏவம் பூ4மிஶ்ச நீளா ச பார்ஶ்வயோஸ் ஸமுபஸ்தி2தே ॥ 46.
க்3ருஹீதசாமரா தி3வ்யாஶ் ஶக்தயோऽஷ்டத3ளேஷு ச ।
விமலோத்கர்ஷிணீ ஜ்ஞாநா க்ரியா யோக3ா ததை2வ ச ॥ 47.

**ப்ரஹ்வீ ஸத்யா ததே₂ஶாநா மஹிஷ்யஸ் ஸமுபஸ்தி₂தா: |**
**ஏவம் வைகுண்ட₂நாதே₂஽ஸௌ ராஜதே பரமே பதே₃ || 48.**
**ஸேவ்யமாநஸ் ஸதா₃ நித்யைர் முக்தைர் போ₄க₃பராயணை: |**
**ஏவம் விசிந்தயேந்நித்யம் பரே வ்யோம்நி மஹேஶ்வரம் || 49.**

அந்தக் கர்ணிகையின் நடுவில் திருவநந்தாழ்வான் தன் படங்களிலுள்ள மணிகளின் ஒளியினுல் ஆஶ்சாய மான அழகையுடையவராய எழுந்தருளியிருக்கிருர். அந்தத் திருவனந்தாழ்வாணுகிற படுக்கையின்மேல், தனக்குப் பத்னியாய், உலகிற்கு ஈஶ்வரியான ஸ்ரீ தே₃வியோடு எழுந்தருளியிருக்கும் ஸாவேஶ்வரனை தியானிக்கக்கடவன். அபபெருமான் கருநெய்தல் புஷ்பத்தின் இதழ் போன்று கறுத்த நிறத்தை உடையவன்; தாமரையிதழ்போன்ற திருக்கண்களை உடையவன்; (கோல நீள் கொடிபோன்ற) அழகிய நீண்ட மூக்கையுடையவன். அழகிய கன்னங் களையும், கொடிபோன்று அழகிய இரு புருவங்களையும் உடையவன். காலையில் உதி₃க்கும் ஸூர்யன்போல் ஒளி விடும் குண்ட₃லங்களை உடையவன. பூர்ணசந்திரன்போல் புன்முறுவல்செய்யும் திருமுகமண்ட₃லத்தையுடையவன். பருத்த தாடையுடையவன். உயர்ந்த தோள்களையுடைய வன். நாலு நீணட திருக்கைகளை உடையவன். பரந் துயர்ந்த திருமார்பையுடையவன். நெய்த்து இருண்ட திரு நிறத்தை உடையவன். அழகு மிக்க அவயவங்களை உடையவன். நெய்த்துக் கறுத்து நடுவில் முடிக்கப் பெற்றிருககும கேஶபாஶங்களை உடையவன். ஶங்க₂ம், சக்ரம, க₃தை, வாள், வில் முதலான பல ஆயுத₄ங்களை உடையவன். ஆயிரங்கோடி ஸூர்யர்கள் ஒன்ருக உதித் தாற்போல் ஒளிவிடும் கிரீடத்தை உடையவன். அப்ரா க்ருதமான சந்த₃னத்தால் பூசப்பெற்ற திருமேனியுடைய வன். பீதகவாடையுடையவன். (நாராயணன், வாஸு தே₃வன், விஷ்ணு முதலிய) அழகிய திருநாமங்களை உடையவன். ஶுத்₃த₄ஸத்வத்தால் ஆனதாகையாலே மிக அழகியதாய், யுவாவாய், அகுமாரமான (யௌவநநிலை

யின் தொடக்கத்திலும் கௌமாரநிலையின் இறுதியிலு மிருப்பதான) அப்ராக்ருதத் திருமேனியை உடையவன். ஸ்ரீ கௌஸ்துப₄மணியால் விளங்காநிற்கும் திருமார்பை உடையவன. வனமாலையால் அலங்கரிக்கப்பெற்றவன். தோள்வளை, ஹாரம், கைவளை, சதங்கை முதலான (சக்ரவர்த்திககுரிய) பல பல திருவாப₄ரணங்களால் அலங் கரிக்கப்பெற்றவன். செய்த்துச் சிவந்த தாமரைபோனற திருவடித் தாமரைகளையும், திருககைத் தாமரைகளையும் உடையவன. கோடி மன்மத₂ர்கள் சேர்ந்தாற்போன்று உலகனைத்தையும் ஈர்க்கும் அழகையுடைய திருமேனி கொண்டவன். வடிவழகு முதலிய ரூபகு₃ணங்களிலும் வண்மை முதலான ஆத்மகு₃ணஙகளிலும காலையில் உதி₃க்கும் ஸூர்யன் போன்ற தன் தேஜஸ்ஸிலும் தனக்கு ஒத்தார் மிக்காரையிலாதவன். *ஶீ*லம் (நீர்மை) முதலிய ஆத்மகு₃ணங்களாலும், வடிவழகு முதலிய ரூப கு₃ணங்களாலும அவனுக்கு ஏற்றவளாய், ஸர்வலக்ஷணங் களும் நிறைந்தவளாய், (பெண்களுக்குரிய) எல்லா ஆப₄ரணங்களையும உடையவளாய், திருப்பாற்கடலின் நுரைபோல விளங்கும் தி₃வ்யவஸ்த்ரம த₄ரித்து விளங்கு பவளாய், செய்த்துக் கறுத்துச சுருண்ட திருக்குழற் கற்றையால மிக விளங்குகிறவளாய், கேயூரம், அங் க₃த₃ம முதலான திருவாப₄ரணங்களோடு கூடிய நாலு திருக்கைகளோடு விளங்காநிற்பவளாய், அத்திருக்கை களில், பின்னிரண்டு திருககைகளால் பொற்றாமரையை யும், மாதுளமபழத்தையும் த₄ரித்திருப்பவளாய், முன் னிரண்டு திருக்கைகளால், தன் பதியான எம்பெருமானின் திருவடித் தாமரையிணையை வருடுகின்றவளான பெரிய பிராட்டியார் அவனோடு எழுந்தருளியிருக்கிருள். இத்தகைய பெருமையை உடைய பூ₄தே₃வியும், நீளாதே₃வியும் (ஸ்ரீதே₃விககு) இரண்டு புறத்திலும் வீற்றிருக்கின்றனர். ஆஸநகமலதகின் எட்டு இதழ்களிலும் விமலை, உத்கர்ஷிணீ, ஜ்ஞாநை, கரியை, யோகை₃, ப்ரஹ்வீ, ஸத்யை என்ற

எட்டு மஹிஷிகள் நின்று சாமரம் வீசுகிருர்கள். நித்யர் களும், முக்தர்களும், பரமாநந்தமுடையவராய், எப போதும் இப்பரவாஸுதேவனுக்குக் கைங்கர்யம் செய்து கொண்டிருக்கிருர்கள். இவ்வண்ணமாகப் பரமபதத்தில் ஸர்வேஶ்வரனைச் சிந்திக்கககடவன்.

### மற்ற மூர்த்திகள்

**तस्यैव व्यूहभेदाश्च विभवार्चादिमूर्तयः।**
**हिरण्मयाभ्यां हस्ताभ्यां शुद्धाभ्यां प्रविराजिताः ॥ ५० ॥**

**தஸ்யைவ வ்யூஹபேதாஶ்ச விபவார்ச்சாதிமூர்த்தய: |**
**ஹிரண்மயாப்யாம் ஹஸ்தாப்யாம் ஶுத்தாப்யாம்**
**ப்ரவிராஜிதா: ॥ 50.**

அந்தப் பரவாஸுதேவனுடைய (ப்ரத்யும்னன முதலிய) வ்யூஹாவதாரங்களும், (மத்ஸ்யம், கூர்மம் முதலிய) விபவாவதாரங்களும். (ஸ்ரீரங்கநாதன் முதலிய) அர்ச்சாவ தாரங்களும், பொன்போல் அழகிய இருதிருக்கைகளை உடையவர்களாய், அந்த ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளி யிருக்கின்றனர்.

### திவ்யாயுதங்கள்

**शङ्खचक्रगदाखड्गशार्ङ्गलाङ्गलमुद्गराः।**
**परितः पुरुषाकाराः रक्षन्ति हरिमन्दिरम् ॥ ५१ ॥**

**ஶங்கசக்ரகதாகட்கஶார்ங்கலாங்கலமுத்கரா: |**
**பரித: புருஷாகாரா ரக்ஷந்தி ஹரிமந்திரம் ॥ 51.**

ஶங்கம, சக்ரம், கதை, கத்தி, ஶார்ங்கவில், கலப்பை, உலக்கை என்னும் (பரமபுருஷனுடைய) ஆயுதங்கள் புருஷரூபத்தை எடுத்துக்கொண்டு அத்திருக்கோயிலை ரக்ஷிக்கின்றனர்.

### வ்யூஹஸ்தானங்கள்

**तस्य वैकुण्ठनाथस्य प्राच्यां शुभतरो विभोः।**
**वासुदेवस्य विमलो लोको वैश्वानरप्रभः ॥ ५२ ॥**

தஸ்ய வைகுண்ட₂நாத₂ஸ்ய ப்ராச்யாம் ஶுப₄தரோ விபோ₄: ।
வாஸுதே₃வஸ்ய விமலோ லோகோ வைஶ்வாநரப்ரப₄: ॥ 52.

ஸர்வேஶ்வரனை அந்த வைகுண்ட₂நாத₂னுடைய கோயிலுக்குக் கிழக்கு தி₃க்கில்—மிக அழகியதாய், குற்ற மற்றதாய், அக₃னிபோல் ஒளியுள்ளதான வ்யூஹவாஸு தே₃வனுடைய கோயில் உள்ளது.

दक्षिणे तस्य विमलो दिव्यः सङ्कर्षणालयः ।
पश्चिमे तस्य पूज्यं तु शुभं प्रद्युम्नमन्दिरम् ॥ ५३ ॥

த₃க்ஷிணே தஸ்ய விமலோ தி₃வ்யஸ் ஸங்கர்ஷணாலய: ।
பஶ்சிமே தஸ்ய பூஜ்யம் து ஶுப₄ம் ப்ரத்₃யும்நமந்தி₃ரம் ॥ 53.

அந்த வைகுண்ட₂நாத₂னுடைய கோவிலுக்குத் தெற்கு தி₃க்கில்—குற்றமற்றதாய், அப்ராக்ருதமான ஸங்கர்ஷண னின் கோயில் உளளது. அதற்கு மேற்கில்—கொண்டாடத் தக்கதாய்,மங்க₃ளமான ப்ரத்₃யுமனனின் கோயில உள்ளது.

उदीच्यां अनिरुद्धस्य लोकः कोटीन्दुसन्निभः ।
ईशान्यां कान्तिनिलयः आग्नेय्यां लक्ष्मिमन्दिरम् ॥ ५४ ॥

உதீ₃ச்யாமநிருத்₃த₄ஸ்ய லோக: கோடீந்து₃ஸந்நிப₄: ।
ஈஶாந்யாம் காந்திநிலய: ஆக்₃நேய்யாம் லக்ஷ்மிமந்தி₃ரம் ॥ 54.

அதற்கு வடக்கு தி₃கசில்—கோடிசந்திரர்களின் ஒளி யுடைய அநிருத்₃த₄னின் கோயில் உள்ளது. வடகிழக்கு மூலையில்—அநிருத்₃த₄னின் பத்னியான காந்திதே₃வியின் கோயிலும், தென்கிழக்கு மூலையில்—வாஸுதே₃வனின் பத்னியான லக்ஷ்மீதே₃வியின் கோயிலும் உள்ளன.

सारस्वतं तु नैर्ऋत्यां वायव्यां रतिमन्दिरम् ।
इदमावरणं तस्य प्रथमं परमस्य वै ॥ ५५ ॥

ஸாரஸ்வதம் து நைர்ருத்யாம் வாயவ்யாம் ரதிமந்தி₃ரம் ।
இத₃மாவரணம் தஸ்ய ப்ரத₂மம் பரமஸ்ய வை ॥ 55.

அதற்குத் தென்மேற்கு மூலையில—ஸங்கர்ஷணனின் பத்னியான ஸரஸ்வதீதேவியின் கோயிலும, வடமேற்கு மூலையில்—ப்ரத்யும்னனின் பத்னியான ரதிதேவியின் கோயிலும இருககின்றன. இவையெலலாம ஸ்ரீவைகுணட நாதன் கோயிலின் முதல் ப்ராகாரத்தில் உள்ளன.

இரண்டாவது ப்ராகார தேவர்கள்

**द्वितीयावरणं तस्य वैकुण्ठस्य शुभोन्नतम्।**
**अनन्तसत्यधामाख्यविष्वक्सेनगजाननाः ॥ ५६ ॥**
**शङ्खपद्मनिधी तार्क्ष्यो लोका नित्यं सुखप्रदाः।**

**த்விதீயாவரணம் தஸ்ய வைகுண்டஸ்ய ஶுபோந்நதம்।**
**அநந்தஸத்யதாமாக்யவிஷ்வக்ஸேநகஜாநநா: ॥** 56.
**ஶங்கபத்மநிதீ தார்க்ஷ்யோ லோகா நித்யம் ஸுகப்ரதா:।**

வைகுண்டநாதனுடைய கோயிலின் பரமமங்கள மான இரண்டாவது ப்ராகாரத்தில்—அநந்தன், ஸத்யன, தாமன், விஷ்வகஸேனர், கஜாநனன், ஶங்கநிதி, பத்மநிதி, கருடன் ஆகியவர்களுடைய, ஸுகமளிக்கும கோயில்கள் உள்ளன.

மூன்றுவது ப்ராகார மூர்த்திகள்

**तृतीयावरणं तस्य केशवादिममूर्तिभिः ॥ ५७ ॥**

**த்ருதீயாவரணம் தஸ்ய கேஶவாதிமமூர்த்திபி: ॥** 57.

வைகுண்டநாதனுடைய கோயிலின் மூன்றுவது ப்ராகாரத்தில்—கேஶவன் முதல், தாமோதரன் ஈருகவுள்ள வ்யூஹாந்தரமூர்த்திகளின் கோயில்கள் உள்ளன.

நாலாவது ப்ராகார மூர்த்திகள்

**अधिष्ठिता दिव्यलोकाः ततः सङ्कर्षणादिभिः।**

**அதிஷ்டிதா திவ்யலோகாஸ் ததஸ் ஸங்கர்ஷணாதிபி:।**

நாலாவது ப்ராகாரத்தில்—முதல் ப்ராகாரத்திற்போலே ஸங்கர்ஷணாதி வ்யூஹமூர்த்திகளின் கோயில்கள் உள்ளன.

ஐந்தாவது ப்ராகார மூர்த்திகள்

मत्स्यः कूर्मो वराहश्च नारसिंहोऽथ वामनः ॥ ५८ ॥
जामदग्न्यो दाशरथिः कृष्णश्चैव सुरेश्वरः ।
दधिभक्तो हयग्रीवः पञ्चमावरणे स्थिताः ॥ ५९ ॥
अधिष्ठिता दिव्यलोकाः सततं विभवैश्च तैः ।

மத்ஸ்ய: கூர்மோ வராஹஶ்ச நாரஸிம்ஹோऽத₂ வாமந: ॥ 58.
ஜாமத₃க்₃ந்யோ தா₃ஶரதி₂: க்ருஷ்ணஶ்சைவ ஸுரேஶ்வர: ।
த₃தி₄ப₄க்தோ ஹயக்₃ரீவ: பஞ்சமாவரணே ஸ்தி₂தா: ॥ 59.
அதி₄ஷ்டி₂தா தி₃வ்யலோகாஸ் ஸததம் விப₄வைஶ்ச தை: ।

மீன், ஆமை, வராஹம், நரசிங்கன், வாமனன், பரஶுராமன், ஸ்ரீராமன, தே₃வதே₃வனான கண்ணன், த₃தி₄ப₄க்தன், ஹயக₃ரீவன் ஆகிய விப₄வாவதாரமூர்த்திகள் அபராகருதமான கோயிலகளில ஐந்தாவது ப்ராகாரத்தில் எப்போதும உள்ளனர்.

एवमावरणाः पञ्च नित्यास्तस्य परस्य हि ॥ ६० ॥
सर्वे देवगणाः पञ्च नित्यास्तस्य परस्य हि ।

ஏவமாவரணா: பஞ்ச நித்யாஸ் தஸ்ய பரஸ்ய ஹி ॥ 60.
ஸர்வே தே₃வக₃ணா: பஞ்ச நித்யாஸ் தஸ்ய பரஸ்ய ஹி ।

பரவாஸுதே₃வனுக்கு ஶேஷமாயிருக்கும் இவ்வித₄மான ஐந்து ப்ராகாரங்களும, அந்தந்த ப்ராகாரங்களிலுள்ள (முற்கூறிய) ஐவகை மூர்த்திகளும ஸ்ரீ வைகுண்ட₂த்தில் எப்போதும் உள்ளன.

सर्वे देवा गणैस्तुल्याः वैकुण्ठस्यावनोत्सुकाः ॥ ६१ ॥
शुद्धसत्त्वमयाः सर्वे नित्यानन्दसुखप्रदाः ।
अप्राकृताः शाश्वताश्च विष्णुकैङ्कर्यवर्धकाः ॥ ६२ ॥
आनन्दनिस्सीमगुणाः सर्वे वेदमयाः शुभाः ।
हिरण्मया नित्यशुद्धाः सामगानोपशोभिताः ॥ ६३ ॥

ஸர்வே தே₃வா க₃ணைஸ்துல்யா வைகுண்ட₂ஸ்யாவநோத்
ஸுகா: || 61.

ஶுத்₃த₄ஸத்வமயாஸ் ஸர்வே நித்யாநந்த₃ஸுக₂ப்ரத₃ா: |
அப்ராக்ருதாஶ் ஶாஶ்வதாஶ்ச விஷ்ணுகைங்கர்ய
வர்த்த₄கா: || 62.

ஆநந்த₃நிஸ்ஸீமகு₃ணாஸ் ஸர்வே வேத₃மயாஶ் ஶுப₄ா: |
ஹிரண்மயா நித்யஶுத்₃த₄ாஸ் ஸாமகா₃நோபஶோபி₄தா: || 63.

அந்தந்த ப்ராகாரங்களிலுள்ள மற்ற மூர்த்திகளும் முதலிற்சொன்ன வாஸுதே₃வன் முதலான மூர்த்திகளோடு ஸமானமான திருமேனியை உடையவர்களாய், ஸ்ரீவைகுண்ட₂நாத₂ன் கோயிலை ரக்ஷிப்பதில் ஈடுபட்டுள்ளனர். அனைவரும் ஶுத்₃த₄ஸத்வமயமான திருமேனியை உடையவர்களாய், நித்யாநந்த₃ஸுக₂த்தை அளிப்பவர்களாய், ப்ரக்ருதிஸம்ப₃ந்த₄மற்றவர்களாய், எப்போதுமிருப்பவர்களாய், பரமபத₃நாத₂கைங்கர்யத்தை வளர்ப்பவர்களாயிருக்கிறார்கள். எல்லோரும், ஆனந்த₃த்தையும், எல்லையற்ற கு₃ணங்களையும் உடையவர்களாகவும், வேத₃ஸ்வரூபிகளாகவும், மங்க₃ளமானவர்களாகவும், பொன்மயமான திருமேனியை உடையவர்களாகவும், எப்போதும் பரிஶுத்₃த₄ர்களாகவும், ஸாமகா₃னத்தால் விளங்காநிற்பவர்களாகவும உள்ளனர்.

एवं तु परमं धाम व्यूहादिमपि चिन्तयेत् ।

ஏவம் து பரமம் தா₄ம வ்யூஹாதி₃மபி சிந்தயேத் |

இவ்வித₄மாக — பரஞ்சோதியான பரமபத₃நாத₂னையும், வ்யூஹம், விப₄வம் முதலான மூர்த்திகளையும் தியானம் செய்யககடவன்.

லீலாவிபூ₄தியிலுள்ள மூர்த்திகளின் தியானம்

त्रिपाद्विभूतिरूपं तु संयक् ध्यात्वा विचक्षणः ॥ ६४ ॥
तस्य पादविभूतेस्तु रूपं ज्ञेयमनन्तकम् ।

த்ரிபாத்₃விபூ₄திரூபம் து ஸம்யக் த்₄யாத்வா விசக்ஷண: ॥ 64.
தஸ்ய பாத₃விபூ₄தேஸ்து ரூபம் ஜ்ஞேயமநந்தகம் ।

இப்படிப் பரமபத₃த்திலுள்ள மூர்த்திகளை நன்கு தியானித்தபின், அறிவாளியானவன் ஸம்ஸாரமண்ட₃லத்திலுள்ள அளவற்ற அவதார ரூபங்களையும் தியானிக்கக்கடவன.

## வ்யூஹமூர்த்தி த்₄யானம்

वैकुण्ठे कारणे श्वेतद्वीपे लोके सुधांबुधौ ॥ ६५ ॥
संस्थितं परमात्मानं दर्शनार्थं दिवौकसाम् ।

வைகுண்டே₂ காரணே ஶ்வேதத்₃வீபே லோகே
ஸுதா₄ம்பு₃தௌ₄ ॥ 65.
ஸம்ஸ்தி₂தம் பரமாத்மாநம் த₃ர்ஶநார்த்த₂ம் தி₃வௌகஸாம் ।

பரமபத₃த்திற்குச் செல்ல இயலாத ப்₃ரஹ்மருத்₃ராதி₃ தே₃வர்கள் காண்பதற்காக — மற்ற வ்யூஹங்களுக்குக் காரணமான வ்யூஹவாஸுதே₃வன் எழுநதருளியிருக்கும் (இவ்விபூ₄தியிலுளள கார்ய) வைகுண்ட₂த்திலும், (மற்ற வ்யூஹங்களின் ஸ்தா₂னமான) ஶ்வேதத்₃வீபம், ஸத்யலோகம், திருப்பாற்கடல ஆகியவற்றிலும் எழுந்தருளியிருக்கும் பரமாத்மாவின் வ்யூஹமூாத்திகளைச் சிந்திக்கக்கடவன்.

## விப₄வாவதாரத்₄யானமும், பயனும்

लोकसंरक्षणार्थाय वैभवञ्च समागतम् ॥ ६६ ॥
नृसिंहरामविभवविग्रहानपि चिन्तयेत् ।
देवतिर्यङ्मनुष्यादिविग्रहेषु समास्थितान् ॥ ६७ ॥

லோகஸம்ரக்ஷணார்த்தா₂ய வைப₄வம் ச ஸமாக₃தம் ॥ 66.
ந்ருஸிம்ஹராமவிப₄வ விக்₃ரஹாநபி சிந்தயேத் ।
தே₃வதிர்யங்மநுஷ்யாதி₃ விக்₃ரஹேஷு ஸமாஸ்தி₂தாந் ॥ 67.

அசுரரரக்கர்களால் உலகிற்கு நலிவு ஏற்படும்போது, அதை நீககி உலகை ரக்ஷிப்பதற்காக, தேவர், திர்யக் (ஊர்வன), மனிதர், தாவரங்கள் என்னும் நால்வகை யோனிகளிலும் பிறவியெடுத்த நரசிங்கன், ராமன்,

வாமனன், மத்ஸ்யம், கூர்மம், குட்டைமாமரம முதலான விப₄வாவதாரங்களேயும் சிந்திக்கக்கடவன்.

அந்தர்யாமி ஸ்த₂ாநமும் த்₄யானமும்

**ज्ञेयाऽन्तर्याम्यवस्था हि विष्णोः सर्वगतस्य वै।**
**यो हि हृत्पुण्डरीकान्तर्वेश्मनीह सविग्रहः॥ ६८॥**

**ஜ்ஞேயாந்தர்யாம்யவஸ்த₂ா ஹி விஷ்ணோஸ் ஸர்வக₃தஸ்ய வை।**
**யோ ஹி ஹ்ருத்புண்டரீகாந்தர்வேஶ்மநீஹ ஸவிக்₃ரஹ:॥ 68.**

ஸர்வவ்யாபியான எமபெருமான எங்கும பரந்திருந்த போதிலும, ப₄க்தர்களே அனுக்₃ரஹிப்பதற்காக ஹ்ருத₃ய கமலத்தின நடுவில், கட்டைவிரல் பருமனுள்ள திருமேனியை உடையவனாய் எழுந்தருளியிருக்கும இருப்பு அந்தர்யாமி நிலையாகும. அதையும தியானிக்கக்கடவன்.

அர்ச்சாவதாரத்₄யானமும் பயனும்

**सौलभ्यायैव सर्वेषां अर्चायामपि सन्निधिः।**
**स्वरूपमीश्वरस्यैवं ज्ञातव्यास्तद्गुणा अपि॥ ६९॥**

**ஸௌலப்₄யாயைவ ஸர்வேஷாமர்ச்சாயாமபி ஸந்நிதி₄:।**
**ஸ்வரூபமீஶ்வரஸ்யைவம் ஜ்ஞாதவ்யாஸ் தத்₃கு₃ணா அபி॥ 69.**

யோக₃முறையில் அந்தர்யாமியைக காண இயலாத வர்களுக்கும் எளியனாவதற்காக எமபெருமான் அர்ச்சாவதாரம் எடுத்திருக்கிறான். இத்தகைய அர்ச்சைத் திருமேனியையும, அதில் நிறைந்திருக்கும் ஸௌலப்₄ய ஸௌஶீல்யாதி₃ கு₃ணங்களேயும் சிந்திக்கக்கடவன்.

உப₄யவிபூ₄தியோக₃த்₄யான நிக₃மனம்

**विभूतियोगस्तस्यैवं ज्ञातव्यः सर्वदेहिभिः।**

**விபூ₄தியோக₃ஸ் தஸ்யைவம் ஜ்ஞாதவ்யஸ் ஸர்வதே₃ஹிபி₄:।**

இவ்வண்ணமாக — ஸர்வேஶ்வரனுடைய நித்யவிபூ₄தி, லீலாவிபூ₄தி ஆகிய இருவிபூ₄திகளிலுமுள்ள பெருமைகளை எல்லா ஜீவர்களாலும தியானிக்கத்தக்கவை.

### வ்யூஹகுணங்கள்

षड्गुणः परमे व्योम्नि वासुदेवः सनातनः ॥ ७० ॥
व्यूहावस्थासु तिसृषु गुणद्वयमधिष्ठितम् ।

ஷட்குணா: பரமே வ்யோம்நி வாஸுதேவஸ் ஸநாதந: ॥ 70.
வ்யூஹாவஸ்தாஸு திஸ்ருஷு குணத்வயமதிஷ்டிதம் ।

பரமபதத்தில எழுந்தருளியிருக்கும் பழையோனை பரவாஸுதேவனிடம் ஜ்ஞானம, ஶகதி, பலம், ஐஶ்வர்யம், வீர்யம, தேஜஸ் என்னும் ஆறு குணங்களும் பிரகாசிக்கின்றன. ஸங்கர்ஷணன, ப்ரத்யும்னன், அநிருத்தன் என்னும் மூன்று வ்யூஹங்களில் இரண்டிரண்டு குணங்கள் பிரகாசிக்கின்றன.

### வ்யூஹங்களின் தொழில்கள்

प्रद्युम्नश्चानिरुद्धश्च तथा सङ्कर्षणो विभुः ॥ ७१ ॥
जगत्सृष्टिस्थितिलयान् कुर्वते गुणभेदतः ।

ப்ரத்யும்நஶ்சாநிருத்தஶ்ச ததா ஸங்கர்ஷணோ விபு: ॥ 71.
ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதிலயாந் குர்வதே குணபேதத: ।

ப்ரத்யுமநன், அநிருத்தன், ஸங்கர்ஷணன் என்னும் மூன்று வ்யூஹமூர்த்திகளும, (ப்ரகாஶிக்கும்) இரண்டிரண்டு குணங்களைக் கொண்டவர்களாய், (முறையே) உலகைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்னும் முத்தொழில்களைச் செய்கிறார்கள்.

### வ்யூஹகுண விவரணம்

ऐश्वर्यवीर्यवान् सर्गे प्रद्युम्नः प्रत्यपद्यत ॥ ७२ ॥
तेजःशक्ती समाविश्य ह्यनिरुद्धोऽप्यपालयत् ।
ज्ञानवान् बलवान् लोकान् ग्रसेत् सङ्कर्षणोऽव्ययः ॥ ७३ ॥
एवं सृष्टिस्थितिलयान् करोति भगवान् हरिः ।

ஐஶ்வர்ய வீர்யவாந் ஸர்கே ப்ரத்யும்ந: ப்ரத்யபத்யத ॥ 72.
தேஜஶ்ஶக்தீ ஸமாவிஶ்ய ஹ்யநிருத்தோப்யபாலயத் ।

**ஜ்ஞாநவாந் ப₃லவாந் லோகாந் க்₃ரஸேத்**
**ஸங்கர்ஷணோऽவ்யய: ॥ 73.**
**ஏவம் ஸ்ருஷ்டிஸ்தி₂திலயாந் கரோதி ப₄க₃வாந் ஹரி: ।**

ப்ரத்₃யுமனன்—ஐஶ்வர்யம், வீரயம் என்னும இரண்டு குணங்களைக்கொண்டு உலகை ஸ்ருஷ்டிக்கிறுன். அநிருத்₃த₄ன்—தேஜஸ், ஶகதி என்னும் இரண்டு குணங்களைகொணடு உலகை ரக்ஷிக்கிறுன். அழிவற்ற ஸங்கர்ஷணன்—ஜ்ஞாநம், ப₃லம் என்னும் இரண்டு குணங்களைக்கொண்டு உலகை அழிக்கிறுன். இப்படி ஸர்வேஶ்வரன் தானே மூன்று அவதாரஙகளை எடுத்து உலகைப் படைத்தளிதது அழிக்கும் முத்தொழில்களையும் செய்கிறுன்.

ஹரிஶப்₃த₃ார்த்த₂ம்

**ब्रह्माणमीशं रुद्रं च यमं वरुणमेव च ॥ ७४ ॥**
**प्रसह्य हरते यस्मात् तस्मात् हरिरिहोच्यते ।**

**ப்₃ரஹ்மாணமீஶம் ருத்₃ரம் ச யமம் வருணமேவ ச ॥ 74.**
**ப்ரஸஹ்ய ஹரதே யஸ்மாத் தஸ்மாத் ஹரிரிஹோச்யதே ।**

"ஹரதி இதி ஹரி:" [(ஸம்)ஹரிபபவனுகையாலே ஹரியாகிறுன்] என்கிற வ்யுத்பத்தியினபடி, அனைத்துலகையும் ஸம்ஹரிப்பதே இயல்வாககொண்டவன் என்பது ஹரிஶப்₃த₃ார்த்த₂ம். பிரமனையும், ஈஶன் எனப்படும் உருத்திரனையும், யமனையும, வருணனையும் ப்ரளயகாலத்தில், தன வயிற்றில் வைத்து ஸம்ஹரிககிறபடியால் நாராயணன் 'ஹரி' எனப்படுகிறுன்.

**एवमात्मस्वरूपञ्च तथाऽचिद्रूपमुल्लसत् ॥ ७५ ॥**
**स्वरूपमीश्वरस्यैवं ज्ञात्वा बन्धात् प्रमुच्यते ।**

**ஏவமாத்மஸ்வரூபம் ச தத₂ாऽசித்₃ரூபமுல்லஸத் ॥ 75.**
**ஸ்வரூபமீஶ்வரஸ்யைவம் ஜ்ஞாத்வா ப₃ந்த₄ாத் ப்ரமுச்யதே ।**

ஆத்மஸ்வரூபமும், அசித்ஸ்வரூபமும், (இவைகளுக்கு ஆத்மாவாய்) உயர்ந்து விளங்கும் ஈஶ்வரஸ்வரூபமும இத்தகையவை. இவ்வண்ணம் அறிந்தவன் ஸம்ஸார ப₃ந்த₄த்திலிருந்து நீங்கி மோக்ஷமடைகிறுன்.

ப₄க₃வந்நாமங்கள்

ईश्वरो भगवान् विष्णुः परमात्मा जगत्पतिः ॥ ७६ ॥
अनन्तः पुरुषः साक्षी परं ब्रह्म शिवः प्रभुः ।
हिरण्यगर्भः शुचिषत् हंसः परमचेतनः ॥ ७७ ॥

ஈஶ்வரோ ப₄க₃வாந் விஷ்ணு: பரமாத்மா ஜக₃த்பதி: ॥ 76.
அநந்த: புருஷஸ் ஸாக்ஷீ பரம் ப்₃ரஹ்ம ஶிவ: ப்ரபு₄: ।
ஹிரண்யக₃ர்ப்ப₄ஶ் ஶுசிஷத்₃த₄ம்ஸ: பரமசேதந: ॥ 77.

அந்தப் பரமாத்மாவானவர் — அனைத்தையும் நியமிப்ப வராகையாலே ஈஶ்வரனென்றும், தோ₃ஷமற்று கு₃ணம் நிறைந்தவராகையாலே ப₄க₃வானென்றும், ஸர்வவ்யாபி யாகையாலே விஷ்ணுவென்றும், உலகிற்கு ரக்ஷகராகை யாலே ஜக₃த்பதியென்றும, தே₃ஶகாலவஸ்துககளால் அளவுபட்டிருக்கையாகிற மூவகை அளவுகளும் இல்லாத வராகையாலே அநநதனென்றும், பூர்ணராகையாலே புருஷரென்றும், அனைத்தையும் எப்போதும காண்பவராகை யாலே, ஸாக்ஷியென்றும், மிகப்பெரியவராகவும், பிறரைப் பெரிதாகச் செய்பவராகவுமிருப்பவராகையாலே பரப்₃ரஹ்ம மென்றும், பரமமங்க₃ளமானவராகையாலே சிவனென்றும், ஸமர்த்த₂ராகையாலே ப்ரபு₄வென்றும், ஹிரண்யக₃ர்ப்ப₄ ஞன பிரமனுககும் அந்தர்யாமியாகையாலே ஹிரண்ய க₃ர்ப்ப₄ரென்றும, பரிசுத்₃தி₄க்கு இருப்பிடமாகையாலே 'ஶுசிஷத்' என்றும், அன்னமாய் அவதரித்தவராகையாலே ஹமஸம் என்றும, அறிவுடையவர்களில் சிறந்தவராகை யாலே பரமசேதனரென்றும் சொல்லப்படுகிறுர்.

नारायणः सर्वगतः परञ्ज्योतिः परात्परः ।
महेन्द्रः सविता रुद्रः स्थाणुः सूर्यः प्रजापतिः ॥ ७८ ॥

நாராயணஸ் ஸர்வக₃த: பரஞ்ஜ்யோதி: பராத்பர: ।
மஹேந்த்₃ரஸ் ஸவிதா ருத்₃ரஸ் ஸ்த₂ாணுஸ் ஸூர்ய:
ப்ரஜாபதி: 78.

எல்லாப் பொருள்களையும் வியாபிப்பவராகவும், அவற்றுக்கு ஆதா₄ரமாகவும், ப்ராப்யமாகவும், ப்ராபகமாகவுமிருப்பவராகையாலே நாராயணன் என்றும, எல்லா வஸ்துக்களிலும் நிறைந்திருப்பவராகையாலே ஸர்வக₃தர் என்றும், மேலான சோதியாகையாலே பரஞ்சோதியென்றும், மேலானவற்றைக் காட்டிலும மேலானவராகையாலே பராத்பரர் என்றும, பரமைஶ்வர்யத்தை உடையவராகையாலும், இந்திரனுக்கு அந்தர்யாமியாகையாலும மஹேந்திரனென்றும், உலகத்தை ஸ்ருஷ்டித்தவராகையாலும, ஸூர்யாந்தர்யாமியாகையாலும் ஸவிதா என்றும, பிறவியென்னும் நோயைத் தீர்ப்பவராகையாலும், ருத்₃ராந்தர்யாமியாகையாலும் ருத்₃ரன் என்றும, நிலையானவராகையாலே ஸ்த₂ாணுவென்றும், உயிர்களை நல்வழி நடத்துமவராகையாலே ஸூர்யனென்றும, அனைவரையும் ஆபத்திலிருந்து ரக்ஷிப்பவராகையாலே ப்ரஜாபதியென்றும சொல்லப்படுகிறார்.

**अग्निर्यमः पतिर्यज्ञः वायुः सोमस्तथाऽमृतः।**
**हिरण्मयः सुपर्णश्च तार्क्ष्यो वेदमयस्त्रयी॥ ७९॥**

**அக்₃நிர் யம: பதிர் யஜ்ஞோ வாயுஸ் ஸோமஸ் தத₂ாऽம்ருத: ।**
**ஹிரண்மயஸ் ஸுபர்ணஶ்ச தார்க்ஷ்யோ வேத₃மயஸ்த்ரயீ ॥ 79.**

அவர்—உயர்க₃திக்கு அழைத்துச்செல்பவராகையாலே அக்₃நியென்றும், பாபம்செய்தவர்களை த₃ண்டி₃ப்பவராகையாலே யமன் என்றும், ரக்ஷிப்பவராகையாலே பதியென்றும், யஜ்ஞங்களால் ஆராதி₄க்கப்படுபவராகையாலே யஜ்ஞரென்றும், எங்கும் நிறைந்தவராகையாலே வாயுவென்றும், மோக்ஷமளிப்பவராகையாலே ஸோமரென்றும், மரணமற்றவராகையாலே அம்ருதரென்றும், பொன்மயமான திருமேனியை உடையவராகையாலே ஹிரண்மயரென்றும், ஸுபர்ணன் என்றும், வேத₃மயன் என்றும், தார்க்ஷ்யன் என்றும் குறிக்கப்படும் க₃ருட₃னுக்கு அந்தர்

யாமியாயிருக்கையாலே அப்பத₃ங்களாலும் குறிக்கப்படு பவர். வேத₃த்திற்கு அந்தர்யாமியாகையாலே 'த்ரயீ' என்றும் சொலலப்படுபவர்.

**ब्रह्मण्यो ब्रह्मवित् ब्रह्मा ब्रह्मणस्पतिरेव च।**
**मित्रः सत्यस्तथा धर्मः शुचिर्वाचस्पतिः कविः॥ ८०॥**

**ப்₃ரஹ்மண்யோ ப்₃ரஹ்மவித் ப்₃ரஹ்மா ப்₃ரஹ்மணஸ்பதிரேவ ச।**
**மித்ரஸ் ஸத்யஸ் தத₂ா த₄ர்மஶ் ஶுசிர் வாசஸ்பதி: கவி:॥ 80.**

ப்₃ராஹ்மணர்களால் பூஜிக்கத்தக்கவராகையாலே ப்₃ரஹ்மண்யரென்றும், வேத₃த்தின் உண்மைப்பொருளை அறிந்தவராகையாலே ப்₃ரஹ்மவித் என்றும், மிகப்பெரியவ ராகையாலே ப்₃ரஹ்மா என்றும், பிரமனுக்கும் ஸ்வாமியாகை யாலே ப்₃ரஹ்மணஸ்பதியென்றும், அனைவரிடமும் ப்ரீதி யுடையவராகையாலே மிதரரென்றும், எப்போதும் ஒருபடி யாயிருப்பவராகையாலே ஸத்யரெனறும், த₄ர்மஸ்வரூபியா யிருப்பவராகையாலே த₄ர்மமென்றும, பரிஶுத்₃த₄ராகை யாலே ஶுசியென்றும், சொற்களால் சொல்லப்படுபவ ராகையாலே வாசஸ்பதியென்றும, அழகாகப் பேசுபவ ராகையாலே கவியென்றும சொல்லப்படுபவர்.

**एवमादीनि नामानि वैदिकानि जगत्पतेः।**
**देवानामपि नामानि विष्णोः श्रीशस्य वै विभोः॥ ८१॥**
**वाचकानि भवन्त्येव तत्र तत्र विवक्षया।**
**नारायणादिनामानि त्वन्येषां कुत्रचित् न तु॥ ८२॥**

**ஏவமாதீ₃நி நாமாநி வைதி₃காநி ஜக₃த்பதே:।**
**தே₃வாநாமபி நாமாநி விஷ்ணோஶ் ஶ்ரீஶஸ்ய வை**
**விபே₄ா:॥ 81.**

**வாசகாநி ப₄வந்த்யேவ தத்ர தத்ர விவக்ஷயா।**
**நாராயணாதி₃நாமாநி த்வந்யேஷாம் குத்ரசிந்ந து॥ 82.**

வேத₃த்தில் பரம்பொருளைக் குறித்துச் சொல்லப்படும இத்தகைய நாமங்களும், தேவர்களைக் குறித்துச் சொல்லப் படும இந்திரன முதலான எல்லா நாமங்களும—ஶ்ரிய:பதி யாய், ஸர்வேஶ்வரனுய், லோகநாத₂னுன விஷ்ணுவின நாமங்களாகவே உள்ளன. அந்தந்த கு₃ணங்களில ஒரு சிறிது அந்தந்த தே₃வர்களிடம் காணப்படுகையால், இந்த்₃ராதி₃ நாமங்கள் அந்தந்த தேவர்களையும குறிக் கின்றன. 'நாராயணன்' முதலான நாமங்களின் பொருள் மற்ற தே₃வர்களுக்கு ஒரு சிறிதும் பொருந்தாதாகையாலே, அவை அவர்களை ஒருபோதும குறிக்கமாட்டா.

**लौकिका वैदिकाः शब्दाः नामान्यस्य भवन्ति वै ।**
**तस्माच्च भगवान् विष्णुः परमात्मा स ईश्वरः ॥ ८३ ॥**

**லௌகிகா வைதி₃காஶ் ஶப்₃த₃ா நாமாந்யஸ்ய ப₄வந்தி வை ।**
**தஸ்மாத்து ப₄க₃வாந் விஷ்ணு: பரமாத்மா ஸ ஈஶ்வர: ॥ 83.**

(உலகில் ஶரீரத்தைச் சொல்லும் ஶப்₃த₃ம் ஆத்மா வையும் குறிப்பதுபோல்,) "தே₃வத₃த்தன்" முதலான ஸம்ஸாரிகளையும், 'கல்' 'கட்டை' முதலான அசேதனங் களையும குறிக்கும் லௌகிகஶப்₃த₃ங்களும், அக்₃னி, இந்த்₃ரன, ஆகாஶம், வாயு முதலான வேத₃ததில உள்ள ஶப்₃த₃ங்களும் அச்சேதனுசேதனங்களுக்கு ஆத்மாவான ஸ்ரீமந் நாராயணனுக்கே திருநாமங்களாயுள்ளன. இப்படி எல்லாச் சொற்களாலும சொல்லப்படுபவனுயிருக்கை யாலும், கல்யாணகு₃ணங்கள் நிறைந்தவனுய், தோ₃ஷங்க ளற்றவனுயிருக்கையாலும,ஸர்வவ்யாபியாயிருக்கையாலும், ஸர்வநியந்தாவாயிருக்கையாலும் அவனே பரமாத்மா ஆகிருன்.

**ஸ்வபர்யாத₂ாத்ம்யஜ்ஞாநம் அவஶ்யம்**

**स्वरूपमीश्वरस्यैवं ज्ञातव्यं मुनिसत्तमाः ।**
**स्वरूपगुण ऐश्वर्यं विज्ञेयं परमात्मनः ॥ ८४ ॥**
**संबन्ध आत्मनो ज्ञेयश्चेश्वरस्य मुनीश्वराः ।**

ஸ்வரூபமீஶ்வரஸ்யைவம் ஜ்ஞாதவ்யம் முநிஸத்தமா: ।
ஸ்வரூபகுணா ஐஶ்வர்யம் விஜ்ஞேயம் பரமாத்மந: ॥ 84.
ஸம்பந்த ஆத்மநோ ஜ்ஞேயஶ்சேஶ்வரஸ்ய முநீஶ்வரா: ।

ருஷிகளே! இவ்வண்ணமாகப் பரமாத்மாவின் ஸ்வரூபத்தையும, அதிலுள்ள குணங்களையும, அவனுடைய பரமாத்மத்தன்மையையும அறியவேண்டும். ஆத்மாவுக்கும் ஈஶ்வரனுககும உள்ள (ஸவஸ்வாமிபாவம முதலான) ஸமபநதமும அறியததககது.

(இந்த ஸம்பந்தத்தைக் காட்டும்)
திருவஷ்டாக்ஷரத்தின் அர்த்தாநுஸந்தானம்

अकारवाच्यस्य विभोरेव शेषस्त्वहं सदा॥८५॥
न चापि मम कर्ताऽस्मि परवानस्म्यतो ह्यहम्।
नित्यं नारायणस्यैव कैङ्कर्यं करवाण्यहम्॥८६॥
मन्त्रार्थं चिन्तयेदेवं प्रातरुत्थाय वैष्णवः।

அகாரவாச்யஸ்ய விபோரேவ ஶேஷஸ்த்வஹம் ஸதா ॥ 85.
ந சாபி மம கர்த்தாऽஸ்மி பரவாநஸ்ம்யதோ ஹ்யஹம் ।
நித்யம் நாராயணஸ்யைவ கைங்கர்யம் கரவாண்யஹம் ॥ 86.
மந்த்ரார்த்தம் சிந்தயேதேவம் ப்ராதருத்தாய வைஷ்ணவ: ।

'அ' என்னும எழுததால் சொலலப்படும் ஸர்வேஶ்வரனை ஸ்ரீமந் நாராயணன் ஒருவனுககே (மகாரப் பொருளான) நான் எப்போதும் அடிமைபபட்டிருப்பவன் (இது ப்ரணவத்தின பொருள்). என ரக்ஷணத்திற்கு நான கடவனல்லன; ஆகையாலே அப்பரமாத்மாவுக்குப் பரதந்த்ரனுகவேயிருப்பவன் (இது நமஶ்ஶப்தப் பொருள்). எனக்கு ப்ராப்யப்ராபகங்களாயிருக்கையாலே நாராயணன எனப்படும் அவனுக்கே நான கைங்கர்யம செய்யக் கடவேன் (இது நாராயணுய ஶப்தார்த்தம). திருமந்திரத்தின் இப்பொருளை ஸ்ரீ வைஷ்ணவன் காலையில் துயிலெழுந்ததும அநுஸந்திககவேணும.

பூஜயேத் ஸ்துதிபி₄ர்மாஞ்ச ருக்₃யஜு: ஸாமதஸ்ததா₂ |
ந ச துஷ்யந்தி தே விப்ரா நாஹம் துஷ்யாமி பா₄ரத ! ||
ப்₃ராஹ்மணே பூஜிதே நித்யம் பூஜிதோ஽ஸ்மி ந ஸம்ஶய: |
அதுஷ்டேசாஹமாக்ருஷ்யோ ப₄வாமி ப₄ரதர்ஷப₄! ||
ப்ரமாதி₄க₃திஸ்தேஷாம் பூஜயந்தி ச மாம் ஹி தே |
யத₃ஹம் த்₃விஜரூபேண வஸாமி வஸுதா₄தலே ||
யஸ்தாந் பூஜயதி ப்ராஜ்ஞோ மத்₃க₃தேநாந்தராத்மநா |
தமஹம் ஸ்வேந ரூபேண பஶ்யாமி நரபுங்க₃வ! ||
காணா: குப்₃ஜா வாமநாஶ்ச த₃ரித்₃ரா வ்யாதி₄தாஸ்ததா₂ |
நாவமாந்யா த்₃விஜா: ப்ராஜ்ஞை: மம ரூபா ஹி தே த்₃விஜா: ||
யே தே஽பி ஸாக₃ராந்தாயாம் ப்ருதி₂வ்யாம் த்₃விஜஸத்தமா: |
மம ரூபேஷு தேஷ்வேவமர்ச்சிதேஷ்வர்ச்சிதோ ப₄வே ||
ப₃ஹவஸ்து ந ஜாநந்தி நரா ஜ்ஞாநப₃ஹிஷ்க்ருதா: |
யதா₂ஹம் த்₃விஜரூபேண வஸாமி வஸுதா₄தலே || [4-33...41]

[ப₄ரதகுலத்துதித்தவனே ! ஆயிரம் பா₄ரம் குங்கிலியம் முதலானவற்றை எரித்து என் கோயிலில் சுடர் ஏற்றினாலும், நமஸ்கரித்து, மிக அதி₄கமான பொருள்களை எனக்கு ஸமர்ப்பித்தாலும், ருக்₃ யஜுஸ்ஸாம வேத₃ங்களாலும் துதிகளாலும் ஆராதி₄த்தாலும், அந்தணர்களும் நானும் உகந்துவிடமாட்டோம். எனது ப₄க்தனை அந்தணனைப் பூஜித்தால் நானும் எப்போதும் பூஜிக்கப்பட்டவனாவேன். இதில் ஐயமில்லை. ப₄ரதகுலத் தலைவனே ! அந்தணன் கோபமடைந்தானாகில் நான் கோபம் அடைகிறேன். நான் ப்₃ராஹ்மண ரூபத்திலேயே இந்நிலவுலகில் வாழ்கிறேனாகையாலே, ப்₃ராஹ்மணனை ஆராதி₄ப்பவர்கள் என்னையே ஆராதி₄க்கிறார்கள். அவர்களுக்கு மேலான ப்ராப்யம் கிடைக்கிறது. எந்த அறிவாளி என்னிடம் நெஞ்சு செலுத்தி அந்தணர்களைப் பூஜிக்கிறானோ, அவனை என் ஸ்வரூபமாகவே காண்கிறேன் நான். ஒருகண் பொட்டையர்கள், கூனர்கள், குட்டையர்கள், ஏழைகள், நோயுற்றவர்கள் முதலான குறைபாடுள்ள அந்தணர்களை அறிவாளிகள் அவமதிக்கக் கூடாது. அவ்வந்தணர்கள் என் உருவமாகவே இருப்பவர்களன்றோ. கடல்சூழ்ந்த இவ்வுலகில் என் உருவமாயிருக்கும் இவ்வந்தணர்கள் அர்ச்சிக்கப்பட்டார்களென்றால் நானும் அர்ச்சிக்கப்பட்டவனாகிறேன். அறிவற்றவர்களான பலர் நான் இவ்வுலகில் ப்₃ராஹ்மண ரூபமாகவே வாழ்கிறேன் என்பதை அறிவதில்லை.]

என்று எம்பெருமான் அடியார்களான அந்தணர் பெருமை பேசப் பட்டது. இவ்வத்தியாயத்தின் முடிவில்,

விப்ரப்ரஸாத₃ாத்₃த₄ரணீத₄ரோ ऽஹம்
விப்ரப்ரஸாத₃ாத₃ஸுராந் ஜயாமி।
விப்ரப்ரஸாத₃ாச்ச ஸத₃க்ஷிணோ ऽஹம்
விப்ரப்ரஸாத₃ாத₃ஜிதோ ऽஹமஸ்மி॥ [4-57]

[அந்தணர்களின் அருளாலேயே நான் இவ்வுலகைத் தாங்குகிறேன். அந்தணர்களின் அருளாலேயே நான் இவ்வுலகை ஜயிக்கிறேன். அந்தணர்களின் அருளாலேயே நான் (யாக₃ங்களில்) தக்ஷிணை உடையவனாகிறேன். அந்தணர்களின் அருளாலேயே நான் வெல்லப்படாதவனாயிருக்கிறேன்.] என்று தன் பெருமைகளெல்லாமே தன் ப₄க்தர்களான அந்தணர்களால் ஏற்பட்டது என்று எம்பெருமான் அருளியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. ஆறும் அத்தியாயத்தின் தொடக்கத்தில்,

தே₃வ! தே₃வேஶ! தைத்₃யக்₄ந! ஸதா₃ தே₃வைரபி₄ஷ்டுத!।
ப₄வாந் ப₄வகர: ஶ்ரீமாந் ஸஹஸ்ராதி₃த்ய தேஜஸ:॥
ஸர்வ ஸம்ஹார! ஸர்வஜ்ஞ! ஸர்வத₄ர்ம ப்ரவர்த்தக!। [6-1, 2]

[தே₃வர் தலைவனை; தே₃வனே! அஸுரர்களை அழிப்பவனே! எப்போதும் தே₃வர்களால் துதிக்கப்படுகிறவனே! நீயே ஸம்ஸாரத்தை உண்டு பண்ணுகிறவன். ஶ்ரிய:பதியான நீ ஆயிரம் ஸூர்யர்களுடைய ஒளியை உடையவன். அனைத்தையும் ஸம்ஹரிப்பவனே! எல்லாம் அறிந்தவனே! எல்லா த₄ர்மங்களையும் நிலைநிறுத்துமவனே!] எனும் யுதி₄ஷ்டி₂ர வாக்யத்தில் எம்பெருமான் ஸர்வஜக₃த்காரணன் என்று முழங்கப்பட்டது. அதன் இறுதியில்,

ப்₃ராஹ்மணோ யஸ்து மத்₃ப₄க்தோ மத்₃யாஜீ மத்பராயண:।
மயி ஸந்ந்யஸ்தகர்மா ச ஸ விப்ரஸ்தாரயிஷ்யதி॥
த்₃வாத₃ஶாக்ஷரதத்த்வஜ்ஞ: சாதுர்வர்ண்யவிப₄ாக₃வித்।
அச்சி₂த்₃ர: பஞ்சகாலஜ்ஞ: ஸவிப்ரஸ்தாரயிஷ்யதி॥ [6-181,182]

[எந்த அந்தணன் என் ப₄க்தனாய், என்னையே ஆராதி₄ப்பவனாய், என்னையே பரமப்ராப்யமாகக் கொண்டவனாய், என்னிடம் எல்லாக் கர்மங்களையும் ஸமர்ப்பித்தவனாயிருக்கிறானோ, அந்த அந்தணனே அனைவரையும் கடைத்தேற்றுவான். த்₃வாத₃ஶாக்ஷர மந்த்ரமான வாஸுதே₃வ மந்த்ரத்தின் பொருளை அறிந்தவனும், நாலு வர்ணங்க

ருடைய வேறுபாடுகளை உணர்ந்தவனும், தாழ்வுகளற்றவனும், பஞ்சகால ப்ரக்ரியையை அறிந்தவனுமான அந்தணன் அனைவரையும் கடைத்தேற்றுவான்.] என்று ப₄க₃வத்₃ ப₄க்தர்களின் பெருமை பேசப் பட்டுள்ளதும் குறிக்கொள்ளத்தக்கது.

ப்ராயோபவேஶம் ய: குர்யாத் மத்₃க₃தேநாந்தராத்மநா ।
நமோ ப்₃ரஹ்மண்ய தே₃வாயேத்யுக்த்வா மந்த்ரம் ஸமாஹித: ॥
புந: ஸ்வஸ்தே₂ா ஜிதக்ரோத₄: தஸ்ய புண்யப₂லம் ஶ்ருணு ।
காமக₃: காமரூபீ ச ப₃ாலஸூர்யஸமப்ரப₄: ।
ஸ விமாநேந தி₃வ்யேந யாதி லோகாம்ஸ்து மாமகாந் ॥...
மம லோகேஷு ரமதே யாவதா₃பூ₄தஸம்ப்லவம் ॥
அக்₃நிப்ரவேஶம் யஶ்சாபி குருதே மத்₃க₃தாத்மநா ।
ஸோऽபி யாநேந தி₃வ்யேந மம லோகம் ப்ரபத்₃யதே ॥
தத்ர ஸர்வகு₃ணோபேத: பஶ்யத்யேவ ச மாம் ஸதா₃ ।
த்ரிம்ஶத்கோடிஸமா ராஜந்! மோத₃தே மம ஸந்நிதெ₄ள ॥
ததோऽவதீர்ண: காலேந வேத₃வித் ப்₃ராஹ்மணோ ப₄வேத் ।
காரீஷம் ஸாத₄யேத்₃யஸ்து மாம் ப்ரபந்ந: ஶுசிவ்ரத: ॥
நமோ ப்₃ரஹ்மண்ய தே₃வாயேத்யேதந்மந்த்ர முதீ₃ரயேத் ।
ப₃ாலஸூர்ய ப்ரகாஶேந விமாநேந விராஜதா ॥
மம லோகம் ஸமாஸாத்₃ய பஞ்சகோடீ: ப்ரமோத₃தே ।
மம லோகாவதீர்ணஶ்ச லோகேऽஸ்மிந் க்ஷத்ரியோ ப₄வேத் ॥
[6-113...121]

[எவனொருவன் என்னிடம் நெஞ்சு செலுத்தி, 'ப்₃ராஹ்மணர்களின் தே₂வனுக்கு வணக்கம்' என்னும் மந்திரத்தைச் சொல்லி, ஶமத₂மங்களையுடையவனாய், கோபத்தை வென்றவனாய் ப்ராயோபவேஶம் (உண்ணாநோன்பு) அநுஷ்டிக்கிறானோ, அவனுடைய புண்யப₂லத்தைக் கேட்பாய். எங்கும் செல்பவனாய், விரும்பிய உருவை எடுப்பவனாய், இளஞ்சூரியன்போல் ஒளியுள்ளவனாய், அவன் தி₂வ்யவிமானத்தின் மூலம் எனது உலகங்களை அடைகிறான்....ப்ரளயகாலம் வரையில் எனது உலகங்களில் ரமிக்கிறான். என்னிடம் நெஞ்சுசெலுத்தி எவனொருவன் அக்₃நி ப்ரவேஶம் செய்கிறானோ, அவனும் தி₂வ்யவிமானத்தில் ஏறி என் உலகை அடைகிறான். அங்கு எல்லா நற்குணங்களையும் உடையவனாய் என்னை எப்போதும் காண்கிறான். முப்பதுகோடி வருஷம் என்னோடு இன்புற்று, மறுபடியும் வேத₂மறிந்த அந்தணனாகப் பிறக்கிறான்.

பரிஶுத்₃த₄மான வ்ரதத்தையுடையவனும், என்னை ஶரணமடைந்தவனுமாய் எவனொருவன் 'காரீஷம்' எனும் கர்மத்தை அநுஷ்டி₂க்கிறானோ அவன் 'ப்₃ராஹ்மணர்களின் தே₃வனுக்கு வணக்கம்' என்னும் மந்திரத்தைச் சொல்லவேண்டும். அவன் பா₃லஸூர்யன்போல் ஒளிவீசும் விமானத்தில் ஏறி, இவ்வுலகிலுள்ள என்னுடைய கார்ய வைகுண்ட₂த்தை அடைந்து, ஐந்துகோடி வருஷங்கள் ஆனந்த₂மடைகிறான். அதற்குப் பின் என்னுலகத்தில் இருந்து கீழிறங்கி இந்த பூ₄மண்ட₃லத்தில் க்ஷத்ரியனாக ஆகிறான்.] என்று ஏழாம் அத்தியாயத்தில் காணப்படும் ஶ்லோகங்களிலிருந்து அந்தணர்க்குரிய தெய்வம் எம்பெருமானே என்று விளங்குகிறது. தாழ்ந்த ப₂லன்களை விரும்பித் தாழ்ந்த கர்மங்களைச் செய்பவர்களும் 'நமோ ப்₃ரஹ்மண்ய தே₃வாய' என்று அந்தணர்க்குரிய தெய்வம் எம்பெருமானே என்று உறுதிப்படுத்தும் மந்திரத்தை அநுஸந்தி₄த்தால், அவர்கள் நீண்டகாலம் ப்ரக்ருதி மண்ட₃லத்துக்குள் இருக்கும் விஷ்ணுலோகங்களில் ஆனந்த₂ானுப₄வத்தைப் பெறுகிறார்கள். அதற்குப்பின் அவர்களை இவ்வுலகத்தில் தன்னையே விரும்பும் பிறவிகளை எடுக்கச்செய்கிறான் எம்பெருமான்— என்பது இந்த ஶ்லோகங்களின் ஸாரம்.

எட்டாம் அத்தியாயத்தில்,

ஸவ்யாஹ்ருதிகாம் ஸப்ரணவாம் ஸாவித்ரீம் வா ததோ ஜபேத் ।
ஆஶ்வாஸமோக்ஷாத் ப்ரணவம் ஜபேத்₃வா மாமநுஸ்மரந் ॥
ருக்பாத₃ம் வா ஜபேந்மந்த்ரம் அஷ்டாக்ஷரமத₂ாபி வா ।
[8-38,39]

[அந்த அக₄மர்ஷண ஜபத்துக்குப்பின் மூச்சை வெளிவிடுவதற்குமுன் ப்ரணவத்தோடும், வ்யாஹ்ருதிகளோடுங்கூடிய கா₃யத்ரீ மந்த்ரத்தை ஜபிக்கவேண்டும். என்னை நினைத்துக்கொண்டு ப்ரணவத்தையாவது ஒரு ருக்கின் பாத₃த்தையாவது அஷ்டாக்ஷர மந்த்ரத்தையாவது ஜபிக்கவேண்டும்.] என்று ப்ரணவத்துக்கும் அதன் விவரணமான திருவஷ்டாக்ஷரத்துக்கும் பொருளாயிருப்பவன் தானே என்று காட்டினான் கண்ணன்.

ததஸ்த்வஷ்டாக்ஷராதீ₃நி த்ரி: க்ருத்வா பரிவர்த்தயேத் ॥
ப்ரத₃க்ஷிணம் பராம்ருஜ்ய முத்₃ராயா: ஸ்வமுக₂ம் தத₂ா ।
ஊர்த்₄வபா₃ஹுஸ்ததோ பூ₄த்வா ஸூர்யமீக்ஷந் ஸமாஹித:
தந்மண்ட₃லஸ்த₂ம் மாம் த்₄யாயேத் ததோ மூர்த்திஞ்சதுர்பு₄ஜம் ।
[8-48,49,50]

[அதற்குப்பின் அஷ்டாக்ஷரம் முதலானவற்றை மூன்று முறை ஜபிக்க வேண்டும். அஞ்ஜலிமுத்₃ரையோடு தன்னைத்தானே ப்ரத₃க்ஷிணம் செய்து. கைதூக்கிநின்றவனாய், மனஶாந்தியுடன் ஸூர்யனைப் பார்த்துக்கொண்டு, நான்கு கரங்களையுடையவனாய், ஸூர்யமண்ட₃லத்தில் இருக்கும் என்னை த்₄யானிக்கவேண்டியது] என்று அஷ்டாக்ஷரத்தின் பொருளான் தானே ஸூர்யமண்ட₃லத்தின் நடுவிலிருக்கும் பரமாத்மா என்றும் காட்டினான்.

கத₂ம் த்வமர்ச்சநீயோऽஸி மூர்த்தய: கீத்₃ருஶாஸ்து தே।
வைக₂ாநஸா: கத₂ம் ப்₃ரூயு: கத₂ம் வா பாஞ்சராத்ரிகா: ॥ [8-85]

[உன்னை அர்ச்சிக்கவேண்டிய முறை என்ன? உன்னுடைய மூர்த்திகள் யாவர்? இவ்விஷயங்களைப்பற்றி வைக₂ாநஸர்களும், பாஞ்சராத்ரிகளும் என்ன கூறுகிறார்கள்?] என்று யுதி₄ஷ்டி₂ரர் கேட்க,

ஶ்ருணு பாண்ட₃வ! தத்ஸர்வம் அர்ச்சநாக்ரமம் உத்தமம்।
ஸ்த₂ண்டி₃லே பத்₃மகம் க்ருத்வா சாஷ்டபத்ரம் ஸ்வகம் ஹிதம்॥
அஷ்டாக்ஷரவித₄ாநேநாப்யத₂வா த்₃வாத₃ஶாக்ஷரை:।
வைதி₃கைரத₂வா மந்த்ரை: மம ஸூக்தேந வா புந:॥
ஸ்த₂ாபிதம் மாம் தத: தஸ்மிந்நுத்₃த₄ீத விசக்ஷண:।
பூருஷஞ்ச தத: ஸூக்தமச்யுதஞ்ச யுதி₄ஷ்டி₂ர!॥
அநிருத்₃த₄ஞ்ச மாம் ப்ராஹு: வைக₂ாநஸவிதே₃ா ஜநா:।
அந்யே த்வேவம் விஜாநந்தி மாம் ராஜந்! பாஞ்சராத்ரிகா:॥
வாஸுதே₃வஞ்ச ராஜேந்த்₃ர! ஸங்கர்ஷணம் அத₂ாபி வா।
ப்ரத்₃யும்நஞ்சாऽநிருத்₃த₄ஞ்ச சதுர்மூர்த்திம் ப்ரசக்ஷதே॥
ஏதாந்யந்யாநி ராஜேந்த்₃ர! ஸம்ஜ்ஞாபே₄தே₃ந மூர்த்தய:।
வித்₃த்₄யநர்த்த₂ாந்தராயைவ மாமேவஞ்சார்ச்சயேத்₃பு₃த₄:॥
[8-86...91]

[பாண்டு₃புத்ரனே! மிகச் சிறந்த என்னுடைய அர்ச்சனைமுறையைக் கேட்பாயாக. எட்டு இதழ்களையுடைய தாமரையை, தன் ஹிதத்தின் பொருட்டுத் தரையில் எழுதி, அஷ்டாக்ஷர விதி₄ப்படியோ, த்₃வாத₃ஶாக்ஷர விதி₄ப்படியோ, வைதி₃க மந்த்ரங்களைக்கொண்டோ, புருஷ ஸூக்தத்தைக் கொண்டோ அத்தாமரையில் ப்ரதிஷ்டை₂ செய்யப் பட்ட என்னை அறிவாளியாயிருப்பவன் அர்ச்சனை செய்யவேண்டும். புருஷஸூக்தத்தையும் ஓதவேண்டும். யுதி₄ஷ்டி₂ரனே! வைக₂ாநஸாக₃மம் அறிந்தவர்கள் என்னை அச்யுதன் என்றும் அநிருத்₃த₄ன்

என்றும் திருநாமங்களையிட்டு ஆராதி₄க்கிறுர்கள். பாஞ்சராத்ரமாகிற மற்ெறாரு ஆக₃மத்தைச் சேர்ந்தவர்கள் வாஸுதே₃வன், ஸங்கர்ஷணன், ப்ரத்₃யும்நன், அநிருத்₃த₄ன் என்னும் நாலு வ்யூஹமூர்த்திகளையுடைய என்னை ஆராதி₄க்கிறுர்கள். இவர்கள் அனைவரும் ஆராதி₄க்கும் மூர்த்திகளும், மற்றும் பல திருநாமங்களையுடைய மூர்த்திகளும் பல திருநாம வேறுபாடுகளிருந்தபோதிலும் ஸ்வயம் ப்ரயோஜனமாக ஆராதி₄க்கத்தக்கவை என அறிவாய். அறிவாளியாயிருப்பவன் என்னை இப்படி அர்ச்சனை செய்யவேண்டும்.] என்று எம்பெருமான் பாஞ்சராத்ர வைக₂ாநஸ ரீதியில் அர்ச்சனை முறைகளைச் சுருக்கமாகக் கூறினுன். அதற்குமேல்,

த்வத்₃ப₄க்தா: கீத்₃ருஶா தே₃வ! காநி வ்ருத்தாநி தந்ந்ருணும் ।
ஏதத் கத₂ய தே₃வேஶ! த்வத்₃ப₄க்தஸ்ய மமாச்யுத! ॥ [8-92]

[அச்யுதனே! உனது ப₄க்தர்கள் எத்தகையவர்கள்? அவர்களுடைய ஒழுக்கங்கள் எவை? தே₃வர்தலைவனே! இதை உன் ப₄க்தனான எனக்குச் சொல்லவேண்டும்.] என்று மறுபடியும் த₄ர்மபுத்ரன் கேட்க,

அநந்யதே₃வதாப₄க்த்யா யே மத்₃ப₄க்தஜநப்ரியா: ।
மாமேவ ஶரணம் ப்ராப்தா மத்₃ப₄க்தாஸ்தே ப்ரகீர்த்திதா: ॥ [8-93]

[எவர்கள் மற்ற தெய்வங்களிடம் ப₄க்தியற்றவர்களோ, என்னையே ப்ராப்ய ப்ராபகங்களாகக் கொண்டவர்களோ, என் அடியார்களுக்கு இனியவர்களோ அவர்களே என் ப₄க்தர்களாகச் சொல்லப்படுகிறுர்கள்.] என்று தொடங்கி, மறந்தும் புறந்தொழாதவர்களாய், தன்னடியார்க்கு இனியவர்களாய், தன்னையே எல்லாமாகக்கொண்டவர்களாயிருப்பவர்களே தன் ப₄க்தர்கள் என்று நிர்ணயித்து, அவர்களுடைய ஒழுக்கங்களை விரிவாகக் காட்டுகிறுன்.

ஸாத்விகா ராஜஸாஶ்சாபி தாமஸாஶ்சாபி பாண்ட₃வ! ॥
மாமர்ச்சயந்தி மத்₃ப₄க்தா: தேஷாமீத்₃ருக்₃வித₄ா க₃தி: ।
திர்யங்மாநுஷ தே₃ஹேஷு தாமஸா பு₄ஞ்ஜதே ப₂லம் ॥
நாகயஜ்ஞக்₃ருஹஸ்த₂ாநே ராஜஸா பு₄ஞ்ஜதே ப₂லம் ।
ஸாத்விகா: ஸத்வஸம்பந்நா மத்பத₃ம் யாந்தி மாநவா: ॥ [8-100...102]

[பாண்டு₃புத்ரனே! ஸாத்விகர்கள், ராஜஸர்கள், தாமஸர்கள் என்று மூன்றுவகைப்பட்ட ப₄க்தர்கள் என்னை ஆராதி₄க்கிறுர்கள். அவர்க

ளடையும் ப₂லன்கள் பின்வருமாறு:- தாமஸ ப₄க்தர்கள் திர்யக்காக வும், மனிதர்களாகவும் பிறப்பெடுத்துப் ப₂லனை அநுப₄விக்கிறார்கள்; யாக₃ங்களைச் செய்து அடையும் ஸ்வர்க்க₃த்தில் ராஜஸ ப₄க்தர்கள் ப₂லனை அநுப₄விக்கிறார்கள். ஸத்வகு₃ணம் நிறைந்த ஸாத்விக ப₄க்தர்களே என்னுடைய பரமபத₃த்தை அடைகிறார்கள்] என்று முற்கூறிய மறந்தும் புறந்தொழாமையுடைய ஸாத்விக ப₄க்தர்களே பரமபத₃மாகிற மோக்ஷத்தையடைகிறார்கள்; ராஜஸப₄க்தர்கள் தாழ்ந்த ப₂லன்களையும், தாமஸப₄க்தர்கள் மிகத் தாழ்ந்த ப₂லன்க ளையும் அடைகிறார்கள் என்று காட்டினான்.

ப்ராணாயாமம் து யத்காலே யேந மாஞ்சாபி சிந்தயேத் ।
தத்காலம் வை த்₃விஜோ ஜ்ஞேய: ஶேஷகாலமதோ₂ரித: ॥
தஸ்மாத்து ஸாத்விகோ பூ₄த்வா ஶுசி: க்ரோத₄விவர்ஜித: ।
மாமர்ச்சயேத்₃ய: ஸததம் மத்ப்ரியத்வம் ய இச்ச₂தி ॥ [8-114,115]

[எவ்வளவு காலம் வரையில் ப்ராணாயாமம் செய்கிறானோ, அதைச் செய்யும்போது என்னையும் நினைக்கிறானோ அவ்வளவு காலம் வரை யிலேயே இருபிறப்பாளன் அந்தணனாக எண்ணப்படுகிறான். இவை யில்லாத காலத்தில் முற்கூறியபடி அவன் அந்தணன் அல்லன். ஆகையால் எவனொருவன் எனக்கு இனியவனாக விரும்புகிறானோ, அவன் ஸாத்விகனாயிருந்து, பரிஶுத்₃த₄னாய். கோபமற்றவனாய் என்னை எப்போதும் ஆராதி₄க்கக்கடவன்.] என்று தன்னை ஆரா தி₄க்கும் த்₃விஜனுக்கே ப்₃ராஹ்மணத்வம் ஸித்₃தி₄க்கும் என்று அந்வய வ்யதிரேகங்களாலே காட்டினான். இனி, கபிலாத₃ாநத்தைப் புகழும் ஒன்பதாம் அத்தியாயத்திலும், கபிலை எனப்படும் காராம் பசுவைப் புகழும் பத்தாம் அத்தியாயத்திலும், ப்₃ரஹ்மஹத்தி செய்தவனை விளக்கும் பதினோராம் அத்தியாயத்திலும், த₄ர்ம ஶௌசவிதி₄யை விளக்கும் பனிரண்டாம் அத்தியாயத்திலும், போ₄ஜன விதி₄யை விளக்கும் பதின்மூன்றாம் அத்தியாயத்திலும் பரம்பொருளைப் பற்றிய பேச்சில்லையாகையால் அவற்றைவிட்டு ஆபத்₃த₄ர்மத்தை விவரிக்கும் பதினாலாம் அத்தியாயத்திற்குச் செல்வோம். இப்பதி னாலாம் அத்தியாயத்தில்,

மத்₃ப₄க்தா யே த்₃விஜஶ்ரேஷ்டா₂ மத்₃க₃தா மத்பராயணா: ।
தாந் பங்க்திபாவநாந் வித்₃தி₄ பூஜ்யாஶ்சைவ விஶேஷத: ॥
[14-14]

[எந்த அந்தணர்தலைவர்கள் எனக்கு ப₄க்தர்களாய், என்னிடம் ஈடுபட்டவர்களாய், என்னையே மேலான ப்ராப்ய ப்ராபகங்களாகக் கொண்டவர்களாயிருக்கிறார்களோ, அவர்கள் தாங்கள் உண்ணும் பங்க்தியையே (வரிசையையே) பரிஶுத்₃த₄ப்படுத்தும் பங்க்திபாவநர்கள் என்று அறிவாய். அவர்கள் விஶேஷமாக ஆராதி₄க்கத்தக்கவர்கள்.] என்று தன்னுடைய ப₄க்தர்களைப் பங்க்தி பாவநர்களாகக் கூறுவதன் மூலம் தானே பரமபொருள் என்று காட்டினான். அடுத்தபடி த₄ர்ம ஸாரஸமுச்சயத்தைப்பற்றி,

நாராயண! புராணேஶ! யோகா₃வாஸ! நமோऽஸ்து தே।
ஶ்ரோதுமிச்ச₂ாமி கார்த்ஸ்ந்யேந த₄ர்மஸாரஸமுச்சயம்॥ [14-35]

[நாராயணனே! பழம்பெரும் தலைவனே! யோக₃ங்களில் காட்சியளிப்பவனே! உனக்கு வணக்கம். உன்னிடமிருந்து த₄ர்மஸார ஸமுச்சயத்தை முழுவதும் கேட்க விரும்புகிறேன்.] என்று த₄ர்ம புத்ரன் வினவும்போது பயன்படுத்தியிருக்கும் விளிச்சொற்கள் நாராயணனே பரம்பொருள் என்று காட்டுகின்றன. த₄ர்மமஹிமையை வர்ணிக்கும் பதினைந்தாம் அத்தியாயத்தில்,

ப்₃ரஹ்மா ஏவ கா₃ர்ஹபத்யோऽக்₃நி: தஸ்மாத்₃தே₃வோ ஹி வா ப₄வேத்।
த₃க்ஷிணாக்₃நி: ஸ்வயம் ருத்₃ர: க்ரோத₄ாத்மா சண்ட₃ ஏவ ஸ:॥
அஹமாஹவநீயோऽக்₃நி: அந்தரிக்ஷஞ்ச த₃க்ஷிண:। [15-32, 33]

என்று ப்₃ரஹ்மாவை கா₃ர்ஹபத்யாக்₃நியாகவும், தன்னை ஆஹவநீயாக்₃நியாகவும், ருத்₃ரனை த₃க்ஷிணாக்₃நியாகவும் சொல்லுமிடத்தில். "க்ரோத₄ாத்மா சண்ட₃ ஏவ ஸ:" [கோபமே வடிவெடுத்தவனாய் க்ரூரமாயிருப்பவன் அவன்] என்று ருத்₃ரனின் தனித் தன்மையைக் காட்டியிருக்கையால் அவன் உயிரையெல்லாம் தாயாகத் தண்ணளி செய்து கடாக்ஷித்துக் காக்கின்ற பரம்பொருளாயிருக்க முடியாதென்று விளங்குகிறது. அடுத்ததான சாந்த்₃ராயணவிதி₄யை வர்ணிக்கும் பதினாறும் அத்தியாயத்தின் தொடக்கத்தில்,

சக்ராயுத₄! நமஸ்தேऽஸ்து தே₃வேஶ! க₃ருட₃த்₄வஜ!।
சாந்த்₃ராயணவிதி₄ம் புண்யமாக்₂யாஹி ப₄க₃வந் மம॥ [16-1]

[சக்கரக்கையனே! தே₃வர்தலைவனே! க₃ருட₃க் கொடியானே! ப₄க₃வானே! உனக்கு வணக்கம். எனக்குப் புண்ணியமான சாந்த்₃ராயண விதி₄யைச் சொல்லுவாய்.] என்று யுதி₄ஷ்டி₂ரன் கேட்கும்

போது சக்கரமேந்திய க₃ருட₃க்கொடியானே தேவர் தலைவன் என்று நிலைநாட்டினன். கண்ணன் பதிலுரைக்குமிடத்திலும்,

ஸத்யாய விஷ்ணவே சேதி ப்₃ரஹ்மர்ஷிப்₄யோऽத₂ ப்₃ரஹ்மணே। [16-8]

என்று விஷ்ணுவுக்கும், ப்₃ரஹ்மரிஷிகளுக்கும், ப்₃ரஹ்ம எனப்படும் வேத₃த்திற்கும், மற்றும் சிலருக்கும் ஹோமத்தை விதி₄க்குமிடத்தில் விஷ்ணுவை 'ஸத்ய' ஶப்₃த₃த்தால் விஶேஷித்திருப்பதால், உபநிஷத்துக்களில் 'ஸத்யம் ஜ்ஞாநம் அநந்தம் ப்₃ரஹ்ம' [தை-ஆந 1] என்று ஸத்ய ஶப்₃த₃த்தால் ஓதப்படும் பரம்பொருள் விஷ்ணுவே என்று காட்டப்பட்டது. அடுத்து ஒவ்வொரு மாஸத்திலும் த₄ர்ம க்ருத்யங்களை வர்ணிக்கும் பதினேழாம் அத்தியாயத்தில்,

ஸர்வபூ₄தஹிதே ஶ்ரீமந்! ஸர்வபூ₄தநமஸ்க்ருத!।
ஸர்வபூ₄தஹிதம் த₄ர்மம் ஸர்வஜ்ஞ! கத₂யஸ்வ மே ॥ [17-2]

[எல்லா ஜீவராஶிகளுக்கும் நன்மையை விரும்பும் ஶ்ரீமந்நாராயண! எல்லா ஜீவராஶிகளாலும் நமஸ்கரிக்கப்படுபவனே !. எல்லாமறிந்தவனே ! எல்லா உயிர்களுக்கும் நன்மையான த₄ர்மங்களை எனக்குக் கூறுவாய்] என்று யுதி₄ஷ்டி₂ரன் அனைத்துயிர்களாலும் வணங்கப்படுபவனாகவும், அனைத்துயிர்களுக்கும் நன்மையைச் செய்பவனாகவும் அழைக்கையாலே கண்ணனே பரம்பொருள் என்று விளங்குகிறது. அடுத்தபடி கார்த்திகை மாஸத்தில் ஒரேவேளை உண்ணும் ஏகபு₄க்த வ்ரதத்தை விவரிக்கும்போது,

ஜலபாநம் பிபே₃ந் மாஸோ நாந்தரா போ₄ஜநாத் பரம் ।
ஆதி₃த்யரூபம் மாம் வாபி நித்யமத்₄யே ஸமாஹித: ॥ [17-6]

[மாதம் முழுவதும் போ₄ஜனங்களின் இடையில் நீர் பருகக்கூடாது. உணவுண்ட பிறகு ஆதி₃த்யரூபனாய், எப்போதும் ஸூர்யனின் நடுவில் எழுந்தருளியிருக்கும் என்னை ஶாந்தியுடன் சிந்திக்கவேண்டும்] என்று கூறியிருப்பதிலிருந்து ஆதி₃த்யனுக்கு நடுவிலிருக்கும் பரம்பொருள் கண்ணனே என்று விளங்குகிறது. இனி. ஏகபு₄க்த வ்ரதத்தின் புண்ய ப₂லத்தை விவரிக்கும் பதினெட்டாம் அத்தியாயத்தில்,

அர்ச்சத்யேவ து மாம் நித்யம் மத்₃க₃தேநாந்தராத்மநா ॥
ஸந்த்₄யயோஸ்து ஜபேந்நித்யம் மத்₃கா₃யத்ரீம் ஸமாஹித: ।
நமோ ப்₃ரஹ்மண்ய தே₃வாயேத்யஸக்ருந்மாம் ப்ரணம்ய ச ॥

விப்ரமக்₃ராஸநே க்ருத்வா பாகஜம் பை₄க்ஷமேவ வா ।
பூ₄த்வா து வாக்₃யதோ பு₄க்த்வா வாசம்யாஸ்ய த்₃விஜந்மந: ॥
நமோऽஸ்து வாஸுதே₃வாயேத்யுக்த்வா து சரணம் ஸ்ப்ருஶேத் ॥
[18-4...7]

[எப்போதும் என்னை நினைத்துக்கொண்டு ஏகபு₄க்த வ்ரதத்தை அநுஷ்டி₂ப்பவன் என்னை ஆராதி₄ப்பவனேயாவான். அவன் காலை மாலை வேளைகளில் ஶாந்தியுடன் தினமும் எனது கா₃யத்ரியை ஜபிக்க வேண்டும். என்னை வணங்கி, 'ப்₃ராஹ்மண்ய தே₃வனுக்கு வணக்கம்' என்று பலமுறை அநுஸந்தி₄த்து அந்தணனை அக்₃ராஸனத்தில் இருத்தி. சமைத்த அல்லது பி₄க்ஷையெடுத்த உணவை மௌனத்தோடு உண்டு, ஆசமனம் செய்து, 'வாஸுதே₃வனுக்கு வணக்கம்' என்று கூறி அந்த அந்தணனின் திருவடிகளில் வணங்க வேண்டும்] என்று கூறியிருப்பதிலிருந்து, ப்₃ராஹ்மண ஸ்வரூபியாய் இருப்பவன் வாஸுதே₃வனே என்றும், ப்₃ரஹ்மண்ய தே₃வன் அவனே என்றும் விளங்குகிறது. இப்போதும் ஸ்மார்த்த ப்₃ராஹ்மணர்கள் ஒருவரையொருவர் விளிக்கும்போது 'ஹரன்' முதலான தே₃வதாந்தர ஶப்₃த₃ங்களாலே விளிக்காமல் 'ஹரி' ஶப்₃த₃த்தாலேயே விளிப்பதும் இத்தகைய த₄ர்ம ஶாஸ்த்ர வசனங்களை ஆதா₄ரமாகக் கொண்டதேயாகும். ஆக, ப்₃ராஹ்மண ஸ்வரூபியாய், அந்தணர் மாட்டு அருந்தெய்வமாயிருப்பவன் ஹரியைத் தவிர வேறு எவரும் இல்லை என்றதாயிற்று. இவ்வத்தியாயத்தின் இடையில்,

யஜ்ஞாத்மந்! யஜ்ஞஸம்பூ₄த! யஜ்ஞநாத₂! நமோ நம: ।
சதுர்மூர்த்தே! சதுர்பா₃ஹோ! சதுர்வ்யூஹ! நமோ நம: ॥
லோகாத்மந்! லோகநாதே₂ஶ! லோகவாஸ! நமோ நம: ।
ஸர்வஜ்ஞ! ஸர்வலோகேஶ! ஹ்ருஷீகேஶ! நமோ நம: ॥
ஸஹஸ்ரஶிரஸே துப்₄யம் ஸஹஸ்ராக்ஷ! நமோ நம: ।
பஞ்சயஜ்ஞ! நமஸ்தேऽஸ்து ஸர்வயஜ்ஞ! நமோ நம: ॥
த்ரயீமய! த்ரயீநாத₂! த்ரயீலப்₄ய! நமோ நம: ।
ஸ்ருஷ்டிஸம்ஹாரகர்த்தேதி நாரஸிம்ஹ! நமோ நம: ॥
ப₄க்தப்ரிய! நமஸ்தேऽஸ்து ஸோமநாத₂! நமோ நம: ।
ஹயவக்த்ர! நமஸ்தேऽஸ்து சக்ரபாணே! நமோ நம: ॥
பஞ்சபூ₄த! நமஸ்தேऽஸ்து பஞ்சாயுத₄! நமோ நம: ॥ [18-36...41]

[யஜ்ஞஸ்வரூபியே! யஜ்ஞத்தின் பயனே! யஜ்ஞநாத₂னே! உனக்கு வணக்கம். ப்₃ரஹ்மவிஷ்ணுருத்₃ரேந்த்₃ரர்களாகிற நாலு மூர்த்தி

களினுள்ளும் இருப்பவனே! நான்கு திருக்கைகளை உடையவனே! நான்கு வ்யூஹங்களை உடையவனே! உனக்கு வணக்கம். உலகனைத்துக்கும் ஆத்மாவே! லோகநாத₂ர்களுக்கெல்லாம் ஈஶனே! உலகனைத்தும் தன்னிடம் வஶிக்கப்பெற்றவனே! உனக்கு வணக்கம். எல்லாமறிந்தவனே! எல்லா உலகுக்கும் ஈசனே! இந்த்₃ரியங்களுக்கு ஈசனே! உனக்கு வணக்கம். ஆயிரம் தலைகளையும், ஆயிரம் கண்களையுமுடைய உனக்கு வணக்கம். பஞ்சமஹாயஜ்ஞஸ்வரூபியாய், ஸர்வயஜ்ஞஸ்வரூபியாய் இருக்கும் உனக்கு வணக்கம். வேத₃மயனாய், வேத₃நாத₂னாய், வேத₃த்தில் காணப்படும உனக்கு வணக்கம். ஸ்ருஷ்டி ஸம்ஹாரங்களைச் செய்யும் நரஸிம்ஹனான உனக்கு வணக்கம். அடியார்க்கு இனியவனே! உமையோடு கூடிய சிவனுக்கு (அல்லது ஸோமனாகிற சந்த்₃ரனுக்கு) நாத₂னே! உனக்கு வணக்கம். ஹயக்₃ரீவனே! சக்ரபாணியே! உனக்கு வணக்கம். பஞ்சபூ₄தஸ்வரூபியாய், பஞ்சாயுத₄த்தை உடைய உன்க்கு வணக்கம்.] என்று யுதி₄ஷ்டி₂ரன் பரம்பொருளுக்கேயுரிய பல பல பெருமைகளைச் சொல்லிக் கண்ணனை அழைக்கிறான்.

ஏகாத₃ஶ்யாம் உபோஷ்யாத₂ த்₃வாத₃ஶ்யாமர்ச்சயேத்து மாம் |
விப்ராநபி யதா₂லாப₄ம் போ₄ஜயேத்₃ப₄க்திமாந்நர: ||
ஸ க₃ச்சே₂த் த₃க்ஷிணாமூர்த்திர்மாஞ்ச நாத்ர விசாரணா |
[18-48, 49]

[ஏகாத₃ஶியில் உபவாஸமிருந்து, த்₃வாத₃ஶியன்று என்னை ஆராதி₄த்துக் கிடைத்தவரையில் அந்தணர்களுக்கு ப₄க்தியோடு கூடியவனாய் அமுது செய்விக்கவேண்டும். த₃க்ஷிணையும் அளிக்கவேண்டும். த₃க்ஷிணையை வடிவாகக் கொண்ட அவன் என்னையே அடைவான் என்பதில் ஐயமில்லை.] என்று ஏகாத₃ஶீவ்ரதாநுஷ்டா₂னத்தினால் எம்பெருமானை அடையலாம் என்றும் காட்டப்பட்டது. அடுத்து, தா₃னப₂லத்தை வர்ணிக்கும் பத்தொன்பதாம் அத்தியாயத்தில்,

ப₄க₃வம்ஸ்தவ கா₃யத்ரீ ஜப்யதே து கத₂ம் ந்ருபி₄: |
கிம் வா தஸ்யா: ப₂லம் தே₃வ! மமாசக்ஷ்வ ஸிதாம்ப₃ர! ||[19-24]

[ப₄க₃வானே! பீதாம்ப₃ரம் த₄ரித்த தே₃வனே! உனது கா₃யத்ரியை எப்படி ஜபிக்கவேண்டும். அதன் ப₂லம் என்ன என்பதைக் கூறுவாய்] என்று கேட்டான் யுதி₄ஷ்டி₂ரன்.

த்₃வாத₃ஶ்யாம் விஷுவே சைவ சந்த்₃ரஸூர்ய க்₃ரஹே தத₂ா।
அயநே ஶ்ரவணே சைவ வ்யதீபாதே ததை₂வ ச।
அஶ்வத்த₂ த₃ர்ஶநே சைவ தத₂ா மத்₃த₃ர்ஶநேऽபி ச ॥
ஜபேத் து மம கா₃யத்ரீமத₂வாஷ்டாக்ஷரம் ந்ருப!।
ஆஜந்ம து₃ஷ்க்ருதம் தஸ்ய நாஶயேந்நாத்ர ஸம்ஶய: ॥
[19-25,26]

[த்₃வாத₃ஶியிலும், சித்திரை, ஐப்பசி மாதப்பிறப்புகளாகிற விஷு புண்யகாலத்திலும், சந்த்₃ரஸூர்ய க்₃ரஹணங்களிலும், த₃க்ஷிணாயன உத்தராயணங்களிலும், ஶ்ரவணத்திலும், வ்யதீபாதத்திலும், அரசமரத்தைப் பார்க்கும்போதும், என்னைப் பார்க்கும்போதும், என்னுடைய (விஷ்ணு) கா₃யத்ரியையாவது, அஷ்டாக்ஷரத்தையாவது ஜபிக்கவேண்டும். அரசனே! இப்படி ஜபிப்பது — பிறந்தது முதல் இவன் செய்த பாபங்களை அழித்துவிடும் என்பதில் ஐயமில்லை.] என்று கண்ணன் பதிலுரைத்தான். இதைச் செவியுற்ற யுதி₄ஷ்டி₂ரன்,

அஶ்வத்த₂த₃ர்ஶநம் தே₃வ! கிம் த்வத்₃த₃ர்ஶநஸந்நிப₄ம்।
ஏதத் கத₂ய தே₃வேஶ! பரம் கௌதூஹலம் ஹி மே ॥ [19-27]

[தே₃வனே! அரசமரத்தைப் பார்ப்பது உன்னைக் காண்பதையொக்கும் என்பது எப்படி? தே₃வர்தலைவனே! எனக்கு மிகவும் ஆர்வமாயிருப்பதால் இதை எனக்குச் சொல்லவேணும்] என்று கேட்க,

அஹமஶ்வத்த₂ரூபேண பாலயாமி ஜக₃த்த்ரயம்।
அஶ்வத்தே₂ா ந ஸ்தி₂தோ யத்ர நாஹம் தத்ர ப்ரதிஷ்டி₂த: ॥
யத்ராஹம் ந ஸ்தி₂தோ ராஜந்! அஶ்வத்த₃ஶ்சாபி தத்ர ந।
யஸ்த்வேநம் அர்ச்சயேத் ப₄க்த்யா மாம் ஸ ஸாக்ஷாத் ஸமர்ச்சதி ॥
யஸ்த்வேநம் ப்ரஹரேத் கோபாந்மாமேவ ப்ரஹரேத்து ஸ:।
தஸ்மாத் ப்ரத₃க்ஷிணம் குர்யாத் அபி₄வாதே₃ந ப்ரத்யஹம் ॥
கா₃வோ விப்ரா: தத₂ாஶ்வத்தே₂ா மம ரூபம் யுதி₄ஷ்டி₂ர!।
ஏதத்த்ரயம் ஹி மத்₃ப₄க்தோ நாவமந்யேத கர்ஹிசித் ॥
அவமாநிதம் சேத்து ஹந்யாத்₃த₃ஹத்யாஸப்தமம் குலம்।
அஶ்வத்தே₂ா ப்₃ராஹ்மணோ கா₃வோ மந்மயாஸ்தாரயந்தி ஹி।
தஸ்மாதே₃தத் ப்ரயத்நேந ராஜந்! பூஜிதும் அர்ஹஸி ॥
[19-28...32]

[நான் அரசமரத்தின் உருவத்திலிருந்துகொண்டு மூவுலகத்தையும் ரக்ஷிக்கிறேன். அரசமரம் எங்கு இல்லையோ அங்கு நானும் இருக்க மாட்டேன். நான் எங்கு இல்லையோ அங்கு அரசமரமும் இராது. எவன் ப₄க்தியோடு அரசமரத்தை ஆராதி₄க்கிருனோ அவன் என்னையே ஆராதி₄க்கிருன். எவன் கோபத்தோடு அதை ஹிம்ஸிக்கிருனோ அவன் என்னையே ஹிம்ஸிக்கிருன். ஆகையால் அரசமரத்தைத் தினமும் ப்ரத₃க்ஷிணமும் நமஸ்காரமும் செய்யவேண்டும். யுதி₄ஷ்டி₂ரனே! பசுக்களும், அந்தணர்களும், அரசமரமும் என்னுடைய உருவங்களாகும். இம்மூன்றையும் என் ப₄க்தன் ஒருபோதும் அவமதிக்கக் கூடாது. அவமதித்தானுகில், அது அவன் குலத்தை ஏழு தலைமுறை எரித்து அழித்துவிடும். அரசமரம், அந்தணன், பசுக்கள் என்னும் மூன்றும் என் அம்சம் உடையவையாகையாலே ஸம்ஸாரத்திலிருந்து சேதனனைக் கரையேற்றும். அரசனே! இம்மூன்றையும் நீ ஆராதி₄க்க வேண்டும்] என்று பதிலுரைத்தான் கண்ணன். இவற்றிலிருந்து விஷ்ணுகா₃யத்ரியின் பெருமையும், பரமாத்மாவின் அம்ஸமுள்ள அந்தணன், அரசமரம், பசுக்கள் ஆகியவற்றின் பெருமையும் விளங்கும். இனி அடுத்த இருபதாம் அத்தியாயத்தில்,

ப₄க₃வந்! ஸர்வபாபக்₄நம் ப்ராயஶ்சித்தம் அநுத்தமம் |
த்வத்₃ப₄க்தஸ்ய நரஶ்ரேஷ்ட₂! மம வக்தும் த்வமர்ஹஸி ||
[20-25]

[ப₄க₃வானே! சேதனர் தலைவனே! எல்லாப் பாபங்களையும் அழிப்பதும், ஒப்பற்ற பிராயச்சித்தமாயிருப்பதும் யாதென்பதை உனது அடியானன எனக்குச் சொல்லவேண்டும்] என்று யுதி₄ஷ்டி₂ரன் கேட்க,

ரஹஸ்யமித₃மத்யர்த்த₂ம் ந ஶ்ராவ்யம் பாபகர்மணும் |
அவைஷ்ணவாநாம் அஶ்ராவ்யம் ப்ராயஶ்சித்தம் ப்₃ரவீமி தே ||
வாமநம் ப்₃ராஹ்மணம் த்₃ருஷ்ட்வா மத்₃க₃தேநாந்தராத்மநா |
நமோ ப்₃ரஹ்மண்யதே₃வாயேத்யபி₄வாத₃நமாசரேத் ||
ப்ரத₃க்ஷிணம் து த்ரி: குர்யாத் புநரஷ்டாக்ஷரேண து |
தேந துஷ்டோ நரஶ்ரேஷ்ட₂! தத்பாபம் க்ஷபயாம்யஹம் ||
[20-26...28]

[இப்போது நான் சொல்லப்போகும் விஷயம் மிகவும் ரஹஸ்யமானது. பாபிகள் இதைக் கேட்கலாகாது. வைஷ்ணவரல்லாதவர்கள் இதைக் கேட்கக்கூடாது. நீ கேட்ட பிராயச்சித்தத்தைச் சொல்லுகிறேன்

குட்டையான ப்₃ராஹ்மணனைக் கண்டால் (அத்தகைய ப்₃ராஹ்மணனாய் அவதரித்த) என்னிடம் நெஞ்சு செலுத்தியவனாய் 'ப்₃ரஹ்மண்ய தே₃வனுக்கு வணக்கம்' என்று கூறி அவனை வணங்க வேண்டும். மூன்று முறை அவனை அஷ்டாக்ஷரத்தைச் சொல்லிக் கொண்டு வலம்வரவேண்டும். மனிதர்களில் சிறந்தவனே! இதனால் நான் உகப்படைகிறேன். இப்படிச் செய்பவனுடைய பாபத்தை நான் மன்னிக்கிறேன்.] என்று பதில் கூறினான். கண்ணன். இதிலிருந்தும் அஷ்டாக்ஷர ப்ரதிபாத்₃யனாகவும், ப்₃ராஹ்மண ஸ்வரூபியாகவும், அந்தணர் மாட்டு அருந்தெய்வமாகவும் இருப்பவன் ஸ்ரீமந் நாராயணனே என விளங்குகிறது. இவ்வத்தியாயத்தின் கடைசியில்,

மம ஸூக்தம் ஜபேத்₃யஸ்து நித்யம் மத்₃க₃தமாநஸ: ।
ந ஸ பாபேந லிப்யேத பத்₃மபத்ரமிவாம்ப₄ஸா ॥ [20-46]

[என்னிடம் நெஞ்சு செலுத்தியவனாய், எவன் என்னுடையதான புருஷஸூக்தத்தை ஜபிக்கிறானோ தாமரையிலையில் தண்ணீர் ஒட்டாததுபோல் அவன்மேல் பாபம் ஒட்டாது] என்று புருஷஸூக்தம் தன்னைச் சொல்லுகிறது என்பதையும், அதை ஜபிப்பவனுக்குப் பாபம் ஒட்டாது என்பதையும் காட்டினான் கண்ணன். அடுத்து ப₄க்தார்ச்சநவிதி₄யை வர்ணிக்கும் இருபத்தோராம் அத்தியாயத்தில்,

மத்₃ப₄க்தாந் ஶூத்₃ரஸாமாந்யாத₃வமந்யந்தி யே நரா: ।
நரகேஷ்வேவ திஷ்ட₂ந்தி வர்ஷகோடிம் நராத₄மா: ॥
சண்டா₃ளமபி மத்₃ப₄க்தம் நாவமந்யேத பு₃த்₃தி₄மாந் ।
அவமந்ய பதத்யேவ நரகே ரௌரவே நர: ॥
மம மத்₃ப₄க்தப₄க்தேஷு ஸம்மதிர்ஹ்யதி₄கா ப₄வேத் ।
தஸ்மாத் மத்₃ப₄க்தப₄க்தாஶ்ச பூஜநீயா விஶேஷத: ॥
கீடபக்ஷிம்ருகா₃ணாஞ்ச மயி ஸந்ந்யஸ்தசேதஸாம் ।
ஊர்த்₄வாமேவ க₃திம் வித்₃தி₄ கிம் புநர்ஜ்ஞாநிநாம் ந்ருப! ।
பத்ரம் வாப்யத₂வா புஷ்பம் ப₂லம் வா தோயமேவ வா ।
த₃தா₃தி மம ஶூத்₃ரோऽபி ஶிரஸா தா₄ரயாமி தம் ॥
விப்ராநேவார்ச்சயேத் ப₄க்த்யா ஶூத்₃ர: ப்ராணைஶ்ச மத்ப்ரிய: ।
தேஷாம் தேநைவ ரூபேண பூஜாம் க்₃ருஹ்ணாமி பா₄ரத! ॥
வேதோ₃க்தேநைவ மார்க்கே₃ண ஸர்வபூ₄தஹ்ருதி₃ ஸ்தி₂தம் ।
மாமர்ச்சயந்தி யே விப்ரா: ஸாயுஜ்யம் யாந்தி தே மம ॥

பரித்ராணய ப₄க்தாநாம் ப்ராது₃ர்ப₄ாவ: க்ருதோ மயா |
ப்ராது₃ர்ப₄ாவாக்ருதி: காசித₃ர்ச்சயேத்தாம் யுதி₄ஷ்டி₂ர! |
ஆ ஸாமந்யதமம் மூர்த்திம் யோ ப₄க்த்யா ச ஸமர்ச்சதி ||
தேநைவ பரிதுஷ்டோ ऽஹம் ப₄விஷ்யாமி ந ஸம்ஶய: |
ம்ருத₃ா ச மணிரத்நைஶ்ச தாம்ரேண ரஜதேந வா ||
க்ருத்வா ப்ரதிக்ருதிம் குர்யாத் அர்ச்சநாம் காஞ்சநேந வா |
[21-21...38]

[எந்த ஜனங்கள் என்னுடைய ப₄க்தர்களை ஶூத்₃ரஜாதியில் பிறந்ததையிட்டு அவமதிக்கிறார்களோ, மனிசரில் கடையரான அவர்கள் கோடிவருஷம் நரகத்தில் விழ்கிறார்கள். சண்டா₃ளனாயிருந்தாலும் என் அடியானை அறிவாளியாயிருப்பவன் அவமதிக்கக்கூடாது. அவமதிக்கும் மனிதன் ரௌரவ நரகத்தில் விழ்வான் என்பது உறுதி. என்னுடைய அடியார்களுக்கு அடியார்களாயிருப்பவர்களிடத்தில் எனக்கு என் அடியார்களிடமிருப்பதைவிட ப்ரீதி மிகுந்திருக்கும். ஆகையால் என் அடியார்க்கு அடியார்களும் சிறப்பாகப் பூஜிக்கத்தக்கவர்கள். என்னிடம் நெஞ்சு செலுத்திய புழு, பறவை, விலங்குகள் ஆகியவையும் மேலான க₃தியையே அடைகிறார்கள். ஜ்ஞானிகளைக் குறித்துச் சொல்லவும் வேண்டுமோ? ஓர் இலையையாவது, பூவையாவது, பழத்தையாவது, (ஒன்றும் கிடைக்காவிடில்) நீரையாவது எனக்கு அளிக்கும் ஶூத்₃ரனையும் நான் தலையாலே தாங்குகிறேன். ப₄ரத குலத்துதித்தவனே! (என் ப₄க்தர்களான) அந்தணர்களையே ஶூத்₃ரன் அன்புடன் ஆராதி₄க்கவேண்டும். அவன் எனக்கு உயிரினும் இனியவன். அந்த அந்தணர்கள் உருவில் இருந்துகொண்டே அவர்களை ஆராதி₄ப்பவர்களின் ஆராத₄னத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன். எந்த அந்தணர்கள் எல்லா ஜீவராசிகளின் ஹ்ருத₃யத்திலும் இருக்கும் என்னை வேத₃த்தில் சொன்ன முறையில் ஆராதி₄க்கிறார்களோ அவர்கள் என்னோடு ஸாயுஜ்யத்தை (ஒத்த கு₃ணத்தை உடையவர்களாயிருக்கும் பரமமோக்ஷநிலையை) அடைகிறார்கள். யுதி₄ஷ்டி₂ரனே! அடியார்களை ரக்ஷிப்பதற்காகவே என்னால் அவதாரம் எடுக்கப்பட்டுள்ளது. என் அவதாரங்களில் ஏதாவது ஒன்றை அர்ச்சிக்க வேண்டும். இவற்றில் ஒன்றை எவனொருவன் அன்போடு ஆராதி₄க்கிறானோ. அவ்வாராத₄னத்தினாலேயே நான் மிகவும் உகப்பேன் என்பதில் ஐயமில்லை. (அவரவர் ஶக்திக்குத் தக்கபடி) மண்ணாலேயோ, மணிகள், ரத்னங்களாலேயோ, தாம்ரத்தாலேயோ, வெள்ளியாலேயோ, பொன்னாலேயோ என் அர்ச்சாமூர்த்தியைச்செய்து

ஆராத₄னம் செய்யவேண்டும்.] என்று ப₄க்தர்களது பெருமையும், தன்னை ஆராதி₄க்கும் முறைகளும் சிறப்பாக விவரிக்கப்பட்டன. இதிலும் ப₄க₃வானுடைய ஸௌலப்₄யத்தோடு கூடிய பரத்வம் தெளிவாக விளங்குகிறது. இனி ஶௌத்₃ரத₄ர்மத்தை வர்ணிக்கும் கடைசி (22ம்) அத்தியாயத்தில்,

நஶ்யந்தி தாமஸா ப₄ாவா: ஶௌத்₃ரஸ்ய மயி ப₄க்தித: ।
பத்ரம் புஷ்பம் ப₂லம் தோயம் யோ மே ப₄க்த்யா ப்ரயச்ச₂தி ॥
தத₃ஹம் ப₄க்திதத்தம் யந்மூர்த்₄நா க்₃ருஹ்ணாமி ஶௌத்₃ரத: ।
சண்டா₃ளோ வா ப்ரிய: கஶ்சித் ஸர்வபாபஸமந்வித: ॥
யதி₃ மாம் ஸததம் த்₄யாயேத் ஸ பாபேப்₄ய: ப்ரமுச்யதே ।
வித்₃யாவிநயஸம்பந்நா ப்₃ராஹ்மணா வேத₃பாரக₃ா: ॥
மயி ப₄க்திம் ந குர்வந்தி சண்டா₃ளஸத்₃ருஶா ஹி தே ।
வ்ருத₂ா த₃த்தம் வ்ருத₂ா ஜப்தம் வ்ருத₂ா சேஷ்டம் வ்ருத₂ா ஹுதம் ॥
வ்ருத₂ா தீர்த்தே₂ து த₃த்தம் ஸ்யாத் யோ ந ப₄க்தோ மயி த்₃விஜ: ।
யத்க்ருதஞ்ச ஹுதஞ்சாபி யதி₃ஷ்டம் த₃த்தமேவ வா ॥
அவைஷ்ணவோக்தம் தத்ஸர்வம் ராக்ஷஸா ஏவ பு₄ஞ்ஜதே ।
ஸ்த₂ாவரோ ஜங்க₃மோ வாऽபி ஸர்வபூ₄தேஷு பாண்ட₃வ! ॥
ஸமத்வேந த₃யாம் குர்யாத் மத்₃ப₄க்தோ மித்ரஶத்ருஷு ।
ஆந்ருஶம்ஸ்யமஹிம்ஸா ச த₃யா ஸத்யம் தத₂ார்ஜவம் ॥
அத்₃ரோஹம் மம ப₄க்தாநாம் பூ₄தாநாமப₄யம் ந்ருப! ।
இத்யேவமாத₃யோ ப்₃ரூயாத் மத்₃ப₄க்த்யா ஶ்ரத்₃த₄யாந்வித: ॥
தஸ்யாக்ஷயோ ப₄வேல்லோக: ஶ்வபாகஸ்யாபி பார்த்தி₂வ! ।
கிம் புநர்யே ஸமர்ச்சந்தி மத்₃ப₄க்தா விதி₄பூர்வகம் ॥
மத்₃ப₄க்தா மத்₃க₃தப்ராணா: ஸ்துவந்தி யே து மாம் ஸதா₃ ।
ப₃ஹுவர்ஷ ஸஹஸ்ராணி தபஸ்தப்யதி யோ நர: ॥
நாஸௌ தத்பத₃மாப்நோதி மத்₃ப₄க்தை: யத₃வாப்யதே ।
மாமேவ தஸ்மாத் ராஜர்ஷே! த்₄யாஹி நித்யமதந்த்₃ரித: ॥
அவாப்ஸ்யஸி தத: ஸித்₃தி₄ம் நிஶ்சயம் ஹி அநுத்தமாம் ।
அபார்த்த₂கம் ப்ரப₄ாஷந்தே ஶௌத்₃ரா ப₄ாக₂வதா இதி ॥

ந ஶூத்₃ரா ப₄க₃வத்₃ப₄க்தா விப்ரா பா₄க₃வதா: ஸ்ம்ருதா: |
த்₃வாத₃ஶாக்ஷர தத்வஜ்ஞ: சதுர்வ்யூஹவிதா₄நவித் ||
அச்சி₂த்₃ர: பஞ்சகாலஜ்ஞ: ஸர்வே பா₄க₃வதா: ஸ்ம்ருதா: |
ருக்₃வேத₃யஜுஷா ஹோதா யஜுஷாத்₄வர்யுரேவ ச ||
ஸாமவேதே₃ந சோத்₃கா₃தா புண்யேநாபி₄ஸ்துவந்தி மாம் |
அத₂ர்வஶிரஸா சைவ நித்ய மாத₂ர்வணா த்₃விஜா: ||
ஸ்துவந்தி ஸததம் யே ச தே ஹி பா₄க₃வதா: ஸ்ம்ருதா: |
வேத₃ாதீ₄நா: ஸதா₃ா யஜ்ஞா யஜ்ஞாதீ₄நாஶ்ச தே₃வதா: ||
தே₃வதா ப்₃ராஹ்மணாதீ₄நா: தஸ்மாத்₃விப்ராஸ்து தே₃வதா: |
[22-12...28]

[என்னிடம் அன்பு கொண்டானாகில் ஶூத்₃ரனுக்குத் தமோகு₃ணமும், அதனால் ஏற்படும் தன்மைகளும் நீங்கிவிடும். இலை, பூ, பழம் அல்லது நீர் என்னும் இவற்றில் எதையாவது அன்போடு ஶூத்₃ரன் ஸமர்ப்பித்தானாயினும் அவன் அன்பினால் ஸமர்ப்பித்த பொருளை நான் தலையாலே ஏற்றுக்கொள்ளுகிறேன். எல்லாப் பாபங்களோடும் கூடிய சண்டா₃ளனாயிருந்தாலும் என்னிடம் ப₄க்தியுள்ளவனாய், என்னை எப்போதும் தியானித்தானாகில் அவன் எல்லாப் பாபங்களினின்றும் விடுபடுகிறான். கல்வியும், அடக்கமும் நிறைந்தவர்களாய், வேத₃ம் கரைகண்டவர்களான அந்தணர்களும் என்னிடம் ப₄க்தி செய்யாவிடில் அவர்கள் சண்டா₃ளர்களை ஒத்தவர்களாவர். என்னிடம் ப₄க்தியில்லாத இருபிறப்பாளன் தியானம், ஜபம், நற்செயல்கள், ஹோமம், தர்ப்பணம் ஆகிய எதைச் செய்தாலும் அது வீணேயாகும். நற்செயல்கள், ஹோமம், யாக₃ம், தா₃னம், ஜபம் முதலானவற்றை அவைஷ்ணவர்கள் செய்தால் அவையனைத்தையும் ராக்ஷஸர்களே அநுப₄விக்கிறார்கள். பாண்டு₃புத்ரனே! அசைவதும் அசையாததுமான எல்லா ஜீவராசிகளிடத்தும், நண்பர்களிடத்தும், எதிரிகளிடத்தும் என் ப₄க்தன் ஒருபடிப்படக் கருணைபுரியவேண்டும். அரசனே! இரக்கம், அஹிம்ஸை, கருணை, உண்மை, நேர்மை என் அடியார்களுக்குத் துரோஹம் செய்யாமலிருப்பது, எல்லா ஜீவராசிகளுக்கும் அப₄யமளிப்பது முதலான நற்குணங்களை என்னிடம் ப₄க்திஶ்ரத்₃தை₄யுள்ளவன் பிறர்க்கு உபதே₃ஶிக்கவேண்டும். இத்தகையவன் சண்டா₃ளனாகிலும் அவனுக்கு அழிவற்ற மோக்ஷலோகம் கிடைக்கும். என்னை முறைப்படி ஆராதி₄க்கும் மற்ற ப₄க்தர்களைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ? எவர்கள் என்னை எப்போதும் துதிப்பவர்களாய், என்னிடம் உயிரையே வைத்திருக்கிறார்களோ

அவர்களே என் ப₄க்தர்கள். எந்த மனிதன் பல்லாயிரம் வருடம் தவம் புரிகிருனே, அவனும் என் ப₄க்தர்களடையும் மோக்ஷஸ்தா₂னத்தை அடைவதில்லை. ராஜரிஷியே! ஆகையால் சோம்பலில்லாமல் என்னையே தினமும் தியானிப்பாயாக. இப்படி தியானிப்பதால் ஒப்பற்ற மோக்ஷஸித்₃தி₄யை உறுதியாக அடைவாய். என் அடியார்களான ஶூத்₃ரர்களைப் பார்த்துச் சிலர் ஶூத்₃ரப₄ாக₃வதர்கள் என்று தவருகச் சொல்லுகிருர்கள். என் அடியார்கள் ஶூத்₃ரர்களாக மாட்டார்கள். அவர்கள் அந்தணர்களேயாவார்கள். த்₃வாத₃ஶாக்ஷரத்தின் பொருளை உணர்ந்தவனும், நாலு வ்யூஹங்களின் முறையை அறிந்தவனும், இடைவெளியில்லாமல் உபாத₃ானம் முதலான ஐந்து காலங்களில் என்னைப் பூஜிப்பவனும் ஆகிய அனைவரும் ப₄ாக₃வதர்களே. யாகத்தில் ஹோதாவானவன் ருக்₃யஜுர் வேத₃ங்களாலும், அத்₄வர்யு யஜுர்வேத₃த்தாலும், உத்₃கா₃தா பவித்ரமான ஸாமவேத₃த்தாலும் என்னையே துதிக்கிருர்கள். அத₂ர்வணவேத₃மறிந்த ப்₃ராஹ்மணர்கள் தினந்தோறும் அத₂ர்வ ஶிரஸ்ஸால் என்னையே துதிக்கிருர்கள். எப்போதும் என்னையே துதிக்கும் அனைவரும் ப₄ாக₃வதர்கள் என்று அறுதியிடப்படுகிருர்கள். யஜ்ஞங்கள் எப்போதும் வேத₃த்திற்கு வசப்பட்டவை. தே₃வதைகள் அந்த யஜ்ஞத்திற்கு வசப்பட்டவர்கள். தே₃வதைகள் ப்₃ராஹ்மணர்களுக்கும் வசப்பட்டவர்கள். ஆகையால் ப்₃ராஹ்மணனே ஸகல தே₃வதா ஸ்வரூபியாவான்.] என்று ப₄க₃வத்₃ப₄க்தர்களானுல் ஶூத்₃ரர்கள் அந்தணர்களேயாவர் என்றும், இந்த ப₄க்தியில்லாவிடில் ப்₃ராஹ்மணர்களும் சண்டா₃ள ஸமர் ஆவர் என்றும் இங்கு சொல்லப்பட்டதையொட்டியே தொண்டரடிப்பொடியாழ்வார் திருமாலையில் மேப்பொருளுக்கு மேலேயுள்ள பாசுரங்களில் அருளியிருக்கிருர் என்பது குறிக்கொள்ளததக்கது. இந்த வசனங்களைப் பூர்வாசார்யர்களும் கையாண்டிருக்கிருர்கள். வர்ணுஶ்ரம த₄ர்மங்களை நிலைநிறுத்தும் த₄ர்மஶாஸ்த்ரங்கள் எம்பெருமானிடம் ப₄க்தி இருந்தால் தாழ்ந்தவனும் உத்தம வர்ணுஶ்ரமியைவிடச் சிறந்தவன் என்றும், எம்பெருமானிடம் ப₄க்தியில்லையாஞல் உயர்ந்தவனும் சண்டா₃ளனைவிடத் தாழ்ந்தவன் என்றும் முழங்கியிருப்பதை அனைவரும் காணவேண்டும்.

இவ்வண்ணமாகத் தொடக்கத்திலிருந்து பலவிடங்களில் எம்பெருமானே பரமாத்மா என்றும், மற்ற தே₃வர்கள் அவனுக்குக் கீழ்ப்பட்டவர்களே என்றும் முழங்கியிருக்கும் இந்த ஸ்ம்ருதியில் ப₂லஶ்ருதியைப் பேசும் கடைசிப்பகுதியும் விஷ்ணுபரத்வத்தையே நிலைநாட்டுகிறது என்பதைக் காண்போம் இனி.

ஏதத்புண்யம் பவித்ரஞ்ச பாபநாஶநமுத்தமம் ।
ஶ்ரோதவ்யம் ஶ்ரத்₃த₄யா யுக்தை: மத்₃ப₄க்தைஶ்ச விஶேஷத:॥
ஶ்ராவயேத்₃யஸ்த்வித₃ம் ப₄க்த்யா ப்ரயதோऽத₂ ஶ்ருணோதி வா।
ஸ க₃ச்சே₂ந்மம ஸாயுஜ்யம் நாத்ர கார்யா விசாரணா ॥
யஶ்சேத₃ம் ஶ்ராவவேச்ச்₂ராத்₃தே₄ மத்₃ப₄க்தோ மத்பராயண: ।
பிதரஸ்தஸ்ய த்ருப்யந்தி யாவதா₃பூ₄த ஸம்ப்லவம் ॥
ப்ரஹ்ருஷ்ட: ஸுமநா பூ₄த்வா சிந்தயேதாத்₃பு₄தாம் கதா₂ம் ॥
பூஜயாமாஸ கோ₃விந்த₃ம் த₄ர்மபுத்ர: புந: புந: ।
தே₃வா ப்₃ரஹ்மர்ஷய: ஸித்₃தா₄ கா₃ந்த₄ர்வாப்ஸரஸஸ்ததா₂ ॥
பூ₄தா யக்ஷா க்₃ரஹாஶ்சைவ கு₃ஹ்யகா பு₄ஜகா₃ஸ்ததா₂ ।
வாலகி₂ல்யா மஹாத்மாநோ முநய: தத்வத₃ர்ஶிந: ॥
ததா₂ ப₄ாக₃வதாஶ்சைவ பஞ்சகாலரதாஸ்: ததா₂ ।
கௌதூஹலஸமாயுக்தா ப₄க₃வத்₃ப₄க்திமாக₃தா: ॥
ஶ்ருத்வா து பரமம் புண்யம் வைஷ்ணவம் த₄ர்மஶாஸநம் ।
விமுக்தபாபா: பூதாஸ்தே ஸம்பூ₄தா: தத்க்ஷணேந து ॥
ப்ரணம்ய ஶிரஸா விஷ்ணும் ப்ரஸாத₃ஸுமுகே₂க்ஷண: ।
யதா₂க₃தம் யயுர்தே₃வா: ஸித்₃த₄ாஶ்சர்ஷிக₃ணை: ஸஹ ॥
க₃தேஷு தேஷு ஸர்வேஷு கேஶவ: கேஶிஹா ததா₃ ।
விஸ்ருஜ்ய பாண்ட₃வாந் ஸர்வாந் ப்ரணதாந் த்₃வாரகாம் யயௌ ॥
தத: ப்ரணம்ய கோ₃விந்த₃ம் தத₃ாப்ரப்₄ருதி பாண்ட₃வா: ।
கபிலாத்₃யாநி த₃ாநாநி த₃ஶ விஷ்ணுபராயணா: ॥
மது₄ஸூத₃நவாக்யாநி ஸ்ம்ருத்வா சைவ புந: புந: ।
மநஸா பூஜயாமாஸு: ஹ்ருதி₃ஸ்த₂ம் பஞ்ச பாண்ட₃வா: ॥
யுதி₄ஷ்டி₂ரோऽபி த₄ர்மாத்மா ஹ்ருதி₃ க்ருத்வா ஜநார்த்த₃நம் ।
தத்₃ப₄க்த: தந்மநா யுக்த: தத்₃யாஜீ தத்பரோऽப₄வத் ॥
ஏவமேதத் புராவ்ருத்தம் வைஷ்ணவம் த₄ர்மஶாஸநம் ।
மயா தே கதி₂தம் ராஜந்! பவித்ரம் பாபநாஶநம் ॥
சிந்தயஸ்வ ஸதா₃ விஷ்ணும் அப்ரமத்த: குருத்₃வஹ! ।
லோகா க₃ச்ச₂ந்தி நாந்யேந தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம் ॥

[22-33......47]

[மனிதர்களை நற்கதிக்கு அழைத்துச்செல்வதும், பரிஶுத்₃த₄மானதும், பாபங்களை அழிக்கக்கூடியதும், மிகச் சிறந்ததுமான இந்த ஸ்ம்ருதி ஶ்ரத்₃தை₄யுடையவர்களாலும், குறிப்பாக என்னுடைய ப₄க்தர்களாலும் கேட்கத்தக்கது. எவனொருவன் இந்த ஸ்ம்ருதியை ப₄க்தியோடும், புலனடக்கத்தோடும் பிறருக்குச் சொல்லுகிறானோ, அல்லது தான் கேட்கிறானோ அவன் என்னுடைய ஸாயுஜ்யத்தை அடைகிறான். இதில் ஸந்தே₃ஹமில்லை. எனக்கு ப₄க்தனாய், என்னையே மேலான ப்ராப்ய ப்ராபகங்களாகக்கொண்ட எவனொருவன் இந்த ஸ்ம்ருதியை ஶ்ராத்₃த₄த்தில் போ₄க்தாக்களைக் கேட்பிக்கிறானோ அவனுடைய பித்ருக்கள் ப்ரளயகாலம் வரையில் த்ருப்தியடைகிறார்கள். இந்த ஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட அத்₃பு₄தமான வ்ருத்தாந்தத்தை நன்னெஞ்சை உடையவனாய், உகப்புடன் சிந்திக்கவேண்டும். த₄ர்மபுத்ரன் இந்த ஸ்ம்ருதியைக் கேட்டபின்பு கோ₃விந்த₃னைப் பலகால் பூஜித்தான். தே₃வர்கள், ப்₃ரஹ்மரிஷிகள், ஸித்₃த₄ர்கள், க₃ந்த₄ர்வர்கள், அப்ஸரஸ்ஸுக்கள், பூ₄தங்கள், யக்ஷர்கள், க்₃ரஹங்கள், கு₃ஹ்யர்கள், நாக₃ர்கள், வாலகி₂ல்யர்கள், மஹாத்மாக்களாய், உண்மையை அறிந்த மற்ற முனிவர்கள், அபி₄க₃மனம் முதலான ஐந்து காலங்களில் திருவாராத₄னம் பண்ணும் பாஞ்சராத்ரிகள் ஆகிய இவர்களனைவரும் ப₄க₃வத்₃ப₄க்தியை உடையவர்களாய், உத்ஸாஹத்தோடு கூடியவர்களாய், மிகப்புண்ணியமான இந்த வைஷ்ணவ த₄ர்ம ஶாஸ்த்ரத்தைக் கேட்டு, அந்தக்கணத்திலேயே பாபங்கள் நீங்கப் பெற்றவர்களாய், பரிஶுத்₃த₄ரானார்கள். அருளாலே மலர்ந்த திருக்கண்களை உடைய கிருஷ்ணனாகிற விஷ்ணுவைத் தலையால் வணங்கி, தே₃வர்களும், ஸித்₃த₄ர்களும் ரிஷிக₃ணங்களோடுகூடத் தத்தம் இருப்பிடத்திற்குச் சென்றார்கள். அவர்களனைவரும் சென்றபின்பு, கேஶியைக் கொன்றவனான கேஶவன் தன்னை வணங்கிய பாண்ட₃வர்கள் அனைவருக்கும் விடைகொடுத்து த்₃வாரகைக்குச் சென்றான். அது முதற்கொண்டு பாண்ட₃வர்கள் கோ₃விந்த₃னை வணங்கி (இந்த ஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட) கபிலாத₃ானம் முதலான பத்துவித₄மான த₃ானங்களையும் செய்துகொண்டு விஷ்ணுவையே மேலான க₃தியாகக் கொண்டவர்களாய் இருந்தார்கள். மது₄ஸூத₃னனுடைய வாக்யங்களை மறுபடியும் மறுபடியும் நினைத்துப் பஞ்சபாண்ட₃வர்களும் தம் ஹ்ருத₃யத்திலிருக்கும் அவனை மனஸ்ஸாலே ஆராதி₄த்தார்கள். த₄ர்மாத்மாவான யுதி₄ஷ்டி₂ரரும் ஜநார்த்₃தனனை நெஞ்சில் இருத்தி, அவனுக்கு ப₄க்தராய், அவனிடம் நெஞ்சைச் செலுத்தியவராய், அவனையே ஆராதி₄ப்பவராய், அவனிடமே ஈடுபட்டவரான

ஜ்ஞாநியாக ஆனுர். அரசனே! பரிஶுத்₃த₄மானதாய், பாபங்களைப் போக்குவதான இந்தச் சரித்திரம் என்னுல் உனக்குச் சொல்லப் பட்டது. குருகுலத் தலைவனே! சோம்பல் இல்லாதவனுய், எப் போதும் விஷ்ணுவைச் சிந்திப்பாயாக. வேறு எந்த வழியாலும் உலகினர் விஷ்ணுவின் ஸுப்ரஸித்₃த₄மான பரமபத₃த்தை அடைய முடியாது.

இந்தப் ப₄லஶ்ருதியிலிருந்தும் கண்ணனுய் அவதரித்த விஷ்ணுவே ஸர்வாந்தர்யாமி என்றும், தே₃வதைகள் முதலான அனைவரும் அவனை ஆராதி₄ப்பவர்கள் என்றும், அவனுடைய ஸ்த₂ானமே மிகவுயர்ந்த மோக்ஷலோகமென்றும், அவனைச் சிந்திப்ப தாலேயே அதனை அடையமுடியுமென்றும் தெளிவாக விளங்குகிற தாகையால், இந்த வ்ருத்₃த₄கௌ₃தம ஸ்ம்ருதியானது ப₄க₃வத் பரத்வத்தையே நிலைநாட்டுகிறது என்பது அசைக்கமுடியாதபடி நிருபிக்கப்பட்டதாயிற்று.

வ்ருத்₃த₄கௌ₃தம ஸ்ம்ருதி நிர்ணயம் முற்றிற்று.

## அருணஸ்ம்ருதி நிர்ணயம்

இந்த ஸ்ம்ருதியில் தெய்வங்களைப்பற்றிச் சில இடங்களிலேயே வருகிறது. 148 ஶ்லோகங்கள்கொண்ட இந்த ஸ்ம்ருதியில் 61-வது ஶ்லோகத்தில்,

"விஷ்ணுஜிஷ்ணுஹ்ருஷீகேஶப்ரதிமாம் ஸ்த₂ாபயேத்து வா।
ருணர்த்த₂ம் ப்ரதிக்₃ருஹ்ணநோ முச்யதே து₃ஷ்ப்ரதி
க்₃ரஹாத்॥"

[ஸர்வவ்யாபியாய், அனைத்துலகையும் வென்றிருப்பவனுய், இந்த்₃ரி யங்களுக்கு ஈஶனன பரமாத்மாவின் அர்ச்சாமூர்த்தியை ப்ரதிஷ்டை₂ செய்யவேண்டும். இப்படிச் செய்பவன், தீயவர்களிடமிருந்து தன் கடனை அடைப்பதற்காக வாங்கின த₃ானத்திஞல் ஏற்படும் பாபத்தி னின்றும் நீங்கப்பெறுகிருன்.] என்று ஸர்வலோகவ்யாபியான விஷ்ணுவை அனைத்துலகையும் வென்றிருப்பவனென்றும், இந்த்₃ரி யங்களுக்கு ஸ்வாமி என்றும் குறிப்பிடுவது காணத்தக்கது. 120-வது ஶ்லோகத்தில் தீயவர்களிடமிருந்து வாங்கிய த₃ானத்திற்கு ப்ராயச் சித்தத்தை விதி₄க்கும்போது,

"ருக்ஸாமவேதௌ₃ நியதம் ஜபேத்₃வா ஶிவஸந்நிதௌ₄।
நாராயணநுஸ்மரணந் முச்யதே து₃ஷ்ப்ரதிக்₃ரஹாத்॥"

[ருக்ஸாம வேத₃ங்களை நியமத்தோடு சிவன் கோவிலிலே ஜபிப்பதும் ப்ராயச்சித்தமாகும். நாராயணனை நினைப்பதாலேயே தீய த₃ானத்தினுல் ஏற்படும் பாபத்தினின்றும் நீங்குகிருன்] என்று சிவன் கோவிலில் வேத₃பாராயணம் செய்வதும், நாராயணனை நினைப்பதும் ஸமமாகக் கூறப்பட்டதிலிருந்து சிவனைக் காட்டிலும் நாராயணனுடைய பெருமை விளங்குகிறது. இந்த ஸ்ம்ருதியின் கடைசியில்,

"ப்ராயஶ்சித்தம் து தஸ்யைவ ஹரே: ஸம்ஸ்மரணம் பரம்'|
ப்ராதர்நிஶி தத₂ா ஸந்த்₄யாமத்₄யாஹ்நாதி₃ஷு ஸம்ஸ்துவந் ||
நாராயணமவாப்நோதி ஸத்₃ய: பாபக்ஷயம் நர: ||
முக்த்வா ப்ரயாதி ஸ ஸ்வர்க்க₃ம் தஸ்ய விஷ்ணோர்நுமீலநே(?) |
வாஸுதே₃வஸ்ய ப₄க்தஸ்ய ஜபஹோமார்ச்சநாதி₃ஷு ||
தஸ்யாந்தே ப₄வதே தஸ்ய தே₃வேந்த்₃ராத₃தி₄கம் ப₂லம் ||
[145-148]

[முற்கூறிய பாபங்களுக்கு ஹரியை நினைப்பதே மேலான ப்ராயஶ்சித்தமாகும். காலையிலும், நடுப்பகலிலும், மாலையிலும், இரவிலும், எல்லாக் காலங்களிலும் நாராயணனைத் துதிப்பதன்மூலம் மனிதன் உடனே பாபங்களிலிருந்து நீங்கப்பெறுகிருன். இறந்த பின்பு விஷ்ணுவினுடையதான ஸ்த₂ானத்தையும் அடைகிருன். வாஸுதே₃வனிடம் ப₄க்தி பூண்டிருப்பவன் ஜபம், ஹோமம், அர்ச்சனை முதலான எதைச்செய்தாலும் அதன் பயனுக தே₃வேந்த்₃ரப் பதவியைக் காட்டிலும் சிறந்த ப₂லனை அடைகிருன்.] என்று படிக்கப்படும் ப₂லஶ்ருதியிலிருந்தும், விஷ்ணுவை நினைப்பதொன்றே எல்லாப் பாபங்களையும் அழிப்பது என்றும், மோக்ஷமுள்ளிட்ட எல்லா உயர் பதவிகளையும் அளிப்பது என்றும் விளங்குகிறதாகையால் இந்த ஸ்ம்ருதியிலிருந்தும் ப₄க₃வத் பரத்வமே நிலைநாட்டப்பட்டதாயிற்று.

அருணஸ்ம்ருதி நிர்ணயம் முற்றிற்று.

## வஸிஷ்ட ஸ்ம்ருதி நிர்ணயம்

இந்த வஸிஷ்ட₂ஸ்ம்ருதி கல்கத்தாவில் வெளியிடப்பட்ட ஸ்ம்ருதி ஸந்த₂ர்ப்ப₄த்தின் நாலாம் ப₄ாக₃த்தில் 2139-வது பக்கம் முதல் 2246-வது பக்கம் வரையில் அச்சிடப்பட்டுள்ளது. நம்முடைய பூர்வாசார்யர்களால் ஆயிரம் வருஷங்களாகக் கையாளப்படும் பல ஶ்லோகங்கள் இந்த ஸ்ம்ருதியில் உள்ளன. இது ப₄க₃வத்பரத்வத்தை

அசைக்கமுடியாதபடி நிலைநாட்டித்தருவது என்பது இதன் முதல் அத்தியாயத்திலிருந்தே விளங்குகிறதாகையால் அவ்வத்தியாயம் முழுவதையும் அடுத்தபடி பொழிப்புரையோடு கொடுக்கிறோம்.

கு₃ருமிக்ஷ்வாகுவம்ஶஸ்ய வஸிஷ்ட₂ம் ப்₃ரஹ்மஸம்ப₄வம் ।
பப்ரச்சு₂ர்முநய: ஸர்வே பாராஶர்யபுரோக₃மா: ॥

முநய ஊசு:—

ப₄க₃வந்! ப₄வதா ப்ரோக்தா யஜ்ஞுத₃ாநவ்ரதாத₃ய: ।
வர்ணாஶ்ரமாணும் கர்த்தவ்யா நித்ய நைமித்திகா: க்ரியா: ॥
க ஆசார: க: ஆஹார: கீத்₃ருக்₃வ்ருத்தி: க ஆஶ்ரய: ।
வைஷ்ணவாநாம் முநிஶ்ரேஷ்ட₂! ப்₃ரூஹி ஸர்வமஶேஷத: ॥

வஸிஷ்ட₂ உவாச—

ஶ்ருணுத்₄வம் முநய: ஸர்வே ஸர்வத₄ர்ம ஸநாதநம் ।
வைஷ்ணவாநாஞ்ச விப்ராணும் யத்₃யத₃ாசரணம் ஶுப₄ம் ॥
ஸர்க்க₃ாதௌ₃ ப்₃ராஹ்மணு: ஶ்ரேஷ்ட₂ா:

வைஷ்ணவாம்ஶேந சோதி₃தா: ।
இதரே ச த்ரயோ வர்ணு: ப்₃ரஹ்மணு விஷ்ணுஸூநுநா ॥
தஸ்மாச்ச வைஷ்ணவா விப்ரா: ப்ரக்ருத்யாதி₃ஷு ஸத்தமா: ।
அவைஷ்ணவத்வம் விப்ராணும் மஹாபாதகஸம்மிதம் ॥
அவைஷ்ணவஸ்து யோ விப்ர: ஸர்வகர்மஸு க₃ர்ஹித: ।
ரௌரவம் நரகம் ப்ராப்ய சாண்ட₃ாலீம் யோநிமாப்நுயாத் ॥
நித்யம் நைமித்திகம் காம்யம் த்ரிவித₄ம் ஶ்ருதிசோதி₃தம் ।
அவைஷ்ணவாநாம் விப்ராணும் கர்ம தந்நிஷ்ப₂லம் ப₄வேத் ॥
ஸ்ரீமஹாவிஷ்ணுமந்யேந ஹீநதே₃வேந து₃ர்மதி: ।
ஸாத₄ாரணம் ஸக்ருத்ப்₃ரூதே ஸோऽந்த்யஜோ

நாந்த்யஜோऽந்த்யஜ: ॥
யோ விஷ்ணுஶேஷமாத்மாநமந்யஶேஷம் ப்ரபத்₃யதே ।
ஸ சாண்ட₃ாலோ மஹாபாபீ ரௌரவம் நரகம் வ்ரஜேத் ॥
அவைஷ்ணவத்வம் விப்ராணும் ஆத்மநாஶநகாரணம் ॥
தஸ்மாத்து வைஷ்ணவத்வம் வை விப்ராணும்

ஶ்ருதிசோதி₃தம் ॥

அவைஷ்ணவோ ஹதோ விப்ரோ ஹதம் ஶ்ராத்₃த₄மத₃க்ஷிணம் |
அப்₃ரஹ்மண்யம் ஹதம் க்ஷாத்ரமநாசாரம் ஹதம் குலம் ||
யே வாஸுதே₃வம் நார்ச்சந்தி ஸர்வலோகேஶ்வரம் ஹரிம் |
தேஷாம் ஹி நரகே வாஸ: கல்பாயுதஶதைரபி ||
சதுர்வேதீ₃ ச யோ விப்ரோ வாஸுதே₃வம் ந விந்த₃தி |
வேத₃ப₄ரப₄ராக்ராந்த: ஸ வை ப்₃ராஹ்மணக₃ர்த்த₃ப₄: ||
தஸ்மாத₃வைஷ்ணவத்வேந ப்₃ராஹ்மணத்வம் விஹந்யதே |
வைஷ்ணவத்வேந ஸம்ஸித்₃தி₄ம் லப₄தே நாத்ர ஸம்ஶய: ||
நாராயணம் பரம் ப்₃ரஹ்ம ப்₃ராஹ்மணாநாம் ஹி தை₃வதம் |
ஸோமஸூர்யாத₃யோ தே₃வா க்ஷத்ரியாணாம் விஶாம் தத₂ா ||
ஶூத்₃ராதீ₃நாம் து ருத்₃ராத்₃யா அர்ச்சநீயா: ப்ரகீர்த்திதா: |
யத்து ருத்₃ரார்ச்சநம் ப்ரோக்தம் புராணேஷு ஸ்ம்ருதிஷ்வபி ||
தத₃ப்₃ரஹ்மண்யவிஷயமேவமாஹ ப்ரஜாபதி: |
ருத்₃ரார்ச்சநம் த்ரிபுண்ட்₃ரம் ச யத்புராணேஷு கீ₃யதே |
க்ஷத்ரவிட் ஶூத்₃ரஜாதீநாம் நேதரேஷாம் தது₃ச்யதே ||
தஸ்மாத்த்ரிபுண்ட்₃ரம் விப்ராணாம் (விப்ரைஸ்து) ந த₄ார்யம் முநிஸத்தமா:! ||
யத₃ஜ்ஞாநாச்ச பி₃ப்₄ருயு: பதிதாஸ்தே ந ஸம்ஶய: ||
ஊர்த்₄வபுண்ட்₃ரம் து விப்ராணாம் ஸததம் ஶ்ருதிசோதி₃தம் |
ஊர்த்₄வபுண்ட்₃ரோ ம்ருத₃ா ஶுப்₄ரோ லலாடே யஸ்ய த்₃ருஶ்யதே ||
ஸர்வபாபவிஶுத்₃த₄ாத்மா ஸ யாதி ஹரிமந்தி₃ரம் |
ஸ்நாநம் த₃ாநம் தபோ ஹோம: ஸ்வாத்₄யாய: பித்ருதர்ப்பணம் ||
ப₄ஸ்மீப₄வந்தி தத்ஸர்வமூர்த்₄வபுண்ட்₃ரம் விநா க்ருதம் ||
முமுக்ஷுபி₄ர்வீதராகை₃: அப்ரமத்தை: ஸமாஹிதை: |
ஊர்த்₄வபுண்ட்₃ரம் ஹரே: பூஜாக்ஷச்ச₃த்ரா த்₃யைரலங்க்ருதம் ||
ப்₃ராஹ்மணைர்நைவ ம்ருத்₃த₄ார்யா ந ப₄ஸ்ம ந ச சந்த₃நம் |
யத்₃யபு₃த்₃த்₄யா து பி₃ப்₄ருயாத் ப்ராயஶ்சித்தீ ப₄வேத்து ஸ: ||
ந த்ரிபுண்ட்₃ரம் த்₃விஜைர்த₄ார்யம் ந பட்டாகாரமேவ ச |
ந சாந்யதே₃வதாப₄க்திராபத்₃யபி கத₃ாசந ||

யஸ்து நாராயணுதந்யம் ஸ்வதந்த்ரேண ப்ரபூஜயேத் |
ப₄வேயுர்நிஷ்ப₂லாஸ்தஸ்ய யஜ்ஞதா₃நாதி₃ ஸத்க்ரியா: ||
அங்க₃ப₄ாவேந தே₃வாநாம் அர்ச்சநம் ந நிஷித்₄யதே |
ஸ்வதந்த்ர பு₃த்₃த்₄யா ய: குர்யாத் ப்₃ராஹ்மணோ நரகம் வ்ரஜேத் ||
தஸ்மாத்து ப்₃ராஹ்மணோ நித்யம் ப்ரயத்நேநார்ச்சயேத்₃த₄ரிம் |
தத₃ாத₄ாரணப₄ாவேந தே₃வதா: பரிதோऽர்ச்சயேத் ||
அவைஷ்ணவஸ்து யோ விப்ரஶ்சாண்டா₃லாத₃த₄ம: ஸ்ம்ருத: |
ந தேந ஸஹ பே₄ாக்தவ்யமாபத்₃யபி கதா₃சந ||
ஸுதர்₃ஶநோர்த்₄வபுண்ட்₃ராணும் த₄ாரணம் ப்ரத₂மம் ஸ்ம்ருதம் |
தந்மந்த்ராத்₄யயநம் சைவ ததீ₃யாராத₄நம் தத₂ா ||
நித்யமாராத₄நம் விஷ்ணோர்த்₄யாநம் ஹோமோ ஜபஸ் தத₂ா |
தத்கத₂ாஶ்ரவணம் சைவ தந்நாம்நஶ்சைவ கீர்த்தநம் ||
தத்பாத₃தீர்த்த₂ஸேவா ச தந்நிவேதி₃தபே₄ாஜநம் |
ப்ரணுமஸ்தஸ்ய புரதோ நர்த்தநம் கீ₃தவாத₃நம் ||
தத் ஸ்தோத்ரபட₂நம் சைவ தத₃ந்யேஷாமஸேவ்யதா |
ஏவம் ஸம்பூஜயந்நித்யம் நாராயணமநாமயம் ||
ஸ வைஷ்ணவோ ப₄வேத்₃விப்ர: ஸர்வலோகேஷு பூஜித: |
லலாடே சோர்த்₄வபுண்ட்₂ரஸ் து பா₃ஹுமூலே ஸுதர்₃ஶநம் ||
கண்டே₂ யத்₃வாக்ஷமாலா து பவித்ரம் த₃க்ஷிணே கரே |
வைஷ்ணவேந ஸதா₃ த₄ார்யா ஹரிஸம்ப₃ந்த₄வேத₃நாத் ||
ஶங்க₂சக்ராங்கநம் குர்யாத₃ாத்மநோ பா₃ஹுமூலயோ: |
கலத்ராபத்யப்₄ருத்யேஷு பஶ்வாதி₃ஷு விமுக்தயே ||
ஸ புத்ர பஶுதா₃ராணும் ப்₃ராஹ்மணுநாம் விஶேஷத: |
குர்யாத்து சிந்தநம் சைவ வைஷ்ணவம் நாம லக்ஷ்ம ச ||
ஶங்க₂சக்ரே ஸ்பு₂டம் குர்யாத் ப்ரதப்தே பா₃ஹுமூலயோ: |
ஸர்வாஶ்ரமேஷு வஸதாம் ஸ்த்ரீணும் ச ஶ்ருதிவேத₃நாத் ||
ஹோமாதி₃நைவ ஸந்தப்தசக்ரமாத₃ாய வைஷ்ணவம் |
த₃க்ஷிணே பா₃ஹுமூலே து த₃க்₃த்₄வா கர்ம ஸமாசரேத் ||
விநா₄ நா த₄ாரயித்வைவ பவித்ரம் சக்ரமுத்தமம் |
ததஸ்ஸ வைஷ்ணவம் யாதி நாந்யதா₂ த்₃விஜஸத்தமா:! ||

தஸ்மாத்து விதி₄வச்சக்ரம் த₄ாரயித்வா ஸுத₃ர்ஶநம் ।
பஶ்சாத் ஸர்வாணி கர்மாணி குர்வீத த்₃விஜஸத்தமா:! ||
சக்ரஸ்ய த₄ாரணே காலே ப்₃ராஹ்மணத்வம் விது₃ர்பு₃த₄ா: ।
ஜாதிகர்மாணி வை குர்யாச்சௌளோபநயநேऽபி வா ||
மந்த்ராத்₄யயநகாலே வா சக்ரம் த₄ார்யம் வித₄ாநத: ।
அத்₄ருத்வா விதி₄வச்சக்ரம் யதி₃ கர்ம ஸமாசரேத் ||
நிஷ்ப₂லம் து ப₄வேத் ஸர்வமிஷ்டாபூர்த்தம் த்₃விஜோத்தமா:! ।
[1-42]

இதி ஶ்ரீவஸிஷ்டஸ்ம்ருதௌ ப்₃ராஹ்மணஸ்வரூப கத₂நம் நாம ப்ரத₂மோऽத்₄யாய: ||

[பிரமனுடைய பிள்ளையாய், இக்ஷ்வாகு வம்ஶத்தின் ஆசார்யரான வஸிஷ்டரை வியாஸர் முதலான எல்லா முனிவர்களும் பின்வருமாறு கேட்டார்கள்—''ப₄க₃வானே! அந்தந்த வர்ணாஶ்ரமங்களில் இருப்பவர்கள் செய்யவேண்டிய நித்ய நைமித்திக கர்மங்களான யஜ்ஞம், தானம், வ்ரதம் முதலானவை உம்மால் சொல்லப்பட்டன. முனிவர் தலைவரே! வைஷ்ணவர்களுக்கு ஆசாரம் எது? ஆஹாரம் எது? தொழில் என்ன? ஆஶ்ரயணீயம் எது? இவையனைத்தையும் எங்களுக்குச் சொல்லவேண்டும்.'' இவ்வண்ணம் முனிவர்களால் கேட்கப்பட்ட வஸிஷ்டர் கூறலுற்றார்,— முனிவர்களே! எல்லா த₄ர்மங்களுக்கும் பழமையானதாய் வைஷ்ணவர்களான அந்தணர்களுக்குரியதாய், மங்களமான ஆசாரங்களைக் கூறுகிறேன், கேளுங்கள். விஷ்ணுவின் அம்ஶமுடைய விஷ்ணு புத்ரனை பிரமனால் ஸ்ருஷ்டியின் ஆதி₃யில் சிறந்தவர்களான ப்₃ராஹ்மணர்கள் படைக்கப்பட்டார்கள். மற்ற மூன்று வர்ணத்தவர்களும் அவ்வம்ஶமற்ற பிரமனால் படைக்கப்பட்டனர். ஆகையால் விஷ்ணுவால் படைக்கப்பட்ட அந்தணர்கள் ஸ்வபா₄வம் முதலியவற்றால் சிறந்து விளங்குகிறார்கள். அந்தணர்கள் வைஷ்ணவர்களாயிராமலிருப்பது மஹாபாதகத்தோடு ஒத்தது. எந்த அந்தணன் வைஷ்ணவனாயிராமலிருக்கிறானோ அவன் எந்த வைதி₃ககர்மத்தையும் செய்யத்தகாதவன் என்று இகழப்படுகிறான். இறந்தபின்பு ரௌரவ நரகத்தை அடைந்து, சண்டாளனாகப் பிறக்கிறான். வேத₃த்தில் விதி₄க்கப்பட்ட நித்யம், நைமித்திகம், காம்யம் என்னும் மூன்றுவகைக் கர்மங்களும் விஷ்ணுப₄க்தராயிராத அந்தணர் அனுஷ்டி₂க்கும்போது பயனற்றவையாகின்றன. அறிவு கெட்டவனை எவனொருவன ஶ்ரீமஹாவிஷ்ணுவை மற்றொரு தாழ்ந்த தே₃வனோடு ஸமானமானவனாக ஒருமுறை சொல்லுகிறானோ, அவனே

உண்மையான சண்டாளன் சண்டாளனாகப் பிறந்தவன்கூட (அவனைப் போல்) சண்டாளனல்லன். எவன் விஷ்ணுவுக்கு அடிமைப்பட்ட தன் ஆத்மாவை மற்றொரு தெய்வத்துக்கு அடிமைப்பட்டதாக நினைக்கிறானோ, மஹாபாபியாய், சண்டாளனான அவன் ரௌரவ நரகத்தை அடைகிறான். அந்தணர்களுக்கு அவைஷ்ணவத்வமானது ஆத்மாவையே அழிக்கக்கூடியது. அதனால் அந்தணர்களுக்கு வைஷ்ணவத்வம் வேதத்திலேயே விதிக்கப்பட்டுள்ளது. அவைஷ்ணவனான அந்தணன் அழிந்தவனே. தக்ஷிணையில்லாத ஶ்ராத்தமும் அழிந்ததே. ப்ராஹ்மணனைத் துணைகொள்ளாத க்ஷத்ரியன் அழிந்தவனே. ஆசாரமில்லாத குலமும் அழிந்ததே. எவர்கள் எல்லாவுலகுக்கும் ஈஶ்வரனான ஹரியை ஆராதிப்பதில்லையோ அவர்கள் லக்ஷக்கணக்கான வருஷங்கள் நரகில் வீழ்கிறார்கள். நாலு வேதமும் படித்தவனாயினும் வாஸுதேவனைச் சரணமடையவில்லையானால் வேதமாகிற பெருஞ்சுமையால் அழுத்தப்படும் ப்ராஹ்மணக் கழுதையே அவன். ஆகையால் அவைஷ்ணவத்தன்மையால் ப்ராஹ்மணத் தன்மை அழிக்கப்பட்டுவிடுகிறது. வைஷ்ணவத்வத்தை உடையவன் எல்லா ஸித்திகளையும் பெறுவான் என்பதில் ஐயமில்லை. பரப்ரஹ்மமான நாராயணன் அந்தணர்க்குரிய தெய்வமாவான். சந்த்ரன், ஸூர்யன் முதலான தேவர்கள் க்ஷத்ரியர்களுக்கும், வைஶ்யர்களுக்கும் தெய்வங்களாவர். ஶூத்ரர் முதலானவர்களுக்கு ருத்ரன் முதலான தாமஸ தேவர்கள் ஆராதிக்கத் தக்கவர்களாக ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிறார்கள். புராணங்களிலும் ஸ்ம்ருதிகளிலும் 'ருத்ரனை ஆராதிக்கவேண்டும்' என்று சொல்லுமிடங்கள் ப்ராஹ்மணரல்லாதார் விஷயம் என்று ப்ரஜாபதி கூறினார். ருத்ரனை ஆராதிக்கவேண்டும் என்றும், த்ரிபுண்ட்ரம் தரிக்கவேண்டும் என்றும் புராணங்களில் சொல்லப்படுவது க்ஷத்ரியவைஶ்யஶூத்ரர்களுக்கேயொழிய அந்தணர்களுக்கல்ல. முனிவர் தலைவர்களே! ஆகையால் (குறுக்கேயிடும்) த்ரிபுண்ட்ரத்தை அந்தணர்கள் தரிக்கலாகாது. அறியாமையால் தரித்தால், அவர்கள் பதிதர்களாவார்கள் என்பதில் ஐயமில்லை. அந்தணர்கள் ஊர்த்வபுண்ட்ரமே எப்போதும் தரிக்கவேண்டும் என்று வேதத்தில் விதிக்கப்பட்டுள்ளது. எவனுடைய நெற்றியில் வெள்ளைமண்ணாலான ஊர்த்வபுண்ட்ரம் காணப்படுகிறதோ, அவன் எல்லாப்பாபங்களினின்றும் நீங்கப்பெற்றவனாய் ஹரியின் உலகத்திற்குச் செல்கிறான். ஊர்த்வபுண்ட்ரமில்லாமல் செய்யப்படும் ஸ்நானம், தானம், தவம், ஹோமம், வேதாத்யயனம், பித்ருதர்ப்பணம் ஆகிய அனைத்தும் சாம்பலாகி அழியும்.

ஶப்₃த₃ாதி₃ விஷயங்களில் பற்றற்றவர்களாய், ப₄க₃வத்₃விஷயத்தில் சோம்பலில்லாமல் நன்கு ஈடுபட்டவர்களான முமுக்ஷுக்களால் (தம் வீடு முதலானவற்றில் எழுதப்படும்) மாலை, குடை முதலானவற்றால் அலங்கரிக்கப்பட்ட ஊர்த்₄வபுண்ட்₃ரமே ஹரியின் திருவாராத₄ன மாகும். அந்தணர்களால் (வெள்ளை நிறமல்லாத) மண்ணை, சாம் பலோ, சந்த₃னமோ (புண்ட்₃ரமாக) த₄ரிக்கத்தக்கதன்று. அறியாமல் த₄ரித்தானாகில் அவன் ப்ராயஶ்சித்தம் செய்யவேண்டியவனாகிறான். இரு பிறப்பாளர்கள் முப்பட்டையாகவோ, ஒரே பட்டையாகவோ குறுக்குப் புண்ட்₃ரத்தை த₄ரிக்கக்கூடாது. ஆபத்துக்காலத்தில்கூட ஒருபோதும் வேறு தெய்வத்திடம் ப₄க்தி செலுத்தக்கூடாது. எவனொருவன் நாராயணனைக் காட்டிலும் வேறொரு தெய்வத்தை ப்ரத₄ானமாக வைத்துப் பூஜிக்கிறானோ அவன் செய்யும் யஜ்ஞம், த₃ானம் முதலான நற்செயல்களும் பயனற்றவையாகின்றன. (கோயில்களில்) மற்ற தெய் வங்களை நாராயணனுக்குப் பரிவாரங்களாக வைத்துப் பூஜிப்பது தவ றல்ல. மற்றொரு தெய்வத்தை ப்ரத₄ானமாக வைத்து ஆராதி₄க்கும் அந்தணன் நரகம் புகுவான் ஆகையால் அந்தணன் தினந்தோறும் ஹரியை முயன்று பூஜிக்கவேண்டும். அவனால் த₄ரிக்கப்படுமவர்கள் என்னும் நினைவோடு மற்ற தெய்வங்களை ஆராதி₄க்கவேண்டும். வைஷ்ணவனாயிராத அந்தணன் சண்ட₃ாளனைக் காட்டிலும் தாழ்ந்த வன் என்று ஸ்ம்ருதிகளில் கூறப்படுகிறான். ஆபத்துக்காலத்திலும் ஒருபோதும் அவனோடு சேர்ந்து உட்கார்ந்து உண்ணலாகாது. (எம்பெருமானை ஆராதி₄ப்பதில் அடங்கும் விஷயங்களாவன)—

1. ஸுத₃ர்ஶனத்தையும், ஊர்த்₄வபுண்ட்₃ரங்களையும் த₄ரிப்பது முதல் ஆராத₄னமாகும். 2 எம்பெருமானுடைய மந்த்ரங்களை (ஆசார்யன் மூலம்) கற்பது. 3. அவனுடைய அடியார்களை ஆராதி₄ப்பது. 4. எப்பெருமானுக்கு தினந்தோறும் திருவாராத₄னம்செய்வது. 5. அவனை த்₄யானிப்பது. 6. அவனுடைய மந்த்ரங்களைக்கொண்டு ஹோமம் செய்வது. 7. அவனுடைய மந்த்ரங்களைக்கொண்டு ஜபம் செய்வது. 8. அவனுடைய கதைகளைக் கேட்பது. 9. அவனுடைய திருநாமங்களை ஸங்கீர்த்தனம் செய்வது. 10. அவனுடைய ஸ்ரீபாத₃ தீர்த்த₂த்தைப் பருகுவது, 11. அவன் அமுதுசெய்ததை உண்பது. 12, அவனுக்கு முன்னால் வணங்குவது. 13. அவனுக்கு முன்னால் நாட்டியமாடுவது. 14. அவனுக்கு முன்னால் பாட்டுப் பாடுவது. 15. அவனைப்பற்றிய துதிகளைப் படிப்பது. 16. அவனைத் தவிர வேறு எவரையும் தொழாமலிருப்பது. இப்படிப் பதினாறு வகைகளில் தினந்தோறும் குறையற்ற நாராயணனை ஆராதி₄ப்பவன் எவனோ,

வைஷ்ணவனுன அவனே அந்தணனுவான். எல்லாவுலகிலும் பூஜிக்கப் படுவான். நெற்றியில் ஊர்த்₄வபுண்ட்₃ரமும், வலதுதோளில் ஸுத₃ர்ஶனமும், கழுத்தில் துளஸி, தாமரை மணிமாலைகளும், வலது கையில் பவித்ரமும், எம்பெருமானுேடு ஸம்ப₃ந்த₄த்தைக் காட்டுவதற்காக வைஷ்ணவனுல் த₄ரிக்கப்படவேண்டும். தனது இருதோள்களிலும் ஶங்க₂சக்ரங்களால் அடையாளம் செய்துகொள்ளவேண்டும். மனைவி, பிள்ளைகள், வேலைக்காரர்கள், பசுக்கள் முதலான எல்லாச் சேதனர்க்கும் அவர்கள் முக்தியடைவதற்காக ஶங்க₂சக்ராங்கனம் செய்யவேண்டும். குறிப்பாக அந்தணர்கள் மனைவி, மக்கள், பசுக்களோடு சக்ராங்கனம் செய்துகொள்ளவேண்டும். விஷ்ணு ஸம்ப₃ந்த₄முள்ள திருநாமங்களையும், அடையாளங்களையும் சிந்திக்கவேண்டும். தோள்களில் ஶங்க₂சக்ரங்களைத் தெளிவாகத் தெரியும்படி அடையாளம் செய்துகொள்ளவேண்டும். வேத₃ம் விதி₄க்கிறபடியால் எல்லா ஆஶ்ரமங்களிலிருப்பவர்களுக்கும், ஸ்த்ரீகளுக்கும் ஹோமம் முதலானவற்றைச் செய்து அதில் காய்ச்சப்பட்ட விஷ்ணுசக்ரத்தைக்கொண்டு வலதுதோளில் அடையாளம் செய்தபின்பே வைதி₃க கர்மங்களைச் செய்விக்கவேண்டும். அந்தணர் தலைவர்களே! பரிஶுத்₃த₄மானதாய் (வேத₃ங்களில் பவித்ரம் எனப்படுவதாய்), மிகச் சிறந்ததான சக்ரத்தை முறைப்படி த₄ரிப்பதினுல் விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைவான். அதை அடைய வேறு வழியில்லை. ஆகையால் ஸுத₃ர்ஶன சக்ரத்தை விதி₄ப்படி த₄ரித்தபின்பே எல்லாக் கர்மங்களையும் செய்யவேண்டும். அந்தணர் தலைவர்களே! சக்ரத₄ாரணம் செய்யும்போதே அந்தணத் தன்மை ஏற்படுகிறது என்று அறிவாளிகள் அறுதியிடுகிருர்கள். ஆகையால் அதற்குப் பின்பே ஜாதகர்மம், நாமகரணம், சௌளம், உபநயனம் முதலான அந்தணர்க்குரிய கர்மங்களைச் செய்யவேண்டும். அல்லது திருவஷ்டாக்ஷரம் முதலான மந்த்ரங்களை உபதே₃ஶம் பெறும்போதாவது முறைப்படி சக்ரத்தை த₄ரிக்கவேண்டும். த்₃விஜ ஶ்ரேஷ்ட₂ர்களே! முறைப்படி சக்ரத்தை த₄ரிக்காமல் யாக₃ம் செய்தல், குளம் வெட்டுதல் முதலான இஷ்டாபூர்த்தகர்மங்களைச் செய்தால் அவையனைத்தும் பயனற்றதாகும்.] என்று இந்த வஸிஷ்ட₂ஸ்ம்ருதியின் முதல் அத்தியாயமே ப₄க₃வத்பரத்வத்தைக் கல்வெட்டாகக் காட்டித் தருகிறது. பரமத₄ர்மஶாஸ்த்ரங்களின் ஸாரமாகவும் இருக்கிறது இனி, வைஷ்ணவர்களுக்கு நாமஸம்ஸ்காரத்தை வர்ணிக்கும் இரண்டாம் அத்தியாயத்திலுள்ள ஸாரமான சில ஶ்லோகங்களைக் காண்போம்.

தஸ்ய த₃க்ஷிணகர்ணே து ஜபேத₃ஷ்டாக்ஷரம் ஸ்வயம்।
மூர்த்₄நி ஹஸ்தம் விநிக்ஷிப்ய ஜபேச்ச த்₃வாத₃ஶாக்ஷரம் ||

ஷட₃க்ஷரேண மந்த்ரேண குஶை: ஸம்மார்ஜயேத் தநும் |
நாம குர்யாத் தத: பஶ்சாத்₃வைஷ்ணவம் பாபநாஶநம் ||
மாஸைஶ்ச வத்ஸரைஶ்சைவ மூர்த்திபி₄ர்த்₃வாத₃ஶைர்யுதம் |
ஆரப்₄ய மார்க்க₃ஶீர்ஷே து கேஶவாத்₃யைரதி₄ஷ்டி₂தம் ||
மாஸே யஸ்மிம்ஸ்து யோ ஜாதஸ்தஸ்ய தந்நாம கீர்த்திதம் |
தஸ்ய நைஸர்க்கி₃கம் நாம வைஷ்ணவம் து விதீ₄யதே ||
அந்யாநி சைவ நாமாநி கு₃ணயோகே₃ ப₄வந்தி ஹி |
ப்ரத₂மம் வைஷ்ணவம் நாம ஸர்வவர்ணேஷு கீர்த்திதம் ||
ந சேத்து வைஷ்ணவோ நாம யஸ்ய வை த்₃விஜஸ்த்தமா:! |
அநாமகஸ்ஸ விஜ்ஞேய: ஸர்வகர்மவிக₃ர்ஹித: ||
ஏவம் ஹி நாமகரணம் கர்த்தவ்யம் த்₃விஜஸத்தமா:! |
ஜாதகர்மண்யலாபே₄ து விஷ்ணோஶ்சக்ராதி₃ தா₄ரணே ||
சௌளோபநயநே வாபி தந்மந்த்ராத்₄யயநேऽபி வா |
விதி₄நா வைஷ்ணவம் சக்ரம் த₄ாரயித்வா த்₃விஜோத்தமா:! ||
கர்ம குர்யாத் தத: பஶ்சாத் ஶ்ரௌதஸ்மார்த்த வித₄ாநத: ||
[2-24...32]

[அந்தக் குழந்தையின் வலது காதில் தந்தையானவன் தானே திருவஷ்டாக்ஷரத்தை ஜபிக்கவேண்டும். கையைக் குழந்தையின் தலையிலே வைத்து த்₃வாத₃ஶாக்ஷரத்தை ஜபிக்கவேண்டும். ஷட₃க்ஷர மந்த்ரத்தினால் குஶங்களைக்கொண்டு குழந்தையின் உடம்பைத் தடவ வேண்டும். அதற்குப்பின் பாபங்களை அழிக்கும் விஷ்ணு ஸம்ப₃ந்த₄ முள்ள திருநாமங்களைக் குழந்தைக்கு வைக்கவேண்டும். அந்தந்த மாஸங்களுக்கும் வருஷங்களுக்கும் உரிய கேஶவன் முதலான பன்னிரண்டு மூர்த்திகளை உடைய எம்பெருமானுடைய திருநாமத்தை வைக்கவேண்டும். மார்கழி மாதம் கேஶவனால் அதி₄ஷ்டி₂க்கப்பட்டது. தை முதலாகக் கார்த்திகை ஈருகவுடைய மற்ற மாதங்கள் நாராயணன் முதலாக தா₃மோத₃ரன் ஈருகவுள்ள மூர்த்திகளால் அதி₄ஷ்டி₂க்கப் பட்டவை. எந்தக் குழந்தை எந்த மாதம் பிறந்திருக்கிறதோ அக் குழந்தைக்கு அந்த மாதத்திற்கான மூர்த்தியின் திருநாமத்தை வைக்கவேண்டும். குழந்தைக்கு அந்த வைஷ்ணவ நாமமே இயல் வானதாகக் கூறப்படுகிறது. மற்ற நாமங்களும் கு₃ணங்களையிட்டு வைக்கப்படுகின்றன. எல்லா வர்ணங்களுக்கும் வைஷ்ணவ நாமமே முக்கியமானது என்று சொல்லப்படுகிறது. அந்தணர் தலைவர்களே! எவனுக்கு வைஷ்ணவமான திருநாமம் இல்லையோ, அவன் பெய

ரில்லாதவன் என்றே அறியத்தக்கவன். அவன் எல்லாக்கர்மங்களுக்கும் தகுதியில்லாதவன். நாமகரணம் இவ்வண்ணமே செய்யப்பட வேண்டும். நாமகரணத்தை ஜாதகர்மத்தின்போதோ, இல்லாவிடில் சக்ராங்கனத்தின்போதோ, சௌளத்தின்போதோ, உபநயனத்தின் போதோ, ப₄க₃வந்மந்த்ரங்களை உபதே₃ஶம் பெறும்போதோ செய்ய லாம். அந்தணர் தலைவர்களே! விதி₄ப்படி விஷ்ணுவின் சக்ரத்தை த₄ரிக்கச் செய்தபின்பு ஶ்ருதிஸ்ம்ருதிகளில் விதி₄க்கப்பட்ட மற்ற கர்மங்களைச் செய்யவேண்டும்.]

இதிலிருந்து பரம்பொருளான விஷ்ணுவின் திருநாமங்களையே குழந்தைகளுக்கு வைக்கவேண்டும் என்பது விளங்குகிறது. பிள்ளைக்கு வைக்கப்பட்ட இந்நாமங்களைப் பெற்றோர்களும், உறவினர்களும் அடிக்கடி சொல்லுவதால், அவர்களது பாபங்கள் அழிந்து பரமபத₃ம் கூடக் கிடைக்கிறது என்பதை ஸ்ரீப₄ாக₃வதத்தில் அஜாமிளோபாக்₂ யானத்தில் காணலாம். இவ்விஷயத்தைப் பெரியாழ்வாரும் 'காசும் கறையுடை' [பெரியாழ்-திரு 4-6] என்னும் திருமொழியில் அருளிச்செய்தார்.

இனி, குழந்தைகளுக்கு உபநிஷ்க்ராமணம், அன்னப்ராஶனம் முதலான கர்மங்களை விவரிக்கும் மூன்றும் அத்தியாயத்தில் ப₄க₃வத் பரத்வம் முழங்கப்பட்டிருப்பதைக் காண்போம்.

அத₂ மாஸே சதுர்த்தே₂ து க்₃ருஹாந்நிஷ்க்ராமயேச்சி₂ஶும் ।
ஸுஸ்நாப்ய ஸமலங்க்ருத்ய ஸ்வஸ்திவாசநமாசரேத் ॥
அர்ச்சயேத் ப்ரயதோ விஷ்ணும் கர்மபி₄ஶ்ச ஸுஶோப₄நை: ।
கத₃லீப₂லஸம்யுக்தம் த₃த்₄யந்நம் ச நிவேத₃யேத் ॥
ஸஹஸ்ரநாமபி₄: ஸ்துத்வா நம:க்ருத்வா து விஷ்ணவே ।
புரதோ வாஸுதே₃வஸ்ய ஹோமம் குர்யாத்₃வித₄ாநத: ॥
ஆயம் கௌ₃ளரிதி மந்த்ரேண ஹம்ஸ: ஶுசிஷதி₃த்ய்ருசா ।
பரோமாத்ரேண ஸூக்தேந த₃த்₄யந்நம் ஜுஹுயாத்₃த்₃விஜ: ॥
ததோऽர்க்கமண்ட₃லே விஷ்ணும் த்₄யாத்வா ஸம்பூஜயேத்₃-
ஹிரண்மயவபுர்தே₃வம் ஶங்க₂சக்ரக₃த₃ாத₄ரம் ॥ [கு₃ரும்
பத்₃மாஸநஸ்த₂ம் தே₃வேஶம் ஸர்வாப₄ரணபூ₄ஷிதம் ।
குமாரமீக்ஷயேத்₃ப₄ாநும் ஜபந் வை ஸௌர்யதை₃வதம் ॥ [3-1...6]

[நாலாவது மாதத்தில் குழந்தையை வீட்டை விட்டு வெளியில் அழைத்துவரவேண்டும். நன்றாக நீராட்டி, அலங்கரித்து, ஸ்வஸ்தி

வாசனத்தைச் செய்யவேண்டும். புலனடக்கமுடையவனாய், அழகிய (தூ₄ப தீ₃பாதி₃) கர்மங்களால் விஷ்ணுவுக்குத் திருவாராத₄னம் செய்யவேண்டும். வாழைப்பழத்தோடு கூடிய தயிரமுதை எம்பெருமானுக்கு அமுதுசெய்யப்பண்ணவேண்டும். விஷ்ணுஸஹஸ்ரநாமத்தால் துதித்து, எம்பெருமானை வணங்கி, வாஸுதே₃வனை அவனுக்கு முன்னால் முறைப்படி ஹோமம் செய்யவேண்டும். "ஆயம் கௌ₃ள:" என்னும் மந்த்ரத்தாலும், "ஹம்ஸ: ஶுசிஷத்" என்னும் ருக்கினாலும், "பரோ மாத்ரயா" என்று தொடங்கும் விஷ்ணுஸூக்தத்தினாலும் அந்தணன் தயிரமுதை ஹோமம் செய்யவேண்டும். அதற்குப்பின் ஸூர்யமண்ட₃லத்தில் பெரியவனாய், பொன்மயமான திருமேனியையுடையவனாய், ஶங்க₂ சக்ர க₃தை₃களை த₄ரித்தவனாய், பத்₃மாஸனத்தில் வீற்றிருப்பவனாய், தே₃வர் தலைவனாய், எல்லா ஆப₄ரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவனாய், தே₃வனை விஷ்ணுவை த்₄யானித்து ஆராத₄னம் செய்யவேண்டும். ஸூர்யனை தே₃வதையாகக் கொண்ட மந்திரத்தை ஜபித்துக்கொண்டு, குழந்தைக்கு ஸூர்யத₃ர்ஶனம் செய்விக்கவேண்டும்.] என்னும் இவ்வத்தியாயத்தின் தொடக்கத்திலுள்ள உபநிஷ்க்ராமணவிதி₄யிலிருந்து ஸூர்யனுக்கு நடுவிலிருப்பவனாக ச₂ாந்தோ₃க்₃யம் முதலான உபநிஷத்துக்களில் ஓதப்பட்ட பரமாத்மா ஶங்க₂சக்ரக₃தா₃த₄ரனை நாராயணனே என்று விளங்குகிறது. அடுத்தபடியாக அன்னப்ராஶனத்தை விவரிக்கும்போது,

ஜப்த்வா ச பௌருஷம் ஸூக்தம் நமஸ்க்ருத்ய ஜநார்த்த₃நம் |
ஹரேர்நிவேதி₃தம் பஶ்சாத் ஶுபே₄ பாத்ரே விநிக்ஷிபேத் ||
த₃த்₄யாஜ்யமாக்ஷிகைர்யுக்தம் ப்ராங்முக₂ம் புரதோ ஹரே: |
ஹோம்நாசாந்நபதேந்நஸ்வ இதி மந்த்ரேண ப்ராஶயேத் ||
விப்ராம்ஶ்ச போ₄ஜயேத்₃வித்₃வாநாஶீர்பி₄ரபி₄நந்த₃யேத் |
அத₂ாஷ்டமே மாஸி குர்யாத்₃விஷ்ணு பூஜா வித₄ாநத: ||
ஸேவநை: குஸுமைர்தி₃வ்யை: பூஜயேத் புருஷோத்தமம் ||
[3-13...16]

[புருஷஸூக்தத்தை ஜபித்து, ஜநார்த்த₃னனை நமஸ்கரித்து, அந்த எம்பெருமானுக்கு அமுதுசெய்யப்பண்ணிய உணவை நல்ல பாத்திரத்தில் சேர்க்கவேண்டியது. தயிர், நெய், தேன் ஆகியவற்றோடு சேர்க்கப்பெற்ற உணவை எம்பெருமானுக்கு முன்னால் கிழக்கு முக₂மாக இருக்கும் குழந்தைக்கு "ஹோம்நாசாந்நபதேந்நஸ்வ(?)" என்னும் மந்திரத்தைச் சொல்லி ஊட்டவேண்டியது. அறிவாளியா

யிருப்பவன் அந்தணர்களுக்கு உணவளித்து, அவர்களைக்கொண்டு குழந்தைகளுக்கு ஆசீர்வாதமும் செய்விக்கவேண்டும். அதற்குப்பின் எட்டாவது மாஸத்தில் விஷ்ணுவைப் பூஜை செய்யவேண்டிய முறைப் படி—வணங்குவதன் மூலமும், நல்ல பூக்களை இடுவதன்மூலமும் புருஷோத்தமனுக்குத் திருவாராத₄னம் செய்யவேண்டும்.] என்று எம்பெருமானுடைய திருவாராத₄னத்தையும், புருஷஸூக்த ஜபத் தையும் செய்து, எம்பெருமான் அமுதுசெய்த உணவையே குழந்தைக்கு ஊட்டவேண்டும் என்று கூறியிருப்பது காணத்தக்கது. அதற்குப்பின் மூன்றாவது வயஸ்ஸில் செய்யவேண்டிய சௌளம் (குடுமிவைத்தல்) என்னும் கர்மத்தை விவரிக்கும்போது,

ஸ்நாத்வாऽபரேஹ்நி குர்வீத ஸ்வஸ்திவாசந பூர்வகம் ।
அர்ச்சயேந்மாத₄வீபுஷ்பை: கேஶவம் க₃ருட₃த்₄வஜம் ॥ [3-1-20]

[ஸ்வஸ்திவாசனத்தை முன்னிட்டுக் கொண்டு பிற்பகலில் ஸ்நானம் செய்து க₃ருட₃க்கொடியோனை கேஶவனை மாத₄வீ (குருக்கத்தி) புஷ்பங்களாலே அர்ச்சிக்கவேண்டும்] என்று எம்பெருமானுடைய அர்ச்சனை விதி₄க்கப்பட்டுள்ளது. எட்டாவது வயதில் செய்யவேண்டிய உபநயனத்தின்போது,

ஸ்நாத்வாபரேऽஹ்நி பூர்வாண்ஹே க்ருதஸ்வஸ்த்யயநோ பு₃த₄:।
விஷ்ணும் ஸம்பூஜயேத்₃தே₃வம் கரவீரை: ஸுக₃ந்தி₄பி₄: ॥
[3-38, 39]

[முற்பகலில் ஸ்வஸ்திவாசனம்செய்து, பிற்பகலில் ஸ்நானம்செய்து மணம்மிக்க கரவீர(அலரிப்)புஷ்பங்களாலே தே₃வனை விஷ்ணுவைப் பூஜிக்கவேண்டும்] என்று விஷ்ணுபூஜை விதி₄க்கப்பட்டுள்ளது. அடுத்த படியாகப் புண்ட்₃ரத₄ாரண விதி₄யை விளக்கும்போது,

ம்ருத₃ா ஶுப்₄ரேண ச தத₂ா ஊர்த்₄வபுண்ட்₃ரஞ்ச த₄ாரயேத் ।
நாமபி₄: கேஶவாத்₃யைஶ்ச யத₂ாஸங்க்₂யம் த்₃விஜோத்தமா: ! ॥
ஊர்த்₄வபுண்ட்₃ரம் ருஜூம் ஸௌம்யம் ஸுபார்ஶ்வம்
ஸுமநோஹரம் ।
மத்₄யே சி₂த்₃ரேண ஸம்யுக்தம் ஶ்ரீபத₃ாக்ருதிகம் ஹரே: ॥
லலாடே கேஶவம் த்₄யாயேந்நாராயணமதோ₂த₃ரே ।
வக்ஷ:ஸ்த₂லே மாத₄வஞ்ச கோ₃விந்த₃ம் கண்ட₂கே தத₂ா ॥
விஷ்ணுஞ்ச த₃க்ஷிணே குக்ஷௌ பா₃ஹுகே மது₄ஸூத₃நம் ॥
த்ரிவிக்ரமம் கந்த₄ரே து வாமகுக்ஷௌ து வாமநம் ॥

ஸ்ரீத₄ரம் ப₃ாஹுமூலே வாமே ஹ்ருஷீகேஶம் து வை பு₄ஜே।
க்₃ரீவாயாம் பத்₃மநாப₄ஞ்ச ப்ருஷ்டே₂ தா₃மோத₃ரம் தத₂ா॥
தத்ப்ரக்ஷாளநதோயேந வாஸுதே₃வேதி மூர்த்த₄நி।
ஸாந்தராலோர்த்₄வபுண்ட்₃ரஸ்ய மத்₄யே ஸ்ரீவிஷ்ணுத₄ாமநி॥
ஹரித்₃ராஸார ஸம்பூ₄தாம் தாம் நர: த₄ாரயேச்ச்₂ரியம்।
[3-49...55]

[அந்தணர் தலைவர்களே! வெள்ளை மண்ணாலே கேஶவன் முதலான பன்னிரு நாமங்களாலே பன்னிரண்டு ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை த₄ரிக்கச் செய்யவேண்டும். (வளைவில்லாமல்) நேரானதாய், அழகியதாய், அழகிய பக்கங்களை உடையதாய், நெஞ்சை மிகவும் ஈர்ப்பதாய், நடுவில் இடை வெளியுள்ளதாய், எம்பெருமானுடைய திருவடிகள் போன்ற அமைப் புள்ளதாய் ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை அணியவேண்டும். நெற்றியில் கேஶ வனையும், வயிற்றில் நாராயணனையும், மார்பில் மாத₄வனையும், கழுத்தில் கோ₃விந்த₃னையும், வயிற்றின் வலதுபுறம் விஷ்ணுவையும், வலது பு₄ஜத்தில் மது₄ஸூத₃னனையும், வலது (தோளும் கழுத்தும் சேரும் இடமான) கந்த₄ரத்தில் திரிவிக்ரமனையும். வயிற்றின் இடது புறம் வாமனனையும், இடது பு₄ஜத்தில் ஸ்ரீத₄ரனையும், இடது தோளும் கழுத்தும் சேருமிடத்தில் ஹ்ருஷீகேஶனையும். பத்₃மநாப₄னை முதுகின் கீழ்ப்புறமும், தா₃மோத₃ரனை முதுகின் மேற்புறமும் தியா னித்து,பன்னிரண்டு ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை அணியவேண்டும். எஞ்சிய திருமண்ணை அலம்பி, அந்நீரை வாஸுதே₃வனைத் தியானித்துத் தலையில் சேர்த்துக்கொள்ளவேண்டும். இடைவெளியோடு கூடிய ஊர்த்₄வபுண்ட்₃ரத்தின் நடுவே விஷ்ணுபாத₃ஸ்த₂ானத்தின் இடையில் ஹரித்₃ரா(மஞ்சள்)ஸாரத்தால் செய்யப்பட்ட ஸ்ரீசூர்ணத்தால் ஸ்ரீதே₃வி யைச் சேதனன் த₄ரிக்கவேண்டும்.] என்று கேஶவன் முதலான பன்னிரு மூர்த்திகளின் திருநாமத்தில் அமைந்த பன்னிரு திருமண்காப்புக்களை யும அணியும் முறை தெளிவாக விளக்கப்பட்டது. அடுத்தபடியாக,

ஸாவித்ரீம் வித்புத்ரெள(?) மூலமந்த்ரேண ஸம்ஸ்மரேத்।
நாராயணம் ஜக₃ந்நாத₂ம் ஸ்வகு₃ரும் மநஸா ஸ்மரந்॥
ஆதி₃த்ய மண்ட₃லாந்தஸ்த₂ம் த்₄யாத்வா விஷ்ணும் ஸநாதநம்।
ஜபேத்₃வா ப்ரணமேச்சைவ ஹம்ஸ: ஶுசிஷதி₃த்ய்ருசா॥
ப்₃ரூயாந்மந்த்ராதி₃கம் பஶ்சாத் ஶேஷம் கர்ம ஸமாசரேத்॥
[3-60...62]

[தனது ஆசார்யனை மனத்தால் நினைத்துக்கொண்டு, லோகநாத₂னாய், பழையோனாய், விஷ்ணுவெனப்படும் நாராயணனை ஆதி₃த்யமண்ட₃

லத்தின் உள்ளிருப்பவனைகத் தியானித்து, கா₃யத்ரியைத் திருவஷ்டாக்ஷரத்தோடு நினைத்துக்கொண்டு '' ஹம்ஸ: ஶுசிஷத் '' என்னும் மந்திரத்தால் ஜபித்து வணங்கவேண்டும். அதற்குப்பின் திருமந்திரம் முதலானவற்றை உபதே₃ஶித்து, எஞ்சிய ஹோமகர்மத்தைச் செய்ய வேண்டும்.] என்று ஸூர்யமண்ட₃லத்திலிருக்கும் நாராயணனை நினைத்துக்கொண்டு மூலமந்த்ரமான திருவஷ்டாக்ஷரத்தோடு கா₃யத்ரியை நினைக்கவேண்டும் என்று விதி₄க்கப்பட்டிருப்பது குறிக்கொள்ளத்தக்கது. அடுத்து ஸ்நானத்தை வர்ணிக்கும்போது,

மந்த்ரத்₃வயேநாபி₄மந்த்ர்ய தஸ்மிந் த்₄யாயேத் ஸநாதநம் |
அநந்தபே₄கக₃பர்யங்கே ஶயாநம் ரமயா ஸஹ ||
த்₄யாத்வா நிமஜ்ய தே₃வேஶம் த்ரி:படே₂த₃க₄மர்ஷணம் |
ததை₂வ மந்த்ரரத்நேந தர்ப்பயேத₃ப்ஸு நிமஜ்ய ச||[3-103,104]

[த்₃வயமந்திரத்தினால் நீரை அபி₄மந்த்ரணம் செய்து, அதில் திருவநந்தாழ்வானை படுக்கையில் ஸ்ரீதே₃வியோடு பள்ளிகொண்டிருப்பவனாய், பழையோனான தே₃வர் தலைவனைத் தியானித்து, நீரில் மூழ்கி அக₄மர்ஷண மந்திரங்களை மூன்றுமுறை படி₂க்கவேண்டும். நீராடியபின் த்₃வயமந்திரத்தினால் தர்ப்பணம் செய்யவேண்டும்.] என்று க்ஷீராப்₃தி₄நாத₂னைத் தியானித்து, த்₃வயமந்திரத்தினால் தர்ப்பணம் செய்யவேண்டும் என்று விதி₄த்திருப்பதிலிருந்து அந்தணன் எல்லாக்கர்மங்களையும் ப₄க₃வத்ஸ்மரணத்தோடே செய்யவேண்டும் என விளங்குகிறது. அடுத்தபடி ஸந்த்₄யாவந்த₃னத்தை விளக்கும்போது,

''ஆபோஹிஷ்டே₂தி மந்த்ரேண மார்ஜயேத்து த்₃வயேந ச''[112]
''ஸூர்யஶ்ச மேதி மந்த்ரேண...மந்த்ரரத்நேந ஸம்ப்ராஶ்ய''
[113]

என்று '' ஆபோஹிஷ்டா₂ '' என்னும் மந்திரத்தினாலும் த்₃வயத்தினாலும் மார்ஜனத்தையும், ''ஸூர்யஶ்ச மா'' என்னும் மந்திரத்தினாலும் த்₃வயத்தினாலும் ஜலப்ராஶனத்தையும் விதி₄த்து, ஆதி₃த்ய மண்ட₃லத்தின் நடுவிலிருக்கும் நாராயணனைத் தியானிக்கும்படி மூன்று ஶ்லோகங்களால் விதி₄க்கப்படுகிறது.

ஆதி₃த்யமண்ட₃லாந்தஸ்ஸ்த₂ம் த்₄யாத்வா விஷ்ணும் ஸநாதநம்|
ஶுத்₃த₄ஸ்ப₂டிகவர்ணாப₄ம் கோமளாங்க₃யுதை₄ர்யுதம் ||
ஸுஸ்நிக்₃த₄ நீலகேஶாந்தம் ரத்நகுண்ட₃லஶோபி₄தம் |
பத்₃மாஸநஸ்த₂ம் தே₃வேஶம் முக்தாத₃ாம விபூ₄ஷிதம் ||
ஶுக்லமால்யாம்ப₃ரத₄ரம் ஶுக்லக₃ந்த₄ாநுலேபநம் |
வாமாங்கே ச ஶ்ரியா யுக்தம் த்₄யாத்வா மந்த்ரம் ஜபேத் பு₃த₄: ||
[3-115...117]

[ஆதி₃த்யமண்ட₃லத்தின் நடுவிலிருப்பவனாய், பழையோனாய், வேறு நிறம் கலக்காத ஸ்ப₂டிகவர்ணத்தையுடையவனாய், அழகிய அவயவங்களோடும், ஆயுத₄ங்களோடும் கூடியவனாய், மிகவும் மழுமழுப்போடு இருக்கும் கறுத்த திருக்குழற்கற்றையுடையவனாய், ரத்னகுண்ட₃லங்களோடு விளங்காநிற்பவனாய், பத்₃மாஸனத்தில் எழுந்தருளியிருப்பவனாய், தே₃வர் தலைவனாய், முத்துமாலைகளால் அலங்கரிக்கப்பெற்றவனாய், வெள்ளைமாலையையும் வஸ்த்ரத்தையும் அணிந்திருப்பவனாய், வெளுத்த சந்தனத்தைப் பூசிக்கொண்டிருப்பவனாய், இடதுமடியில் ஸ்ரீதே₃வியோடு கூடியவனான விஷ்ணுவைத் தியானித்து, அறிவாளியாயிருப்பவன் மந்த்ரத்தை ஜபம் செய்யவேண்டியது.]

ப்₃ரஹ்மசாரி பி₄க்ஷை எடுப்பதைப்பற்றி அடுத்தபடியாகப் பேசும்போது,

"வைஷ்ணவேஷு ச மந்த்ரேஷு பி₄க்ஷாசரணமாசரேத் |
ந பை₄க்ஷம் ம்லேச்ச₂ லப்₃தே₄ து தண்டு₃லாந்திதரேஷு வா ||
ஆபத்₃யபி ந க்₃ருஹ்ணீத பாஷண்ட₃பதிதாதி₃ஷு ||"
[3-119, 120]

[ப்₃ரஹ்மசாரியானவன் வைஷ்ணவ மந்த்ரங்களை உச்சரித்துக்கொண்டு பி₄க்ஷை எடுக்கவேண்டும். மிலேச்ச₂னிடமிருந்து கிடைத்த பொருளையும், பாஷண்ட₃ர், பதிதர் முதலானவர்களிடமிருந்து கிடைத்த அரிசியையும் ஆபத்துக்காலமாகிலும் பி₄க்ஷையெடுக்கக்கூடாது ] என்று வைஷ்ணவ மந்திரங்களைக்கொண்டு பி₄க்ஷையெடுக்கவேண்டுமென்றும், பாஷண்டி₃களின் பொருளை பி₄க்ஷையெடுக்கக்கூடாது என்றும் விதி₄த்திருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமீதீஹ ப்ரத₃க்ஷிணம்|
பரிஷிச்ய த்வநேநைவ ஹ்யர்ப்பிதம் வைஷ்ணவேஷு ச ||
பஞ்சப்ராணும்ஶ்ச ஜுஹுயாத் பஞ்சைவாऽऽஹுதய: க்ரமாத் ||
த்₄யாயந்நாராயணம் தே₃வம் ததோ பு₄ஞ்ஜீத வாக்₃யத: |
[3-122, 123]

['ஸத்யம் த்வர்த்தேந பரிஷிஞ்சாமி' என்னும் மந்திரத்தைக்கொண்டு வைஷ்ணவர்களுக்கு அளித்து மிகுந்திருக்கும் அன்னத்தை வலமாகப் பரிஷேசனம்செய்து, ஐந்து ப்ராணாஹுதிகளையும் முறைப்படி செய்யவேண்டும். நாராயணனாகிற தே₃வனைத் தியானித்துக்கொண்டு

மௌனத்தோடு போ4ஜனம் செய்யவேண்டும்.] என்று வைஷ்ணவ ஶேஷமே உண்ணத்தக்கது என்றும், அதுவும் நாராயணனைத் தியானித்துக்கொண்டே உண்ணத்தக்கது என்றும் கூறியிருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

அடுத்தபடி 130-வது ஶ்லோகத்தில் ஊர்த்4வபுண்ட்3ரத்தை த4ரித்துகவொண்டு ஸந்த்4யாவந்த3னம் செய்யவேண்டும் என்று விதி4க்கப்பட்டது. பிறகு அர்க்4யப்ரதா3னத்தை விதி4க்கும்போது,

உத்தா2ய மண்ட3லே த்4யாத்வா வாஸுதே3வம் ஸநாதநம் ||
நீலோத்பலத3ளஶ்யாமம் ரக்தாம்போ4ருஹலோசநம் |
ஶங்க2ாஸி ஶார்ங்க3ாப்3ஜத4ரம் பீதவஸ்த்ரம் சதுர்பு4ஜம் ||
பத்3மநாப4ம் ஶ்ரியா யுக்தம் த்4யாயேத் ஸவித்ருமண்ட3லே |
த3த்3யாத3ர்க்4யத்ரயம் தஸ்மை க3ாயத்ர்யா விநயாந்வித: ||
ஆஸீநஶ்ச ஜபம் குர்யாத் ஸ்வல்பமஷ்டோத்தரம் ஶதம் |
தத2ா மந்த்ரத்3வயம் ஜப்த்வா.................... [3-132...135]

[எழுந்துநின்று பழையோனாய், நீலோத்பல இதழ்போல் கருநிற முடையவனாய், செந்தாமரை போன்ற கண்ணையுடையவனாய், ஶங்க2ம், வாள், வில், தாமரை ஆகியவற்றை த4ரித்திருப்பவனாய், பீதாம்ப3ரம் அணிந்தவனாய், நான்கு திருக்கைகளோடு கூடியவனாய், தாமரை உந்தியையுடையவனாய், ஸ்ரீதே3வியோடு கூடினவனை வாஸுதே3வனை ஸூர்யமண்ட3லத்தில் தியானிக்கவேண்டும். கா3யத்ரியை உச்சரித்துக்கொண்டு அடக்கத்தோடு கூடினவனாய், அந்த எம்பெருமானுக்கு மூன்று அர்க்4யங்களை ஸமர்ப்பிக்கவேண்டும். வீற்றிருந்து குறைந்த பக்ஷம் 108முறை கா3யத்ரியை ஜபிக்கவேண்டும். அப்படியே த்3வயமந்த்ரத்தையும் ஜபித்து......] என்று ஸூர்யமண்ட3லத்தில் வாஸுதே3வனைத் தியானிக்கவேண்டுமென்றும், த்3வயத்தை ஜபிக்கவேண்டுமென்றும் விதி4த்திருப்பது காணத்தக்கது.

மேலே இவ்வத்தியாயத்தில் அடிக்கடி நாராயண தியானமும், அவனுடைய மந்த்ர ஜபங்களும விதி4க்கப்பட்டிருப்பதைப் பின்வரும் ஶ்லோகங்களில் காணலாம்.

அர்ச்சயித்வா ஶுசௌ தே3ஶே ஹரிம் ஸர்வக3தம் தத2ா ||
பரித: பூஜயேத்3தே3வாந் ருஷீம்ஶ்ச குஸுமாக்ஷதை: |......
அஷ்டோத்தரஸஹஸ்ரம் து ஜபேத3ஷ்டாக்ஷரம் மநும் ||......

மண்ட₃லாப்₄யாம் ச ருக்₃ப்₄யாம் ச ஸூக்தைர் விஷ்ணு
ப்ரகாஶகை: ।
தத: ஸ்விஷ்டக்ருதம் ஹுத்வா ஹோமஶேஷம் ஸமாபயேத் ॥...
ப்ராகக்₃ரேஷு குஶேஷ்வேவமாஸீந: புரதோ ஹரே: ॥
வேதா₃நத்₄யாபயேத் தத்ர ஸாங்கோ₃பாங்க₃ஸமந்விதாந் ॥...
ஸ்நாத்வா விஷ்ணும் ஸமப்₄யர்ச்ய தர்ப்பயேத் பித்ருதே₃வதா:।...
அத்₄யாபயேத் தத: ஶிஷ்யாந் வித்₃யாமாரண்யகீம் கு₃ரு: ।
புரதோ வாஸுதே₃வஸ்ய நிர்ஜநே விஜநே ஸ்தி₂த: ॥

[எங்கும் நிறைந்தவனை ஹரியை ஶுத்₃த₄மான தே₃ஶத்தில் அர்ச்சனம் செய்து, அவனைச் சுற்றிலும் தே₃வர்களேயும், முனிவர்களேயும், பூக்களாலும் அக்ஷதையாலும் அர்ச்சிக்கவேண்டியது......அஷ்டாக்ஷர மந்திரத்தை 1008 தடவை ஜபிக்கவேண்டும்...ருக்₃வேத₃ மந்த்ரங்களாலும், மண்ட₃லங்களாலும், விஷ்ணுவைச் சொல்லும் ஸூக்தங்களாலும் ஹோமம் செய்து, ஸ்விஷ்டக்ருத் ஹோமம் செய்து,ஹோமத்தை நிறைவடைவிக்கவேண்டியது. இவ்வண்ணமாக ஹரியின் முன்னால் கிழக்கு நுனியான குஶங்களிலே வீற்றிருந்து அங்க₃ங்களோடும், உபாங்க₃ங்களோடும் கூடிய வேத₃ங்களே அத்₄யயனம் செய்விக்கவேண்டும்.... ஸ்நானம் செய்து, விஷ்ணுவை அர்ச்சனம்செய்து, பித்ருதே₃வதைகளுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டும்......வாஸுதே₃வனுக்கு முன்னால் மனிதர்களில்லாத காடுகளில் இருந்துகொண்டு ஆரண்யகங்களே ஆசார்யனானவன் ஶிஷ்யர்களுக்கு அத்₄யயனம் செய்விக்கவேண்டும்.]
இவ்வத்தியாயத்தின் கடைசியில்,

"பூர்வேஷு ஸர்வதீர்த்தே₂ஷு ஸம்யக்₃விஷ்ணும் ஸமர்ச்சயேத்" என்று தீர்த்த₂ங்களில் விஷ்ணுவின் அர்ச்சனத்தை விதி₄த்து,

"விஷ்ண்வாலயே வஸேத்₃வாபி ஶயீத நியதேந்த்₃ரிய: ।
நாலபேத்₃விஷ்ண்வப₄க்தைர் ந க்வாபி தைஸ்ஸஹ
ஸஞ்சரேத் ॥" [3-198]

[விஷ்ணுவின் ஆலயத்திலாவது வஸிக்கவேண்டும். புலனடக்கத்தோடு அங்கேயே படுக்கவேண்டும். விஷ்ணு ப₄க்தர்களல்லாதவர்களோடு பேசவும் கூடாது. அவர்களோடு எங்கும் ஸஞ்சரிக்கவும் கூடாது.] என்று எம்பெருமான் கோவிலிலேயே வாழவேண்டுமென்றும், அவன் அடியார்களல்லாதவர்களோடு ஸஹவாஸம் கூடாது என்றும் கூறியிருப்பதும் காணத்தக்கது.

இனி அடுத்ததான க்₃ருஹஸ்த₂ த₄ர்மத்தை விவரிக்கும் நாலாவது அத்தியாயத்தில், ப₄க₃வத் பரமான ஶ்லோகங்களைக் காண்போம்.

நைஷ்டி₂கேந வ்ரதேநாபி யாவஜ்ஜீவம் ஸமாசரேத் ।
வஸேத₃ாசார்யஸங்காஶே விஷ்ணோர்வா வைஷ்ணவேஷு வா ॥
அத₂வா பரிசர்யாயாம் விஷ்ணோர்தே₃வஸ்ய ஶார்ங்கி₃ண: ।
வைஷ்ணவாசார வ்ருத்₃த்₄யர்த்த₂முத்₃வஹேது₃த்தமாம் ஸ்த்ரியம் ।
பூஜயேத்₃ தே₃வதே₃வேஶம் பங்கஜை: குஸுமை: ஶுபை₄: ॥
அர்ச்சயேத்₃ரமயா ஸார்த்த₄ம் தி₃வ்யக₃ந்தை₄ர் மநோஹரை: ।
பாயஸம் ஶர்க்கராஜ்யாதி₃ ப்ரபூ₄தப₂லஸம்யுதம் ॥
ஸுஶீதலம் பாநகம் ச கர்ப்பூரேண ஸுவாஸிதம் ।
ஸபூக₃நாக₃பத்ராதி₃ தாம்பூ₃லஞ்ச ஸமர்ப்பயேத் ॥
பஶ்சாந்நீராஜநம் க்ருத்வா ஸர்வம் வஸ்து நிவேத₃யேத் ।
பஶ்சாத்புஷ்பாஞ்ஜலிம் த₃த்₃யாந்நமஸ்க்ருத்ய ச ஶார்ங்கி₃ணம் ॥
ஶ்ரீகேஶவ ஜக₃ந்நாத₂ உப₄யோ: பாத₃பாக்₃ரயோ: ।
அநயா ஸஹ ஸர்வத்ர பரிசர்யா ஸதா₃ாऽஸ்து மே ॥
ஏவம் ஸம்ப்ரார்த்₂ய தே₃வேஶம் பஶ்சாத் கர்ம ஸமாசரேத் ॥...
கந்யாமுத₃கபூர்வாம் ச த₃த்₃யாத் கந்யாப்ரத₃ாயக: ॥
வரம் லக்ஷணஸம்யுக்தம் விஷ்ணுரூபமநுஸ்மரந் ।...
அர்ச்சயேத்தம் ஶ்ரியா யுக்தம் புராணம் புருஷோத்தமம் ॥...
ப்ரவிஶ்ய ஸ்வக்₃ருஹே ரம்யே தஸ்மிந் ஸம்பூஜயேத்₃த₄ரிம் ॥
விதாநாதி₃ ஸுஶோப₄ாட்₄யம் மண்ட₃லே ஸுமநோஹரே ।
பூஜயேத் புஷ்பஶய்யாயாம் ஶ்ரியா ஸார்த்த₄ம் ஸநாதநம் ॥...
ஹரிம் ஸம்பூஜயேத் தத்ர ப₄க்த்யா ஸம்யக்₃வித₄ாநத: ।...
சதுர்த்தே₂ மாஸி க₃ர்ப்ப₄ஸ்த₂ம் ஸீமந்தோந்நயநம் சரேத் ।
ஷஷ்டே₂ऽஷ்டமே வா குர்வீத ஶுக்லபக்ஷே ஶுபே₄ தி₃நே ॥
நாந்தீ₃ஶ்ராத்₃த₄ம் து பூர்வாண்ஹே குர்வீத பித்ருதே₃வதா: ।
ஸ்நாத்வாऽபராண்ஹே குர்வீத ஸ்வஸ்திவாசநபூர்வகம் ॥
ஸுபுஷ்ப மண்ட₃பே ரம்யே விதாநத்₄வஜ ஶோபி₄தே ।
பூஜயேத்₃விதி₄வத்₃விஷ்ணும் ஸுக₃ந்த₄குஸுமை: ஶுபை₄: ॥
வஸ்த்ராலங்காரபூ₄ஷாத்₃யை: தூ₄பதீ₃பநிவேத₃நை: ।
ப₂லைஶ்ச ப₄க்ஷ்யபே₄ாஜ்யைஶ்ச விவிதை₄ஸ்த்விஷ்டகாரிதை: ॥
நாநாபக்ஷை: ஸுஹ்ருத்₃யைஶ்ச பூஜயேத்₃தி₄தபூர்வகம் ।
ததௌ த₃ம்பதீ நமஸ்க்ருத்ய லக்ஷ்ம்யா யுக்தம் ஸநாதநம் ॥...
நாமபி₄: கீர்த்தநைர் தி₃வ்யை: தே₃வதே₃வம் ஜநார்த்த₃நம் ।

[நைஷ்டிக ப்ரஹ்மசர்ய வ்ரதத்தையாவது ஆயுள் உள்ளவரையில் அநுஷ்டிக்கலாம். அப்போது ஆசார்யனுடைய ஸந்நிதியிலோ, விஷ்ணுவின் ஆலயத்திலோ, வைஷ்ணவர்களின் திருமாளிகைகளிலோ வஸிக்கவேண்டும். இப்படியிருக்க இயலாவிடில். சார்ங்கமென்னும் வில்லாண்ட தேவனாகிற விஷ்ணுவுக்குத் திருவாராதனம் செய்வதற்காகவும், வைஷ்ணவாசாரம் வளர்வதற்காகவும் நற்குடிப் பிறப்பு, ஒழுக்கம் முதலானவற்றோடு கூடிய சிறந்த ஸ்த்ரீயை விவாஹம் செய்து கொள்ளலாம்.......தேவதேவர்களுக்கும் தலைவனை எம்பெருமானைப் பெரியபிராட்டியாரோடு கூட நறுமணம்மிக்க அழகிய மங்களமான தாமரைப் புஷ்பங்களாலே அர்ச்சிக்கவேண்டும். ஏராளமான பழங்களோடு கூடிய சர்க்கரை, நெய், பாயஸம் முதலானவற்றையும், குளிர்ந்த பானகத்தையும், பச்சைக் கற்பூரத்தால் மணமூட்டப்பட்ட பாக்கு முதலானவற்றோடு கூடிய வெற்றிலையாகிற தாம்பூலத்தையும் ஸமர்ப்பிக்கவேண்டும். பிறகு ஆரத்தி எடுத்து அனைத்தையும் ஸமர்ப்பிக்கவேண்டும். அதற்குப்பிறகு ஶார்ங்கத்தையுடைய தேவனை வணங்கி, புஷ்பாஞ்ஜலியை ஸமர்ப்பிக்கவேண்டும். ''ஸ்ரீகேஶவனே! ஜகந்நாதனே! உன் இரு திருவடி நிலைகளில் இந்தப் பத்னியோடு கூட எல்லா தேஶங்களிலும், எல்லாக் காலங்களிலும் எனக்குக் கைங்கர்யங்கள் ஏற்படட்டும்'' என்று தேவர் தலைவனைப் ப்ரார்த்தித்து அதற்குப்பின் கர்மத்தைத் தொடங்கவேண்டும்....... தன் பெண்ணை விவாஹம் செய்துகொடுப்பவன் லக்ஷணங்களோடு கூடிய மாப்பிள்ளையை விஷ்ணுரூபமாகத் தியானித்துக்கொண்டு, பெண்ணை நீராலே தாரைவார்த்துக் கொடுக்கவேண்டும்....ஸ்ரீதேவியோடு கூடிய புராணபுருஷனை புருஷோத்தமனை அர்ச்சிக்கவேண்டும். அழகான தன் வீட்டில் நுழைந்து, அதில் ஹரிக்குத் திருவாராதனம் செய்யவேண்டும். மேற்கட்டி முதலான மங்களத் திரவியங்கள் நிறைந்த அழகிய ஸ்தானத்தில், பூம்படுக்கையில் ஸ்ரீ தேவியோடு கூடிய புராணபுருஷனை எம்பெருமானை ஆராதிக்கவேண்டும்... முறைப்படி ஹரியை பக்தியோடு அங்கு நன்கு ஆராதிக்கவேண்டும்.......கர்ப்பத்திலுள்ள குழந்தைக்கு நாலாவது மாதத்தில் ஸீமந்தோந்நயனம் என்னும் கர்மத்தைச் செய்யவேண்டும். ஆறாவது அல்லது எட்டாவது மாதத்திலும் சுக்லபக்ஷத்தில் நல்ல தினத்தில் செய்யலாம். முந்தின தினம் முற்பகலில் பித்ருதேவதைகளைக்குறித்து நாந்தீஶ்ராத்தம் செய்யவேண்டும். பிற்பகலில் ஸ்நானம் செய்து, ஸ்வஸ்திவாசனத்தை முன்னிட்டுக்கொண்டு (திருவாராதனம்) செய்யவேண்டும். மேற்கட்டி, கொடி முதலானவற்றால் அலங்கரிக்கப்பட்ட அழகிய புஷ்பமண்டபத்தில் நறுமணம்மிக்க மங்களமான புஷ்பங்க

ளாலே வஸ்த்ரம், அலங்காரம், ஆபரணங்கள், தூபம், தீபம், நிவே தனம் முதலானவற்றை ஸமர்ப்பித்து முறைப்படி விஷ்ணுவைப்பூஜிக்க வேண்டும். பழங்களாலும், வேண்டியவர்களால் செய்விக்கப்பட்ட வித விதமான பக்ஷணங்களாலும், அன்னங்களாலும், பலவிதமான அழகிய பொருள்களாலும் ஹிதத்தின் பொருட்டு எம்பெருமானுக்கு ஆராதனம் செய்யவேண்டும். லக்ஷ்மியோடு கூடிய புராணபுருஷனை அந்த திவ்ய தம்பதிகளை நமஸ்கரித்து......நாமங்களாலும், திவ்யமான கீர்த்த னங்களாலும் தேவதேவனை ஜநார்த்தனனைத் துதிக்கவேண்டும்.]

இவற்றிலிருந்து க்ருஹஸ்த தர்மங்களனைத்திலும் எம்பெருமா னுடைய திருவாராதனம் சேர்ந்திருக்கவேண்டும் என்று விளங்கு கிறது. அடுத்து ஸ்த்ரீதர்மத்தை விளக்கும் ஐந்தாம் அத்தியாயத்தி லும் முக்கியமான ச்லோகங்களைக் காட்டி இதை விளக்குவோம்.

ஸ்ரீசம் நத்வா குரூந்நத்வா பச்சாத் கர்ம ஸமாசரேத் ||...
விஷ்ணோர் நிவேதநார்த்தாய பாசயேதாதநாதித: ||
ஸ்நிக்தம் பத்யம் ததா சுத்தம் சுப்ரம் ருச்யம் மநோஹரம் |...
த்ரிகாலமர்ச்சயேந்நித்யம் வாஸுதேவம் ஸநாதநம் |
த்யாயந் ஜபந் நமஸ்குர்வந் கீர்த்தயந் நாமபி: சுபை: ||
ஏவம் வ்ரதஸமாசாரா நாராயண பராயணா |
ஸாபி பர்த்தாரமுத்த்ருத்ய ப்ரயாதி பரமாம் கதிம் ||

[ஸ்ரிய:பதியை வணங்கி, ஆசார்யர்களை வணங்கி, அதற்குப்பின் கர்மத்தை நடத்தவேண்டும்....விஷ்ணுவுக்குக் கண்டருளப் பண்ணுவ தற்காகவே — அழகியதும், ஆரோக்யத்தையளிக்கக் கூடியதும், சுத்தமானதும், வெளுத்ததும், ருசியுடையதும், நெஞ்சை ஈர்ப்பது மான அன்னம் முதலானவற்றைச் சமைக்கவேண்டும்.......ஸநாதன புருஷனை வாஸுதேவனை தினமும் முக்காலமும் அர்ச்சிக்க வேண்டும். அவனையே தியானித்துக்கொண்டும், ஜபித்துக்கொண்டும், நமஸ்கரித்துக்கொண்டும், மங்களமான திருநாமங்களாலே ஸங் கீர்த்தனம் செய்துகொண்டும் இருக்கும் இத்தகைய ஒழுக்கமுடைய வளாய், நாராயணனையே ப்ராப்யப்ராபகமாகக்கொண்டவளான மனைவி தன் கணவனையும் அழைத்துக்கொண்டு மேலான கதிக்குச் செல்கின்றாள்.]

இதிலிருந்து நாராயணனையே எல்லாமாகக் கொண்ட மனைவி யால் புருஷனுக்கும் பரமபதம் கிடைக்குமென்று விளங்குகிறது.

இனி நித்ய நைமித்திகவிதி₄களை விளக்கும் ஆருமத்தியாயத்தில் ப₄க₃வத்பரத்வம் பொலிகின்றதைக் காண்போம்.

ருஷய ஊசு:—

ப₄க₃வந் ப்₃ரூஹி தத்த்வேந விஷ்ணோராராத₄நம் பரம் ।
நித்யம் நைமித்திகம் யத்தந்மந்த்ராணாம் ச விதி₄ம் தத₂ா ॥
[6-1]

[ருஷிகள் கேட்டார்கள் — ப₄க₃வானே! விஷ்ணுவுக்கு மேலான ஆராத₄னமாயிருக்கும் நித்யநைமித்திக கர்மங்களையும், மந்த்ரங்களின் விதி₄யையும் உள்ளபடி உரைப்பீர்] என்று ருஷிகளால் கேட்கப்பட்ட வஸிஷ்டர்₂

ஸ்ரீவஸிஷ்ட₂ உவாச—

ஶ்ருணுத்₄வம் ருஷய: ஸர்வே ஹரிபூஜாவிதி₄ம் பரம் ।
நித்யமாராத₄நம் ஆதௌ₃ வக்ஷ்யாமி முநிஸத்தமா: ! ॥
ப்₃ராஹ்மே முஹூர்த்தே சோத்த₂ாய முக₂ம் ப்ரக்ஷாள்ய வாக்₃யத: ।
ஆசம்ய ப்ரயதோ பூ₄த்வா ஜபேத்₃கு₃ருபரம்பராம் ॥
விஷ்ணுஞ்ச மநஸா த்₄யாத்வா ப்ரணம்ய ச புந: புந: ।
யோக₃த்₄யாநவித₄ாநேந த்₄யாயேத்₃விஷ்ணுமதந்த்₃ரித: ॥
[6-2...4]

[வஸிஷ்ட₂ர் கூறினார் — ருஷிகளே! மேலான ஹரிபூஜையைக் கூறுகிறேன் கேளுங்கள். முனிவர் தலைவர்களே! முதலில் நித்யாராத₄னத்தைச் சொல்லுகிறேன். ப்₃ராஹ்ம முஹூர்த்தத்தில் (விடியற்காலையில்) படுக்கையிலிருந்து எழுந்திருந்து, முகத்தைக் கழுவிக்கொண்டு, மௌனத்தோடு ஆசமனம் செய்து, புலனடக்கம் உடையவனாய் கு₃ருபரம்பரையை அநுஸந்தி₄க்கவேண்டும். மனத்தினால் விஷ்ணுவைத் தியானித்து, மறுபடியும் மறுபடியும் வணங்கி, யோக₃த்₄யானமுறைப்படி சோம்பலில்லாமல் விஷ்ணுவைத் தியானிக்கவேண்டும்.] என்று விழித்தெழுந்தவுடனேயே எம்பெருமானைத் தியானிக்கவேண்டுமென்று விதி₄த்தார். அதற்குப்பின் எம்பெருமானுடைய திருவாராத₄னத்தைப் பின்வருமாறு விதி₄த்தார்,

தஸ்மிந்நாஸ்தீர்ய பர்யங்கம் ரம்யம் ஶ்லக்ஷ்ணந்தரே ஶுபே₄ ।
விகீர்ய தத்ர புஷ்பாணி ரம்யாணி ஸுரபீ₄ணி ச ॥

தஸ்மிந் ஶுபாஸநே தேவமர்ச்சயேத்ரமயா ஸஹ ।
ஸ்வர்ணேந ரஜதேநாபி தாம்ரகாம்ஸ்யாஶ்மதாருபி: ॥
தேவஸ்ய ப்ரதிமாம் குர்யாத் ஸர்வலக்ஷணஸம்யுதாம் ।
பத்மாஸநஸ்தம் தேவேஶம் ஸர்வலக்ஷணஶோபிதம் ॥
சதுர்புஜமுதாராங்கம் ஶங்கசக்ரகதாதரம் ।
சாமீகரஶ்ரியா யுக்தம் ஸர்வாபரணபூஷிதம் ॥
நீலயா ச தரண்யா ச பார்ஶ்வயோருபஶோபிதம் ।
ஏவஞ்ச ப்ரதிமாம் க்ருத்வா தேவம் ஸம்பூஜயேத்தரிம் ॥
ப்ரதிமாயா அபாவே து ஶிலாம் வா ஸம்ப்ரகல்பயேத் ।
ஸாளக்ராமஶிலாயாந்து ஸ்ம்ருத்வா பூர்வோக்தவிக்ரஹம் ॥
க்ருஷ்ணாஜிநே குஶே வாபி கம்பளே வாபி பீடகே ।
உபவிஶ்ய குரும் நத்வா பூஜயேத் ஸுஸமாஹித: ॥
பூஜயித்வா குரும் பூர்வம் பஶ்சாத்தேவம் ஸமர்ச்சயேத் ।
[6-37......44]

[அந்த மங்களமான பீடத்தில் அழகிய விரிப்பை விரித்து, இடைவெளிவிட்டு, அழகிய மணம்மிக்க புஷ்பங்களையிட்டு அழகாக அலங்கரித்து. அந்த மங்களமான ஆஸனத்தில் பிராட்டியோடுகூட எம்பெருமானை அர்ச்சிக்கவேண்டும். எம்பெருமானுடைய அர்ச்சாதிருமேனியை—பொன் அல்லது வெள்ளி அல்லது தாமிரம் அல்லது பித்தளை அல்லது கல் அல்லது மரம் ஆகிய ஏதாவது ஒன்றைக் கொண்டு, எல்லா லக்ஷணங்களும் பொருந்தியதாக அமைக்க வேண்டும். பத்மாஸனத்திலிருப்பவனும், எல்லா லக்ஷணங்களும் விளங்கா நிற்பவனும், நாலு திருக்கரங்களும் உடையவனும், விஶாலமான அவயவங்களையுடையவனும், ஶங்கசக்ரகதைகளை தரிப்பவனும், பொன்னுலான ஸ்ரீதேவியை (திருமார்பில்) உடையவனும், எல்லா ஆபரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவனும், இருபுறத்திலும் பூமி நீளாதேவிகளால் விளங்கா நிற்பவனுமான தேவர் தலைவனுமான ஹரியை அர்ச்சாரூபியாகச் செய்து திருவாராதனம் செய்யவேண்டும். அப்படி அர்ச்சைத் திருமேனியில்லாவிடில் ஸாளக்ராமசிலையை வைத்துக் கொள்ளலாம். ஸாளக்ராமசிலையில் முற்கூறிய திருமேனியுடையவனாக எம்பெருமானைத் தியானித்து, மான்தோல் அல்லது குஶம் அல்லது கம்பளம் அல்லது பீடம் ஆகியவற்றிலொன்றில் உட்கார்ந்துகொண்டு, ஆசார்யனை வணங்கி, ஶாந்தியோடு பூஜை செய்யவேண்டும். முதலில் ஆசார்யனைப் பூஜித்துப் பிறகு எம்பெருமானுக்குத் திருவாராதனம் செய்யவேண்டும்.]

இப்படி எம்பெருமானின் திருவாராத₄னத்தை வர்ணித்தபின்பு ஊர்த்₄வபுண்ட்₃ரவிதி₄ பின்வருமாறு விவரிக்கப்படுகிறது.

ஆசம்ய தா₄ரயேதூ₃ர்த்₄வபுண்ட்₃ரம் ஶாஸ்த்ரவிதா₄நத: |
நாஸிகாமூலமாரப்₄ய கேஶாந்தம் ஸுப்ரகல்பயேத் |
த்ர்யங்கு₃லம் தஸ்ய விஸ்தாரஶ்சதுரங்கு₃லமாயத: ||
ஸாந்தராளம் த்₃விஜ: குர்யாத் பார்ஶ்வாவங்கு₃லமாத்ரகம் |
தா₄ரயேதூ₃ர்த்₄வபுண்ட்₃ராணி லலாடே சோக்த பூர்வகம் ||
ஊர்த்₄வபுண்ட்₃ரஸ்ய மத்₄யே து லக்ஷ்மீஸ்தா₂நம்
ப்ரகல்பயேத் |
ஹாரித்₃ரேண ச சூர்ணேந குங்குமேந ஸுக₃ந்தி₄நா ||
த்₄ருதோர்த்₄வபுண்ட்₃ரதே₃ஹஸ்து ஸபவித்ரகரஸ்ததா₂ |
ஸோபவீதோ ப₃த்₃த₄ஶிக₂: ஸந்த்₄யாம் பூர்வோக்தவச்சரேத் ||
ஸ்நாநகர்மண்யஶக்தஸ்து தெ₄ளதே த்₄ருத்வாऽத₂ வாஸஸீ |
மந்த்ரை: ஸம்மார்ஜயேத₃த்₃பி₄: ஶுசிரப்₃தை₃வதைர்த்₃விஜ: ||
த்₄யாயந்நாராயணம் தே₃வம் மந்த்ரரத்நேந மார்ஜயேத் |
அபி₄மந்த்ர்ய ஜலம் ப்ராஶ்ய பஶ்சாதா₃சமநம் சரேத் ||...
தர்ப்பயேந்மந்த்ரரத்நேந ஶக்த்யா தே₃வம் ஜநார்த்த₃நம் ||
[6-48...55]

[ஆசமனம்செய்து, ஶாஸ்த்ரவிதி₄ப்படி ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை த₄ரிக்க வேண்டும். மூக்கில் மூலப்ரதே₃ஶத்திலிருந்து தொடங்கி, நெற்றியில் மயிர் தொடங்குமிடம்வரை அழகாக இடவேண்டும். மூன்று விரற்கடை அகலமும், நான்கு விரற்கடை உயரமும் இருக்கவேண்டும். ஒவ்வொரு பக்கத்திலும் ஒரு விரற்கடையளவுள்ளதாய், (ஓரங்குலம்) இடைவெளி யுள்ளதாய் இருபிறப்பாளன் ஊர்த்₄வபுண்ட்₃ரம் இடவேண்டும். இது போல் பன்னிரண்டு ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை த₄ரிக்கவேண்டும். நெற்றியில் முன் சொன்ன அளவுள்ளதாக அமைக்கவேண்டும். ஊர்த்₄வபுண்ட்₃ரத்தின் நடுவில் ஹரித்₃ரா எனப்படும் மஞ்சள், நறுமணம் மிக்க குங்குமம் ஆகியவற்றின் பொடியாலே பெரிய பிராட்டியாருக்கு இடமளிக்கவேண்டும். ஊர்த்₄வபுண்ட்₃ரங்களணிந்த தே₃ஹத்தையுடையவனாய், பவித்ரத்தைக் கையில் த₄ரித்தவனாய், பூணூல் அணிந்தவனாய், ஶிகை₂யை முடித்தவனாய் முற்கூறியபடி ஸந்த்₄யா வந்த₃னம் செய்யவேண்டும். ஸ்நானம் செய்ய ஶக்தியில்லாவிடில் இரு வெள்ளை வஸ்த்ரங்களை த₄ரித்துக்கொண்டு, ஜலத்தை தே₃வதை

யாகக்கொண்ட மந்த்ரங்களாலே ஶுத்3த4மான இருபிறப்பாளன் ஜலத்தைக்கொண்டு துடைத்துக்கொள்ளவேண்டும். மந்த்ரஸ்நான மான இதில் ஜலத்தை அபி4மந்த்ரணம்செய்து பருகி. மந்த்ரரத்னமான த்3வயத்தால் தே3வனை நாராயணனைத் தியானித்துக்கொண்டு துடைத்துக்கொள்ளவேண்டும். பிறகு ஆசமனம் செய்யவேண்டும்.... தே3வனை ஜநார்த்த3னனுக்கு மந்த்ரரத்னமான த்3வயததைக் கொண்டு இயன்றவரையில் தர்ப்பணம் செய்யவேண்டும்.]

இதிலிருந்து எல்லாக் கர்மங்களிலும் த்3வயாநுஸந்த4ானம் விதி4க்கப்பட்டிருப்பதைக் காண்கிறோம். அடுத்தபடி த்3வயத்துக்கு ரிஷி ச2ந்தே3ா தே3வதைகளைச் சொல்லி, த்3வயப்ரதிபாத்3யனை எம் பெருமானை வர்ணிக்கிறார் வஸிஷ்டர்.

பஞ்சவிம்ஶாக்ஷரோ மந்த்ர: ப்ரணவேந ஸமந்வித: ।
பதை3ஶ்சைவ ஸமாயுக்தோ மந்த்ரரத்நமிஹோச்யதே ॥...
ஸ்ரீமந்நாராயண: ப்ரோக்தோ தே3வதா ஜக3தீ3ஶ்வர: ॥
ச2ந்த3ஸ்து தே3வீ க3ாயத்ரீ ப்ரணவோ பீ3ஜமுச்யதே ।
ஶக்தி: ஶ்ரீஶ்சாத்ர விஜ்ஞேயா மந்த்ரரத்நஸ்ய ஸர்வதா3 ॥...
அநந்தே போ4க3பர்யங்கே ப2ணாரத்நவிசித்ரிதே ॥
தத்ராஸீநம் ஶ்ரியா ஸார்த்த4ம் நீலதே3ஹஸமந்விதம் ।
ஸூர்யகோடிப்ரதீகாஶம் பீதாம்ப3ரத4ரம் ஹரிம் ॥
ஸர்வலக்ஷணஸம்பந்நம் ஸர்வாப4ரணபூ4ஷிதம் ।
பத்3மாஸநஸ்தி2தம் தே3வம் காமலாவண்ய ஶோபி4தம் ॥
ப்ரபு2ல்லபத்3மபத்ராப4லோசநத்3வயஶோபி4தம் ।
ஶ்லக்ஷ்ணவாஸம் லஸத்3வக்த்ரம் ஸுப்4ரூயுக3லதாஞ்சிதம் ॥
உத்3யத்3தி3நகராராமகுண்ட3லாஸ்யவிராஜிதம் ।
ஸம்பூர்ணசந்த்3ரப்ரதிமம் ஸ்மிதவக்த்ரம் ஶுப4ாநநம் ॥
முக்தாதா3மலஸஜ்ஜ்யோத்ஸ்நத3ந்தாவளிவிராஜிதம் ।
ஸிம்ஹஸ்கந்த4ம் ஸுரூபாம்ஸம் வ்ருத்தாயதசதுர்ப்பு4ஜம் ॥
கேயூராங்க3த3ஹாராதி3பூ4ஷணைருபஶோபி4தம் ।
க்3ருஹீதஶங்க2சக்ராப்4யாமுத்3ப3ாஹுப்4யாம் விராஜிதம் ॥
வரத3ாப4யயுக்தாப்4யாமிதராப்4யாம் விராஜிதம் ।
ரத்நநூபுரஶோப4ாட்4யம் பத்3மயுக்3மவிராஜிதம் ॥
வாமாங்கே ஸம்ஸ்தி2தாம் தே3வீம் ஸ்மரேத் காஞ்சநஸந்நிப4ாம்।
ஸர்வலக்ஷணஸம்பந்நாம் ஸர்வாப4ரணபூ4ஷிதாம் ॥

து₃கூலவஸ்த்ரஸம்வீதாம் நீலகுஞ்சிதஶீர்ஷஜாம் |
ரக்தகுண்ட₃லஸம்யுக்தாம் ஸர்வாவயவஶோபி₄தாம் ||
தி₃வ்யசந்த₃நலிப்தாங்க₃ாம் தி₃வ்யாயுத₄விராஜிதாம் |
ஹஸ்தைஶ்சதுர்ப்பி₄: ஸம்யுக்தாம் கேயூராங்க₃த₃பூ₄ஷிதாம் ||
க்₃ருஹீதபத்₃மயுக₃ளஹஸ்தாப்₄யாம் ஸுவிராஜிதாம் |
க்₃ருஹீதமாதுலிங்க₃ாம் தாம் ஜாம்பூ₃நத₃கராம் தத₂ா ||
ஏவம் தே₃வீம் ஸ்மரேந்நித்யம் வாமாங்கே ஸததம் ஹரே:||
[6-67...69,72...82]

[இருபத்தைந்து அக்ஷரங்களோடு கூடியதாய் (ஆறு) பத₃ங்கள் கொண்டதாய், ப்ரணவத்தோடு சேர்ந்ததான த்₃வயமந்த்ரமே 'மந்த்ரரத்னம்' என்று கூறப்படுகிறது. லோகநாத₂னை ஸ்ரீமந்நாராயணனே இதற்கு தே₃வதையாகக் கூறப்படுகிறான். க₃ாயத்ரீ தே₃வி ச₂ந்த₃ஸ்ஸாகவும், ப்ரணவம் பீ₃ஜமாகவும் சொல்லப்படு கிறது. இந்த மந்த்ரரத்னத்திற்கு எப்போதும் ஸ்ரீதே₃வியே ஶக்தி யாக அறியத்தக்கவள்.......படத்திலுள்ள ரத்னங்களால் விசித்திர மாய் விளங்கும் திருவனந்தாழ்வான் மடியில் ஸ்ரீதே₃வியோடு கூட எழுந்தருளியிருப்பவனாய், நீலமான திருமேனியோடு கூடியவனாய், கோடிஸூர்யப்ரகாஶத்தை உடையவனாய், பீதாம்ப₃ரத்தை த₄ரித்த வனாய், ஸர்வலக்ஷணங்களும் நிறைந்தவனாய், எல்லாத் திருவாப₄ ரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவனாய், தாமரையாகிற ஆஸ னத்தில் எழுந்தருளியிருப்பவனாய், மன்மத₂ன் போன்ற அழகுடைய வனாய், மலர்ந்த தாமரையிதழ்போன்ற இரண்டு திருக்கண்களாலே விளங்கப்பெற்றவனாய், அழகிய மேல் வஸ்த்ரத்தோடு கூடியவனாய், விளங்காநிற்கும் திருமுகத்தையுடையவனாய், இரண்டு கொடிபோன்ற புருவங்களாலே அலங்கரிக்கப்பெற்றவனாய், உதயசூரியன்போல் விளங்கும் அழகிய குண்ட₃லங்களோடு கூடியதான திருமுக மண்ட₃லத்தோடு விளங்காநிற்பவனாய், பூர்ணசந்த்₃ரனையொத்த வனாய், ஒளியுள்ள திருப்பவளங்களையும், மங்க₃ளமான திருமுகத் தையும் உடையவனாய், முத்துவடம்போல் ஒளிவீசும் திருப்பற்க ளாலே பிரகாசிப்பவனாய், சிங்கத்தினுடையதுபோன்ற கழுத்துடைய வனாய், அழகிய தோளுடையவனாய், உருண்டு நீண்ட நான்கு திருக்கைகளையுடையவனாய், தோள்வளை, கைவளை, ஹாரம் முதலான ஆப₄ரணங்களால் அலங்கரிக்கப்பெற்றவனாய், ஶங்க₂சக்ரங் களை ஏந்திநிற்கும் இரு திருக்கைகளாலே விளங்காநிற்பவனாய், மற்ற இரு திருக்கைகளாலும் வரத₃முத்₃ரையும், அப₄யமுத்₃ரையும் காட்டி

நிற்பவனாய், ரத்னத்தாலான காற்சிலம்புகளாலே அழகுநிறைந்தவனாய், (திருவடிகளைத் தாங்கும்) இரு தாமரைகளாலே விளங்கா நிற்பவனாய், தே₃வனான ஹரியைத் தியானிக்கவேண்டும். அவனது இடதுமடியில் எழுந்தருளியிருப்பவளாய், பொன்னையொத்தவளாய், பெண்களுக்குள்ள எல்லா லக்ஷணங்களும் கூடியவளாய், எல்லா ஆப₄ரணங்களாலும் அலங்கரிக்கப்பெற்றவளாய், பட்டாடையணிந்தவளாய், கறுத்துச் சுருண்ட திருக்குழற்கற்றைகளையுடையவளாய், சிவந்த குண்ட₃லங்களோடு கூடியவளாய், எல்லா அவயவங்களிலும் அழகு நிறைந்தவளாய், தி₃வ்யசந்த₃னத்தால் பூசப்பெற்றவளாய், தி₃வ்யாயுத₄ங்களால் விளங்கா நிற்பவளாய், நாலு திருக்கைகளோடு கூடியவளாய், தோள்வளை கைவளைகளால் அலங்கரிக்கப்பெற்றவளாய், இரு தாமரைகளை ஏந்தியிருக்கும் இரு கைகளாலே விளங்கா நிற்பவளாய், மற்ற கைகளால் மாதுளம்பழத்தையும், பொன்னையும் ஏந்தியிருப்பவளான ஸ்ரீதே₃வியை எப்போதும் நினைக்கவேண்டியது]

எம்பெருமானின் திருவாராத₄னவிதி₄யை வர்ணிக்கும் இந்த ஆறும் அத்தியாயத்தில் மேலேயுள்ள ஸாரமானவையாய், ப₄க₃வத்பரத்வத்தை விளக்குவதாயுள்ள சில ஶ்லோகங்களை இனிக் காண்போம்.

நைவேத்₃யம் ஶேஷவிப்ரேப்₄யோ வைஷ்ணவேப்₄ய: ஸமர்ப்ப
ஏவம் ப்ராத: ஸமாராத்₄ய தே₃வம் நாராயணம் ஹரிம்॥ [யேத்।
ப்ராதரௌபாஸநம் குர்யாத் பூர்வோக்த விதி₄நா தத:। [6-122,123]

[எம்பெருமானுக்கு அமுதுசெய்த ப்ரஸாத₃த்தை அவனடியார்களான வைஷ்ணவ ப்₃ராஹ்மணர்களுக்கு அளிக்கவேண்டியது. இம்மாதிரியாக காலையில் தே₃வனாய் ஹரியான நாராயணனுக்குத் திருவாராத₄னம் செய்து அதற்குப் பின் முற்கூறியபடி காலை ஔபாஸனத்தைச் செய்யவேண்டும்.]

த்₄யாத்வா ஜக₃த்₃கு₃ரும் தத்ர தே₃வேஶம் ஜலஶாயிநம்।
மூலமந்த்ரேணாபி₄மந்த்ர்ய ஶிர:ஸம்மார்ஜநம் சரேத்॥ [6-136,137]

[(ஸ்நானம் செய்வதற்குமுன்) பாற்கடலில் பள்ளிகொண்டவனாய், லோகநாத₂னாய், தே₃வர்தலைவனை எம்பெருமானை அந்த நீரில் தியானித்து மூலமந்த்ரமான திருவஷ்டாக்ஷரத்தை உச்சரித்துக் கொண்டு தலையைத் துவட்டிக்கொள்ளவேண்டும்.]

ஆநுஷ்டுப₄ஸ்ய ஸூக்தஸ்ய த்ரிஷ்டுப₄ஸ்ய ச தே₃வதா ।
புருஷோ யோ ஜக₃த்₃பீ₃ஜம் ருஷிர்நாராயண: ஸ்ம்ருத: ॥
[6-151,152]

[அநுஷ்டுப் மந்த்ரங்களும், த்ரிஷ்டுப் மந்த்ரங்களும் நிறைந்த புருஷ ஸூக்தத்திற்கு ஜக₃த்காரணபுருஷனான நாராயணனே ரிஷியாவான்.]

ஏ்வம் நிவேத்₃ய தே₃வாய த₃த்₃யாத₃ாசமநம் தத: ।
ஸகர்ப்பூரம் ச தாம்பூ₃லம் புஷ்பமால்யம் ஸமர்ப்பயேத் ॥
தீ₃பைர்நீராஜநம் க்ருத்வா ஸ்துத்வா ஸ்துதிபி₄ரேவ ச ।
பூ₄ய ஏவ நம: க்ருத்வா ஶய்யாஞ்ச விநிவேத₃யேத் ॥
மங்க₃ளாஶாஸநம் க்ருத்வா கர்மஶேஷம் ஸமாபயேத் ।
ஹரேர்நைவேத்₃யஶேஷேண பஞ்சயஜ்ஞாந் ஸமர்ப்பயேத் ॥
[6-181...184]

[இவ்வண்ணம் எம்பெருமானுக்கு நிவேத₃னம் செய்து, அதற்குப்பின் ஆசமனத்தை அளிக்கவேண்டும். கர்ப்பூரத்தோடுகூடிய தாம்பூ₃லத்தையும், புஷ்பமாலையையும் ஸமர்ப்பிக்கவேண்டும். தீ₃பங்களாலே ஆரத்தியெடுத்து, துதிகளாலே துதித்து மறுபடியும் வணங்கி, எம்பெருமானுக்குப் படுக்கையும் ஸமர்ப்பிக்கவேண்டும். அவனுக்கு மங்க₃ளாஶாஸனம் செய்து திருவாராத₄னத்தை நிறைவுபடுத்த வேண்டும். எம்பெருமானுக்கு அமுதுசெய்த ஶேஷப்ரஸாத₃த்தைக் கொண்டு பஞ்சமஹாயஜ்ஞங்களைச் செய்யவேண்டும.]

வஸுப்₄யஶ்சைவ ருத்₃ரேப்₄ய: ஆதி₃த்யேப்₄யஸ்ததை₂வ ச ॥
ஏதாநுத்₃தி₃ஶ்ய ஹோதவ்யமந்நம் விஷ்ணுநிவேதி₃தம் ।
ஸ ஏஷ தே₃வயஜ்ஞஸ்து முநிபி₄: ஸம்ப்ரகீர்த்தித: ॥
[6-187,188]

[விஷ்ணுவுக்கு அமுதுசெய்விக்கப்பெற்ற அன்னத்தை வஸுககள், ருத்₃ரர்கள். ஆதி₃த்யர்கள் ஆகிய தேவர்களைக் குறித்தும் ஹோமம் செய்யவேண்டும். இதுவே பஞ்சமஹாயஜ்ஞங்களுள் ஒன்றான தே₃வ யஜ்ஞம என்று முனிவர்களால் சொல்லப்படுகிறது ]

அதிதி₂ர்யஸ்ய ப₄க்₃நாஶோ க்₃ருஹாத் ப்ரதிநிவர்த்ததே ॥
ஸ தஸ்மை து₃ஷ்க்ருதம் த₃த்வா புண்யமாத₃ாய க₃ச்ச₂தி ।
தஸ்மாத்தத்ராக₃தாந் விப்ராந் பூஜயேத₃விசாரயந் ।।...
தத்ர ஸூஸ்த₂ம் ஹரிம் ஜ்ஞாத்வா பூஜயேத₃விசாரயந் ॥

விஶிஷ்டோ வைஷ்ணவோ விப்ரோ க்₃ருஹம் ப்ரத்யாக₃தோ
ப்ரத்யுத்₃க₃ம்ய ப்ரணம்யாஶு பூஜயேத் தம் விதா₄நத: ॥ [யதி₃ ।
[6-192 ...195]

[எவனுடைய வீட்டிலிருந்து அதிதியானவன் விருப்பம் நிறைவேறப் பெருதவனுய், (உண்ணுமல்) திரும்புகிருனே அந்த அதிதி₂ அந்த வீட்டுச் சொந்தக்காரனுக்குத் தன்னுடைய பாபத்தைக்கொடுத்து விட்டு, அவனுடைய புண்யத்தைத் தான் எடுத்துச்செல்கிருன். ஆகையால் வீடு தேடிவந்த அந்தணர்களை, அவர்களைப் பற்றி ஆராய்ச்சி செய்யாமலே ஆராதி₄க்கவேண்டும்.... அவர்களிடத்தில் எம்பெருமானே எழுந்தருளியிருக்கிருன் என்று அறிந்து அவர்களுடைய கோ₃த்ரம், சரணம் முதலானவற்றை ஆராயாமல் ஆராதி₄க்க வேண்டும். சிறந்தவனுன வைஷ்ணவ ப்₃ராஹ்மணன் வீடுதேடி வந்தானுகில் அவனை எதிர்கொண்டழைத்து, வணங்கி முறைப்படி பூஜிக்கவேண்டும்.]

பி₄க்ஷாம் த₃த்₃யாத் ப்ரயத்நேந யதயே ப்₃ரஹ்மசாரிணே ।
விஷ்ணவர்ப்பிதம் து பு₄ஞ்ஜீயாத் தீர்த்த₂ப்ராஶநபூர்வகம் ॥
[6-203]

[ஸந்யாஸிக்கும், ப்₃ரஹ்மசாரிக்கும் முயன்று பி₄க்ஷையளிக்க வேண்டும். எம்பெருமானுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தைப் பருகி, அவன் அமுதுசெய்த அன்னத்தை உண்ணவேண்டும்.]

த்₃விராசம்ய விதா₄நேந ஸுக₂ாஸீந: ஸ்மரேத்₃த₄ரிம் ॥
இதிஹாஸபுராணுநி ஸ்வாத்₄யாயம் ச படே₂த் தத: ।
அஸ்தம் க₃தே தி₃நகரே ஸந்த்₄யாம் குர்வீத பூர்வவத் ॥
தத: ஸம்பூஜயேத்₃தே₃வம் பூர்வவத் ஸுஸமாஹித: ।
அஷ்டாக்ஷரவிதா₄நேந பூஜயேத்₃த்₃விஜஸத்தம: ॥
அகாரேணுேச்யதே விஷ்ணு: ஸ்ரீருகாரேண சோச்யதே ।
மகாரேணுேச்யதே ஜீவஸ்தயோர்தா₃ஸ உதா₃ஹ்ருத: ॥
[6-218...221]

[விதி₄ப்படி இரண்டுமுறை ஆசமனம்செய்து ஸுக₂மாக வீற்றிருப்பவனுய் ஹரியை நினைக்கவேண்டும். இதிஹாஸ புராணங்களையும், வேத₃ங்களையும் அதற்குப்பின் படிக்கவேண்டும். ஸூர்யன் அஸ்தமிக்கும்போது முன்போலே ஸந்த்₄யாவந்த₃னம் செய்யவேண்டும். அதற்குப்பின் முன்போல் மனஶ்ஶாந்தியுடனிருந்து எம்பெருமானுக்குத் திருவாராத₄னம் செய்யவேண்டும். அந்தணர் தலைவனுயிருப்பவன்

அஷ்டாக்ஷரவிதி₄ப்படி எம்பெருமானுக்குத் திருவாராத₄னம் செய்ய வேண்டும். அகாரத்தினுல் விஷ்ணு சொல்லப்படுகிருர். உகாரத்தினுல் ஸ்ரீதே₃வி சொல்லப்படுகிருள். மகாரத்தினுல் ஜீவன் சொல்லப்படுகிருன். இவ்வண்ணமாகப் பெருமாளுக்கும் பிராட்டிக்கும் ஜீவன் தா₃ஸனுயிருப்பவன் என்று ப்ரணவத்தில் சொல்லப்படுகிறது ]

அத₂ நைமித்திகம் வக்ஷ்யே ஹரேராராத₄நம் த்₃விஜா: ।
மந்த₃வாரே து ஸாயாஹ்நே (ஸாயாஹ்நம்) விதி₄வத் பூஜயேத் [ஹரிம் ॥
க₃ந்த₄புஷ்பாதி₃பி₄ர்தே₃வம் தூ₄பதீ₃பநிவேத₃நை:।
ப₂லை*ஶ்*ச ப₄க்ஷ்யபே₄ாஜ்யை*ஶ்*ச கீ₃தவாதி₃த்ரநர்த்தநை: ॥
அர்ச்சயேத₃ச்யுதம் ப₄க்த்யா யத₂ாவித்தாநுஸாரத: ।
ஏகாத₃*ஶ்*யாமுபவஸேத் பக்ஷயோருப₄யோரபி ॥
அர்ச்சயேஜ்ஜக₃தாமீ*ஶ*ம் பூஜாஜாக₃ரணாதி₃பி₄: ।
ப்ரப₄ாதே விமலே ஸ்நாத்வா த்₃வாத₃*ஶ்*யாம் புருஷோத்தமம்॥
அர்ச்சயேந்மாலதீபுஷ்பை: பய:ஸ்நாநம் ஸமர்ப்பயேத் ।
ப்₃ராஹ்மணாந் பே₄ாஜயேத்₃ப₄க்த்யா ஸ்வயம் குர்வீத பாரணம்॥
வைஷ்ணவர்க்ஷே து பூர்வாஹ்ணே பூஜயேத் ஸர்வதா₃ த்₃விஜ:।
ஸேவந்திகுஸுமைர்தி₃வ்யைர் தூ₄பதீ₃பைர் மநோஹரை: ॥
நிவேத₃யேச்ச த₃த்₄யந்நம் பாநம் ச *ஶ*ர்க்கராயுதம் ।
மத்₄யாந்ஹே பௌர்ணமாஸ்யாம் வா புந்நாகை₃*ஶ்* சம்பகைரபி ॥
பூஜயேத₃ச்யுதம் ப₄க்த்யா *ஶு*த்₃த₄ாந்நம் விநிவேத₃யேத் ।
ராத்ரௌ ஸம்பூஜயேத் தஸ்யாம் மல்லிகா குஸுமை: *ஶு*பை₄:॥
நிவேத₃யேத்₃ரௌப்யபாத்ரே பாயஸம் *ஶ*ர்க்கராந்விதம் ।
அமாயாந்து வி*ஶே*ஷேண மாஸி மாஸி ப்ரபூஜயேத் ॥
பூஜயேத் குஸுமை: குந்தை₃: கரவீரை: ஸபாடலை: ।
பிண்ட₃யஜ்ஞவித₄ாநேந அர்க்₄யாவாஹநபூர்வகம் ॥
பே₄ாஜயேத்₃ப்₃ராஹ்மணாந் ப₄க்த்யா பித்ரூநுத்₃தி₃*ஶ்*ய *ஶ*க்தித: ।
பித்ருரூபம் ஹரிம் தத்ர ப்ரீணாத்விதி ஹ வை ப்₃ருவந் ॥
குர்யாச்ச்₂ராத்₃த₄வித₄ாநேந விஷ்ணோராஜ்ஞாமநுஸ்மரந் ।
ப்ரஸாத₃தீர்த்தே₂ த₃த்₃யாத்₃வை பித்ருப்₄ய*ஶ்*ச வி*ஶே*ஷத:॥
க்₃ரஹணே ரவிஸங்க்ராந்தௌ *ஶ*க்த்யா தே₃வம் ப்ரபூஜயேத்।
தத்காலஸம்ப₄வை: புஷ்பை: தூ₄பதீ₃பைர் நிவேத₃நை: ॥

தபோமாஸி ஸிதே பக்ஷே த்₃வாத₃ஶ்யாம் ச விஶேஷத:।
வாராஹரூபிணம் தே₃வம் ஸம்யக் தத்ர ப்ரபூஜயேத் ॥...
ப்ராஜாபத்யர்க்ஷஸம்யுக்தம் க்ருஷ்ணே ஸா து ஶிவாஷ்டமீ ॥
ஸா ஜயந்தீதி விக்₂யாதா த்ரிஷு லோகேஷு விஶ்ருதா ।
தஸ்யாமுபோஷ்ய விதி₄வச்ச₂க்த்யா ஸம்பூஜயேத்₃த₄ரிம் ॥
ஜயந்த்யாமுபவாஸஶ்ச மஹாபாதகநாஶந: ।
ஸ கார்யஶ்ச யதா₂ ஶக்த்யா பூஜநீயஶ்ச கேஶவ: ॥
பா₃லக்ருஷ்ணம் விதா₄நேந ப₄ாநுருத்துங்க₃ஸம்ஸ்தி₂தம் ।
பூஜயேத் விவிதை₄: புஷ்பை: க₃ந்த₄தூ₄பாதி₃பி₄ஸ்ததா₂ ॥
நைவேத்₃யைர் விவிதை₄: ஶ்லக்ஷ்ணை: கு₃டா₃ாத்₃யை: க்ருஸரை
ராத்ரௌ ஜாக₃ரணம் குர்யாத் கீ₃தவாதி₃த்ரநிஸ்வநை: ॥ [ரபி।
இதிஹாஸபுராணநாம் பட₂நை: ஶ்ரவணைரபி ।
ப்ரபா₄தே விமலே ஸ்நாத்வா விஶிஷ்டை: வைஷ்ணவை: ஸஹ ॥
பூர்வவத் பூஜயேத்₃தே₃வம் ப்₃ராஹ்மணாம்ஶ்சைவ போ₄ஜயேத் ।
ஸ்வயம் ச பாரணம் க்ருத்வா விஷ்ணுமேவம் ப்ரபூஜயேத் ॥
ஸாமகா₃நைர்ந்ருத்தகீ₃தை: தூர்யகோ₄ஷை: ஸமாஹித: ।
நிவேஶ்ய க்ருஷ்ணம் தோ₃லாயாம் தோ₃லயேத்₃ ப₄க₃வத்பர: ॥
அபூபாந் ஶர்க்கரோபேதாந் நிவேத்₃ய விநிவேஶயேத் ।
ஏவம் ஸம்பூஜயேத்₃தே₃வம் வர்ஷே வர்ஷே ச வைஷ்ணவ: ॥
மாஸி சைத்ரே ஶுக்லபக்ஷே நவம்யாம் ச புநர்வஸௌ ।
கௌஸல்யாயாம் ஸமுத்பந்நோ விஷ்ணு: காகுத்ஸ்த₂ ஈரித: ॥
தஸ்யாம் ஸ்நாநோபவாஸாத்₃யை: பூஜாஜாக₃ரணாதி₃பி₄: ।
அர்ச்சயேத் க₃ந்த₄புஷ்பாத்₃யை: கீ₃தவாதி₃த்ரநர்த்தநை: ॥
மஹோத்ஸவம் ப்ரகுர்வீத க்ருஷ்ணஜந்மநிவந்நர: ।
ஶ்ரவணேந ஸமாயுக்தா மாஸே பா₄த்₃ரபதே₃ ஸிதா ॥
த்₃வாத₃ஶீ ஸா மஹாபுண்யா நாம்நா து விஜயாதிதி₂: ।
தஸ்யாம் ஸ்நாதோ விதா₄நேந ஸர்வம் தீர்த்த₂ப₂லம் லபே₄த் ॥...
வாமநம் பூஜயேத்₃விஷ்ணும் காஶ்யபேயம் ஸநாதநம் ॥
குந்தை₃ஶ்ச குடஜைர்ஹோமஸ்துலஸ்யா: கோமலைர்த₃லை: ।
த₃த்₄யந்நம் ப₂லஸம்யுக்தம் ததை₂வ ச கு₃டோ₃த₃நம் ॥
ப₄க்த்யா ஸம்பூஜயேத்₃தே₃வம் விப்ராந் ஸம்போ₄ஜயேத் ததா₂ ।
கார்த்திகே மாஸி நியமாத்ஸாயம் ஸந்த்₄யாஸமாக₃மே ॥

அர்ச்சயேந்மாலதீபுஷ்பை: தத₂ா ரக்தோத்பலைரபி |
தீ₃பாநாரோபயேத் தத்ர திலதைலஸமந்விதாந் ||
ஸுஹ்ருத்₃யம் பாயஸாந்நம் ச நைவேத்₃யம் விநிவேத₃யேத் |
நிரந்தரம் த₄நுர்மாஸே பூஜயேத₃ருணோத₃யே ||
தூர்யகோ₄ஷைர்ந்ருத்யகீ₃தை: சத்ரசாமரஸம்யுதை: |
அபூபாந் க்₄ருதபக்வாம்ஶ்ச ஶர்க்கராஶ்ச ஸமர்ப்பயேத் ||
ஶால்யந்நம் த₃தி₄ஸம்யுக்தம் கத₃லீப₂லஸம்யுதம் |
ப₄க்த்யா நிவேத₃யேச்சைவ மாஸமேகம் து வைஷ்ணவ: ||
பூஜயேத்₂த₄ரிபத்ரைஶ்ச சம்பகைர்ப₃குலைரபி |......
ப₂லைஶ்ச விவிதை₄ர்ப₄க்த்யா ஶக்த்யா தே₃வம் ச பூஜயேத் ||...
வைஷ்ணவேஷு யத₂ாகாலே ஆக₃தேஷு மஹாத்மஸு ||
தத்ராப்யேவம் வித₄ாநேந குர்வீதோத்ஸவமுத்தமம் |
தத்காலஸம்ப₄வைர் த்₃ரவ்யைர் யத₂ாஶக்த்யநுஸாரத: ||
உத்ஸவம் வாஸுதே₃வஸ்ய குர்வீத ஶ்ரத்₃த₄யாந்வித: |
புஷ்பை: ப₂லோபஹாரைர்வா குர்யாத₃ாஸ்திக்ய ப₄ாவத: ||
உத்ஸவே வாஸுதே₃வஸ்ய ஸ்ப்ருஷ்டாஸ்ப்ருஷ்டிர்ந வித்₃யதே |
உத்ஸவே வாஸுதே₃வஸ்ய ய: ஸ்நாதி ஸ்பர்ஶஶங்கயா ||
ஸ்வர்க்க₃ஸ்த₂ா: பிதரஸ்தஸ்ய பதந்தி நரகேஷு ச |...
நித்யநைமித்திகேஷ்வேவம் விஷ்ணோராராத₄நக்ரம: ||
புரா யதே₂ாக்தவிதி₄நா யா வை ப்ரோக்தா த்₃விஜோத்தமா: ||

[6-232...280]

[அந்தணர்களே! இனிமேல் எம்பெருமானுடைய நைமித்திகமான (ஒரு காரணத்தையொட்டி வரும்) ஆராத₄னத்தைக் கூறுகிறேன். சனிக்கிழமையில் மாலை வேளையில் சந்தனம், புஷ்பம், தூ₄பம், தீ₃பம் முதலானவற்றை ஸமர்ப்பித்து எம்பெருமானை முறைப்படி ஆராதி₄க்கவேண்டும். பழங்கள், ப₄க்ஷணங்கள், உண்ண இனிய பிரஸாத₃ங்கள் முதலானவற்றாலும், பாட்டு, வாத்தியம், நாட்டியம் ஆகியவற்றாலும் த₄னஸௌகர்யத்துக்குத் தகுந்தபடி ப₄க்தியோடு அச்யுதனை ஆராதி₄க்கவேண்டும். இரண்டு பக்ஷங்களிலும் ஏகாத₃ஶியில் உபவாஸம் இருக்கவேண்டும். திருவாராத₄னம், கண் விழித்திருத்தல் முதலானவற்றால் லோகநாத₂னை எம்பெருமானை உகப்பிக்கவேண்டும். விடியற்காலையில் ஸாத்விகமான ப்₃ராஹ்ம

முஹூர்த்தத்தில் நீராடி, த்3வாத3ஶியில் புருஷோத்தமனுக்கு மாலதீபுஷ்பங்களால் அர்ச்சனம் செய்து, பாலால் திருமஞ்சனம் செய்யவேண்டும். அந்தணர்களை அன்புடன் அமுது செய்வித்துத் தானும் பாரணை செய்யவேண்டும். விஷ்ணுவினுடையதான திருவோண நக்ஷத்திரத்தில் இருபிறப்பாளன் எப்போதும் விடியற்காலையில் அழகான செவ்வந்திப் புஷ்பங்களால் நெஞ்சை ஈர்க்கும் தூ4ப தீ3பங்களை ஸமர்ப்பித்து ஆராதி4க்கவேண்டும். தயிரமுதையும், சர்க்கரை கலந்த பானகத்தையும் நிவேத3னம் செய்யவேண்டும். பௌர்ணமியில் நண்பகலில் புன்னைப் பூக்களாலும், செண்பகப்பூக்களாலும் ப4க்தியோடு அச்யுதனை ஆராதி4த்து, ஶுத்3த4ான்னத்தை நிவேத3னம் செய்ய வேண்டும். அன்றிரவு மங்க3ளமான மல்லிகை மலர்களால் அர்ச்சனம் செய்து, வெள்ளிப்பாத்திரத்தில் சர்க்கரை கலந்த பாயஸத்தை நிவேத3னம் செய்யவேண்டும். அமாவாஸ்யையன்று ஒவ்வொரு மாஸத்திலும் சிறப்பாகத் திருவாராத4னம் செய்யவேண்டும். குருந்த புஷ்பங்களாலும், அரளிப்பூவாலும், பாதிரிப்பூவாலும அர்ச்சிககவேண்டும். அர்க்4யமளித்து ஆவாஹனம்செய்து, பிண்ட3 யஜ்ஞ விதி4ப்படி பித்ருககளை உத்3தே3ஶித்து இயன்றவரை அந்தணர்களுக்கு உணவளிக்கவேண்டும். 'ஹரி உகப்படையட்டும்' என்று சொல்லிக்கொண்டு, பித்ருரூபனான ஹரியை உத்3தே3ஶிதது, அவ்வெம்பெருமானின் ஆணையை நினைத்துக்கொண்டு விதி4ப்படி ஶ்ராத்3 த4ம் செய்யவேண்டும. பித்ருக்களுக்கு எம்பெருமான் அமுதுசெய்த பிரஸாத3 தீர்த்த2ங்களைச் சிறப்பாக அமுது செய்விககவேண்டும். க்3ரஹணத்திலும, கடக ஸங்க்ராந்தியிலும, மகர ஸங்க்ராந்தியிலும் இயன்ற வரையில் எம்பெருமானுக்கு அந்தந்தக் காலங்களில் கிடைக்கக்கூடிய புஷ்பங்களையும், தூ4பதீ3பங்களையும் அளித்துத் திருவாராத4னம் செய்யவேண்டும். மாசி மாஸத்தில் சுக்ல பக்ஷ த்3வாத3ஶியில் வராஹ ரூபியான எம்பெருமானுக்குச் சிறப்பாகத் திருவாராத4னம் செய்யவேண்டும், ரோஹிணி நக்ஷத்திரத்தோடு கூடிய மங்க3ளமான கிருஷ்ணபக்ஷ அஷ்டமி 'ஜயந்தி' என்று பெயர் பெற்றதாய், மூவுலகங்களிலும் புகழ் பெற்றதாயுள்ளது. அன்று உபவாஸமிருந்து முறைப்படி இயன்ற வரையில் திருவாராத4னம் செய்யவேண்டும். ஜயந்தியில் உபவாஸமிருப்பது பெரும் பாபங்களைப் போக்கக்கூடியது. இயன்ற வரையில் அன்று உபவாஸமிருந்து கேஶவனை ஆராதி4க்கவேண்டும். உச்சியிலிருக்கும் ஸூர்யன் போன்ற பா3லகிருஷ்ணனை முறைப்படி விதவித4மான புஷ்பங்களையும், சந்தனம், தூ4பம் முதலானவற்றையும் ஸமர்ப்பித்து, பல வித4மான நிவேத3னங்கள், ஶுத்3த4மான வெல்லம் முதலானவை,

எள்ளோரை ஆகியவற்றை அமுதுசெய்வித்து, ஆராதநம் செய்யவேண்டும். பாட்டு, வாத்யம் முதலானவற்றின் இனிய ஒலிகளோடு இதிஹாஸ புராணங்களைப் படிக்கச் செய்து, கேட்கச் செய்து, இரவு முழுவதும் கண் விழிக்கவேண்டும். ஸாத்விகமான விடியற்காலை வேளையில் நீராடி, சிறந்தவர்களான வைஷ்ணவர்களோடுகூட முன்போல் எம்பெருமானை ஆராதிக்க வேண்டும். அந்தணர்களையும் அமுது செய்விக்கவேண்டும். தானும் பாரணம் செய்து எம்பெருமானுக்குப் பின்வருமாறு திருவாராதநம் செய்யவேண்டும். ஸாமகாநம், நாட்டியம், ஸங்கீதம், வாத்ய கோஷங்கள் ஆகியவற்றோடு மிகவும் ஈடுபட்டவனாய், எம்பெருமானிடம் பரிவுடையவனாய், கண்ணனை ஊஞ்சலில் வைத்து ஆட்ட வேண்டும். சர்க்கரையோடு கூடிய அப்பங்களை நிவேதநம் செய்து (கோயிலாழ்வாரில்) எழுந்தருளப்பண்ண வேண்டியது. இவ்வண்ணமாக வைஷ்ணவனாயிருப்பவன் ஒவ்வொரு வருஷத்திலும் ஜயந்தியில் கண்ணனுக்குத் திருவாராதநம் செய்யவேண்டும். சித்திரை மாஸத்தில் சுக்லபக்ஷ நவமியோடு கூடிய புனர்வஸுவில் கௌஸல்யா தேவியிடம் அவதரித்த விஷ்ணு, ககுத்ஸ்த வம்ஶத்தில் பிறந்தவனாகையால் காகுத்தன் எனப்படுகிறான். அன்று நீராடி, உபவாஸமிருந்து, கண்விழித்திருந்து, திருவாராதநம் முதலானவற்றைச் செய்து, சந்தனம், மலர்கள் முதலானவற்றையிட்டு எம்பெருமானுக்கு அர்ச்சனம் செய்யவேண்டும். பாட்டு, வாத்தியம், நாட்டியம் முதலானவற்றோடுகூட ஸ்ரீகிருஷ்ண ஜயந்தியிற்போலே மஹோத்ஸவத்தைச் செய்யவேண்டும். புரட்டாசி மாதத்தில் திருவோண நக்ஷத்திரத்தோடு கூடிய சுக்லபக்ஷ த்வாதஶி திதி மிகவும் புண்யமுடைய விஜயாதிதி என்று அழைக்கப்படுகிறது. அன்று முறைப்படி ஸ்நானம் செய்பவர் எல்லாத் தீர்த்தங்களிலும் நீராடிய பலனை அடைவர்......அந்தத் திதியில் காஶ்யபருக்குப் பிள்ளையாய்ப் பிறந்த ஸநாதனனாய் வாமனனான விஷ்ணுவை ஆராதிக்கவேண்டும். குருந்த மலர்களாலும், குடஜப் பூக்களாலும், துளசிக்கொழுந்திதழ்களாலும் ஹோமம் செய்யவேண்டும். பழங்களோடு கூடிய தயிரமுதையும், சர்க்கரைப் பொங்கலையும் அமுது செய்வித்து, பக்தியோடு எம்பெருமானுக்குத் திருவாராதநம் செய்யவேண்டும். அவ்வண்ணமே அந்தணர்களை அமுது செய்விக்கவேண்டும். கார்த்திகை மாஸத்தில் தினமும் மாலை வேளையில் மாலதிப்புஷ்பங்களையும், செவ்வல்லி மலர்களையுங்கொண்டு எம்பெருமானை ஆராதிக்கவேண்டும். நல்லெண்ணெயைக் கொண்டு திருவிளக்கு ஏற்றவேண்டும். மிகவும் நெஞ்சுக்கினிய திருக்கண்ணமுதை எம்பெருமானுக்கு அமுது செய்விக்க

வேண்டும். மார்கழி மாதத்தில் அருணேதயத்தில் தினந்தோறும் வாத்தியம், நாட்டியம், சங்கீதம் ஆகியவற்ருேடு ச$_2$த்ர சாமரங்களை யும் ஸமர்ப்பித்து, நெய்யில் சமைக்கப் பெற்ற அப்பங்களையும், சர்க்கரையையும் அமுதுசெய்விக்கவேண்டும். தயிரோடும் வாழைப்பழத் தோடும் கூடிய செந்நெல் பிரஸாத$_3$த்தை அந்த மாதம் முழுவதும் ப$_4$க்தியோடு வைஷ்ணவன் எம்பெருமானுக்கு அமுது செய்விக்க வேண்டும். துளசி, செண்பகம், மகிழம்பூ ஆகிய மலர்களைக்கொண்டு அர்ச்சிக்கவேண்டும்......பலவித$_4$மான பழங்களை ஸமர்ப்பித்து அன் போடு இயன்றவரையில் திருவாராத$_4$னம் செய்யவேண்டும்............ மஹாத்மாக்களான வைஷ்ணவர்கள் எந்தக் காலத்தில் எழுந்தருளு கிருர்களோ அந்தக் காலத்திலும் விதி$_4$ப்படி எம்பெருமானுக்குச் சிறந்த உத்ஸவத்தைச் செய்யவேண்டும். அந்தக் காலத்தில் கிடைக்கும் திரவியங்களைக் கொண்டு இயன்றவரையில் ச்ரத்$_3$தை$_4$யோடு கூடியவ ஞய், மலர்களையும், பழங்கள் முதலான உபஹாரங்களையும் ஸமர்ப் பித்து. ஆஸ்திக்யத்தோடு கூடியவஞய், வாஸுதே$_3$வனுக்கு உத் ஸவத்தைச் செய்யவேண்டும். வாஸுதே$_3$வனுடைய உத்ஸவத்தில் இன்னுரைத் தொடலாம், இன்னுரைத் தொடலாகாது என்னும் சாஸ்த்ர வரம்பு கிடையாது. வாஸுதே$_3$வனுடைய உத்ஸவத்தில் எவனொருவன் தீண்டத்தகாதவனைக் தீண்டிவிட்டோம் என்று நீராடு கிருனே அவனுடைய பித்ருக்கள் ஸ்வர்க்க$_3$த்திலிருந்து நரகத்தில் விழுவார்கள். அந்தணர் தலைவர்களே! நித்யநைமித்திக காலங்க ளில் விதி$_4$ப்படி எம்பெருமானை நீண்டகாலமாக ஆராதி$_4$க்கும் முறை இதுவரை சொல்லப்பட்டது ] அடுத்தபடி விவரிக்கப்படும் அமா வாஸ்யாஶ்ராத்$_3$த$_4$த்தில்—

ஹரேர்நிவேதி$_3$தம் த$_3$த்$_3$யாத் ஸர்வமாநந்த்யமஶ்நுதே ||[6-301]

[எம்பெருமான் அமுது செய்ததைப் பித்ருக்களுக்கு அளிக்கவேண்டும். அதனுல் நிலையான மோக்ஷப$_2$லத்தைப் பெறுகிருன்.] என்று கூறப் பட்டது காணத்தக்கது. அதற்குப்பின் அபரகாரியங்களை வர்ணிக் கும்போது,

ஏகாத$_3$ஶேऽஹ்நி ஸம்ப்ராப்தே ஸ்வஸ்திவாசநமாசரேத் |
ஸம்பூஜ்ய விதி$_4$வத்$_3$விஷ்ணும் க$_3$ந்த$_4$புஷ்பாதி$_3$பி$_4$ர்த்$_3$விஜ: ||
பாயஸாபூப ஹ்ருத்$_3$யாந்நபாநகாதி$_3$ நிவேத$_3$யேத் |
ஆஹூய ப்$_3$ராஹ்மணாந் பஶ்சாத் ஶ்ராத்$_3$த$_4$ாய விநிமந்த்ரயேத் ||

[6-353, 354]

[பதினோராவது நாளன்று ஸ்வஸ்திவாசனம் செய்யவேண்டும். அந்தணன் க₃ந்த₄ம், புஷ்பம் முதலானவற்றால் விஷ்ணுவை முறைப் படி ஆராதி₄த்து, பாயஸம், அப்பம், இனிய அன்ன பானங்கள் ஆகியவற்றை அமுதுசெய்யப் பண்ணவேண்டும். அதற்குப் பிறகு ப்₃ராஹ்மணர்களை அழைத்து, ஶ்ராத்₃த₄த்துக்கு நிமந்த்ரணம் செய்ய வேண்டும்.] என்று ஏகாஹத்தன்றே ப₄க₃வத₃ாராத₄னம் விதி₄க்கப் பட்டது. ஸபிண்டீ₃கரணத்தின்போதும்

ஆமந்த்ர்ய ப்₃ராஹ்மணாந் ஸ்நாத்வா ஹரிம் விதி₄வத₃ர்ச்சயேத் ।
க₃ந்த₄புஷ்பைர்தூ₄பதீ₃பை: நைவேத்₃யைர் விவிதை₄ஸ்தத₂ா ॥
ஸம்பூஜ்ய ஜக₃தாமீஶம் வாஸுதே₃வம் ஸநாதநம் ।
பார்வணோக்த விதா₄நேந ப்₃ராஹ்மணாநுபவேஶயேத் ॥
[6-364,365]

[ப்₃ராஹ்மணர்களை நிமந்த்ரணம் செய்து, நீராடி, எம்பெருமானை முறைப்படி க₃ந்த₄ம், புஷ்பம், தூ₄பம், தீ₃பம், பலவித₄மான நைவேத்₃யம் ஆகியவற்றையளித்து ஆராதி₄க்கவேண்டும். ஜக₃ந் நாத₂னை, பழையோனை வாஸுதே₃வனை இப்படி ஆராதி₄த்த பின்பு பார்வண ஶ்ராத்₃த₄ முறைப்படி (ஶ்ராத்₃த₄த்துக்காக) உட் கார வைக்கவேண்டும்.] என்று ப₄க₃வத₃ாராத₄னம் விதி₄க்கப்பட்டது.

அமாயாந்து விஶேஷேண ஸௌளோபநயநாதி₃ஷு ॥
த்ரயோத₃ஶே ऽஹ்நி ஸம்ப்ராப்தே ப₃லிம் குர்யாத்து வைஷ்ணவ:।
ஸ்நாத்வா நத்₃யாம் தடாகே வா விஶிஷ்டைர் ப்₃ராஹ்மணை:
ஜபித்வா வைஷ்ணவாந் ஸூக்தாந் ஸ்நாத்வா [ஸஹ ॥
ஸந்தர்ப்பயேத் தத: ।
நாமபி₄: கேஶவாத்₃யைஶ்ச மந்த்ரை: ஸந்தர்ப்பயேத்₃த₄ரிம் ॥
தர்ப்பயேந்நாமபி₄: ஸ்வை: ஸ்வை: நித்யமுக்தாம்ஶ்ச
வைஷ்ணவாந் ।
தத: ஸ்வமாலயம் க₃த்வா விதி₄வத் பூஜயேத்₃த₄ரிம் ॥
தே₃வஸ்ய புரதோ வஹ்நிம் ப்ரதிஷ்ட₂ாப்ய யதே₂ாக்தவத் ।
இத்₄மாதா₄நாதி₃கம் க்ருத்வா பஶ்சாத்₃தே₄ாமம் ஸமாசரேத் ॥
பௌருஷேண து ஸூக்தேந பாயஸம் மது₄ஸம்யுதம் ।
ஆஜ்யம் ச ஜுஹுயாத் ஸம்யக் ப்ரத்யுசம் ப்ரணவாந்விதம் ॥
ததை₂வ மந்த்ரரத்நேந ஜுஹுயாத் ஶதஸங்க்₂யயா ।
அந்யைஶ்ச வைஷ்ணவைர் மந்த்ரை: ஶக்த்யா ச
ஜுஹுயாத்தத: ॥

நாமபி₄: கேஶவாத்₃யைஶ்ச ஜுஹுயாத் ஸுஸமாஹித: ।
ஸ்வை: ஸ்வைஶ்ச நாமபி₄ர்ஹுத்வா நித்யமுக்தாம்ஸ்ததை₂வ ச॥
தத: ஸ்விஷ்டக்ருதம் ஹுத்வா ஹோமஶேஷம் ஸமாபயேத் ।
பஶ்சாத் ஸம்பூஜயேத்₃விப்ராந் கேஶவாத்₃யைஶ்ச நாமபி₄: ॥
நித்யமுக்தாந் ஸமுத்₃தி₃ஶ்ய பூஜயேத்₃ ப்₃ராஹ்மணாந் ஶுப₄ாந் ।
க₃ந்த₄புஷ்பைர் தூ₄பதீ₃பை: வஸ்த்ரைராப₄ரணை: ஶுபை₄: ॥
போ₄ஜயேத் பாயஸாந்நேந ஶர்க்கராஜ்யயுதேந வை ।
விவிதை₄ரந்நபாநாத்₃யை: வாஸோSலங்கரணை: ஶுபை₄: ॥
போ₄ஜயித்வா தத: பிண்டா₃ந் யதா₂ஶக்தி விநிக்ஷிபேத் ।
ப்ராகக்₃ரேஷு ச தா₃ர்பே₄ஷு உபவீத: ஸமாஹித: ॥
யவைஶ்ச மது₄ஸம்யுக்தை: த₃த்₃யாத் பிண்டா₃ந் ப்ருத₂க்
நாமபி₄: கேஶவாத்₃யைஶ்ச த₃த்₃யாத் [ப்ருத₂க் ।
பிண்டா₃ந் குஶோத்தரே ॥...
பிண்டா₃நக்₃நௌ விநிக்ஷிப்ய விப்ராநாசாமயேத் தத: ॥
ஆசாந்த: பூஜயேத் பஶ்சாத் ஸ்வஶக்த்யா த₃க்ஷிணாம் ததா₂ ।
ஏவம் நாராயணப₃லிம் ய: குர்யாத்₃ வைஷ்ணவோத்தம: ॥
பிதரஶ்ச ஸமாயாந்தி தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம் ।
ப்ராயஶ்சித்தமித₃ம் கு₃ஹ்யம் பாபேஷு ச மஹத்ஸ்வபி ॥...
ஏவம் நாராயணப₃லிம் க்ருத்வா ஸம்ஸ்காரமாசரேத் ।
பித்ராத₃யோ ம்ருதா யஸ்ய பூ₄வேயுர் யத்₃யவைஷ்ணவா: ॥
இஷ்டிம் ச வைஷ்ணவ: குர்யாத் தேஷாம் பாபவிஶுத்₃த₄யே ।
ய: குர்யாத்₃ வைஷ்ணவீமிஷ்டிம் விதி₄நா வைஷ்ணவோத்தம:॥
வைஷ்ணவத்வம் ப்ரயாத்யத்ர குலமேகோத்தரம் ஶதம் ॥

[6-378,..398]

[அமாவாஸ்யையிலும், சிறப்பாக சௌளம், உபநயனம் முதலான வற்றிலும், (அபரகார்யத்தில்) பதின்மூன்ருவது நாளன்றும் வைஷ்ண வன் நாராயண பலியைச் செய்யவேண்டும். நதியிலோ, குளத் திலோ சிறந்தவர்களான அந்தணர்களோடு கூட நீராடி, விஷ்ணு வைப் பற்றின ஸூக்தங்களை ஜபித்து, கேஶவன் முதலான நாமங் களாலும், விஷ்ணு மந்த்ரங்களாலும் ஹரிக்குத் தர்ப்பணம் செய்ய வேண்டும். விஷ்ணுவின் அடியார்களான நித்யமுக்தர்களுக்கும் அவரவர் நாமங்களைச் சொல்லித் தர்ப்பணம் செய்யவேண்டும். அதற்குப்பின் தன் வீட்டிற்குச் சென்று முறைப்படி எம்பெருமானுக்

குத் திருவாராதனம் செய்யவேண்டும். அவனுக்கு முன்னால் அக்னியை முறைப்படி ப்ரதிஷ்டை செய்து, இத்மாதானம் முதலான கர்மங்களைச் செய்து, அதற்குப்பின் ஹோமம் செய்யவேண்டும். புருஷஸூக்தத்தின் ஒவ்வொரு ரிக்கோடும் ப்ரணவத்தைச் சேர்த்துத் தேனும் நெய்யும் கலந்த பாயஸத்தை ஹோமம் செய்யவேண்டும். அவ்வண்ணமே மந்த்ரரத்நமாகிற த்வயத்தைக் கொண்டு நூறு முறை ஹோமம் செய்யவேண்டும். அதற்குப்பின் மற்ற வைஷ்ணவ மந்த்ரங்களைக் கொண்டு இயன்றவரை ஹோமம் செய்யவேண்டும். ஶாந்தியுடையவனாய், கேஶவாதி நாமங்களைக் கொண்டு ஹோமம் செய்யவேண்டும். அவ்வண்ணமே நித்யமுக்தர்களுக்கும் அவரவர் திருநாமங்களைச் சொல்லி ஹோமம் செய்து, அதற்குப்பின் ஸ்விஷ்டக்ருத் ஹோமம் செய்து, ஹோமஶேஷத்தை நிறைவடையச் செய்யவேண்டும். அதற்குப்பின் கேஶவாதி நாமங்களைச் சொல்லி அந்தணர்களுக்கு ஆராதனம் செய்யவேண்டும். நித்யமுக்தர்களை உத்தேஶித்து நல்ல அந்தணர்களை மங்களமான சந்தனம், புஷ்பம், தூபம், தீபம், வஸ்த்ரம், ஆபரணங்கள் ஆகியவற்றை யளித்து ஆராதிக்கவேண்டும். சர்க்கரையும், தேனும் கலந்த பாயஸான்னத்தை அவர்களுக்கு அமுதுசெய்விக்கவேண்டும். பலவிதமான அன்னபானங்களாலும், மங்களமான வஸ்த்ரங்களாலும் அலங்காரங்களாலும் அவர்களை த்ருப்தி செய்வித்தபின்பு ஶக்தியுள்ளவரை பிண்டங்களை வைக்கவேண்டும், கிழக்கு நுனியான தர்ப்பங்களில் உபவீதத்தையுடையவனாய் ஶாந்தியோடு தேன் கலந்த கோதுமையாலே தனித்தனியாகப் பிண்டங்களை அளிக்கவேண்டும். கேஶவாதிநாமங்களைக்கொண்டும் தர்ப்பத்தின்மேல் பிண்டங்களை ஸமர்ப்பிக்கவேண்டும். பிண்டங்களை அக்நியில் இட்டு அந்தணர்களை ஆசமனம் செய்விக்கவேண்டும். தானும் ஆசமனம்செய்து, அதற்குப்பின் ஶக்திக்குத்தக்கபடி தக்ஷிணையளித்து அந்தணர்களை ஆராதிக்கவேண்டும். இவ்வண்ணமாக எந்த வைஷ்ணவர்தலைவன் நாராயணபலியைச் செய்கிறானோ அவனுடைய பித்ருக்கள் விஷ்ணுவின் பரமபதத்தையடைகிறார்கள். இது பெரும்பாவங்கள் விஷயத்திலும் பரமரஹஸ்யமான பிராயஶ்சித்தமாகும். இவ்வண்ணமாக நாராயணபலியைச் செய்து, ஸம்ஸ்காரத்தை நடத்தவேண்டும். இறந்த தகப்பன் முதலானோர் அவைஷ்ணவர்களாயிருந்தால், ஸம்ஸ்காரம் செய்யும் வைஷ்ணவன் அவர்களுடைய பாபம் நீங்குவதற்காக வைஷ்ணவேஷ்டியைச் செய்யக்கடவன். எந்த வைஷ்ணவோத்தமன் விஷ்ணுவைக்குறித்து இந்த இஷ்டியை விதிப்படி செய்கிறானோ அவனுடைய நூற்றொரு தலைமுறைகள் வைஷ்ணவத்வத்தை அடைகின்றன.]

என்று பதின்மூன்றுவது நாள் செய்யவேண்டிய நாராயணப3லியை விளக்கி, வைஷ்ணவேஷ்டியைப்பற்றிக் கூறப்பட்டது.

ஏகாத3ஶ்யாம் ஶுக்லபக்ஷே ஸமுபோஷ்ய த்3விஜோத்தம: ||
த4ாத்ரீசூர்ணேந லிப்தாங்கோ3 நத்3யா த்3யாநாம்ஶுபை4ர்ஜலை:
நித்யமுக்தஸமேதஞ்ச தே3வேஶம் தர்ப்பயேத்3த4ரிம் ||
க்3ருஹம் க3த்வா வித4ாநேந பூஜயேத்3விஷ்ணுமச்யுதம் |
க3ந்த4புஷ்பைர்தூ4பதீ3பை: நைவேத்3யைர் விவிதை4ரபி ||
அஷ்டோத்தரஸஹஸ்ரந்து மாலதீகுஸுமாநி ச |
ஆத3ாய மந்த்ரரத்நேந ஏகைகம் பூஜயேத் க்ரமாத் ||
அப4ாவே ஜாதிபுஷ்பைர்வா கோமலைஸ்துலஸீத3லை: |
பத்3மைர்வா ஶதபத்ரைர்வா மந்த்ரேணைவம் ப்ரபூஜயேத் ||
ஜபேச்ச த3ஶஸாஹஸ்ரம் மந்த்ரரத்நம் ஸமாஹித: |
ராத்ரௌ ஜாக3ரணம் குர்யாத் பூஜயேந்மது4ஸூத3நம் ||
ஸதி ப்ரப4ாதே த்3வாத3ஶ்யாம் ஸ்நாத்வா நத்3யாம் யத2ாவிதி4 |
ஏகைகமஞ்ஜலிம் த3த்3யாந்நித்யமுக்தாம்ஶ்ச வைஷ்ணவாந் ||
க்3ருஹம் க3த்வா ஹரே: பூஜாம் ப்ரகுர்வீத யதோ2க்தவத் |
ஸுஹ்ருத்3யைர் விவிதை4ர்ப4க்ஷ்யை: நைவேத்3யம் விநிவேத3யேத் ||
ததோऽக்3நிஸ்த2ாபநம் க்ருத்வா ஹோமம் குர்யாத்3யதோ2க்தவத் |
இத்4மாத4ாநாதி3பூர்வேண ஜுஹுயாத்3வை ஸமாஹித: ||
திலைஶ்ச வ்ரீஹிபி4: ஶுத்3தை4: ஸமித்3பி4: பிப்பலோத்3ப4வை: |
ததை2வாஜ்யேந சருணா ஜுஹுயாத்கமலைரபி ||
ப்ரத்யேகமஷ்டஸாஹஸ்ரம் ஹோதவ்யம் து த்3வயேந வை |
பஶ்சாத்3வைஷ்ணவஸூக்தம் து ஹோதவ்யம் பாயஸேந து ||
ஆஜ்யேநைவ து ஹோதவ்யம் தத2ாபி ச த்3வயேந வை ||...
வைஷ்ணவ்யா சைவ கா3யத்ர்யா தத2ா மந்த்ரத்3வயேந ச |
நாமபி4: கேஶவாத்3யைஶ்ச தத2ா ஸங்கர்ஷணாதி3பி4: ||
தத: ஸ்விஷ்டக்ருதாதீ3நி ஹோமஶேஷம் ஸமாசரேத் |
ஸுபுஷ்பாணி ததோ த3த்3யாத்3தே3வாய ஸுரபீ4ணி வை ||
ப்ரத்யுசம் வைஷ்ணவை: ஸூக்தைர்நாமபி4: கேஶவாதி3பி4: |
ததோ விப்ராந் ஸமாஹூய க3ந்த4மால்யாதி3பூ4ஷணை: ||

பூஜயேத் பூர்வவத்₃தே₃வம் கேஶவாத்₃யைஶ்ச நாமபி₄: |
பே₄ாஜயித்வா ததோ விப்ராந் த₃க்ஷிணாபி₄: ப்ரதோஷயேத் ||
ஏவமிஷ்டிம் ப்ரகுர்வீத வைஷ்ணவீம் வைஷ்ணவோத்தம: |
பிது: பூர்வோக்தவிதி₄நா ஸம்ஸ்காரம் ஸம்யக₃ாசரேத் ||
வைஷ்ணவேஷ்டிம் வித₄ாநேந க்ருத்வா வை த்₃விஜஸத்தம: |
குலமேகோத்தரஶதம் புநாத்யேவ ந ஸம்ஶய: ||
அக்ருத்வா வைஷ்ணவீமிஷ்டிம் பைத்ருமேதி₄க கர்மணு |
அவைஷ்ணவாந் ய: ஸம்ஸ்குர்யாத் ஸ நரோ ரௌரவம் வ்ரஜேத்||
தஸ்மாதி₃ஷ்டிம் வித₄ாநேந க்ருத்வா வை வைஷ்ணவோ த்₃விஜ:|
அவைஷ்ணவாநாம் குர்வீத ஸர்வமப்யௌர்த்₄வ தை₃ஹிகம் ||
[6-398...418]

[ஏகாத₃ஶியில் சுக்லபக்ஷத்தில் அந்தணர்தலைவனுயிருப்பவன் உபவாஸமிருந்து, நெல்லிப்பொடியினுல் அவயவங்களில் பூசிக்கொண்டு, நதி முதலானவற்றின் மங்க₃ளமான தீர்த்த₂ங்களில் குளித்து நித்யமுக்தர்களோடு கூடிய தே₃வர்பிரானுக்குத் தர்ப்பணம் செய்யவேண்டும். மறுபடியும் வீட்டுக்குச் சென்று, முறைப்படி அங்கு க₃ந்த₄ம், புஷ்பங்கள், தூ₄பம், தீ₃பம், பலவித₄மான நைவேத்₃யங்கள் ஆகியவற்றையளித்து அச்யுதனுன விஷ்ணுவுக்குத் திருவாராத₄னம் செய்யவேண்டும். ஆயிரத்தெட்டு மாலதீ புஷ்பங்களை எடுத்து, ஒவ்வொரு புஷ்பமாக த்₃வயத்தைச் சொல்லி முறைப்படி அர்ச்சிக்கவேண்டும். மாலதீபுஷ்பங்கள் கிடைக்காவிடில், சாதிப்பூக்கள், கொழுந்தான துளசி இதழ்கள், தாமரைகள், அல்லிமலர்கள் ஆகியவற்றைக் கொண்டு முற்கூறியபடி அர்ச்சிக்கவேண்டும். ஶாந்தியுடையவனுய் த்₃வயத்தைக் கொண்டு பதினுயிரம் முறை ஜபிக்கவேண்டும். இரவில் விழித்திருந்து மது₄ஸூத₃னனை ஆராதி₄க்கவேண்டும். விடியும்பொழுது த்₃வாத₃ஶியில் நதியில் முறைப்படி நீராடி, எம்பெருமானடியார்களான நித்யமுக்தர்களைக் குறித்து ஒவ்வொரு தர்ப்பணம் செய்யவேண்டியது. வீட்டிற்குச்சென்று முன் சொன்னபடி எம்பெருமானுக்குத் திருவாராத₄னம் செய்யவேண்டும். நெஞ்சை ஈர்க்கும் பலவித₄மான ப₄க்ஷணங்களையும் அமுதுசெய்விக்கவேண்டும். அதற்குப்பின் அக்₃நிப்ரதிஷ்டை₂செய்து, முறைப்படி ஹோமம் செய்யவேண்டும். இத்₄மாத₄ாநம் முதலானவற்றை முன்னிட்டுக் கொண்டு ஶாந்தியுடையவனுய் ஹோமம் செய்யவேண்டும். எள், நெல், ஶாத்₃த₄மான அரசசமித்து, நெய், ஹவிஸ்ஸு, தாமரைகள்

ஆகியவற்றைக்கொண்டு ஒவ்வொன்ருலும் எண்ணுயிரம் முறை த்₃வயத்தைச் சொல்லிக்கொண்டு ஹோமம் செய்யவேண்டும். அதற்குப் பின் பாயஸத்தினுல் வைஷ்ணவ ஸூக்த மந்த்ரங்களைக்கொண்டு ஹோமம் செய்யவேண்டும். நெய்யினுல் த்₃வயமந்த்ரத்தைக்கொண்டு ஹோமம் செய்யவேண்டும்......விஷ்ணுகா₃யத்ரியினுலும், த்₃வயமந்த்ரத்தாலும், கேஶவாதி₃நாமங்களாலும், ஸங்கர்ஷணுதி₃ நாமங்களாலும் ஹோமம் செய்யவேண்டும். அதற்குப்பின் ஸ்விஷ்டக்ருத் முதலான ஹோமஶேஷத்தை நிறைவுபடுத்தவேண்டும். எம்பெருமானுக்கு நறுமணம்மிக்க நல்ல புஷ்பங்களை விஷ்ணுஸூக்தத்தின் ஒவ்வொரு ரிக்குகளையும், கேஶவாதி₃நாமங்களையும் சொல்லி ஸமர்ப்பிக்கவேண்டும். அதற்குப்பின் அந்தணர்களையழைத்து, சந்த₃னம், மாலை, பூ₄ஷணம் முதலானவற்றையளித்து, கேஶவாதி₃நாமங்களைக் கொண்டு முன்போல் எம்பெருமானுக்குப் புஷ்பங்களை ஸமர்ப்பிக்கவேண்டும். பிறகு அந்தணர்களை அமுதுசெய்வித்து, த₃க்ஷிணைகளையளித்து த்ருப்தி செய்விக்கவேண்டும். இவ்வண்ணமாக வைஷ்ணவர் தலைவன் வைஷ்ணவேஷ்டியைச் செய்யவேண்டும். முற்கூறிய முறைப்படி பிதாவுக்குச் சரமகைங்கர்யங்களை நன்கு நடத்தவேண்டும். அந்தணர்தலைவன் வைஷ்ணவேஷ்டியை முறைப்படி செய்வதன் மூலம் நூற்றெருரு தலைமுறைகளைக் கரையேற்றுவான் என்பதில் ஐயமில்லை. வைஷ்ணவேஷ்டியைச் செய்யாமல் பைத்ருமேதி₄க கர்மத்தாலே அவைஷ்ணவர்களுக்கு ஸம்ஸ்காரம் செய்யும் வைஷ்ணவன் ரௌரவநரகத்தையடைவான். ஆகையால் வைஷ்ணவனை அந்தணன் வைஷ்ணவேஷ்டியை முறைப்படி செய்தே அவைஷ்ணவர்களுக்கும் சரமகைங்கர்யங்களைச் செய்யவேண்டும்.] என்று வைஷ்ணவேஷ்டி விரிவாக விளக்கப்பட்டது.

ஸூதகே ம்ருதகே சைவ ஸந்த்₄யாகர்ம ந ஸந்த்யஜேத் ।
வ்யோம்நி வா ஹ்ருத₃யே வாபி மநஸா ஸம்ஸ்மரேத்₃த₄ரிம் ॥
[6-466]

[பிறப்பினுலேயோ அல்லது இறப்பினுலேயோ ஏற்படும் தீட்டின்போதும் ஸந்த்₄யாவந்த₃னத்தை விடக்கூடாது. ஆகாஶத்திலோ அல்லது ஹ்ருத₃யத்திலோ மனத்தால் ஹரியை நினைக்கவேண்டும்.] என்று ஸந்த்₄யாவந்த₃னத்தில் ஹரிஸ்மரணம் விதி₄க்கப்பட்டது.

பாக₂ண்டி₃நம் ச பதிதமுந்மத்தம் ஶட₂ஹாரிணம் ॥
அவைஷ்ணவம் த்₃விஜம் ஸ்ப்ருஷ்ட்வா ஸவாஸா ஜலமாவிஶேத் ।
[6-486]

[பாஷண்டி3 அல்லது பதிதன் அல்லது பைத்தியம் பிடித்தவன் அல்லது வஞ்சனையுள்ளவன் அல்லது வைஷ்ணவனல்லாத அந்தணனைத்தொட்டால் வஸ்த்ரத்தோடு ஜலத்தில் மூழ்கி ஸ்நானம் செய்ய வேண்டும்.] என்று அவைஷ்ணவ ப்3ராஹ்மணனைத் தொட்டால் பிராயச்சித்தம் விதி4க்கப்பட்டது.

இனி விஷ்ணுஸ்த2ாபனவிதி4யை வர்ணிக்கும் ஏழாவதான கடைசி அத்தியாயத்தில் ஸாரமான சில ஶ்லோகங்களைக் காண்போம்.

ரித்விஜோ வரயேத்தத்ர வைஷ்ணவாந் ப்3ராஹ்மணாந் ஶுப4ாந்।
வேத3வேத3ாங்க3 தத்த்வஜ்ஞாந் ஸர்வஶாஸ்த்ர விஶாரத3ாந் ॥
ஜிதேந்த்3ரியாந் ஶுப4ாசாராந் ஸத்த்வஸ்த2ாந் ஸர்வலக்ஷணாந் ।
மந்த்ரதத்த்வார்த்த2விது3ஷோ ப்3ராஹ்மணாந் வரயேச்சு2ப4ாந் ॥
தாத்3ருக்3கு3ணஸமாயுக்தம் ஆசார்யம் வரயேத் தத:।
மந்த்ரஜ்ஞம் மந்த்ரப4க்தம் ச ஸர்வாசாரம் கு3ணாந்விதம் ॥
ஶ்ருதி ஸ்ம்ருதி புராணார்த்த2விது3ஷம் த3ம்ப4வர்ஜிதம் ।
அர்த்த2பஞ்சகதத்த்வஜ்ஞம் அக்3நிஹோத்ரயுதம் ஶுசிம் ॥
த்3வயநிஷ்ட2ம் த்3வயார்த்த2ஜ்ஞம் ப்ரதிஷ்ட2ாகர்மநிஷ்டி2தம் ।
மஹாப4ாக3வதம் சைவமாசார்யம் வரயேத் ஸுதீ4: ॥ [7-10...14]

[எம்பெருமானை ப்ரதிஷ்டை2 பண்ணுவதற்கு மங்க3ளமான ஸ்ரீவைஷ்ணவ அந்தணர்களை ரித்விக்குகளாக வரிக்கவேண்டும். வைஷ்ணவர்களாகவும், மங்க3ளமான ப்3ராஹ்மணர்களாகவும், வேத3 வேத3ாங்க3ங்களின் உண்மையை அறிந்தவர்களாகவும், எல்லா ஶாஸ்த்ரங்களிலும் வல்லவர்களாகவும், புலனடக்கம் உடையவர்களாகவும், நல்லொழுக்கம் உள்ளவர்களாகவும், ஸத்வகு3ணமுடையவர்களாகவும், நல்ல லக்ஷணங்களை உடையவர்களாகவும், திருவஷ்டாக்ஷரம் முதலான மந்த்ரங்களின் உண்மைப்பொருளை அறிந்தவர்களாகவும் உள்ள மங்க3ளமான அந்தணர்களை வரிக்கவேண்டும். அதற்குப்பின் அத்தகைய கு3ணங்களுடைய ஒருவரை ஆசார்யராக வரிக்கவேண்டும். ப4க3வந்மந்த்ரங்களை அறிந்தவராகவும், மந்த்ரங்களில் ப4க்தியுள்ளவராகவும், எல்லா நல்லொழுக்கங்களுடையவராகவும், நற்குணங்கள் பொருந்தியவராகவும், ஶ்ருதி, ஸ்ம்ருதி, புராணங்களின் பொருளை அறிந்தவராகவும், ட3ம்ப4மில்லாதவராகவும், அர்த்த2பஞ்சகம் பற்றிய உண்மையை அறிந்தவராகவும், அக்3நிஹோத்ரத்தோடு கூடியவராகவும், பரிஶுத்3த4மானவராகவும், த்3வயாநுஸந்த4ானத்தில் ஊன்றியவராகவும், த்3வயத்தின் பொருளை

அறிந்தவராகவும், விஷ்ணுப்ரதிஷ்டாகார்யங்களில் ஊன்றியிருப்பவராகவும், மஹாபாகவதராகவும் இருப்பவரை அறிவாளியாயிருப்பவன் ஆசார்யனாக வரிக்கவேண்டும்.] என்று ரித்விக்குகளுக்கும், ஆசார்யருக்கும் லக்ஷணம் உரைக்கப்பட்டது.

தாபாதி₃பஞ்சஸம்ஸ்காரா மஹாப₄க₃வதா: ஸ்ம்ருதா: ।
சக்ராதி₃ஹேதிபி₄ஸ்தப்தம் தாப இத்யபி₄தீ₄யதே ॥
ஸம்ஸ்கார: ப்ரத₂ம: ப்ரோக்தோ த்₃விதீய: புண்ட்₃ரத₄ாரணம் ।
[7-15, 16]

[தாபம் முதலான ஐந்து ஸம்ஸ்காரங்களையுடையவர்கள் மஹாபாக₃வதர்களாக எண்ணப்படுகிறார்கள். சக்ரம் முதலான விஷ்ணுவின் ஆயுத₄ங்களால் முத்திரைபெறுவது தாபஸம்ஸ்காரம் எனப்படுகிறது. இதுவே முதல் ஸம்ஸ்காரம். புண்ட்₃ரத₄ாரணம் இரண்டாவது ஸம்ஸ்காரமாகும்.] என்று தொடங்கி,

ஸார்த்த₂ஜ்ஞாநம்து ஸந்யாஸம் மந்த்ராத்₄யயநமுச்யதே ।
பஞ்சமஸ்து ஹரே: பூஜா பஞ்சராத்ரோக்தமார்க்க₃த: ॥
ததீ₃யார்ச்சநபர்யந்தம் ஹரேராராத₄நம் ஸ்ம்ருதம் ।
இத்யேவமாதி₃ஸம்ஸ்காரோ மஹாப₄க₃வத: ஸ்ம்ருத: ॥
அந்யே த்வவைஷ்ணவா: ப்ரோக்தா ஹீநாஸ்தாபாதி₃பி₄ர் த்₃விஜா: ।
தத₂ா ஹ்யவைஷ்ணவா ஜ்ஞேயா: ப்ராக்ருதா: பாபகாரிண: ॥
வேத₃ஶாஸ்த்ரேஷ்வநிபுணாஸ்தே வை நிரயகா₃மிந: ।
தஸ்மாத₃வைஷ்ணவாந் விப்ராந் ந கர்மஸு நியோஜயேத் ॥
மஹாப₄க₃வதம் விப்ரம் ஆசார்யம் வரயேத் ஸுதீ₄: ।
மஹாப₄க₃வதா ஏவ நியோஜ்யா ரித்விஜஸ்தத₂ா ॥
ஶங்க₂சக்ரோர்த்₄வ புண்ட்₃ராதி₃ சிஹ்நைஶ்ச ஸஹிதைர்த்₃விஜை: ।
தத்ர யத் கர்ம குர்வீத தந்மஹாவிதி₄வத்₃ப₄வேத் ॥
சக்ராதி₃சிஹ்நைர்ஹீநேந ஸ்தத₂ாபிதோ யத்ர கர்மணி ।
ந ஸாந்நித்₄யம் ஹரிர்யாதி க்ரியாகோடிஶதைரபி ॥
அவைஷ்ணவ ஸ்தத₂ாபிதாநாம் ப்ரதிமாநாம் ச வந்த₃நம் ।
ய: கரோதி ஸ மூட₄ாத்மா ரௌரவம் நரகம் வ்ரஜேத் ॥
தஸ்மாத்து வைஷ்ணவாஸ்த்வேவ நியோஜ்யா யஜ்ஞகர்மஸு ॥
[7-18...26]

[ந்யாஸத்தோடும், அர்த்த₂ஜ்ஞானத்தோடும் கூடிய திருவஷ்டாக்ஷரம் முதலான மந்த்ரங்களை உபதே₃ஶம்பெறுவது மந்த்ரஸம்ஸ்காரம் எனப் படுகிறது. பஞ்சராத்ரத்தில் சொன்ன வழியில் எம்பெருமானுக்குத் திருவாராத₄னம் செய்வது ஐந்தாவதான (யாக₃) ஸம்ஸ்காரமாகும். எம்பெருமானுடைய திருவாராத₄னம் அவனுடைய அடியார்களுக்குச் செய்யும் ஆராத₄னத்தையும் உட்கொண்டதாகும். இத்தகைய ஸம்ஸ்காரங்களையுடையவனே மஹாபா₄க₃வதன் எனப்படுகிறான். தாபம முதலிய முற்கூறிய ஸம்ஸ்காரமற்ற மற்ற அந்தணர்கள் அவைஷ்ணவர்கள் எனப்படுகின்றனர். அந்த அவைஷ்ணவர்கள் பிராக்ருதர்கள் என்றும், பாபம் புரிபவர்கள் என்றும் அறியத்தக்க வர்கள். வேத₃ஶாஸ்த்ரங்களின் பொருளையறியாத அவர்கள் நரகத்தை யடைவார்கள். ஆகையால் அவைஷ்ணவர்களான அந்தணர்களைப் பிரதிஷ்டா₂கர்மத்தில் வரிக்கக்கூடாது. மஹாபா₄க₃வதனை அந்தண னையே அறிவாளியாயிருப்பவன் ஆசார்யனாக வரிக்கவேண்டும். அவ் வண்ணமே மஹாபா₄க₃வதர்களை ரித்விக்குகளாகவும் நியமிக்கப்பட வேண்டும். ஶங்க₂ம், சக்ரம், ஊர்த்₄வபுண்ட்₃ரம் முதலான அடை யாளங்களோடு கூடிய அந்தணர்களாலே எந்தக் காரியம் செய்யப் படுகிறதோ, அது மிகவும் முறைப்படி செய்யப்பட்ட காரியமாகும். சக்ராதி₃சின்னங்கள் இல்லாதவர்களால் எந்த ப்ரதிஷ்டை₂யில் பி₃ம்ப₃ம் ஸ்தா₂பிக்கப்படுகிறதோ அதில் நூறுகோடி கிரியைகளிருந் தாலும் எம்பெருமான் ஸாந்நித்₄யமடையமாட்டான். அவைஷ்ண வர்களால் ப்ரதிஷ்டை₂ செய்யப்பட்ட பி₃ம்ப₃ங்களை வணங்குபவன் ரௌரவநரகத்தை அடைவான். ஆகையால் ப்ரதிஷ்டா₂கர்மங்களில் வைஷ்ணவர்களையே நியமிக்கவேண்டும்.] என்பதீறாக மஹாபா₄க₃வத லக்ஷணமும், மஹாபா₄க₃வதர்களைக்கொண்டே ப்ரதிஷ்டை₂ செய் விக்கவேண்டுமென்றும், மற்றவர்களைக்கொண்டு செய்விக்கலாகாது என்றும் முழங்கப்பட்டது. பிறகு விஸ்தாரமாக ப்ரதிஷ்டை₂யை வர்ணித்து, அத்தியாயத்தின் கடைசியில்

ஏவம் ப்ரதிஷ்டா₂ம் குர்வீத விஷ்ணோஶ்சைவ வித₄ாநத: ।
தத்ர தே₃வ: ஸாந்நித்₄யம் யாதி நாராயணோ ஹரி: ॥
ப்ரதிஷ்டா₂ஸு ச கர்த்தவ்யோ விதி₄ரேஷ உதா₃ஹ்ருத: ।
க்₃ருஹார்ச்சநே ச கர்த்தவ்யம் விதி₄ம் வக்ஷ்யாமி ஸத்தமா:! ॥
ஸ்நாபயேத் பஞ்சக₃வ்யேந மந்த்ரபூதஜலேந ச ।
மந்த்ரேணாவாஹயேத்₃தே₃வம் பரே வ்யோம்நி ஸ்தி₂தம் விபு₄ம் ॥
மஹாபா₄க₃வத: ஸ்ப்ருஷ்ட்வா மந்த்ரரத்நம் ஜபேத் ஸுதீ₄: ।

த₃த்₃யாத் புஷ்பாஞ்ஜலிம் பஶ்சாத் தேநைவ ஶததஸங்க்₂யயா ||
ஆஜ்யம் தேநைவ ஹோதவ்யம் அஷ்டோத்தரஶதம் தத: |
உபசாரை: ஸமப்₄யர்ச்ய நமஸ்கார்யா ச ப₄க்தித: ||
வைஷ்ணவாந் போ₄ஜயேத் பஶ்சாத் த₃க்ஷிணாபி₄: ப்ரதோஷயேத்||
[7-106...110]

[இவ்வண்ணமாக விஷ்ணுவுக்கு முறைப்படி பிரதிஷ்டை₂ செய்ய வேண்டும். இப்படிச் செய்தால் நாராயணனுகிற ஹரி இந்த பி₃ம் ப₃த்தில் ஸாந்நித்₄யத்தையடைகிருர். ஆலயபி₃ம்ப₃ ப்ரதிஷ்ட₂ா முறை இதுவரை விவரிக்கப்பட்டது. நல்லோர்களே! க்₃ருஹார்ச்சந ப்ரதிஷ்ட₂ாவிதி₄யையும் இனி கூறுகிறேன். பி₃ம்ப₃த்தைப் பஞ்சக₃வ்யத்தாலும், வேத₃மந்த்ரங்களால் பரிஶுத்₃த₄ப்படுத்தப்பட்ட ஜலத்தினுலும் திருமஞ்சனம் செய்யவேண்டும். பரமபத₃த்திலிருக்கும் ஸர்வவ்யாபியான எம்பெருமானை மந்த்ரங்களைக்கொண்டு அந்த பி₃ம்ப₃த்தில் ஆவாஹனம் செய்யவேண்டும். பி₃ம்ப₃த்தை ஸ்பர்ஶித்து மஹாப₄ாக₃வதனுயிருக்கும் அறிவாளி மந்த்ரரத்னமான த்₃வயத்தை ஜபிக்கவேண்டும். அந்த த்₃வயத்தை நூறுமுறை அநுஸந்தி₄த்து, புஷ்பாஞ்ஜலியை ஸமர்ப்பிக்கவேண்டும். அதற்குப்பின் நூற்றெட்டு முறை அந்த த்₃வயத்தைக்கொண்டே நெய் ஹோமம் செய்யப்பட வேண்டும். அதற்குப்பின் அந்த அர்ச்சாவிக்₃ரஹத்தை உபசாரங்களோடு ஆராதி₄த்து, ப₄க்தியோடு நமஸ்கரிக்கவேண்டும். பிறகு வைஷ்ணவர்களுக்கு அமுதளித்து, த₃க்ஷிணைகளாலே உகப்பிக்க வேண்டும்.] என்று வீடுகளில் அர்ச்சாவிக்₃ரஹத்தை ப்ரதிஷ்டை₂ செய்யும் முறையை வர்ணித்து இந்த வஸிஷ்ட₂ஸ்ம்ருதி நிறைவடைகிறது.

''வைஷ்ணவர்களுக்கு ஆசாரம் எது? ஆஹாரம் எது? ஆஶ்ரயணீயம் எது?'' என்று கேள்வி கேட்டுக்கொண்டு இவ்விஷயங்களை விரிவாகச் சொல்லுகிறது இந்த ஸ்ம்ருதி. பஞ்ச ஸ்ம்ஸ்காரம் முதலான வைஷ்ணவ த₄ர்மங்களைச் சொல்லுவதோடல்லாமல், உபநிஷ்க்ராமணம், அந்நப்ராஶநம் தொடக்கமாகச் சரம கைங்கர்யங்கள் ஈருக எல்லா ஸம்ஸ்காரங்களிலும் விஷ்ணு ஸம்ப₃ந்த₄ம் தொடர்ந்து வரவேண்டும் என்று இந்த ஸ்ம்ருதி முழங்குகிறது. இந்த வஸிஷ்ட₂ ஸ்ம்ருதியின் ஏழு அத்தியாயங்களிலும் விஷ்ணு பரத்வமும், மற்ற தெய்வங்களின் சிறுமையும், வைஷ்ணவர்களின் பெருமையும், மற்றவர்களின் தாழ்வும் குன்றிலிட்ட விளக்காகக் காட்டப்பட்டிருப்பது மிகத்தெளிவாக விளங்குகிறது.

இனி, கல்கத்தா பதிப்பில் அடுத்து அச்சிடப்பட்டிருக்கும் ப்₃ருஹத்₃யோக₃யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதியில் ப₄க₃வத்பரத்வம் நிலைநாட்டப்பட்டிருப்பதைக் காண்போம்.

## ஸ்ரீப்₃ருஹத்₃யோக₃ யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி நிர்ணயம்

பனிரண்டு அத்தியாயங்கள் கொண்ட இந்த ஸ்ம்ருதியானது நமது பூர்வாசார்யர்களால், குறிப்பாகத் தாத்பர்யசந்த்₃ரிகை முதலானவற்றில் ஸ்ரீவேதா₃ந்த தே₃ஶிகரால், பலவிடங்களில் கையாளப்பட்டுள்ளது. இதில் முதல் அத்தியாயத்தில், மிதி₂லையில் இருக்கும் யாஜ்ஞவல்க்ய மஹரிஷியை மற்ற முனிவர்கள் வேத₃வேதா₃ந்தங்கள், ஸித்₃தா₄ந்தங்கள், ஸ்ம்ருதிகள் முதலான ப்ரமாணங்களின் ஸாரத்தையும், மோக்ஷஸாத₄னமான மேலான ஆத்மஜ்ஞானத்தையும், அதுக்கு அங்க₃மான கர்மாநுஷ்டா₂னம் முதலானவற்றையும் உபதே₃ஶிக்கும்படி பிரார்த்தி₂க்கிருர்கள்.

கிம் த்₄யாநம் கிம் ச வை த்₄யேயம் கிம் லக்ஷ்யம் கிம்ஸ்வரூபகம்|
யச்சோபாஸ்ய விமுச்யேத தத் பரம் ப்₃ரூஹி நோ விபோ₄! ||
ஹோமகாலே தத₂ாக்₃நௌ து மத்₄யே கிம் பரிசிந்தயேத் |
யஸ்ய சைவாஹுதிம் த₃த்₃யாத் கிம் தத் ப்₃ரஹ்ம கிமாத்மகம்||
[1-16...18]

[த்₄யானம் எத்தகையது? தியானிக்கத்தக்கது எது? தியானத்தால் அடையப்படும் இலக்கு எது? (தியானிப்பவன்) எந்த ஸ்வரூபமாயிருக்கிருன்? எல்லாமறிந்தவரே! எதை உபாஸித்து அவன் முக்தியடைகிருனே அப்பரம்பொருளை எங்களுக்குச் சொல்லும். ஹோமம் செய்யும்போது அக்₃னியின் நடுவில் எதைச் சிந்திக்கவேண்டும்? எதற்கு ஆஹுதியளிக்கவேண்டும்? அந்த ப்₃ரஹ்மம் எது? எத்தகைய ஸ்வரூபத்தையுடையது?] என்பவை இவ்வத்தியாயத்திலுள்ள முக்கியமான கேள்விகள். "கிம் தத் த்₄யாநம் கோ வா த்₄யாதா கஶ்ச த்₄யேய:" [எந்த மந்திரத்தால் தியானம் செய்யவேண்டும்? தியானிப்பவனை எந்த தே₃வதாரூபமாக தியானிக்கவேண்டும்? தியானிக்கப்படுபவன் எந்த தே₃வதை?] என்று அத₂ர்வஶிகோ₂பநிஷத்தின் முதல் க₂ண்ட₃த்தில் கேட்கப்பட்ட கேள்விகளை இவை ஒத்திருப்பதிலிருந்து இந்த ஸ்ம்ருதி அந்த உபநிஷத்திற்கு உபப்₃ரும்ஹணம் என்று விளங்குகிறது. மேல் அத்தியாயங்களில் யாஜ்ஞவல்க்யர் இக்கேள்விகளுக்கு பதிலுரைக்கிருர். இரண்டாமத்தியாயத்தில் ஓங்காரத்தின் சொற்பொருட் பெருமைகள் சிறப்பாக வர்ணிக்கப்படுகின்றன. அதில் ஸாரமான சில பகுதிகளைக் காண்போம்.

ஓங்கார: ப்ரணவஸ்தார: த்ர்யக்ஷரஸ்த்ரிகு₃ண: ஸ்ம்ருத: ।
உத்₃கீ₃த₂ஶ்ச தத₂ாதி₃த்யோ ஹம்ஸோ நாராயணோ விபு₄: ॥
ஸௌர்யஸ்யாந்தர்க₃தம் ஸூக்ஷ்மம் விஷ்ணும் தி₃வ்யம் நிரஞ்ஜநம்।
பர்யாயைஶ்ச தத₂ா சாந்யை: ஶாஸ்த்ரேப்₄ய: ஸம்ப்ரகீ₃யதே ॥
ஓங்காரஸம்ஜ்ஞம் த்ரிகு₃ணம் த்ர்யக்ஷரம் ச த்ரிதை₃வதம் ।
த்ரிப்₃ரஹ்ம த்ரிரவஸ்த₂ாநம் த்ரைகால்யம் த்ரிப்ரதிஷ்டி₂தம் ॥
த்ரிப்ரஜ்ஞம் ச த்ரித₄ாமம் ச த்ரிரவஸ்த₂ம் த்ரிலிங்க₃கம் ।
த்ரித₄ாதுகம் ஸமுத்₂தி₃ஷ்டம் ஸர்வக₃ம் பரமேஶ்வரம் ॥
ஸத்த்வம் ரஜஸ்தமஶ்சைவ த்ரிகு₃ணஸ்தேந ஸ ஸ்ம்ருத:।
அகாரஶ்சாப்யுகாரஶ்ச மகாரஶ்சாக்ஷரத்ரயம் ॥
ப்₃ரஹ்மா விஷ்ணுஶ்ச ருத்₃ரஶ்ச த்ரிதை₃வத்ய உத₃ாஹ்ருத: ।
அக்₃நிவாயுரவிப்₄யஶ்ச த்ரிமாத்ர இதி ஸம்ஜ்ஞித: ॥ (?)
ருக்₃யஜுஶ்ச தத₂ா ஸாம த்ரிப்₃ரஹ்ம இதி ஸம்ஜ்ஞித: ।
பூ₄ர்பு₄வ: ஸ்வஸ்த்ர்யவஸ்த₂ாநம் ஹ்ருத் கண்ட₂ம் தாலுகேதி ச॥
துர்யே ப்ராணே தத₂ாऽऽதி₃த்யே த்ரிஷு சைவ ப்ரதிஷ்டி₂தம் ।
பூ₄தம் ப₄வ்யம் ப₄விஷ்யம் ச த்ரைகால்யம் தேந சோச்யதே ॥
அந்த:ப்ரஜ்ஞோ ப₃ஹி:ப்ரஜ்ஞோ க₄நப்ரஜ்ஞ உத₃ாஹ்ருத: ।
க₃ார்ஹபத்யோ த₃க்ஷிணாக்₃நி: ஆஹவநீயஸ்த்ரித₄ாமகம் ॥
ஶாந்தோ கோ₄ரஸ்தத₂ா மூட₄ஸ்த்ரிரவஸ்த₂ இதி ஸ்ம்ருத: ।
ஸ்த்ரீ பும் நபும்ஸகம் சேதி த்ரிலிங்க₃ இதி ஸ ஸ்ம்ருத: ॥
வாத: பித்தம் தத₂ா ஶ்லேஷ்மா த்ரித₄ாது: ஸமுத₃ாஹ்ருத: ।
த்ரிப்ரகாரம் விதி₃த்வா து ஓங்காரமுச்யதே த்₃விஜா:! ॥
ஏகைகா து ப₄வேந்மாத்ரா த்ரிகு₃ணா ஸா து வை புந: ।
தாஸாம் ஸர்வம் வாங்மயம் யதே₃ாதம் ப்ரோதம் வ்யவஸ்தி₂தம்॥
ப்ரத₂மா தஸ்ய அகாரோ வாக் ஸத்த்வம் பூ₄ர்ஹுதாஶநோ விஷ்ணு: ।
ஸ்தூ₂லா ஜாக்₃ரத்₃வ்ருத்திர் விஜ்ஞேயா யோக₃தத்த்வஜ்ஞை: ॥
ப்₃ரஹ்மாந்தரிக்ஷ ஸம்ஜ்ஞோ மநோரஜ: ஸோமஸம்ஜ்ஞக உகார:।
மாத்ரா ஸ்வப்நவிகல்பா விஸ்ருஷ்டிஸம்ஜ்ஞா த்₃விதீயா து ॥
ரௌத்₃ரீ மகாரஸம்ஜ்ஞா ப்ராணாக்₂யா தாமஸீ த்ருதீயா து ।
ஸம்ஹரதி ஜக₃த் ஸமஸ்தம் (ஸர்வம்) ஸௌஷும்நாக்₂யா மஹாநித்₂ரா ॥ [2-15...29]

[ஓங்காரமானது ப்ரணவம் என்றும், தாரம் என்றும் பெயர் பெற்றது. அ, உ, ம் என்னும் மூன்று அக்ஷரங்களை உடையது. முக்குணங்களையுடையது. உத்₃கீ₃த₂ மந்த்ரமும் அதுவே. அதி₃திக்குப் பிள்ளையான உபேந்த்₃ரனாய் அவதரித்தவனாய், ஹம்ஸாவதாரம் செய்தவனாய், ஸர்வேஶ்வரனான நாராயணன் அதன் பொருளாவான். ஸூர்யனுக்கு அந்தர்யாமியாயிருப்பவனாய், நுண்ணியவனாய், பரமபத₃த்தில் எழுந்தருளியிருப்பவனாய், குற்றமற்றவனான விஷ்ணுவே அவன். ஶாஸ்த்ரங்களில் இந்த விஷ்ணு மற்றும் பல பெயர்களால் வழங்கப்படுகிறான். ஓங்காரம் என்னும் பெயருடைய இந்த மந்த்ரம் (1) மூன்று கு₃ணங்களையுடையதாகவும், (2) மூன்று அக்ஷரங்களையுடையதாகவும், (3) (அந்த மூன்று அக்ஷரங்களுக்கும் முறையே) மூன்று தெய்வங்களை உடையதாகவும், (4) மூன்று வேத₃ங்களின் ஸாரமாகவும், (5) மூன்று இருப்பிடங்களையுடையதாகவும், (6) மூன்று காலங்களையுடையதாகவும், (7) மூன்று பொருள்களில் நிலைநிற்பதாகவும், (8) மூன்று வித₄மான அறிவுகளை உடையதாகவும், (9) மூன்று தேஜஸ்ஸுக்களை உடையதாகவும், (10) மூன்று நிலைகளையுடையதாகவும், (11) மூன்று லிங்க₃ங்களை (அடையாளங்களை) உடையதாகவும், (12) மூன்று த₄ாதுக்களையுடையதாகவும் வர்ணிக்கப்படுகிறது. ஸர்வ வ்யாபியான ஸர்வேஶ்வரனைச் சொல்லுவது. (1) ஸத்வம், ரஜஸ், தமஸ் என்பவை மூன்று கு₃ணங்கள். (2) அகாரம், உகாரம், மகாரம் என்பவை மூன்று அக்ஷரங்கள். (3) ப்₃ரஹ்மா, விஷ்ணு, ருத்₃ரன் ஆகியவர் மூன்று தெய்வங்கள். (4) ருக், யஜுஸ், ஸாமம் என்பவை மூன்று வேத₃ங்கள். (5) பூ₄ர் பு₄வஸ் ஸுவர்லோகம் அல்லது ஹ்ருத₃யம், கண்டம், நாக்கு ஆகியவை மூன்று இருப்பிடங்கள். (6) சென்ற காலம், வருங்காலம், நிகழ்காலம் ஆகியவை மூன்று காலங்கள், (7) மும்மூர்த்திகளுக்கும் மூலமான நாராயணனிடத்திலும், பிராணனிலும், ஆதி₃த்யனிடமும் நிலைநிற்பது. (8) உள்ளறிவு, வெளியறிவு, செறிந்த அறிவு ஆகியவை மூன்று அறிவுகள், (9) கா₃ர்ஹபத்யம், த₃க்ஷிணாக்₃நி, ஆஹவநீயம் ஆகியவை மூன்று தேஜஸ்ஸுக்கள். (10) ஶாந்தநிலை, கோ₄ரநிலை, மூட₄நிலை ஆகியவை மூன்று நிலைகள். (11) ஆண், பெண், அலி ஆகியவை மூன்று லிங்க₃ங்கள் (அடையாளங்கள்.) (12) வாதம், பித்தம், ஶ்லேஷ்மம் ஆகியவை மூன்று த₄ாதுக்கள். இந்த ஓங்காரத்தை இருபிறப்பாளர்கள் மூன்று மாத்திரை உள்ளதாக அறிந்து கூறுகிறார்கள். ஒவ்வொரு மாத்திரையும் மூன்று கு₃ணங்களையுடையது. அவற்றில் எல்லா வாக்கும் குறுக்கும் நெடுக்கு

மாகக் கோக்கப்பட்டு நிலைநிற்கிறது. ஓங்காரததின் முதலெழுத்து அகாரம் வாக்கு, ஸத்வகுணம், பூமி, அக்நி, விஷ்ணு ஆகியவர்கள அதன் பொருள் ஸ்தூலமான விழிப்புநிலை அகாரத்தின் பொருள் என்று யோகதத்வ ஜஞானிகளால அறியததககது. இரண்டாம எழுததான உகாரததிற்கு பிரமன், அந்தரிக்ஷம், மனஸ, ரஜோகுணம், சந்த்ரன் ஆகியவர்கள பொருள ஸ்ருஷ்டி நிலை எனபபடும் ஸ்வப்நநிலை அதன் பொருள மூன்றுவது அக்ஷரமான மகாரததிற்கு ருத்ரன் பிராணன, தமோகுணம, பெரும் தூக்கநிலை, ஸுஷுப்தி, ஸர்வஜகத்ஸம்ஹாரம் ஆகியவை பொருள் ]

இதிலிருந்து பகவான் விஷ்ணுவே எல்லா எழுத்துக்களுக்கும் முதலான் அகாரத்திறகுப் பொருள் என்றும், ஸத்வகுணத்தை வளரச் செய்பவனென்றும், ப்ரஹ்ம ருத்ரர்கள், முறையே உகார மகாரங்களுக்குப் பொருளென்றும, ரஜஸ்தமோகுணங்களை வளரச செய்பவர்களென்றும, இந்த மும்மூர்த்திகளுககும் மூலமானவன் நாராயணன் எனப்படும் விஷ்ணுவே என்றும தெளிவாக விளங்குகிறது.

ஸர்வே வேதா யத்பதமாமநந்தி தபாமஸி ஸர்வாணி ச யத்வதந்தி।
யதிச்சந்தோ ப்ரஹ்மசர்யம் சரந்தி தத்தே பதம் ஸங்க்ரஹேண ப்ரவீம்யோமித்யேதத ॥
ஏததேவாக்ஷரம் ப்ரஹ்ம ஏததேவாக்ஷரம பரம।
ஏததேவாக்ஷரம் ஜ்ஞாத்வா யோ யதிச்சதி தஸ்ய தத் ॥
ஸர்வத்வாராணி ஸம்யம்ய மநோ ஹ்ருதி நிருத்ய ச।
மூர்த்ந்யாதாயாத்மந: ப்ராணமாஸ்திதோ யோகதாரணாம் ॥
ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்।
ய: ப்ரயாதி த்யஜந் தேஹம ஸ யாதி பரமாம் கதிம் ॥
ஆத்யம் யதக்ஷரம ப்ரஹ்ம த்ரயீ யஸ்மிந ப்ரதிஷ்டிதா।
ஸ குஹ்யோऽந்யஸ்த்ரிவ்ருத்வேதோ யோ வேதைநம் ஸ வேதவித் ॥
யதா வை ஶங்குநா பர்ணம் ஸம்வ்ருதம் சைவ ஸர்வத:।
ஏவம் ஸர்வாஸ்து வை வாச: ஸந்தீர்ணா ப்ரணவேந து ॥
க்லேஶகர்மவிபாகைஶ்ச வாஸநாபிஸ்ததைவ ச।
அபராம்ருஷ்டமேவாஹு புருஷம் ஹ்யீஶ்வரம் ஶ்ருதி: ॥
ஸர்வேஶ்வர: ப்ரோக்தோ வாசக: ப்ரணவ: ஸ்ம்ருத:।
வாசகேந து விஜ்ஞாதோ வாச்ய ஏவ ப்ரஸீததி ॥

ததூ₃ர்த்த₂ம் ப்ரணவம் ஜப்யம் த்₄யாதவ்யம் ஸததம் பு₃தை₄: ।
ஈஶ்வர: புருஷாக்₂யஸ்து தேநோபாஸ்து: ப்ரஸீத₃தி ॥
யதா₂ ஹி கௌ₃ர்வத்ஸக்ருதம் நிஶம்ய
ஹுங்க்ருத்ய வத்ஸாபி₄முகீ₂ ப்ரயாதி ।
ப்₃ரஹ்மாபி தத்₃வத் ப்ரணவோபஹூதம் வக்தாரமாக₃ச்ச₂தி
சாஶு வக்த்ரே ॥
த்₃வே ப்₃ரஹ்மணீ வேதி₃தவ்யே ஶப்₃த₃ப்₃ரஹ்ம பரம் ச யத் ।
ஶப்₃த₃ப்₃ரஹ்மணி நிஷ்ணாத: பரம் ப்₃ரஹ்மாதி₄க₃ச்ச₂தி ॥
அந்த:ஶரீரப்ரபு₄ஸம்பூதா₃நதப்ரேரிதம் ச யத் ।
வாகு₃ச்சார்யம் ஶ்ரோத்ரவ்ருத்தி ஶப்₃த₃ப்₃ரஹ்ம தது₃ச்யதே ॥
ஶப்₃த₃ப்₃ரஹ்மாத் பரம் ப்₃ரஹ்ம தஸ்மிந் க்ஷீணே யத₃க்ஷரம் ।
தத₃க்ஷரம் ஸதா₃ த்₄யாயேத்₃யதீ₃ச்சே₂த்₃யோக₃மாத்மந: ॥
அகாரஶ்சாப்யுகாரஶ்ச மகாரோ பி₃ந்து₃ரேவ ச ।
மாத்ராஸ்தத்₃விநியோக₃ஶ்ச ப்ரணவ: பஞ்சலக்ஷண: ॥
ஓங்கார: ப்ரணவே யோஜ்யோ ப்₃ரஹ்மணி ப்ரணவஸ்ததா₂ ।
ஆநந்த₃ம் தத் பரம் ப்₃ரஹ்ம தத் ப்ரவிஶ்யாம்ருதீ ப₄வேத் ॥
வேதா₃தௌ₃ ய: ஸ்வர: ப்ரோக்தோ வேதா₃ந்தே ய: ப்ரதிஷ்டி₂த: ।
தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய ய: பர: ஸ மஹேஶ்வர: ॥
யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ ।
ஆநந்த₃ம் ப்₃ரஹ்மணோ வித்₃வாந் ந பி₃பே₄தி குதஶ்சந ॥
ப்ரணவோ த₄நு: ஶரோ ஹ்யாத்மா ப்₃ரஹ்ம தல்லக்ஷ்யமுச்யதே ।
அப்ரமத்தேந வேத்₃த₄வ்யம் ஶரவத் தந்மயோ ப₄வேத் ॥
ஸ்வதே₃ஹமரணிம் க்ருத்வா ப்ரணவம் சோத்தராரணிம் ।
த்₄யாநநிர்மத₂நாப்₄யாஸாத்₃தே₃வம் பஶ்யேந்நிகூ₃ட₄வத் ॥
ஶப்₃த₃ஸ்பர்ஶாதி₃பி₄ஶ்சைவ ரஸரூபைரலக்ஷித: ।
தே₃வதாயா: பராயாஸ்து ஆலம்ப₃: ப்ரணவ: ஸ்ம்ருத: ॥
கஶ்சித₃ராத₄நாகாமோ விஷ்ணோர்ப₄க்த்யா கரோதி வை ।
தத₃ராத₄நஸித்₃த்₄யர்த்த₂ம் ப்ரதிமாம் வ்யஞ்ஜிகாம் யதா₂ ॥
தா₄துதா₃ர்வாதி₃பாஷாணை: க்ருத்வா ப₄ாவம் நிவேஶயேத் ।
ப₄க்த்யா ஶ்ரத்₃தா₄தா₃ராப்₄யாம் ச தஸ்ய விஷ்ணு: ப்ரஸீத₃தி ॥
ஆர்ய: ப்ரபூஜிதோ யத்ர ப்ரத்யக்ஷே ச ப₂லப்ரத₃: ।
ஓங்காரேண ததா₂ ஹ்யாத்மா உபாஸ்த: ஸ ப்ரஸீத₃தி ॥

ஏதத்3ஆலம்ப3நம் ஶ்ரேஷ்ட2ம் ஏதத்3ஆலம்ப3நம் பரம் |
ஏதத்3ஆலம்ப3நம் ஜ்ஞாத்வா ப்3ரஹ்மபூ4யாய கல்பதே ||
அத்3ருஷ்டவிக்3ரஹோ தே3வோ பா4வக்3ராஹ்யோ மநோமய: |
தஸ்யோங்கார: ஸ்ம்ருதோ நாம தேநாஹூத: ப்ரஸீத3தி |
தஸ்மாதோ3மிதி பூர்வம் து க்ருத்வா யுஞ்ஜீத தத்பர: ||
[2-37...61]

[எல்லா வேத3ங்களும் எந்த ப்ராப்யத்தைச் சொல்லுகின்றனவோ, தவம் முதலான கர்மங்களை விதி4க்கும் ஸ்ம்ருதிகளும் எதைக் கூறுகின்றனவோ, எதை விரும்பும் உபாஸகர்கள் ப்3ரஹ்மசர்யத்தை அநுஷ்டி2க்கின்றனரோ, உபாஸிக்கத்தக்கதான அந்த ப4க3வத் ஸ்வரூபத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன். ஓங்காரத்தால் சொல்லப்படுவதே அது. இந்த ஓங்காரமே வேத3 ஸாரமானது. இவ்வக்ஷரமே மேலானது. இவ்வெழுத்தையறிந்தவன் எதை விரும்பினாலும் அது அவனுக்குக் கிடைக்கும். (அறிவு வெளிப்படும்) த்3வாரங்களாயிருக்கும் எல்லா ஜ்ஞானேந்த்3ரியங்களையும் (தமது தொழிலைச் செய்யாதபடி) அடக்கி மனத்தை ஹ்ருத3யகமலத்திலிருக்கும் அக்ஷர புருஷனை ப4க3வானிடத்தில் ஈடுபடுத்தி, அவனிடத்தில் அசையாத நிலையை அடைந்தவனாய், ப்3ரஹ்மமாகிற அவனுக்கு வாசகமான ப்ரணவமாகிற முக்2யாக்ஷரத்தைச் சொல்லாநிற்பவனாய், அதற்குப் பொருளாய், எனக்கு அந்தர்யாமியான எம்பெருமானை அநுஸந்தி4யாநிற்பவனாய், தன்னுடைய ப்ராணவாயுவை (தனது) தலையில் (தலையிலிருக்கும் ஸுஷும்நா நாடி வழியாகப்) பிரவேசிக்கச் செய்து, சரீரத்தை விடுகின்றவன் எவனோ, அவன் (ஸம்ஸாரத்திற்குத்) திரும்பி வருதலில்லாத ப்ராப்யமான ப்ரக்ருதிவியுக்தமான தன் ஆத்மஸ்வரூபத்தை அடைகிறான். வேத3ம் முழுவதற்கும் மூலமாயிருப்பது ஓங்காரமாகிற இவ்வோரெழுத்து. வேத3ம் முழுவதும் இதில் நிலைநிற்கிறது. மூன்று வேத3ங்களிலும் அர்த்த2த்தை மறைத்து இது ரஹஸ்யமாகச் சொல்லப்பட்டுள்ளது. இதன் பொருளையறிபவன் வேத3த்தின் பொருளையறிந்தவனாவான். ஓலைச்சுவடி ஶங்குவினால் (மேலும் கீழும் உள்ள கட்டையினால்) முழுவதும் மூடப்பட்டிருப்பதுபோல், எல்லா வேத3வாக்குகளும் ஓங்காரத்தினால் முழுவதும் மூடப்பட்டுள்ளன. (அஜ்ஞானம், அஹங்காரம், விஷயகாமம்,

தால் சொல்லப்படுபவனே ஸர்வேஶ்வரன். யஜ்ஞத்துக்கு ஈஶ்வரனை அவனே ஓங்காரத்துக்குப் பொருளாவான். அவனைச் சொல்லுவது ஓங்காரமாகிற ப்ரணவம். அவனைச் சொல்லும் வாசகமான ப்ரண வத்தால் அவனையறிந்தால், அதனால் சொல்லப்படும் வாச்யனை அவன் அருள்புரிவான். அவனது அருளைப்பெறுவதற்காக ப்ரணவ மானது அறிவாளிகளால் ஜபிக்கவும், தியானிக்கவும் தக்கது. புருஷன் எனப்படும் அந்த ஸர்வேஶ்வரன் ப்ரணவத்தைக்கொண்டு உபா ஸிப்பவனுக்கு அருள்புரிகிறான். கன்றின் குரலைக்கேட்ட பசு அதை நோக்கி ஓடிவருவதுபோலே, ப்ரணவத்தாலே அழைக்கப்பட்ட பரம் பொருளும் அழைப்பவனின் வாயில் வந்து நிற்கிறது. இரண்டு ப்₃ரஹ்மங்கள் அறியத்தக்கவை— (1) ஶப்₃த₃ப்₃ரஹ்மமாகிற ப்ரணவம். (2) அதனால் அறியப்படும் பரப்₃ரஹ்மம். ஶப்₃த₃ப்₃ரஹ்மமாகிற ப்ரண வத்தில் ஊன்றியவன் பரப்₃ரஹ்மத்தையடைகிறான். ஶரீரத்திலிருந்து உண்டாகி உதா₃னவாயுவால் தூண்டப்பட்டு, யாதொரு ஓங்கார வாக்கானது உச்சரிக்கப்பட்டு, கேட்பவர்களுடைய காதையடைகிறதோ அதுவே ஶப்₃த₃ப்₃ரஹ்மம் எனப்படுகிறது. அந்த ஶப்₃த₃ப்₃ரஹ்மத்தின் மூலம் பரப்₃ரஹ்மம் அடையப்படுகிறது. அந்தப் பரப்₃ரஹ்மம் (பொரு ளாக)வஸிக்கும்படியான ஓங்காரமாகிற அக்ஷரத்தை அந்தப் பரமாத்மா வோடு சேர்த்தியை விரும்புகிறவன் தியானிக்கவேண்டும். அகா ரம், உகாரம், மகாரம், பி₃ந்து₃ என்னும் நான்கும் அந்த ப்ரண வத்தின் மாத்திரைகள். அதன் விநியோக₃த்தையும் சேர்த்து ப்ரண வம் ஐந்து பகுதிகளை உடையதாகிறது. அகார உகார மகாரங்கள் சேர்ந்த ஓங்காரம் (முற்கூறியபடி ஐந்து பகுதிகளையுடைய) ப்ரண வத்தில் சேர்ந்தது. (வாசகமான) ப்ரணவம் (வாச்யமான) ப்₃ரஹ் மத்தில் அவ்வண்ணமே அடங்கியது. அந்தப் பரப்₃ரஹ்மமானது ஆனந்த₃ ஸ்வரூபமாயுள்ளது. அதையடைந்தவன் முக்தி பெறுகிறான். வேத₃த்தின் ஆதி₃யிலே யாதொரு ஸ்வரம் ஓதப்படுகிறதோ, வேத₃த் தின் முடிவிலும் யாதொரு ஸ்வரம் நிலைநிறுத்தப்பட்டுள்ளதோ, தனக்குக் காரணமான அகாரத்திலடங்கிய அந்த ப்ரணவமான ஸ்வ ரத்திற்கு எவன் பொருளாயிருக்கிறானோ, அவனே அனைவர்க்கும் ஈஶ் வரனாவான். எந்தப் பரம்பொருளிடமிருந்து மனத்துடன் கூடிய வாக்குகள் அதை அடையமுடியாமல் திரும்புகின்றனவோ, அந்தப் பரம்பொருளுடைய ஆனந்த₃ கு₃ணத்தை அறிந்தவன் எதைக் கண்டும் ப₄யப்படமாட்டான். ப்ரணவம் வில்லாகிறது. அதில் பூட் டப்படும் அம்பாயிருப்பது ஆத்மா. அந்த அம்பு அடையவேண்டிய இலக்கு பரம்பொருளாகும். கவனத்தோடு அம்பாகிற ஆத்மாவை, ப்ரணவமாகிற வில்லில் பூட்டி, ப்₃ரஹ்மமாகிற இலக்கில் எய்தால்

அம்பு இலக்கில் நுழைவதுபோல் ஆத்மாவும் ப்₃ரஹ்மத்தில நுழைந்து அது போன்றதாகின்றது. தன் தே₃ஹத்தைக் கீழ் அரணிக்கட்டையாக்கி, ப்ரணவத்தை மேல அரணிககட்டையாக்கி, தியானத்தால் இடைவிடாமல் கடைந்தால அரணிககட்டையில் மறைந்திருக்கும நெருப்பு வெளிப்படுவதைக காணபதுபோல், நம தே₃ஹததிலும ப்ரணவததிலும் மறைந்திருக்கும் பரம்பொருளைக காணலாம. ஶப்₃த₃ஸ்பாஶ ரூப ரஸ க₃ந்த₄ங்களாகிற ப்ராக்ருத கு₃ணஙகளைக்கொண்டு காண முடியாதது பரம்பொருள். அந்தப் பரதே₃வதையைச் சேதநன் பற்றுவதற்குப் பறறுகோடாயிருப்பது பரணவம. விஷ்ணுவை ஆராதி₄ப்பதற்கு விருமபுகிறவன் அந்த ஆராத₄னம் நிறைவேறுவதற்காக விஷ்ணுவின் அடையாளங்களையுடைய அர்சசைத் திருமேனியை ப₄க்தியோடு ப்ரதிஷ்டை₂ செய்கிறான். உலோகம், மரம், கல் முதலானவற்றால் அத்திருமேனியைச் சமைதது அதில ப₄க்தியோடும் ஶ்ரத்₃தை₄யோடும், ஆத₃ரத்தோடும் நினைவைச் செலுத்தவேண்டும். அவனுக்கு விஷ்ணு அருள்புரிகிறான் இவ்வணணமாக அர்ச்சையில் ஆராத₄னம் செய்யப்பட்ட எமபெருமான் ப்ரத்யக்ஷமாகப ப₃ல்னளிப்பதுபோலே, ஓங்காரத்தினாலே உபாஸிக்கப்பட்டாலும் பரமாத்மா அருள்புரிகிறான். இந்த ஓங்காரத்தைப்பற்றி நிற்பது மிகச்சிறந்தது. இதைப் பற்றிநிறபது மிக மேலானது. பற்றுக்கோடான இதை அறிந்தவன் முகதிபெற்று எங்கும் பரந்த ஜ்ஞானத்தை உடையவனாகிறான். கண்ணால காணமுடியாத திருமேனியை உடைய எம்பெருமான் மனத்தால் உபாஸிக்தப்பட்டு நினைவினால் அறியப்படுகிறான். அவனுக்கு ஓங்காரம் திருநாமமாகிறது. அதனால அழைக்கப்பட்டு அவன் அருள்புரிகிறான். ஆகையால் எமபெருமானை உபாஸிப்பவன் ஓங்காரத்தை முன்னிட்டுக் கொண்டே உபாஸிககக்கடவன்.] என்னும் இப்பகுதியிலிருந்தும் அகாரத்தினாலும் ஓங்காரத்தினாலும் சொல்லப்படும் விஷ்ணுவே பரம்பொருள் என்றும், அவனையடைவதே மோக்ஷம் என்றும தெளிவாக விளங்குகிறது. இனி இவ்வத்தியாயத்தின் இறுதியில் ஓங்காரத்தின் பத்து நாமஙகளையும், அவற்றின் நிர்வசனங்களையும், ஓங்காரத்தின் வைப₄வத்தையும் விரிவாக வர்ணிக்கும் பகுதியைக் காண்போம்.

ஓங்காரம் விபுலமசிந்த்யமப்ரமேயம் ஸூக்ஷ்மாகாரம்
த்₄ருவமசலம் ஶிவம் புராணம் |
தத்₃விஷ்ணோ: பத₃முக₂பங்கஜப்ரஸூதம் தே₃ஹாந்த:ஸ்த₂ம்
மநஸி ச யத் ஸ்தி₂திம் கரோதி ||

த₃ஶ நாமாநி நைருக்தா ஓங்காரஸ்ய ப்ரசக்ஷதே ।
அந்வர்த்த₂ம் தாநி தாநீஹ வேதி₃தவ்யாநி தீ₄மதா ॥
ஓங்காரம் ப்ரணவம் சைவ ஸர்வவ்யாபிநமேவ ச ।
அநந்தம் ச தத₂ா தாரம் ஶுக்லம் வைத்₃யுதமேவ ச ॥
ஹம்ஸம் துர்யம் பரம் ப்₃ரஹ்ம இதி நாமாநி ஜாநத ।
நிஷ்கலஸ்ய து ஸர்வஜ்ஞ: பர்யாயேண ஹி கீர்த்தித: ॥
உச்சார்யமாண: ஸர்வத்ர ஆபாத₃தலமஸ்தகம் ।
உந்நாமயேச்ச₂ரீரம் து ஓங்காரஸ்தேந சோச்யதே ॥
ருக்₃யஜு:ஸாமாத₂ர்வாணி தே₃வதாஶ்சாக்ஷரத்ரயம் ।
ஶரீரம் வாங்மநஶ்சைவ ப்ராணநாத் ப்ரணவ: ஸ்ம்ருத: ॥
ஶரீரம் சைவ விஶ்வம் ச வித்₃யாஸ்த₂ாநாநி ஸர்வஶ: ।
வ்யாப்ய ஸந்திஷ்ட₂தே யஸ்மாத் ஸர்வவ்யாபீ தத: ஸ்ம்ருத: ॥
அநந்தம் நயதே ஸ்த₂ாநம் தஸ்ய சாந்தோ ந லப்₄யதே ।
ரிஷிதே₃வமநுஷ்யேஷு அநந்தஸ்தேந கீர்த்தித: ॥
ஸர்வது₃:க்க₂ஸமுத்த₂ாநாத்₃ப₄வக்₃ராஹார்ணவாகுலாத் ।
சிந்திதஸ்தாரயேத்₃யஸ்மாத்தேந தாரோ நிக₃த்₃யதே ॥
வர்ணேந ச ப₄வேச்சு₂க்ல: ஶுத்₃த₄ம் ச நயதே பத₃ம் ।
த்ரிவித₄ம் ஶோஷயேத் பாபம் தேந ஶுக்ல இதி ஸ்ம்ருத: ॥
ஆவிஷ்கரோதி ஸ யதேர்ஜ்யோதீருபம் ப்₄ருவோரந்தரே ।
வித்₃யோததே தமோ பி₄த்வா வைத்₃யுதஸ்தேந கீர்த்தித: ॥
ஹ்ருதி₃ த்₄யாநம் ஸதா₃ யஸ்மாதா₃தி₃த்யோத்₃கீ₃த₂மேவ ச ।
பி₄த்வா ஶரீரம் நயதி தஸ்மாத்₃த₄ம்ஸ இதி ஸ்ம்ருத: ॥
ஜாக்₃ரத் ஸ்வப்நம் ச ஸுப்தம் ச துர்யம் சைவ சதுர்த்த₂கம் ।
ஜ்ஞாதஸ்து த்ராயதே யஸ்மாத் துர்யஸ்தேந நிக₃த்₃யதே ॥
வாங்மயஸ்ய து ஸர்வஸ்ய ப்₃ரஹ்மணஸ்த்ரிவித₄ஸ்ய ச ।
முக₂மேதத் ஸமுத்₃தி₃ஷ்டம் ஶப்₃த₃ப்₃ரஹ்மமயம் விபு₄: ॥
பரம் ப்₃ரஹ்ம நயேத்யேவ பரப்₃ரஹ்ம இதி ஸ்ம்ருத: ।
ஏவம் நைருக்தகைர்த்₃ருஷ்டம்ருஷிபி₄ஶ்ச தத₂ா பரை: ॥
ப₃ாஷ்கலைரேகமாத்ரஸ்து ஓங்கார: ஸமுதா₃ஹ்ருத: ।
ருசகாயந ஆசார்யோ த்₃விமாத்ரம் சேச்ச₂தே ஸதா₃ ॥
த்₃விமாத்ரஶ்சார்த்த₄மாத்ரஸ்து நாரத₃ஸ்ய மதேந து ।
மௌத்₃க₃ல்ஸ்ய த்ரிமாத்ரஸ்து ஓங்காரோ நாத்ர ஸம்ஶய: ॥

வஸிஷ்டஃஸ்ய மதேநைவ மாத்ரா சாத்ர சதஸ்ரிகா।
த்ரிமாத்ரோ மநுநா சோக்தஸ்ததாந்யை ரிஷிஸத்தமை: ॥
பாராஶரைஶ்சதுர்மாத்ரஸ்ததா ஸ்வத்யாத்மசிந்தகை:।
ஹ்ரஸ்வம் தீர்க்கம் ப்லுதம் ஶாந்தம் சதுர்த்தா ஸம்ப்ர-
பவேத் கர்மவஶாதேவமந்யதா து த்ரிரக்ஷரம்। [கீர்த்திதம் ॥
பகவாந் யாஜ்ஞவல்க்யஸ்து அமாத்ரம் சேச்சதே ஸதா ॥
ய: ஶப்ததமய ஓங்கார உச்சார்ய: ஸ்தூல ஏவ ஸ:।
அமாத்ரஶ்சாப்யநுச்சார்ய: பரோங்கார: ஸ உச்யதே ॥
திஸ்ர: ஸார்த்தாஸ்ததா மாத்ரா: ஸ க்ருஹ்ஞ்தி யதாக்ரமம்।
பரம் ப்ரஹ்ம தமேவாஹுஶ்சாத்மாநம் ப்ரஹ்மசிந்தகா: ॥
யத் பூர்வம் து ஸமுத்திஷ்டமோங்காரார்க்ரே வ்யவஸ்திதம்।
அக்ஷரைஶ்ச பதைஶ்சைவ அதீதம் பஞ்சமம் பதம் ॥
யம் (யத்) ப்ராப்ய விநிவர்த்தந்தே ஓங்காரஸ்ய பதி ஸ்திதா:।
மநஸாத்ர ஸமாதாய ஶரீரம் லிங்கமாநவம் ॥
ஸங்கல்பம் வ்யவஸாயம் ச அபிமாநாக்ய ஸம்ஜ்ஞகம்।
சேதநாதிஷ்டிதம் ஸூக்ஷ்மம் ததா ஸூக்ஷ்மை: ஸஹைவ து ॥
ஓங்காரபத்மநாலேந ஹ்ருத உத்த்ருத்ய யோஜயேத்।
பரமே வ்யோம்ந்யநந்தாக்யே ஸர்வஸங்கல்பவர்ஜிதே ॥
தஸ்மிம்ஸ்தாவந்நிரோத்தவ்யம் மநஶ்சோங்காரமேவ ச।
யாவந்நிர்மலதாம் யாதி ஏஷ யோக உதாஹ்ருத: ॥
மநோ யுஞ்ஜ்யாத்ததோங்காரே ஓங்காரம் ப்ரணவே ததா।
ப்ரணவம் ப்ரஹ்மணி ஸ்தாப்ய ந கிஞ்சிதபி சிந்தயேத் ॥
ப்ரணவோ விமல: ஶுத்தோ நி:ஶப்தோ வ்யோமஸம்ஜ்ஞக:।
தஸ்மாதுத்பத்யதே ப்ராண: புநஸ்தத்ரைவ லீயதே ॥
ப்ரணவே நித்யயுக்தஸ்ய ந பயம் வித்யதே க்வசித்।
து:க்கே பயாபிகாதார்த்தே ஸர்வதா ப்ரணவம் ஸ்மரேத் ॥
ப்ரணவோ ஹ்யபரம் ப்ரஹ்ம ப்ரணவஶ்ச பர: ஸ்ம்ருத:।
ப்ரணவோ ஹ்யாதிஸர்க்கஸ்ய அந்தோ மத்யஸ்ததைவ ச ॥
ஏவம் ஹி ப்ரணவம் ஜ்ஞாத்வா விஶந்தி ப்ரஹ்ம நிஷ்கலம்।
அபூர்வோऽநந்தரோऽபாஹ்யோऽநபர: ப்ரணவோऽவ்யய: ॥
ப்ரணவோ ஹீஶ்வரோ தேவோ ஹ்ருதி ஸர்வஸ்ய திஷ்டித:।
ஸர்வவ்யாபிநமோங்காரம் மத்வா தீரோ ந ஶோசதி ॥

அமாத்ரம் ச த்ரிமாத்ரம் ச அத்₃வைதம் ப்₃ரஹ்ம தத் பரம்|
ஸ்தூ₂லம் சாப்யதிஸூக்ஷ்மம் ச ஸர்வத: கிமபி ஸ்தி₂தம் ||
ஓங்காரம் விந்த₃தே யஸ்து ஸ ப₄வேத்₃வேத₃வித்₃த்₃விஜ: |
யதா₂ பத்ரம் ப₂லம் புஷ்பம் ஶங்குநைகேந தா₄ர்யதே ||
ததா₂ ஜக₃தி₃த₃ம் ஸர்வமோங்காரேணைவ தா₄ர்யதே |
ஜப்யேந த₃ஹதே பாபம் ப்ராணயாமைஸ்ததா₂ மலம் ||
த்₄யாநேந ஜந்மநிர்க்க₄தம் தா₄ரணாபி₄ஶ்ச முச்யதே |
ப்₃ரஹ்மண: ப்ரணவம் குர்யாதா₃தா₃வந்தே ச ஸர்வதா₃ ||
ஸ்ரவத்யநோங்க்ருதம் பூர்வம் பரஸ்தாச்ச விஶீர்யதே |
ப்ரோக்ஷணே போஷணே சைவ ப்ரதிஷ்டா₂நே ப்ரதிக்₃ரஹே ||
ஆஶ்ராவணே வஷட்காரே ப்ரத்யாஶ்ராவே ஜபே5பி ச |
ஸாமஸு ப்₃ரஹ்மமுக்₂யேஷு ருக்₃யஜுஸ்ஸ்தோத்ரஶஸ்த்ரயோ: ||
ஸர்வமந்த்ரப்ரயோகே₃ஷு ஓமித்யாதெ₃ள ப்ரயுஜ்யதே |
தேந ஸம்பரிபூர்ணாநி யதோ₂க்தாநி ப₄வந்தி ச ||
ஸர்வமந்த்ராதி₄ராஜேந ஓங்காரேண ந ஸம்ஶய: |
யதூ₃நம் சாதிரிக்தம் ச யச்சி₂த்₃ரம் யத₃யாஜ்ஞிகம் ||
யத₃மேத்₄யமஶுத்₃த₄ம் வா யாதயாமம் ச யத்₃ப₄வேத் |
ஓங்காரேண ப்ரயுக்தேந ஸர்வம் சாவிகலம் ப₄வேத் ||
அநூநம் நாதிரிக்தம் ச அச்சி₂த்₃ரம் யாஜ்ஞிகம் ததா₂ |
மேத்₄யம் ஶுத்₃த₄யாதயாமம் பவித்ரம் மங்க₃ளம் ததா₂ ||
ஸர்வமங்க₃ளமாங்க₃ள்யம் ஸர்வப்₃ரஹ்மமயம் விபு₄ம் |
பாவநம் மோக்ஷத₃ம் புண்யம் ஸர்வதே₃வமயம் விபு₄ம் ||
விதி₃த்வா முச்யதே க்ஷிப்ரம் ஜந்மஸம்ஸாரப₃ந்த₄நாத் |
முக்தோ ந ஜாயதே பூ₄யோ ப்₃ரஹ்மபூ₄த: ஸநாதந: ||
ஏதத் ஸம்க்ஷேபத: ப்ரோக்தம் ஓங்காரகு₃ணவர்ணநம் |
விஸ்தரேண ந ஶக்யந்தே வக்தும் வர்ஷஶதைரபி |
யோக₃சார்யேண ஸஞ்சிந்த்ய யாஜ்ஞவல்க்யேந தீ₄மதா |
ஓங்காரநிர்ணயோ ஹ்யேஷ ப்ரோக்த: ஶிஷ்யஹிதைஷிணா ||
[2-112....158]

[விரிவான பொருளையுடையதும், நினைத்தற்கரியதும், அளவற்றதும், ஸூக்ஷ்மமாயிருப்பதும், நிலையானதும், அசையாததும், மங்க₃ளமான தும், பழையதாயிருந்தும் புதியதாயிருப்பதுமானது ஓங்காரம். அது

எம்பெருமானைச் சொல்லும் பத₃மாகவும், அவனுடைய திருமுகசூத் தாமரையிலிருந்து உண்டானதாகவும், திருமேனியில் இருப்பதாகவும் இருந்துகொண்டு சேதனர்களுடைய மனத்தை நிலையானதாகப் பண்ணுகிறது. நிருக்தி ஶாஸ்த்ரத்தில் வல்லவர்கள் ஓங்காரத்திற்குப் பத்து நாமங்களிருப்பதாகக் கூறுகிறார்கள். அந்த நாமங்கள் ஓங்கா ரத்திற்குப் பொருத்தமான பொருளுடையவை என்று அறிவாளியால் அறியத்தக்கது. (1) ஓங்காரம் (2) ப்ரணவம் (3) ஸர்வவ்யாபி (4) அநந்தம் (5) தாரம் (6) ஶுக்லம் (7) வைத்₃யுதம் (8) ஹம்ஸம் (9) துர்யம் (10) பரம்ப்₃ரஹ்ம என்னுமிவற்றை ஓங்காரத்தின் நாமங்களாக அறிவீர்களாக. அவயவமற்றவனாகவும், எல்லாமறிந்த வனாகவும் இருக்கும் பரப்₃ரஹ்மம் அந்த ஓங்காரத்திற்கு வாச்யனா யிருக்கையாலே, அதற்குப் பர்யாயமாகக் கூறப்படுகிறான். [மூலத் தில் 'நிஷ்கலஸ்ய' என்றிருப்பதை 'நிஷ்கலஶ்ச' என்று திருத்தவும்] (1) அந்த ஓங்காரமானது எங்கும் உச்சரிக்கப்படும்போது காலி லிருந்து தலைவரையில் ஶரீரத்தை உயர்த்துகிறதாகையால் ஓங்காரம் எனப்படுகிறது. (2) ருக்₃யஜுஸ்ஸாமாத₂ர்வணவேத₃ங்களையும், அவற் றிற்குரிய தே₃வதைகளையும், அகார உகார மகாரங்களாகிற மூன்று அக்ஷரங்களையும், ஶரீரத்தையும், வாக்கையும், மனஸ்ஸையும் ப்ராண (ப்ரணம?)னம் செய்கிறதாகையாலே (அந்தணர்களுக்கு வளைத்துக் கொடுக்கிறது. அதாவது வசப்படுத்துகிறது; ஆகையாலே) ப்ரணவம் எனப்படுகிறது. (3) ஶரீரத்தையும், உலகனைத்தையும், வித்₃யாஸ்த₂ா னங்களையும் எல்லாப்படியாலும் வியாபித்திருக்கையாலே ஸர்வவ்யாபி என்று சொல்லப்படுகிறது. (4) அந்த ஓங்காரம் அநந்தமான மோக்ஷ லோகத்தை அடைவிக்கிறதாகையாலும், அதற்கு அழிவில்லையாகை யாலும் ரிஷிகள், தே₃வர்கள், மனிதர்களிடையே அது அநந்தம் என்று பெயர்பெற்றிருக்கிறது. (5) பல முதலைகள் நிறைந்த ஸம் ஸாரக் கடலில் மூழ்கி வருந்துகிறவர்களை, தன்னைச் சிந்தித்த மாத்திரத்தில் எல்லாத் துன்பங்களிலிருந்தும் தாண்டுவிக்கிறதாகை யாலே தாரம் எனப்படுகிறது. [மூலத்தில் 'ஸமுத்த₂ாநாத்₃ப₄வ க்₃ராஹார்ணவாகுலாத்' என்பதை 'ஸமுத்தாராத்₃ப₄வக்₃ராஹார்ண வாகுலாந்' என்று திருத்தவும்.] (6) இந்த ஓங்காரத்திற்குரிய வர்ணம் ஶுக்லமாகையாலும், ஶுத்₃த₄மான அப்ராக்ருதலோகத்தை இது அடைவிக்கிறதாகையாலும், (ஸஞ்சிதம், ப்ராரப்₃த₄ம், உத்த ராக₄ம்) என்னும் மூன்றுவித₄மான பாபங்களை ஶோஷணம் (வற்றச்) செய்கிறதாகையாலும் இது ஶுக்லம் எனப்படுகிறது. (7) யோகி₃களு டைய புருவங்களின் நடுவில் பரஞ்சோதியான எம்பெருமானை ஆவிர்ப் ப₄விக்கச் செய்கிறதாகையாலும், அஜ்ஞானமாகிற இருளைப்பிளந்து,

விஶேஷமாக ப்ரகாஶிக்கிறதாகையாலும் ஓங்காரம் வைத்₃யுதம் எனப் படுகிறது. (8) இந்த ஓங்காரம் எப்போதும் நெஞ்சில் தியானிக்கப் படுகிறதாகையாலும் ஆதி₃த்யன் என்றும் உத்₃கீ₃த₂ன் என்றும் சொல்லப்படும் பரமபுருஷனை சேதன ஶரீரத்தைப் பிளந்து அழைத்து வருகிறதாகையாலும் இது ஹம்ஸம் எனப்படுகிறது. (9) விழிப்பு நிலை, ஸ்வப்நநிலை, தூக்கநிலை, நாலாவதான மூர்ச்சை₂நிலை என்னும் இந்நாலு நிலைகளிலிருந்தும் தன் பொருளை உணர்ந்தவனைக் காப் பாற்றுகிறதாகையால் ஓங்காரம் துர்யம் எனப்படுகிறது. (10) வாக்₃ ரூபமாயிருப்பதாய், ருக்₃யஜுஃஸ்ஸாமம் என்று மூன்று வகைப்பட்ட ப்₃ரஹ்மம் (வேத₃ம்) அனைத்துக்கும் இவ்வோங்காரமானது முக₂மாகக் கருதப்படுகிறது. எல்லா வேத₃த்திலும் வியாபித்திருக்கும் இது ஶப்₃த₃ப்₃ரஹ்மமாகையாலும், பரப்₃ரஹ்மஶப்₃த₃த்தால் சொல்லப்படும் பரமபுருஷனிடம் அழைத்துச் செல்லுகிறதாகையாலும் இவ்வோங் காரம் பரப்₃ரஹ்மம் எனப்படுகிறது. இவ்வண்ணமாக நிருக்திகாரர் களாலும், மற்ற ரிஷிகளாலும் ஓங்காரத்தின் பத்து நாமங்களுக்கும் பொருள்கூறப்படுகிறது. ப₃ாஷ்கலஶாகை₂யைச் சேர்ந்தவர்கள் ஓங் காரத்தை ஒரு மாத்திரையுடையதாகக் கூறுகிறார்கள். 'ருசகாயநர்' என்னும் ஆசார்யர் ஓங்காரம் எப்போதும் இரு மாத்திரை யுடையதென்று கருதுகிறார். நாரத₃ரின் கருத்தோவெனில், இரண்டரை மாத்திரை உள்ளது என்பது. 'மௌத்₃க₃லர்' மூன்று மாத்திரையுள்ளதாக ஓங்காரத்தை நிஷ்கர்ஷித்திருக்கிறார். இதில் ஐயமில்லை. வஸிஷ்ட₂ருடைய கருத்துப்படி ஓங்காரத்திற்கு நாலு மாத்திரை உள்ளது. மநு மூன்று மாத்திரை உள்ளதாகச் சொன் னார். மற்ற பல ரிஷிஶ்ரேஷ்ட₂ர்களும் இப்படியே கூறுகிறார்கள். பராஶரரின் வம்ஶத்தில் வந்தவர்களும், ஆத்மஜ்ஞானிகளும் நாலு மாத்திரை உள்ளதாகக் கூறுகிறார்கள். ஓங்காரமானது ஹ்ரஸ்வம், தீ₃ர்க்க₄ம், ப்லுதம், ஶாந்தம் என்று நான்குவகையாகக் கூறப்படு கிறது. காரியவஶத்தால் அது இப்படி நாலுவகையாகிறது. மற்றபடி அது [அ, உ, ம் என்று] மூன்று அக்ஷரங்களையுடையதே. ப₄க₃வான் யாஜ்ஞவல்க்யரோவெனில், ஓங்காரத்திற்கு எப்போதும் மாத்திரையே கிடையாது என்று கருதுகிறார். ஸ்தூ₂லமாய், ஶப்₃த₃₃மயமான ஓங்காரமே உச்சரிக்கத்தக்கது. மாத்திரையில்லாத ஓங்காரம் உச்ச ரிக்கத் தகாதது. அது பரோங்காரம் என்று கூறப்படுகிறது. அந்தப் பரோங்காரமானது படிப்படியாக மூன்றரை மாத்திரைகளை ஏற்றுக் கொள்கிறது. அந்த மூன்றரைமாத்திரையுள்ள ஓங்காரத்தையே ப்₃ரஹ்மஜ்ஞாநிகள் பரப்₃ரஹ்மத்தையும், ஜீவாத்மாவையும் சொல்லு வதாகக் கூறுகிறார்கள். (இதற்குப்பின் இரண்டு ஶ்லோகங்கள் யோக₃

முறையை விளக்குவதால் யோகஶாஸ்த்ரங்களைக்கொண்டு பொருளறியத்தக்கவை.) சேதனனால் செய்யப்படும் (ப்ராக்ருதவிஷயமான) ஸூக்ஷ்மமான ஸங்கல்பத்தையும், உறுதியையும், அபிமானத்தையும், மற்றும் ஸூக்ஷ்மமான எண்ணங்களையும் ஓங்காரமாகிற தாமரைத் தண்டினாலே தன் ஹ்ருதயத்திலிருந்து எடுத்து, தன் மனத்தையும் ஓங்காரத்தையும் பரமாகாஶம் எனப்படுபவனாய், (முற்கூறிய தாழ்ந்த) ஸங்கல்பம் எதுவுமில்லாதவனாய், அநந்தன் என்று பெயர்பெற்றவனை பரமாத்மாவிடம் தான் அழுக்கற்றவனாகும் வரையில் சேர்த்திருக்கவேண்டும். இதுவே யோகம் எனப்படுகிறது. மனத்தை ஓங்காரத்திலும், ஓங்காரத்தை ப்ரணவத்திலும் சேர்க்கவேண்டும். ப்ரணவத்தை ப்ரஹ்மத்திடம் நிலைநிறுத்தி, வேறெதையும் சிந்திக்கக் கூடாது. ப்ரணவமானது அழுக்கற்றதாய், ஶுத்தமானதாய், ஒலியற்றதாய், ஆகாஶம் எனப்படுவதாயுள்ளது. அதிலிருந்தே ப்ராணன் உண்டாகி, மறுபடியும் அதிலேயே ஒடுங்குகிறது. ப்ரணவத்தில் எப்போதும் சேர்ந்திருப்பவனுக்கு எதனிடமும் பயமில்லை. து:க்கம் ஏற்படும்போதும், பயத்தினாலும் தாபத்ரயங்களாலும் வருந்தும் போதும் எப்போதும் ப்ரணவத்தை நினைக்கவேண்டும். ப்ரணவம் ப்ரஹ்மத்தின் மற்றோருருவமாகும். ப்ரணவமே மேலான மந்த்ரமாகக் கூறப்படுகிறது. ப்ரணவம் படைப்புக்கு முதலும் நடுவும் முடிவுமாகிறது. இவ்வண்ணமாக ப்ரணவத்தையறிந்து, (ப்ராக்ருதமான) அவயவங்களற்ற ப்ரஹ்மத்தையடைகிறார்கள். முன்னும்பின்னுமற்றதாய், உள்ளும் வெளியுமற்றதாய், அழிவற்றதாயிருப்பது ப்ரணவம். அனைவருடைய ஹ்ருதயத்திலும் எழுந்தருளியிக்கும் தேவனை ஈஶ்வரன் ப்ரணவத்தின் பொருளாவான், ஸர்வவ்யாபியான ஓங்காரத்தை நினைக்கும் அறிவாளி எப்போதும் வருந்தமாட்டான். மாத்திரைகளற்றதும், மூன்று மாத்திரைகள் உள்ளதுமான ஓங்காரம் முறையே ஸூக்ஷ்மமான உலகையும், ஸ்தூலமான உலகையும் எங்கும் வியாபித்திருக்கும் ஒப்பற்ற பரப்ரஹ்மத்தைக் கூறுகிறது. எவனொருவன் ஓங்காரத்தின் பொருளையறிகிறானோ அவ்வந்தணன் வேதமனைத்தின் பொருளையும் அறிந்தவனாகிறான். இலை, பழம், புஷ்பம் முதலானவை ஒரு முளையாலே தரிக்கப்படுவதுபோலே, ஓங்காரத்தினால் இவ்வுலகனைத்தும் தரிக்கப்படுகிறது. (ஓங்காரத்தைக்கொண்டு) ஜபிப்பதால் பாபம் எரிக்கப்படுகிறது; ப்ராணாயாமம் செய்வதால் மனத்திலுள்ள அழுக்கு எரிக்கப்படுகிறது; தியானம் செய்வதால் பிறப்பு நீங்குகிறது; தாரணைகளினால் முக்தியடைகிறான். வேதத்திற்கு முன்னும் பின்னும் எப்போதும் ஓங்காரத்தை ஓதவேண்டும். (பெட்டியிலுள்ள ரத்னம் பெட்டியின் அடிப்பாகம் இல்லாவிடில் நழுவி

விடுவதுபோலேயும், பெட்டியின் மேல்மூடியில்லாவிடில் சிதறிவிடுவது போலேயும்) வேத₃த்திற்கு முன் ஓங்காரத்தை ஓதாவிடில் வேத₃ம் நழுவிவிடும். பின்னால் ஓங்காரத்தை ஓதாவிடில் வேத₃ம் சிதறிவிடும். ப்ரோக்ஷணம், பே(ர)ஷணம், ப்ரதிஷ்ட₂ாநம், த₃ாநம் வாங்குதல், ஆஶ்ராவணம், வஷட்காரம், ப்ரத்யாஶ்ராவம், ஜபம், வேத₃த்தில் ப்ரத₄ாநமான ஸாமமந்த்ரங்கள், ருக்₃யஜுர்வேத₃ங்களிலுள்ள ஸ்தோத்ரம், ஶஸ்த்ரம் எனும் வேத₃ப்பகுதிகள், மற்ற எல்லா மந்த்ர ப்ரயோக₃ங்கள் ஆகிய அனைத்திலும் ஆதி₃யில் 'ஓம்' என்று ப்ரயோக₃ம் செய்யவேண்டும். எல்லா மந்த்ரங்களிலும் தலைமைபெற்ற அந்த ஓங்காரத்தினாலேயே அவையவை பரிபூர்ணமானவையாகவும், விதி₄ப்படி அநுஷ்டி₂க்கப்பட்டவையாகவும் ஆகும். இதில் ஐயமில்லை. (எல்லாக்கர்மங்களிலும்) குறைவாகவோ, மிகுதியாகவோ, இடையூறு உள்ளதாகவோ, யஜ்ஞத்திற்கு முரணானதாகவோ, யாக₃த்திற்குத் தகாததாகவோ, அஶுத்₃த₄மாகவோ, யாதயாமமாகவோ எது இருக்கிறதோ அது அனைத்தும் ஓங்காரம் ப்ரயோகி₃க்கப்பட்டால் குறைநீங்கியதாகிறது. குறைந்தது நிறைவடைகிறது. மிகுதியானது சரியாகிறது. இடையூறு உள்ளது இடையூறு அற்றதாகிறது. யஜ்ஞத்திற்கு முரணானது யஜ்ஞத்தை ஒட்டியதாகிறது. யாக₃த்திற்குத் தகாதது தகுந்ததாகிறது. அஶுத்₃த₄ம் ஶுத்₃த₄மாகிறது. யாதயாமம் அயாதயாமமாகிறது. அனைத்தும் பரிஶுத்₃த₄மாகவும், மங்க₃ளமாகவும் ஆகிறது. எல்லா மங்க₃ளங்களுடைய மங்க₃ளத்தையும் உடையதாய், ஸர்வவேத₃மயமாயிருப்பதாய், எங்கும் பரவியதாய், பரிஶுத்₃த₄ப்படுத்துவதாய், மோக்ஷத்தையளிப்பதாய், புண்யமாயிருப்பதாய், ஸர்வதே₃வமயமானதான இவ்வோங்காரத்தையறிந்தவன் ஜந்மஸம்ஸாரக்கட்டிலிருந்து விடுபடுகிறான். எங்கும் ப்₃ரஹ்மத்தைப்போலான அந்த முக்தன் மறுபடியும் இவ்வுலகில் பிறப்பதில்லை. ஓங்காரத்தின் பெருமைகள் இதுவரையில் சுருக்கமாக வர்ணிக்கப்பட்டன. நூறுவருஷங்களானாலும் இவற்றை விரிவாகச் சொல்லமுடியாது. அறிவாளியாய், யோக₃ாசார்யராய், ஶிஷ்யர்களுக்கு நன்மையை விரும்புகிறவரான யாஜ்ஞவல்க்யரால் ஓங்காரத்தைப் பற்றிய இந்த நிர்ணயம் உபதே₃ஶிக்கப்பட்டது ]

இந்த ஸ்ம்ருதிப₄ாக₃ம் முழுவதும் அத₂ர்வஶிரஸ்ஸிலுள்ள பின் வரும் பகுதிகளுக்கு உபப்₃ரும்ஹணமாய் (விளக்கமாய்) உள்ளது கீழே காணத்தக்கது.

''ஸ ஓங்காரோ ய ஓங்கார: ஸ ப்ரணவோ ய: ப்ரணவ: ஸ ஸர்வ வ்யாபீ யஸ்ஸர்வவ்யாபீ ஸோ‌னந்தோ யோ‌னந்த: தத்தாரம் யத்தாரம்

தத்ஸூக்ஷ்மம் யத்ஸூக்ஷ்மம் தச்சுக்லம் யச்சுக்லம் தத்வைத்யுதம் யத்வைத்யுதம் தத் பரம்ப்ரஹ்மேதி।..........அத கஸ்மாதுச்யத ஓங்காரோ யஸ்மாதுச்சார்யமாண ஏவ ஸர்வம் ஶரீரமூர்த்வம் உந்நாமயதி தஸ்மாதுச்யத ஓங்கார:। அத கஸ்மாதுச்யதே ப்ரணவ:? யஸ்மாதுச்சார்யமாண ஏவ ருசோ யஜூம்ஷி ஸாமாந்யதர்வாங்கிரஸஶ்ச........ப்ராஹ்மணேப்ய: ப்ரணாமயதி தஸ்மாதுச்யதே ப்ரணவ:। அத கஸ்மாதுச்யதே ஸர்வவ்யாபீ? யஸ்மாதுச்சார்யமாண ஏவ ஸர்வாந் லோகாந் வ்யாப்நோதி........தஸ்மாதுச்யதே ஸர்வவ்யாபீ। அத கஸ்மாதுச்யதே அநந்த:? யஸ்மாதுச்சார்யமாண ஏவ ஆத்யந்தம் நோபலப்யதே — திர்யகூர்த்வமதஸ்தாத் தஸ்மாதுச்யதே அநந்த:। அத கஸ்மாதுச்யதே தாரம்? யஸ்மாதுச்சார்யமாண ஏவ கர்ப்பஜந்ம ஜராமரண ஸம்ஸார மஹத்பயாத் ஸந்தாரயதி தஸ்மாதுச்யதே தாரம்।........அத கஸ்மாதுச்யதே ஶுக்லம்? யஸ்மாதுச்சார்யமாண ஏவ க்லந்ததே க்லாமயதே தஸ்மாதுச்யதே ஶுக்லம்। அத கஸ்மாதுச்யதே வைத்யுதம்? யஸ்மாதுச்சார்யமாண ஏவ மஹதி தமஸி ஸர்வம் ஶரீரம் வித்யோதயதி தஸ்மாதுச்யதே வைத்யுதம்। அத கஸ்மாதுச்யதே பரம்ப்ரஹ்ம? யஸ்மாதுச்சார்யமாண ஏவ ப்ருஹதி ப்ரும்ஹயதி தஸ்மாதுச்யதே பரம்ப்ரஹ்ம।''

[ஓங்காரமே ப்ரணவம், ஸர்வவ்யாபீ, அநந்தன், தாரம், (ஸூக்ஷ்மம்), ஶுக்லம், வைத்யுதம், பரப்ரஹ்மம் என்று சொல்லப்படுகிறது...... அது ஏன் ஓங்காரம் என்று சொல்லப்படுகிறது? அது உச்சரிக்கப்படும்போதே ஶரீரம் முழுவதையும் மேலே உயர்த்துகிறதாகையால் ஓங்காரம் எனப்படுகிறது. அது ஏன் ப்ரணவம் என்று கூறப்படுகிறது? அது உச்சரிக்கப்படும்போதே ருக்யஜுஸ்ஸாமாதர்வாங்கிரஸ்ஸுக்களையும்......ப்ராஹ்மணர்களுக்கு வளைத்துக் கொடுக்கிறது, அதாவது வஶப்படுத்துகிறது அதனால் ப்ரணவம் எனப்படுகிறது, அது ஏன் ஸர்வவ்யாபி என்று வழங்கப்படுகிறது? அது உச்சரிக்கப்படும்போதே எல்லா உலகங்களையும் வியாபிக்கிறதாகையால் ஸர்வவ்யாபி எனப்படுகிறது. அது ஏன் அநந்தன் என்று படிக்கப்படுகிறது? அது உச்சரிக்கப்படும்போதே அதற்கு முதலும் முடிவும் காணப்படுவதில்லை, பக்கங்களும், மேலும், கீழும் காணப்படுவதில்லை. அதனால் அநந்தன் எனப்படுகிறது. அது ஏன் தாரம் என்று முழங்கப்படுகிறது? அது உச்சரிக்கப்படும்போதே கர்ப்பவாஸம், பிறப்பு, கிழத்தனம், மரணம் முதலான ஸம்ஸாரத்திலுள்ள பெரும்பயங்களிலிருந்து தாண்டுவிக்கிறதாகையாலே தாரம் எனப்படுகிறது......அது ஏன் ஶுக்லம் என்று உரைக்கப்படுகிறது? அது (ஶுத்தலோகத்தை)

அடைவிக்கிறதாகையாலும், (பாபங்களை) வற்றச்செய்கிறதாகையாலும் ஶுக்லம் எனப்படுகிறது. அது ஏன் வைத்₃யுதம் என்று வ்யவஹரிக்கப்படுகிறது? அது உச்சரிக்கப்படும்போதே பேரிருளான இந்த ஸம்ஸாரத்திலும், தன் உருவம் முழுவதையும் பிரகாஶிக்கச் செய்கிறது. அதனால் வைத்₃யுதம் எனப்படுகிறது. அது ஏன் பரப்₃ரஹ்மம் என்று கோ₄ஷிக்கப்படுகிறது? அது உச்சரிக்கப்படும்போதே எல்லா வேத₃த்திலும் வியாபித்திருக்கையாலும், ஜீவனை (மோக்ஷமடையச் செய்வதன்மூலம்) பெரியவனாக்குகிறதாகையாலும் பரப்₃ரஹ்மம் எனப்படுகிறது.]

இவ்வண்ணமாக, இவ்வுபநிஷத்₃வாக்யம் ஓங்காரநிர்வசனபரமாக யோக₃யாஜ்ஞவல்க்யரால் விளக்கப்பட்டுவிட்டபடியால் இந்த அத₂ர்வஶிரஸ் வாக்யத்தையொட்டி, ருத்₃ரன், ஈஶாநன், ப₄க₃வான், மஹேஶ்வரன், மஹாதே₃வன் என்று படிக்கப்பட்டிருக்கும் நாமங்களும், அதன் நிர்வசனங்களும் ஓங்காரத்தின் நாம நிர்வசனங்களே என்று விளங்குகிறது. ஆகையால், இவற்றைக்கொண்டு ருத்₃ரபரத்வம் ஸ்தா₂பிக்க இயலாது என்றும் தெளிவாகிறது. அநந்தன் ப₄க₃வான் என்னும் ப₄க₃வந்நாமங்களையும் இங்கு ஓங்காரத்தைக் குறித்துப் பிரயோகி₃த்திருப்பதை நோக்கவேணும். இவ்விஷயங்கள் விஷ்ணுசித்தவிஜயத்தின் முதல் அத்தியாயத்தின் இரண்டாம் பாத₃த்தின் கடைசியில் (பக்கம் 436-439) விளக்கப்பட்டுள்ளது காணத்தக்கது.

இனி, வ்யாஹ்ருதிநிர்ணயபரமான மூன்றும் அத்தியாயத்தில் பரமாத்ம ப்ரஸ்தாவமுள்ள பகுதிகளைக் காண்போம்.

**ஏதாஸ்து வ்யாஹ்ருதீ: ஸப்த ய: ஸ்மரேத் ப்ராணஸம்யமே |**
**உபாஸிதம் ப₄வேத் தஸ்ய விஶ்வம் பு₄வநஸப்தகம் ||**
**ஸர்வேஷு சைவ லோகேஷு காமசாரஶ்ச ஜாயதே |**
**ஏஷா லோகவதீ ஜ்ஞேயா தநுராத்₃யே ப்ரஜாபதே: ||**
**ஸப்தாந்தா தே₃வதே₃வஸ்ய விஷ்ணோரமிததேஜஸ: ||**
[3-10....12]

[ப்ராணாயாமத்தில் (பூ₄:, பு₄வ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப:, ஸத்யம் என்னும்)இந்த ஏழு வ்யாஹ்ருதிகளையும் எவனொருவன் நினைக்கிறானோ, அவனால் ஏழு உலகங்களும் உபாஸிக்கப்பட்டவையாகும். அவன் எல்லாவுலகங்களிலும் இஷ்டப்படி ஸஞ்சரிக்கும் (மோக்ஷமாகிற) பேற்றை அடைகிறான். உலகங்களைக்குறிக்கும் ஏழுடன்முடியும் இந்த வ்யாஹ்ருதிஸப்தகம் ஜீவர்களுக்குப் பதியாய், தே₃வதே₃வனும், அளவற்ற தேஜஸ்ஸை உடையவனான விஷ்ணுவுக்குப் பழையதான

ஶரீரமாகும்.] என்னும் பகுதியில், விஷ்ணுவே தேவதேவனும் விஶ்வபதியாயிருப்பவன் என்றும், வ்யாஹ்ருதிகளை ஶரீரமாகக் கொண்டிருப்பவன் என்றும் விஷ்ணுபரத்வம் முழங்கப்பட்டுள்ளது காணத்தக்கது. அடுத்தபடியாக,

"அஜஸ்ய நாப₄ாவத்₃பூ₄தம் யஸ்மிந் விஶ்வம் ப்ரதிஷ்டி₂தம் ।
மஹதா₃தி₃விஶேஷாந்தம் அவ்யக்தே க₃ச்ச₂தே லயம் ॥" [3-27]

[பிறப்பற்றவனை பரமாத்மாவின் லோகாத₄ாரமான நாபி₄யில் (உந்தி யில்) அண்டம் உண்டாயிற்று. மஹான் தொடக்கமாகப் பஞ்ச பூ₄தங்களீருகவுள்ள அனைத்தும் அவ்யக்தமாகிற மூலப்ரக்ருதியில் லயமடைகிறது.] என்னும் ஶ்லோகத்திலிருந்து பரமாத்மாவின் உந்தி யிலிருந்து உலகம் உண்டாவதாகக் கூறுவது, நாரணனின் உந்தித் தாமரையிலிருந்து உலகம் உண்டாவதாகக்கூறும் மற்ற பல ஶ்ருதி ஸ்ம்ருதிகளை நினைவுபடுத்துவதன்மூலம் விஷ்ணுபரத்வத்தைக் காட்டு கிறது. அடுத்தபடியாக,

அபுநர்மரணாயைவ ப்₃ரஹ்மண: ஸத₃நே ஸ்தி₂தா: ।
அதி₄காரம் விநா சைவ ப்₃ரஹ்மண: ஸத்₃ருஶாஶ்ச தே ॥
அவ்யக்தே வை தி₃நஸ்யாந்தே முச்யந்தே ப்₃ரஹ்மணா ஸஹ ।
விஶந்தி பரமம் த₄ாம புருஷம் ப₄ாஸ்கரப்ரப₄ம் ॥
வ்யாஹ்ருதீர் வ்யாஹரம்ஶ்சைவ ப்ராணாந்யதி₃ விமுச்யதே ।
விலயம் யாதி ச வ்யக்தம் அவ்யக்தே புருஷே க்ஷணாத் ॥
[3-28...30]

[ஸ்ருஷ்டி முதலானவற்றில் அதி₄காரமில்லாமல் மோக்ஷத்தின் பொருட்டு உபாயாநுஷ்ட₂ானம் செய்துகொண்டு ப்₃ரஹ்மாவின் உலகத்திலிருப்பவர்கள் அங்கிருக்கும் வரையில் நான்முகனை ஒத்த வர்களாயிருக்கிறார்கள். பிரமனின் ஆயுட்காலமுடிவில் பிரமனோடு கூட அறிவரிய பரமாத்மாவையடைந்து முக்தியடைகிறார்கள். பரம ப்ராப்யமாய், ஸூர்யன்போல் ஒளியுள்ள புருஷனை அடைகிறார்கள். ஏழு வ்யாஹ்ருதிகளையும் சொல்லிக்கொண்டு ப்ராணனைவிடுபவன் அறிவரிய புருஷனிடம் கணப்பொழுதில ஒடுங்கி முக்தியடைகிறான்.] என்று பிரமனும், அவனுடைய உலகத்திலிருப்பவர்களும் புருஷனிடம் ஒடுங்கி முக்தியடைகிறார்கள் என்று கூறியிருப்பதும் விஷ்ணுபரத் வத்தை வெளிப்படுத்துகிறது.

இனி, கா₃யத்ரீ நிர்ணயபரமான நாலாம் அத்தியாயத்தில் ஸார மான பகுதிகளைக் காண்போம்.

தபஸா ஸு₂ஸமுத்₃த்₄ருத்ய ஆதி₃ஸர்க்கே₃ ஸ்வயம்பு₄வ: |
ஓங்காரபூர்வா கா₃யத்ரீ நிர்ஜகா₃ம ததோ முகா₂த் ||
அகாரம் சாப்யுகாரம் ச மகாரம் ச ப்ரஜாபதி: |
வேத₃த்ரயாந்நிரது₃ஹத்₃பூ₄ர்பு₄வ: ஸ்வரிதீதி ச ||
த்ரிப்₄ய ஏவ து வேதே₃ப்₄ய: பாத₃ம் பாத₃மதூ₃து₃ஹத் |
ததி₃த்யுருசோऽஸ்யா: ஸாவித்ர்யா: பரமேஷ்டீ₂ ப்ரஜாபதி: |
யதா₂க்₃நிர்வை தே₃வதாநாம்ருதூநாம் குஸு₂மாகர: ||
ப்₃ராஹ்மணோ த்₃விபதா₃நாம் ச கா₃வஶ்சைவ சதுஷ்பதா₃ம் ||
தேஜஸ்விநாம் ஸஹஸ்ராம்ஶு₂: இந்த்₃ரியாணாம் யதா₂ மந: |
மேரு: ஶிக₂ரிணாம் ஶ்ரேஷ்டோ₂ கா₃யத்ரீ ச₂ந்த₃ஸாம் ததா₂ ||
யதா₂ மது₄ ச புஷ்பேப்₄யோ க்₄ருதாந்மண்ட₃ம் ரஸாத் பய: |
ஏவம் ஹி ஸர்வவேதா₃நாம் கா₃யத்ரீ ஸாரமுச்யதே ||
கா₃யத்ரீ ப்ரக்ருதிர் ஜ்ஞேயா ஓங்கார: புருஷ: ஸ்ம்ருத: |
தாப்₄யாமுப₄ாப்₄யாம் ஸம்யோகா₃த் ஜக₃த் ஸர்வம் ப்ரவர்த்ததே||
[4-11...17]

[பிரமனின் ஆதி₃ஸ்ருஷ்டியில் ஓங்காரத்தை முன்னிட்டுக்கொண்ட கா₃யத்ரியானது தபஸ்ஸினாலே எடுக்கப்பட்டு முக₂த்திலிருந்து வெளி வந்தது. பிரமன்—அகாரம், உகாரம், மகாரம் என்னும் (ஓங்காரத்தில் அடங்கிய) மூன்று அக்ஷரங்களையும், பூ₄:,பு₄வ:,ஸு₂வ: என்னும் மூன்று வ்யாஹ்ருதிகளையும், ருக்₃ யஜுஸ் ஸாமம் என்னும் மூன்று வேத₃ங்க ளாகிற பசுக்களிடமிருந்து ஸாரமாகக் கறந்தெடுத்தார். அவற்றிலி ருந்தே 'தத்ஸவிது:' என்று தொடங்கும் கா₃யத்ரியின் மூன்று பாத₃ங் களையும் ஸத்ய லோகத்திலிருக்கும் நான்முகன் கறந்தார். தே₃வதை களுக்குள் அக்₃நி போலவும், ருதுக்களுக்குள் வஸந்தம் போலவும், இரண்டு கால்கள் உள்ள மனிதர்களுக்குள் ப்₃ராஹ்மணன் போல வும், நாலு காலுள்ள பிராணிகளுள் பசுக்கள் போலவும், ஒளியை யுடைய பொருள்களுள் ஸூர்யன் போலவும், இந்த்₃ரியங்களுள் மனம் போலவும், மலைகளுக்குள் மேரு மலை போலவும் வேத₃மந்தி ரங்களுள் கா₃யத்ரி சிறந்தது. புஷ்பங்களுக்குத் தேன் ஸாரமாயி ருப்பது போலவும், நெய்யில் விழுது ஸாரமாயிருப்பது போலவும், பால் — பசு பருகும் ரஸங்களின் ஸாரமாயிருப்பது போலவும். எல்லா வேத₃ங்களுக்குள்ளும் கா₃யத்ரி ஸாரமாகக் கூறப்படுகிறது. கா₃யத்ரியை மூலப்ரக்ருதிக்கு வாசகமாகவும், ஓங்காரத்தைப் புருஷ

தத்துவத்துக்கு வாசகமாகவும் அறியவேண்டும். அவ்விரண்டின் சேர்த்தியாலே ப்ரக்ருதி புருஷர்களாகிற உலகனைத்தும் செயல்படு கிறது.] என்று காயத்ரியின் பெருமை காட்டப்பட்டது.

அக்ஷராணி ச தைவத்யம் ஸம்ப்ரவக்ஷ்யாம்யத: பரம் |
ஆக்நேயம் ப்ரதமம் ஜ்ஞேயம் வாயவ்யம் ச த்விதீயகம் ||
த்ருதீயம் ஸூர்யதைவத்யம் சதுர்த்தம் வைத்யுதம் ஸ்ம்ருதம் |
பஞ்சமம் யமதைவத்யம் வாருணம் ஷஷ்டமுச்யதே ||
பார்ஹஸ்பத்யம் ஸப்தமம் ச பார்ஜந்யமஷ்டமம் விது: |
ஐந்த்ரம் து நவமம் ஜ்ஞேயம் காந்தர்வம் தஶமம் ஸ்ம்ருதம் ||
பௌஷ்ணமேகாதஶம் ஜ்ஞேயம் த்வாதஶம்
மைத்ரவாருணம் |
த்வாஷ்ட்ரம் த்ரயோதஶம் ஜ்ஞேயம் வாஸவம் ச சதுர்த்தஶம் ||
மாருதம் பஞ்சதஶகம் ஸௌம்யம் ஷோடஶகம் ஸ்ம்ருதம் |
ஸப்ததஶம் த்வாங்கிரஸம் வைஶ்வதேவமத: பரம் ||
ஆஶ்விநம் சைகோநவிம்ஶம் ப்ராஜாபத்யம் து விம்ஶகம் |
ஸர்வதேவமயம் ஜ்ஞேயம் ஏகவிம்ஶகமக்ஷரம் ||
ரௌத்ரம் த்வாவிம்ஶகம் ப்ரோக்தம் த்ரயோவிம்ஶம் து
ப்ராஹ்மணம் |
வைஷ்ணவம் து சதுர்விம்ஶம் ஏதா அக்ஷரதேவதா: ||
ஜபகாலேஷு ஸஞ்சிந்த்ய விஷ்ணுஸாயுஜ்யதாம் வ்ரஜேத் |
ஏதஸ்யாம் ஜ்ஞாதமாத்ராயாம் வாங்மயம் விதிதம் பவேத் ||
உபாஸிதம் பவேத் ஸர்வம் விஶ்வம் புவநஸப்தகம் |
அஜ்ஞாத்வா சைவ காயத்ரீம் ப்ராஹ்மண்யாத் பரிஹீயதே ||
அபவாதேந ஸம்யுக்தோ பவேச்ச்ருதி நிதர்ஶநாத் |
யேஷாம் த்விஜாநாம் ஸாவித்ரீ நாநூச்யேத யதாவிதி ||
தாம்ஶ்சாரயித்வா த்ரீந் க்ருச்ச்ராந் யதாவித்யுபநாயயேத் | ...
ஓங்காரோ வ்யாஹ்ருதீ: ஸப்த ஸாவித்ரீ ப்ராணஸம்யம: |
ஸந்த்யா ந வந்திதா யேந ப்ராஹ்மண்யம் தஸ்ய வை குத: ||
ஸாவித்ரீம் யோ ந ஜாநாதி வ்ருதா தஸ்ய பரிஶ்ரம: |
காயத்ரீமாத்ரஸந்துஷ்டோ வரம் விப்ர: ஸுயந்த்ரித: ||
நாயந்த்ரிதஶ்சதுர்வேதா: ஸர்வாஶீ ஸர்வவிக்ரயீ |
ஸாரபூதாஸ்து வேதாநாம் குஹ்யோபநிஷதா: ஸ்ம்ருதா: ||

தாப்₄ய: ஸாரம் து கா₃யத்ரீ கா₃யத்ர்யா வ்யாஹ்ருதித்ரயம் |
வ்யாஹ்ருதிப்₄யஸ்ததே₂ாங்கார: த்ரிவ்ருத்₃ப்₃ரஹ்ம ஸ உச்யதே ||
த்ரிவ்ருத்₃ப்₃ரஹ்மணி நிஷ்ணாத: பரம் ப்₃ரஹ்மாதி₄க₃ச்ச₂தி |
மது₄வத் ஸம்ப்₄ருதம் ஹ்யேதத்₃விப்ராஸோ விஷ்ணுநா ஸ்வயம்||
கா₃யத்ரீம் சைவ வேதா₃ாம்ஶ்ச துலயா ஸமதோலயத் |
ஏகதஶ்சதுரோ வேதா₃ாந் கா₃யத்ரீமேகத: ஸமாம் ||
ஏஷா ஹி த்ரிபதா₃ா தே₃வீ ஸர்வப்₃ரஹ்மமயீ ஶுப₄ா |
தபஸா மஹதா த்₃ருஷ்டா விஶ்வாமித்ரேண தீ₄மதா ||
ஸம்வத்ஸரம் வா ஷண்மாஸாந் யோ ஜபேத்₃விதி₄வத்₃த்₃விஜ: |
ஸோऽசிராத் ஸர்வகாமாம்ஶ்ச ப்ராப்நுயாந்நாத்ர ஸம்ஶய: ||
[4-63...82]

[கா₃யத்ரியின் இருபத்து நான்கு அக்ஷரங்களுக்கு தே₃வதைகளை வரிசையாகச் சொல்லுகிறேன். முதல் அக்ஷரத்துக்கு அக்₃நி தே₃வதை, இரண்டாவதற்கு வாயு, மூன்றுவதற்கு ஸூர்யன், நாலாவதற்கு மின்னல், ஐந்தாவதற்கு யமன், ஆருவதற்கு வருணன், ஏழாவதற்கு ப்₃ருஹஸ்பதி, எட்டாவதற்குப் பர்ஜந்யன், ஒன்பதாவதற்கு இந்த்₃ரன், பத்தாவதற்கு க₃ந்த₄ர்வன், பதினென்ருவதற்கு பூஷா, பன்னிரண்டாவதற்கு மித்ராவருணர்கள், பதின்மூன்றுவதற்கு த்வஷ்டா, பதினாலாவதற்கு வாஸவன், பதினைந்தாவதற்கு மருத், பதினாருவதற்கு ஸோமன், பதினேழாவதற்கு அங்கி₃ரஸ், பதினெட்டாவதற்கு விஶ்வேதே₃வர்கள், பத்தொன்பதாவதற்கு அஶ்விநிகள், இருபதாவதற்கு ப்ரஜாபதி, இருபத்தோராவதற்கு ஸர்வதே₃வர்களும், இருபத்திரண்டாவதற்கு ருத்₃ரன், இருபத்து மூன்றுவதற்கு ப்₃ரஹ்மா, இருபத்து நான்காவதற்கு விஷ்ணு. இப்படி அக்ஷர தே₃வதைகள் அமைந்திருக்கின்றனர். இந்த கா₃யத்ரியை அதன் பொருளை ஆராய்ந்து ஜபிக்கும்போது விஷ்ணுவினுடைய ஸாயுஜ்யத்தை அடைகிருன். அந்த கா₃யத்ரியை அறிந்தவளவில் எல்லா வாக்குகளும் அறியப்பட்டனவாகின்றன. ஏழு உலகங்களும் ப்₃ரஹ்மாண்ட₃மும் முழுவதுமே உபாஸிக்கப்பட்டதாகிறது. கா₃யத்ரியை அறியாதவன் ப்₃ராஹ்மண்யத்திலிருந்து நழுவுகிருன். அபவாத₃த்தையும் அடைகிருன். ஶ்ருதியில் சொல்லப்பட்ட முறைப்படி எந்த அந்தணர்களுக்கு ஸாவித்ரியானது உபதே₃ஶிக்கப்படவில்லையோ அவர்களுக்கு மூன்று க்ருச்ச்₂ரங்கள் செய்வித்து ஶாஸ்த்ர விதி₄ப்படி உபநயனம் செய்விக்கவேண்டும்......ஓங்காரம், பூ₄: முதலான ஏழு வ்யாஹ்ருதிகள், கா₃யத்ரி, ப்ராணயாமம், ஸந்த்₄யாவந்த₃னம்

ஆகியவை இல்லாதவனுக்கு ப்3ராஹ்மண்யம் எப்படி ஏற்படும்? கா3யத்ரியை அறியாதவன் செய்யும் கர்மங்களெல்லாம் வீணானவை. கா3யத்ரியை மாத்திரம் அறிந்து திருப்தி பெற்றவனாய், நல்ல நியமமுடையவனான அந்தணன், நான்கு வேத3ங்களையுமறிந்தும் நியமங்களில்லாமல் எல்லாவற்றையும் உண்பவனாகவும், எதையும் விற்பவனாகவும் இருக்கும் அந்தணனைக் காட்டிலும் சிறந்தவன். ரஹஸ்யங்களான உபநிஷத்துக்கள் மூன்று வேத3ங்களின் ஸாரமாயுள்ளவை. அவற்றின் ஸாரமாயிருப்பது மூன்று பாத3முள்ள கா3யத்ரி. கா3யத்ரியின் ஸாரமாயிருப்பது பூ4:, பு4வ:, ஸுவ: என்னும் மூன்று வ்யாஹ்ருதிகள். வ்யாஹ்ருதிகளின் ஸாரமாயிருப்பது ஓங்காரம். இப்படி படிப்படியாக மும்மூன்று பொருள்களின் ஸாரமாயிருக்கையாலே அது 'த்ரிவ்ருத்3 ப்3ரஹ்மம்' என்று சொல்லப்படுகிறது. த்ரிவ்ருத்3ப்3ரஹ்மத்தில் ஊன்றி நிற்பவன் பரப்3ரஹ்மத்தையடைகிறான். அந்தணர்களே! இந்த ஓங்காரம் தேன் நிறைந்த புஷ்பம் போலே விஷ்ணுவினால் நிறைந்திருக்கிறது. கா3யத்ரியையும், வேத3ங்களையும் தராசில் வைத்து நிறுத்தவளவில், நாலு வேத3ங்களும் கா3யத்ரியும் ஸமமாயிருந்தன. மூன்று பாத3ங்களையுடைய இந்த கா3யத்ரி ஸர்வ வேத3மயமாய், மங்க3ளமாயிருப்பது. அறிவாளியான விஶ்வாமித்ரரால் பெருந்தவத்தால் ஸாக்ஷாத்கரிக்கப் பெற்றது. எந்த அந்தணன் ஒரு வருஷமோ அல்லது ஆறு மாஸமோ முறைப்படி கா3யத்ரியை ஜபிக்கிறானோ அவன் விரைவிலேயே எல்லா விருப்பங்களையும் அடைவான். இதில் ஐயமில்லை.] என்னும் பகுதியில், கா3யத்ரியின் கடைசி எழுத்தான இருபத்து நாலாம் அக்ஷரத்துக்கு தே3வர் தலைவனான விஷ்ணுவை தே3வதையாகச் சொல்லியிருப்பதும், ஜபம் புரியும்போது விஷ்ணுவோடு ஒன்றியிருக்கவேண்டும் (அல்லது ஜபிப்பதால் விஷ்ணுவின் ஸாயுஜ்யத்தை அடையலாம்) என்று முழங்கியிருப்பதும், ஓங்காரம் விஷ்ணுவினால் நிறைந்திருப்பது என்று உத்3கோ4ஷித்திருப்பதும் விஷ்ணுவே கா3யத்ரியினால் அறிவிக்கப்படும் பரமாத்மா என்று தெளிவாகக் காட்டுகிறது.

இனி, ஓங்கார கா3யத்ரிகளின் ந்யாஸங்களை வர்ணிக்கும் ஐந்தாம் அத்தியாயத்தில்

ந்யாஸம் து ஸம்ப்ரவக்ஷ்யாமி ஓங்காராதி3 யதா2யதா2ம் ।
யேந விந்யஸ்தமாத்ரேண ப்3ரஹ்மீப4வதி ப்3ராஹ்மண: ॥
அகாரம் விந்யஸேந்நாப்4யாம் ஸத்த்வரூபம் நிரஞ்ஜநம் ।
உகாரம் ஹ்ருத3யே தத்3வத்3ராஜஸம் தத்3கு3ண: ஸ்ம்ருத: ॥
மகாரம் மூர்த்4நி விந்யஸ்ய தமோமாத்ரம் த்ருதீயகம் ।
ப்3ரஹ்மரூபம் ததா2த்மாநம் த்4யாயேத்3விக3தகல்மஷம் ॥
[5-1...3]

[ஓங்காரம் முதலானவற்றின் ந்யாஸத்தை உள்ளபடி கூறுகிறேன். இந்த ந்யாஸங்களை உரிய இடத்தில் வைத்துக் கொள்வதால் ப்₃ராஹ்மணனுக்கு ப்₃ராஹ்மண்யம் உண்டாகிறது. ஸத்வஸ்வரூபமாய், குறையற்றதான அகாரத்தை நாபி₄யில் ந்யாஸம் செய்ய வேண்டும். அவ்வண்ணமே உகாரத்தை ஹ்ருத₃யத்தில் ந்யாஸம் செய்யவேண்டும். அதற்கு ரஜோகு₃ணமாகும். மூன்றும் அக்ஷரமான தமோகு₃ணமுடைய மகாரத்தைத் தலையில் ந்யாஸம் செய்யவேண்டும். அப்போது தன்னை, குற்றமற்ற ப்₃ரஹ்மத்துக்கு ஶரீரமாயிருப்பவனாக தியானிக்க வேண்டும்.] என்னும் பகுதியில் விஷ்ணுவைச் சொல்லும் அகாரம் ஸத்வகு₃ணமுடையது என்றும், சிவனைச் சொல்லும் மகாரம் தமோகு₃ணமுடையது என்றும் சொல்லுவதன் மூலம் இரண்டாம் அத்தியாயத்தில் 27,29-வது ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட அர்த்த₂ம் வலியுறுத்தப்படுகிறது. இதிலிருந்தும் விஷ்ணு ஸாத்விகதே₃வதை என்பதும், சிவன் தாமஸதே₃வதை என்பதும் தெளிவாகிறது.

இனி, ஸந்த்₄யோபாஸன நிர்ணயத்தை வர்ணிக்கும் ஆறும் அத்தியாயத்தில்

யாவந்தோऽஸ்யாம் ப்ருதி₂வ்யாம் து விகர்மஸ்தா₂ த்₃விஜாத₃ய:।
தேஷாம் து பாவநார்த்தா₂ய ஸந்த்₄யா ஸ்ருஷ்டா ஸ்வயம்பு₄வா ॥
யா ஸந்த்₄யா ஸா து கா₃யத்ரீ த்ரித₄ா பூ₄த்வா ப்ரதிஷ்டி₂தா ।
ஸந்த்₄யா ஹ்யுபாஸிதா யேந தேந விஷ்ணுருபாஸித:॥ [6-9,10]

[இவ்வுலகில் கர்மத்தினின்றும் நழுவிய அந்தணர் முதலானோரைப் பரிஶுத்₃த₄ப்படுத்துவதற்காகவே நான்முகனால் ஸந்த்₄யாவந்த₃னம் ஸ்ருஷ்டிக்கப்பட்டது. கா₃யத்ரீ மந்த்ரமே மூன்று காலங்களில் ஸந்த்₄யாவந்த₃னங்களாகி நிலைநிற்கிறது. ஸந்த்₄யாவந்த₃னம் எவனால் உபாஸிக்கப்படுகிறதோ அவனால் விஷ்ணு உபாஸிக்கப் பட்டவனாகிறான்.] என்னும் பகுதியில் ஸந்த்₄யாவந்த₃னம் விஷ்ணுவின் உபாஸனமே என்று உத்₃கோ₄ஷிக்கப்பட்டது காணத்தக்கது.

இனி ஸ்நாநவிதி₄யை வர்ணிக்கும் ஏழாம் அத்தியாயத்தில்

ஜலமத்₄யஸ்தி₂தோ விப்ர: ஶுத்₃த₄ப₄ாவோ ஹரிம் ஸ்மரேத் ।
ஓங்காரேண வ்யாஹ்ருதிபி₄: கா₃யத்ர்யா ச ஸமாஹித: ॥ [7-25]

[ஜலத்தின் நடுவிலிருப்பவனான அந்தணன் ஓங்காரத்தினாலும், வ்யாஹ்ருதிகளாலும், கா₃யத்ரியினாலும் ஶாந்தியுடையவனாய், பரிஶுத்₃த₄மான நினைவையுடையவனாய் ஹரியைச் சிந்திக்கவேண்டும்.] என்று ஸ்நானத்தின்போதும் ஹரிசிந்தனமே விதி₄க்கப்பட்டது காணத்தக்கது.

ஆவர்த்தயேத்₃வா ப்ரணவம் ஸ்மரேத்₃வா விஷ்ணுமவ்யயம் ||
விஷ்ணோராயதநம் ஹ்யாப: ஸ ஏவாப்யோ நிருச்யதே |
தஸ்யைவ ஸூநவஸ்த்வேதாஸ்தஸ்மாத்தம் ஹ்யப்ஸு
ஸம்ஸ்மரேத் ||
நராத₃ாப: ப்ரஸூதா வை தேந நாரா இதி ஸ்ம்ருதா: |
தா ஏவாஸ்யாயநம் ஹ்யாபஸ் தஸ்மாந்நாராயண: ஸ்ம்ருத: ||
யோ ஹி வ்ரதாநாம் வேத₃ாநாம் யமஸ்ய நியமஸ்ய ச |
போ₄க்தாரம் யஜ்ஞதபஸாம் த்₄யாயிநாம் த்₄யேயமேவ ச ||
த்₄யாயேந்நாராயணம் தே₃வம் நித்யம் ஸ்நாநாதி₃கர்மஸு |
ப்ராயஶ்சித்த்யபி ஸர்வஸ்மாத்₃து₃ஷ்க்ருதாந்முச்யதே புமாந் ||
ப்ரமாத₃ாத் குர்வதாம் கர்ம ப்ரச்யவேதாத்₄வரேஷு யத் |
ஸ்மரணாதே₃வ தத்₃விஷ்ணோ: ஸம்பூர்ணம் ஸ்யாதி₃தி ஶ்ருதி: ||
தத்₃விஷ்ணோரிதி மந்த்ரேண மஜ்ஜேத₃ப்ஸு புந: புந: |
க₃ாயத்ரீ வைஷ்ணவீ ஹ்யேஷா விஷ்ணோ: ஸம்ஸ்மரணாய வை ||
[7-29...35]

[ப்ரணவத்தையாவது திருப்பித்திருப்பிச் சொல்லவேண்டியது. அழிவற்ற விஷ்ணுவையாவது நினைக்கவேண்டியது. நீர் விஷ்ணுவுக்கு இருப்பிடமாகும். அவனே நீரில் இருப்பவனாகக் கூறப்படுகிறான். அந்த நீர் அவனிடமிருந்து பிறந்ததுமாகும். ஆகையால் நீரில் அவனையே சிந்திக்கவேண்டும். அழிவற்றவனாகையாலே நரன் எனப்படும் அவனிடமிருந்து நீர் உண்டானது. அதனால் நீர் நார ஶப்₃த₃த்தால் சொல்லப்படுகிறது. அந்த நாரமாகிற நீர் இவனுக்கு இருப்பிடமாகையாலே இவன் நாராயணன் எனப்படுகிறான். எவனொருவன் வ்ரதங்களையும், வேத₃ங்களையும், யமநியமங்களையும், யஜ்ஞங்களையும், தபஸ்ஸுக்களையும் அநுப₄விக்கிறானோ, தியானிப்பவர்களுக்கு தியானிக்கத்தக்கவனாகவுமிருக்கிறானோ நாராயணனாகிற அந்த தே₃வனை ஸ்நானம் முதலான எல்லாக் கர்மங்களிலும் எப்போதும் தியானிக்கவேண்டும். பல பாபங்களைச் செய்தவனாயினும் இப்படி நினைப்பதன் மூலம் எல்லாப் பாபங்களிலிருந்தும் நீங்கப் பெறுகிறான். யாக₃ங்களில் கவனமின்மையால் எக்கர்மங்கள் நழுவி விடுகின்றனவோ, அவை விஷ்ணுவை நினைப்பதாலேயே நிறைவடைகின்றன என்று வேத₃ம் கூறுகிறது. 'தத்₃விஷ்ணோ:' என்னும் மந்திரத்தைச் சொல்லி நீரில் மறுபடியும் மறுபடியும் மூழ்கவேண்டும். இது விஷ்ணுவை நினைப்பதற்காக ஏற்பட்ட விஷ்ணு கா₃யத்ரியாகும்.] என்னும் பகுதியில் நாராயண ஶப்₃த₃த்தையும் நிர்வசனம்

செய்து, அவனே வ்ரதங்கள், வேத₃ங்கள், யஜ்ஞங்கள், தபஸ்ஸுக்கள் ஆகிய அனைத்தையும் அநுப₄விப்பவன் என்றும், தியானிக்கத்தக்கவன் என்றும் முழங்கி, தியானம் முதலான எல்லாக் கர்மங்களிலும் அவனை நினைக்கவேண்டும் என்று விதி₄த்து, அவனை நினைப்பதால் குறைகளெல்லாம் நீங்கி நிறைவடைந்துவிடும் என்று உத்₃கோ₄ஷிப்பதிலிருந்து ப₄க₃வத் பரத்வம் குன்றிலிட்ட விளக்காகிறது.

ஆவாஹநாதி₃கம் கர்ம யந்ந ப்ரோக்தம் மயா த்விஹ ||
தத் ஸர்வம் ப்ரணவேநைவ கர்த்தவ்யம் சக்ரபாணிந: ||
த₃த்₃யாத் புருஷஸூக்தேந ய: புஷ்பாண்யப ஏவ வா |
அர்ச்சிதம் ஸ்யாஜ்ஜக₃தி₃த₃ம் தேந ஸர்வம் சராசரம் ||
விஷ்ணுர்ப்₃ரஹ்மா ச ருத்₃ரஶ்ச விஷ்ணுர்தே₃வோ தி₃வாகர: |
தஸ்மாத் பூஜ்யதமம் நாந்யமஹம் மந்யே ஜநார்த்த₃நாத் ||
[7-65...68]

[என்றால் இங்கு சொல்லப்படாத ஆவாஹனம் முதலான எல்லாக் கர்மங்களையும் சக்ரபாணிக்கு ப்ரணவத்தினாலேயே செய்யவேண்டும். எவனொருவன் புருஷஸூக்தத்தினால் புஷ்பங்களையோ, நீரையோ எம்பெருமானுக்கு ஸமர்ப்பிக்கிறானோ, அவனால் சராசரமான உலகனைத்தும் ஆராதி₄க்கப்பட்டதாகிறது. விஷ்ணுவே ப்₃ரஹ்மாவுக்கும், சிவனுக்கும் அந்தர்யாமி. தே₃வனான விஷ்ணுவே ஸூர்யனுக்கும் அந்தர்யாமி. ஆகையால் ஜனார்த்த₃னனைக் காட்டிலும் பூஜிக்கத் தக்கவன் எவனுமில்லை என்பதே என் ஸித்₃தா₄ந்தம்.] என்று பிரமன், சிவன் முதலான அனைவர்க்கும் அந்தர்யாமியான விஷ்ணுவைக் காட்டிலும் ஆராதி₄க்கத்தக்கவன் வேறு எவனுமில்லை என்று யாஜ்ஞவல்க்யரால் உத்₃கோ₄ஷிக்கப்பட்டிருப்பது காணத்தக்கது.

வாசே ச வாசஸ்பதயே விஷ்ணவே மஹதே தத₂ா | [7-103]

[வாக்குக்கும், வாசஸ்பதிக்கும், பெரியவனான விஷ்ணுவுக்கும் நமஸ்கரிக்கவேண்டும்] என்று விஷ்ணுவைக் குறிக்கும்போது 'மஹதே' என்று விஶேஷிப்பதன் மூலம் 'நமோ விஷ்ணவே ப்₃ருஹதே கரோமி' என்னும் வேத₃வாக்யத்தை விவரித்திருப்பது காணத்தக்கது.

ஸித்₃த₄க்ஷேத்ரேஷு தீர்த்தே₂ஷு தே₃வதாயாஶ்ச ஸந்நிதௌ₄|
ஸஹஸ்ரம் ஶதகோடீநாமநந்தம் விஷ்ணுஸந்நிதௌ₄ ||
[7-143]

[ஸித்₃த₄க்ஷேத்ரங்களிலும், தீர்த்த₂ங்களிலும், தே₃வதாஸந்நிதி₄களிலும் ஜபம் முதலான கர்மங்களைச் செய்வது ஆயிரம் மடங்கு ப₂லனளிக்கும். விஷ்ணு ஸந்நிதி₄யில் அவற்றைச் செய்வது கணக்கற்ற நூறுகோடி மடங்கு ப₂லனளிக்கும்.] என்று விஷ்ணு ஸந்நிதி₄யின் பெருமை முழங்கப்பட்டது.

யதி₃ வாக்₃யமலோப: ஸ்யாஜ்ஜபாதி₃ஷு கத₂ஞ்சந ।
வ்யாஹரேத்₃வைஷ்ணவம் மந்த்ரம் ஸ்மரேத்₃வா
விஷ்ணுமவ்யயம் ॥ [7-148]

[ஜபம் முதலான கர்மங்களைச் செய்யும்போது மௌனம் முதலான நியமங்களுக்கு ஏதேனும் குறைவு ஏற்பட்டால் விஷ்ணுவின் மந்த்ரங்களை ஜபிக்கவேண்டும், அல்லது அழிவற்ற விஷ்ணுவை நினைக்க வேண்டும்] என்று விஷ்ணு மந்த்ரத்துக்கும், விஷ்ணு ஸ்மரணத்துக்கும் உள்ள பெருமை காட்டப்பட்டது.

ரௌத்₃ரபித்ர்யாஸுராந் மந்த்ராந் ராக்ஷஸாநாபி₄சாரிகாந் ।
வ்யாஹ்ருத்யாலப்₄ய சாத்மாநமப: ஸ்ப்ருஷ்ட்வாந்யத₃ாசரேத் ॥
ஏதாந் வ்யாஹ்ருத்ய ரௌத்₃ராதீ₃ந் அஸ்ப்ருஷ்ட்வாபோ
ஜலம் த்₃விஜ: ।
ஊர்த்₄வம் யத் குருதே கர்ம தத்₃ப₄வத்யயதா₂யத₂ம் ॥
[7-151, 152]

[ருத்₃ரனுடையவும், பித்ருக்களுடையவும், அஸுர ராக்ஷஸர்களுடையவும் மந்த்ரங்களையும், அபி₄சாரமந்த்ரங்களையும் சொன்னால் ஜலத்தைத் தொட்டுத் தன்னைப் பரிஶுத்₃த₄ப் படுத்திக்கொண்ட பின்பே மேற்காரியங்களைத் தொடரவேண்டும். ருத்₃ரன் முதலானவர்களுடைய இந்த மந்த்ரங்களைச் சொன்ன பின்பு ஜலத்தைத் தொடாமல் மேல் கர்மங்களைச் செய்வது வீணாகும்.] என்று ருத்₃ரமந்த்ரத்தினுடைய அபரிஶுத்₃தி₄ சொல்லப்பட்டிருப்பதும், இதன்படியே இன்றளவும் ருத்₃ரமந்த்ரத்தைச் சொன்னவுடன் எல்லா வைதி₃கர்களும் நீரைத்தொட்டுத் தம்மைப் பரிஶுத்₃த₄ப் படுத்திக்கொள்ளும் அநுஷ்டா₂னத்தைக் கடைப்பிடிப்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

யத்து ஸாதபவர்ஷேண ஸ்நாநம் தத்₃தி₃வ்யமுச்யதே ।
வாருணம் சாவகா₃ஹஸ்து மாநஸம் விஷ்ணுசிந்தநம் ॥
[7-165]

[வெய்யிலோடு மழைபெய்யும்போது அதில் குளிப்பது தி₃வ்யஸ்நானம் எனப்படும். நீர்நிலைகளில் முழுகிக்குளிப்பது வாருணஸ்நானம் எனப்படும். விஷ்ணுவைச் சிந்திப்பது மாநஸஸ்நானம் எனப்படும்.] என்று விஷ்ணுவைச் சிந்திப்பதே ஒரு ஸ்நானமாகும் என்று விதி₄க் கப்பட்டிருப்பதும் காணத்தக்கது. இனி ப்ராணாயாமத்தை வர்ணிக்கும் எட்டாவது அத்தியாயத்தின் ஸாரமான பகுதிகளைக் காண்போம்.

நீலோத்பலத₃லஶ்யாமம் நாபி₄மத்₄யே ப்ரதிஷ்டி₂தம் ।
சதுர்ப்பு₄ஜம் மஹாத்மாநம் பூரகேணைவ சிந்தயேத் ॥
கும்ப₄கேந ஹ்ருதி₃ ஸ்த₂ாநே த்₄யாயேச்ச கமலாஸநம் ।
ப்₃ரஹ்மாணம் ரக்தகெ₃ளராங்க₃ம் சதுர்வக்த்ரம் பிதாமஹம் ॥
ரேசகேநேஶ்வரம் த்₄யாயேல்லலாடஸ்த₂ம் த்ரிலோசநம் ।
ஶுத்₃த₄ஸ்ப₂டிகஸங்காஶம் நிர்மலம் பாபநாஶநம் ॥
ஸத₃ா நிரோத₄ஸம்யோக₃ாத்₃தே₃வதாத்ரயசிந்தநாத் ।
அக்₃நேர் வாயோரபாம் யோக₃ாத₃ாத்மா ஶுத்₃த்₄யேத வை [த்ரிபி₄: ॥

நிரோத₄ாஜ் ஜாயதே வாயுர் வாயோரக்₃நிஶ்ச ஜாயதே ।
அக்₃நேராபோபி₄ ஜாயந்தே ததோऽந்த: ஶுத்₃த்₄யதே த்ரிபி₄: ॥
[8-23......27]

[நீலோத்பல இதழ்போல் கறுத்தவனும், நாபி₄யின் நடுவில் எழுந்தருளியிருப்பவனும், நான்கு திருக்கைகளையுடையவனும், பரமாத்மாவுமான விஷ்ணுவைப் பூரகத்தின்போது (ப்ராணாயாமத்தில் காற்றை உள்ளிழுக்கும்போது) தியானிக்கவேண்டும். உந்தித்தாமரையை இருப்பிடமாகக் கொண்டவனும், சிவப்பும், வெளுப்பும் கலந்த உடம்பையுடையவனும், பிதாமஹனுமான நான்முகனைக் கும்ப₄கத்தின்போது (ப்ராணாயாமத்தில் காற்றை உள்ளே அடக்கும்போது) ஹ்ருத₃யத்தில் தியானிக்கவேண்டும். ஶுத்₃த₄ஸ்ப₂டிகம்போல் வெளுத்தவனும், குற்றமற்றவனும், பாபங்களை அழிக்கக் கூடியவனுமான முக்கண்ணனை ரேசகத்தின்போது (ப்ராணாயாமத்தில் காற்றை வெளிவிடும்போது) நெற்றியில் தியானிக்கவேண்டும். காற்றை உள்ளிழுத்து அடக்குவது, மும்மூர்த்திகளை தியானிப்பது, அக்₃னி, வாயு, நீர் இவற்றோடு தொடர்பு ஏற்படுவது ஆகிய இம்மூன்று காரணங்களாலும் (ப்ராணாயாமத்தின்போது) ஆத்மா பரிஶுத்₃த₄ப் படுத்தப்படுகிறது. காற்றை உள்ளடக்குவதால் வாயு உண்டாகிறது.

வாயுவிலிருந்து அக்₃னி உண்டாகிறது. அக்₃னியிலிருந்து நீர் உண்டாகிறது. ஆகையால் மனிதன் தே₃ஹத்தினுள் ஶாத்₃தி₄யடைகிறான்] என்னுமிடத்தில் மும்மூர்த்திகளை வர்ணிக்கும்போது 'மஹாத்மாநம்' என்று விஶேஷிப்பதன்மூலம் மற்ற இருவரைக் காட்டிலும் பெரியவனாய், அவர்களுக்கும் அந்தர்யாமியாய் இருக்கும் பரமாத்மா விஷ்ணுவே என்று காட்டப்பட்டது.

இனி தியான விதி₄யை வர்ணிக்கும் ஒன்பதாவது அத்தியாயத்தின் ஸாரமான பகுதிகளைக் காண்போம்.

மாநஸே விமலே ஶாந்தே ஸ்தி₂தம் விஷ்ணும் ஹ்ருதி₃ க்ஷிபேத்|
தத்₃த்₄யாநம் தத்து வை யோகே₃ா மோக்ஷமார்க்க₃ ப்ரஸாத₄கம்|| [9-3]

[குற்றமற்றதாய், ஶாந்தியையுடையதான நெஞ்சிலேயிருக்கும் விஷ்ணுவை ஹ்ருத₃யத்தில் வைத்து தியானிக்கவேண்டும். மோக்ஷமார்க்க₃த்துக்கு வழிகாட்டும் அதுவே தியானம் என்றும், யோக₃ம் என்றும் சொல்லப்படுகிறது] என்னும் ஶ்லோகத்திலிருந்து விஷ்ணுவை ஹ்ருத₃யத்தில் தியானிப்பதே மோக்ஷஸாத₄னம் என்று விளங்குகிறது.

யதா₃தி₃த்யக₃தம் தேஜோ ஜக₃த்₃ப₄ாஸயதே ऽகி₂லம் |
யச்சந்த்₃ரமஸி யச்சாக்₃நௌ தத்தேஜோ வித்₃தி₄ மாமகம் ||
அந்தரே ऽஸ்மிந்நிமே லோகா அந்தர்விஶ்வமித₃ம் ஜக₃த் |
அக்₃ரம் ச மூலகம் ப்₃ரஹ்ம ஸர்வேஷாம் சாந்தராஸ்தி₂தம் ||
ந தத்₃ப₄ாஸயதே ஸூர்யோ ந ஶஶாங்கோ ந பாவக: |
யத்₃க₃த்வா ந நிவர்த்தந்தே தத்₃த₄ாம பரமம் மம ||
தஸ்மாத₃ம்ஶம் விநிஷ்க்ராந்தம் ஜீவபூ₄தம் ஸநாதநம் |
ப்₃ரஹ்மண: பரமம் ப்₃ரஹ்ம ஜ்யோதிஷாம் ஜ்யோதிருத்தமம் ||
ஹ்ருத₃யே ஸர்வபூ₄தாநாம் ஜீவபூ₄த: ஸ திஷ்ட₂தி |
ஸ ஏவ ப₄க₃வாந் விஷ்ணுர் வேதா₃ந்தைருபகீ₃யதே ||
ஈஶ்வரம் புருஷாக்₂யம் து ஸத்யத₄ர்மாணமவ்யயம் |
ப₄ர்க்க₃ாக்₂யம் விஷ்ணுஸம்ஜ்ஞம் து யம் ஜ்ஞாத்வா ऽம்ருதமஶ்நுதே || [9-18 .....23]

[உலகையெல்லாம் ஒளிவிடச் செய்கின்ற ஸூர்யனுடைய ஒளியும், சந்த்₃ரனிடமும், அக்₃னியிடமும் உள்ள ஒளிகளும் பரமாத்மாவான எனது ஒளிகளே. இந்தப் பரமாத்மாவினுள்ளேயே இந்த உலகங்

களனைத்தும் ப்ரக்ருதி மண்ட₂லம் முழுவதும் அடங்கியுள்ளன. எல்லாவற்றினுள்ளும் இருக்கும் ப்₃ரஹ்மம் எல்லாவற்றிற்கும் ஆதி₃ மூலமாயுள்ளது. எனது மேலான ஸ்தா₂னத்தை ஸூர்யனோ, சந்த்₃ரனோ, அக்₃னியோ ஒளிவிடச் செய்வதில்லை. அங்கு சென்ற வர்கள் திரும்பி வருவதில்லை. அனாதி₃யாயிருக்கும் ஜீவனும் அந்த ப்₃ரஹ்மத்திடமிருந்து வெளிப்பட்ட ஓர் அம்சமே. ப்₃ரஹ்ம ஶப்₃த₃த் தால் சொல்லப்படும் மூல ப்ரக்ருதியைக் காட்டிலும் மேலானவனாய், தானும் ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தால் சொல்லப்படுமவனாய், சோதிகளுக் கெல்லாம் மேலான சோதியான அந்த ஜீவன் எல்லா பூ₄தங்களின் (தே₃ஹங்களின்) ஹ்ருத₃யத்திலுமுள்ளது. அந்த ஜீவனே (ஜீவனுக்கு அந்தர்யாமியே) ப₄க₃வான் விஷ்ணு என்று வேதா₃ந்தங்களில் ஓதப்படு கிறது. ஈஶ்வரனாய், புருஷன் என்னும் பெயருடையவனாய், உண்மையான கல்யாண கு₃ணங்களுடையவனாய், குறைவற்ற வனாய், கா₃யத்ரியில் ப₄ர்க்க₃: என்று சொல்லப்படுபவனாய் விஷ்ணு என்னும் பெயரையுடையவனை அந்தப் பரமாத்மாவை அறிந்த வன் மோக்ஷத்தையடைகிறான்.] என்னும் பகுதியில் கீ₃தா ஶ்லோகங் களைப் படிப்பதன் மூலமும், கா₃யத்ரியில் ப₄ர்க்க₃ஶ் ஶப்₃த₃த்தால் சொல்லப்படுபவன் விஷ்ணுவே என்று முழங்குவதன் மூலமும், அவனையறிவதே மோக்ஷஸாத₄னம் என்று பறைசாற்றுவதன் மூலமும், விஷ்ணுபரத்வம் நிலைநாட்டப்பட்டது.

தே₃வஸ்ய ஸவிதுர்யச்ச ப₄ர்க்க₃மந்தர்க₃தம் விபு₄ம் |
ப்₃ரஹ்மவாதி₃ந ஏவாஹுர்வரேண்யம் தச்ச தீ₄மஹி ||
சிந்தயாமோ வயம் ப₄ர்க்க₃ம் தி₄யோ யோ ந: ப்ரசோத₃யாத் |
த₄ர்மார்த்த₂காமமோக்ஷேஷு பு₃த்₃தி₄வ்ருத்தீ: புந: புந: ||
பு₃த்₃தே₄ர்போ₃த₄யிதா யஸ்து சிதா₃த்மா புருஷோ விராட் |
ஸவிதுஸ்தத்₃வரேண்யம் து ஸத்யத₄ர்மாணமீஶ்வரம் ||
ஹிரண்யவர்ணம் புருஷம் த்₄யாயேம விஷ்ணுஸம்ஜ்ஞகம் |
பே₄தி ப₄ாஸயதே லோகாந் ரேதி ரஞ்ஜயதே ப்ரஜா: ||
க₃ இத்யாக₃ச்ச₂தேऽஜஸ்ரம் ப₄ரக₃ாத்₃ப₄ர்க்க₃ உச்யதே |
அக்₃நீஷோமாத்மகம் பி₃ப்₄ரத்₃வைஶ்வரூபேண கர்மணா ||
ஜக₃த₃ாத₄ாநவஸித்₃த்₄யர்த்த₂ம் ஸூர்யாத்மா ஜக₃தோऽபி ச |
ஶஶ்வத் ப்ரஸூயனாத் ஸூர்ய: பாவநாத் பவந: ஸ்ம்ருத: ||
ஆப்யாயநாத்து வருண: ஶ்ரேஷ்ட₂த்வாதி₃ந்த்₃ர ஏவ ஸ: |...
ஏதை: பர்யாய ஶப்₂தை₃ஸ்து ஏக ஏவ ஸதே₃ாச்யதே ||

ப்₄ராஜதே ச ஸதா₃ ப₄ர்க்க₃: புருஷத்வாச்ச பூருஷ: |
ஸர்வாத்மா ஸர்வப₄ாவஸ்து ஆத்மா தேந நிக₃த்₃யதே ||
தத்ஸவிதுர்வரேண்யம் ச சேதநாத்மா மஹேஶ்வர: |...
ப்₄ரஸ்ஜ பாகே ப₄வேத்₃த₄ாதுர்யஸ்மாத் பாசயதே ஹ்யஸௌ ||
ப்₄ராஜதே தீ₃ப்யதே யஸ்மாத் ஜக₃த₃ந்தே ஹரத்யபி |
காலாக்₃நிரூபமாஸ்தா₂ய ஸப்தார்ச்சி: ஸப்தரஶ்மிபி₄: ||
ப்₄ராஜதே ஸ்வேந ரூபேண தஸ்மாத் ப₄ர்க்க₃ இதி ஸ்ம்ருத: |
தீ₃வ்யதே க்ரீட₃தே யஸ்மாத்₃த்₃யோததே ரோசதே தி₃வி ||
தஸ்மாத்₃தே₃வ இதி ப்ரோக்த: ஸ்தூயதே ஸர்வதை₃வதை: |
ஸவிதா ஸர்வபூ₄தாநாம் ஸர்வப₄ாவாந் ப்ரஸூயதே ||
ஸவநாத் பாவநாச்சைவ ஸவிதா தேந சோச்யதே |
வரேண்யம் வரணீயம் ச ஜன்ம ஸம்ஸார பீ₄ருபி₄: ||
ஆதி₃த்யாந்தர்க₃தம் ப₄ர்க்க₃: ஸேவ்யதே வை முமுக்ஷுபி₄: |
ஜந்மம்ருத்யுவிநாஶாய து₃:க்க₂ஸ்ய த்ரிவித₄ஸ்ய ச ||
த்₄யாநேந புருஷோ யஸ்து த்₃ரஷ்டவ்ய: ஸூர்யமண்ட₃லே |
மந்த்ரார்த்த₂மபி வேத₃ாதௌ₃ ஸ்தா₂பயத்யேவமேவ ஹி ||
ஹிரண்மயேந பாத்ரேண ஸத்யஸ்யாऽபிஹிதம் முக₂ம் |
தத் த்வம் பூஷந்நபாவ்ருணு ஸத்யத₄ர்மாய த்₃ருஷ்டயே ||
யோऽஸாவாதி₃த்யே புருஷ: ஸோऽஸாவஹமஸ்மி |
கவிம் புராணமநுஶாஸிதாரமணோரணீயாம்ஸம்
அநுஸ்மரேத்₃ய: ||
ஸர்வஸ்ய த₄ாதாரமசிந்த்யரூபமாதி₃த்யவர்ணம் தமஸ:
பரஸ்தாத் |
ப₄ர்க்க₃ஸ்து புருஷோ ஹ்யாத்மா ஈஶ்வராக்₂ய: ஶுசிஸ்ததா₂ ||
ஹிரண்யக₃ர்ப்பே₄ா விஷ்ணுஶ்ச ஶுக்லஶ்சைவ ஹ்யலிங்க₃க: |
ஈஶிதா ஸர்வ பூ₄தாநாம் கர்மதோ₃ஷாஶயைரபி ||
ந பராம்ருஶ்யதே யஸ்மாத்₃விஶேஷாதீ₃ஶ்வர: ஸ்ம்ருத: |
ஶோத₄நாச்சு₂த்₃த₄நாச்சைவ அக்லிந்நத்வாச்சு₂சி: ஸ்ம்ருத: ||
ஹிரண்மயஸ்ய க₃ர்ப்பே₄ாऽபூ₄த் ஹிரண்யஸ்ய ச க₃ர்ப்ப₄ஜ: |
தஸ்மாத்₃தி₄ரண்யக₃ர்ப்பே₄தி புராணே விநிக₃த்₃யதே ||
ஹைரண்யமண்ட₃ம் ஸந்தீ₃ப்தம் தபோஜ்ஞாநாத்து வை புரா |
ஏகம் த்₃வாத₃ஶத₄ா க₃ர்ப்ப₄மதி₃திர்விஷ்ணுமஜீஜநத் ||

தஸ்யோல்ப₃ா(ல்வ)ஹ்ருத்ஸ்தி₂தோ மேரு: உத₃ராத் ஸப்த ஸிந்த₄வ: ।
பர்வதாஶ்ச ஜராயூத்த₂ா நத்₃யோ த₄மநிஸம்ஜ்ஞிகா: ॥
தி₃வஶ்ச ப்ருதி₂வீ சைவ கபாலே த்₃வே வ்யவஸ்தி₂தே ।
மத்₄யேऽந்தரிக்ஷமப₄வத் த்ரைலோக்யஸ்யைஷ ஸம்ப₄வ: ॥
ஏதே ஹ்யண்ட₃கபாலே த்₃வே அபாம் மத்₄யே நிவேஶிதே ।
ஏகோऽத₄ஸ்தாத் ஸமப₄வத் த்₃விதீயம் நந்த₃நம் வநம் ॥
தந்மத்₄யாத்₃ய: ஶிஶுர்ஜாதோ மாதண்ட₃: ஸவிதேதி ஸ: ।
ஸர்வாணி சாஸ்ய பூ₄தாநி ஹ்யுபாஸந்தே ஸமந்தத: ॥
ஏதஸ்ய ப்₃ரஹ்மணு நயஸ்தம் ஸ்தூயதே ஸார்வலௌகிகம் ।
ரௌத்₃ர (த்₃ரம்) தேஜ: ஸ்வகீயம் ச அக்₃நீஷோமௌ ததை₂வ ச ॥
த்₃வாத₃ஶாநாம் து யத்தேஜஸ்ததே₃கஸ்ய நிவேஶிதம் ।
பௌருஷம் சைவ யத்₃த₄ாம பரமம் ஹ்யத்ர திஷ்ட₂தி ॥
[9-42......71]

[தே₃வனை ஸவிதாவினுடைய உள்ளேயிருக்கும் ஸர்வவ்யாபியான யாதொரு ப₄ர்க்க₃ம் உண்டோ அதை ப்₃ரஹ்ம ஜ்ஞானிகள் வரிக்கத் தகுந்ததாகக் கூறுகிறார்கள். அதை தியானிக்கக் கடவோம். நம்முடைய பு₃த்₃தி₄யைத் தூண்டுகிற அந்த ப₄ர்க்க₃த்தை நாம் சிந்திக்கக் கடவோம். த₄ர்மார்த்த₂ காம மோக்ஷங்களில் மறுபடியும் மறுபடியும் அறிவைத் தூண்டுவதன் மூலம் சிந்தனை ப்ரகாரங்களை எவன் செயல்படுத்துகிறானோ அவனே ஜ்ஞான ஸ்வரூபியான விராட் புருஷன். ஸூர்யனுள்ளிருப்பவனாய், வரிக்கத் தக்கவனாய், உண்மையான கு₃ணங்களையுடையவனாய், அனைவரையும் நியமிப்பவனாய், பொன்மயமான திருமேனியையுடைய புருஷனாய், விஷ்ணு எனப் படுபவனான அப்பரமபுருஷனை தியானிக்கக் கடவோம். ப₄ர்க்க₃ஶப்₃த₃த்தில் 'ப₄'காரம் உலகை ஒளிவிடச் செய்பவன் என்று காட்டு கிறது. 'ர' எனும் எழுத்து சேதனர்களை ஆகர்ஷிப்பவன் என்று காட்டு கிறது. 'க₃'காரம் இடைவிடாமல் இந்த லீலாவிபூ₄திக்கு அவதாரங்களின் மூலம் வருகின்றவன் என்று காட்டுகிறது. இப்படி மூன்று எழுத்துக்களும் சேர்ந்த ப₄ர்க்க₃ஶப்₃த₃த்தால் பரமாத்மா கூறப்படுகிறான். எல்லாவற்றையும் வியாபிக்கும் செயலால் அக்₃னிஷோமம் முதலான யாக₃ங்களையும் த₄ரிப்பவனாய், உலகம் வாழ்வதற்காக உலகத்தில் ஸூர்யரூபியாகப் பிரகாஶிப்பவனாயிருக்கிறான். எப்போ

தும் ஸ்ருஷ்டி செய்துகொண்டேயிருப்பதால் ஸூர்யன் எனப்படுகிறான். பரிஶுத்3த4ப்படுத்துவதால் பவனன் எனப்படுகிறான். போஷிப்பதால் வருணன் என்றும், சிறந்தவனாயிருப்பதால் இந்த்3ரனென்றும் கூறப்படுபவன் அந்தப் பரமாத்மாவே........ ஒரே பொருளைக் கூறும் இந்த ஶப்3த3ங்களால் எப்போதும் சொல்லப்படுபவன் அவன் ஒருவனே. ஒளிவிடுகையால் ப4ர்க்க3: எனப்படுகிறான். உலகில் ஒரே புருஷனாயிருக்கையால் புருஷன் எனப்படுகிறான். அனைத்துக்கும் ஆத்மாவாய், அனைத்துமாயிருப்பதாலே ஆத்மா என்று கூறப்படுகிறான். ஆகையால் ஸூர்யனுக்குள்ளிருக்கும் வரிக்கத் தக்கவன் அவனே. சேதனனுக்கும் ஆத்மாவாயிருக்கும் மஹேஶ்வரன். 'ப்4ரஸ்ஜ-பாகே' என்னும் தா4துவிலிருந்து தோன்றிய ப4ர்க்க3ஶ் ஶப்3த3ம் 'அனைத்தையும் பாகமடையச் செய்பவன்' என்று பொருள்படும். இவனிடமிருந்து இவ்வுலகம் ஒளிவிடுகிறது. இவன் இதைக் கடைசியில் ஊழிகாலத் தீயுருவாய் இருந்து ஸம்ஹாரம் செய்கிறான். 'ஸப்தார்ச்சி:' எனப்படும் இவன் ஏழு கிரணங்களாலே தன் உருவோடு ஒளிவிடுகிறான். இக்காரணங்களால் ப4ர்க்க3: (ஒளி) எனப்படுகிறான். 'தி3வு-க்ரீடா3' என்று தா4துவாகையாலே ஜக3த்ஸ்ருஷ்டி முதலானவற்றால் விளையாடுகிறவன் தே3வனாகிறான். 'தி3வு-த்3யுதி' என்று தா4துவாகையால் பரமாகாஶத்தில் பிரகாஶிக்கிறவன் தே3வனாகிறான். ஆகையால் எல்லா தே3வர்களாலும் இவன் தே3வன் என்று துதிக்கப்படுகிறான். எல்லா பூ4தங்களையும், எல்லாப் பொருள்களையும் படைக்கிறானாகையால் 'ஸவிதா' எனப்படுகிறான். (ஷூஞ்—ப்ராணிப்ரஸவே என்று தா4து) அனைத்தையும் படைக்கையாலும், பரிஶுத்3த4ப் படுத்துகையாலும் ஸவிதா எனப்படுகிறான். பிறப்பு, இறப்பு முதலானவைகூடிய ஸம்ஸாரத்தைக் கண்டு ப4யந்தவர்களால் வரிக்கத்தக்கவர்களுள் சிறந்தவனாகையாலே ஆதி3த்யனுக்குள்ளிருக்கும் 'ப4ர்க்க3:' எனப்படும் இவன் மோக்ஷமடைய விரும்புகிறவர்களால் ஸேவிக்கப்படுகிறான். பிறப்பிறப்புக்களைப் போக்குவதற்காகவும், ஆத்4யாத்மிகம், ஆதி4பௌ4திகம், ஆதி4தை3விகம் என்னும் மூவகைத் துன்பங்களையும் போக்கிக்கொள்ளவும் ஸூர்ய மண்ட3லத்தில் தியானத்தின்மூலம் யோகி3களால் காணப்படும் புருஷன் இவனே. வேத3த்தின் ஆதி3யில் படிக்கப்படும் ஓங்கார மந்த்ரமும் இந்தப் பொருளையே நிலைநிறுத்துகிறதன்றோ. ஸத்யம் எனப்படும் பரமாத்மாவின் முக2ம் பொன்மயமான பாத்திரத்தினால் மறைக்கப்பட்டுள்ளது. 'பூஷா' எனப்படும் பரமாத்மாவே! ஸத்யத்தை த4ர்மமாகக்கொண்ட நான் காண்பதற்காக நீயே அந்த மறைவைப் போக்கவேண்டும். எவன் ஆதி3த்யனுக்கு அந்தர்யாமியாயிருக்கிறானோ அவனே எனக்கும்

அந்தர்யாமியாயிருப்பவன். ஸர்வஜ்ஞனுகையாலே கவி எனப்படுபவனாய், பழையவனாயினும் புதியவனாய், அனைவரையும் நியமிப்பவனாய், அணுவைக் காட்டிலும் அணுவாயிருப்பவனாய், அனைத்தையும் த₄ரிப்பவனாய், நினைத்தற்கரிய ஸ்வரூப ரூபங்களை உடையவனாய் இருக்கும் பரமாத்மாவை தியானிப்பவன் தமஸ்ஸுக்கு அப்பால் ஸூர்யன் போல் பிரகாசிக்கும் அவனையடைகிருன். பு₄ர்க்க₃: எனப்படும் புருஷனே அனைவர்க்கும் ஆத்மா. ஈச்வரன் எனப்படுபவனும் அவனே. பரிசுத்₃த₄மானவனும் அவனே. ப்ராக்ருதமான அடையாளங்கள் எதுவுமில்லாத அவன் ஹிரண்யக₃ர்ப்ப₄ன் என்றும், விஷ்ணு என்றும், சுக்லன் என்றும் சொல்லப்படுகிருன். எல்லா பூ₄தங்களையும் நியமிப்பவன் அவனே. க்லேசம், கர்மம், விபாகம், ஆசயம் முதலான தாழ்வுகளால் தொடப்படாதவனுயிருக்கையால் இவனே ஈச்வரன் என்று கூறப்படுகிருன். அனைத்தையும் சோதி₄க்கையாலும், சுத்₃த₄ம் செய்கையாலும், தாழ்வுகள் இல்லாமலிருக்கையாலும் 'சுசி' எனப்படுகிருன். பொன்மயமான (அழகிய) அண்ட₃த்திற்குப் பிறப்பிடமாயிருக்கிருன். அழகிய இவ்வண்ட₃த்தினுள் அவதரிக்கிருன், ஆகையால், ஹிரண்யக₃ர்ப்ப₄ன் என்று புராணங்களில் சொல்லப்படுகிருன். ஒளிவிடும் அண்ட₃ம் 'ஹிரண்யம்' எனப்படுகிறது. ஜ்ஞானமயமான தவத்தினுல் அதி₃தியானவள் முன்னொரு காலத்தில் விஷ்ணுவை கேசவன் தொடக்கமாக் தா₃மோத₃ரன் ஈருக பன்னிரண்டு க₃ர்ப்ப₄ங்களாக த₄ரித்தாள். அதி₃தி க₃ர்ப்ப₄மாகிற விஷ்ணுவின் க₃ர்ப்ப₄ நடுவிலிருப்பது மேரு. அவனிடமிருந்து ஏழு கடல்கள் தோன்றின. அவனது க₃ர்ப்ப₄த்திலிருந்து பர்வதங்களும், த₄மநியிலிருந்து நதி₃களும் உண்டாயின. தே₃வலோகமும் பூ₄மியும் அவனது இரண்டு கபால ஸ்த₂ானத்திலுள்ளன. நடுவில் அந்தரிக்ஷம் உண்டாயிற்று. மூவுலகத்தின் உற்பத்தி இப்படி ஏற்பட்டது. இந்த இரண்டு அண்ட₃ கபாலங்களும் நீருக்கு நடுவில் வைக்கப்பட்டுள்ளன. ஒன்று அடியில் இருப்பதாயிற்று. இரண்டாவது தே₃வலோகத்திலுள்ள நந்தனவனமாயிற்று. அந்த இரண்டின் நடுவிலிருந்தும் பிறந்த குழந்தை மாதண்ட₃ன் என்றும், ஸவிதா என்றும் சொல்லப்படுகிருன். இவனிடமிருக்கும் தேஜஸ்ஸையே எல்லா ஜீவராசிகளும் எப்போதும் உபாஸிக்கின்றன. இவனிடத்தில் பரப்₃ரஹ்மத்தால் வைக்கப்பட்ட ரூபமே எல்லா உலகினராலும் துதிக்கப்படுகிறது. உருத்திரனின் ஒளியும், பரமாத்மாவான தனது ஒளியும், அக்₃னீ ஷோமம் முதலான யாக₃ங்களின் ஒளியும், பன்னிரு ஆதி₃த்யர்களின் தேஜஸ்ஸும் இந்த ஸூர்யன் ஒருவனிடத்திலேயே வைக்கப்பட்டுள்ளது, பரமபுருஷனுடைய மேலான தேஜஸ்ஸும் இங்கேயே நிலைநிற்கிறது] என்னும்

பகுதியிலும் பரமாத்மா எல்லா ஶப்3த3ங்களாலும் சொல்லப்படுபவன் என நிருபித்து, கா3யத்ரியினுல் சொல்லப்படுபவன் விஷ்ணுவே என்று பலகால் வலியுறுத்தி, கா3யத்ரிக்குப் பொருள் கூறுவதன்மூலம் அதை நிலைநிறுத்தி, ஸூர்யனுக்குள்ளிருக்கும் பல தேஜஸ்ஸுக்களிலும் மேலானது இந்தப் பரமபுருஷனின் தேஜஸ்ஸே என்று நிலைநிறுத்துவதன்மூலம் ப4க3வத்பரத்வம் நிலைநாட்டப்படுகிறது.

ஏஷ தா4தா வித4தா ச ப்3ரஹ்மா விஷ்ணுர்மஹேஶ்வர: |
த4நத3: பாவக3: காலோ வருணேந்த்3ராநிலா: ஶஶீ ||
மித்ரோ தா4தா ப4க3ஸ்த்வஷ்டா பூஷார்யமாம்ஶுரேவ ச |
பர்யாயநாமபி4ஶ்சைஷ ஏக ஏவ நிக3த்3யதே ||
விஶநாத் ஸர்வபூ4தாநாம் விஷ்ணுரித்யபி4தீ4யதே |
பஶ்யதே ஸர்வபூ4தாநாம் கர்ம ஏஷ ஶுப4ாऽஶுப4ம் ||
சி2ந்த3தே பூர்வதே3ஹஸ்த2ம் விபாகம் வை ஶுப4ாऽஶுப4ம் |
தஸ்மாத்3தா4தா வித4தா ச கீர்த்யதே வேத3சிந்தகை: ||
ப்3ருஹத்த்வாத் ப்3ரும்ஹணத்வாச்ச ஸாமருக்3யஜுஷாம் தத2ா |
த்ரயாணும் தா4ரணச்சைவ ப்3ரஹ்மா தேந நிக3த்3யதே ||
ரோத3நாத்3ராவணாத்3ராக3ாத் ரம்ஹணாத் ருத்3ர உச்யதே |
மஹாநீஶஶ்ச பூ4தாநாம் மஹேஶ்வர இதி ஸ்ம்ருத: ||
ஸஹஸ்ரகரவந்மூர்த்தி: த்3ருஶ்யதே ஸர்வதோ யத: |
ஸர்வஸ்யைவோபரிஷ்டாச்ச பூரணாத் புருஷ: ஸ்ம்ருத: ||
அக்3நௌ ப்ராஸ்தாஹுதி: ஸம்யக3ாதி3த்யமுபதிஷ்ட2தே |
ஆதி3த்யாஜ்ஜாயதே வ்ருஷ்டி: வ்ருஷ்டேரந்நம் தத: ப்ரஜா: ||
ஸவிதா ஶ்ரிய: ப்ரஸவிதா த4நத3ஸ்தேந சோச்யதே |
வாயு: கர்ம ச காலௌ ச ஶுத்3தே4: கர்த்ருணி தே3ஹிநாம் ||
பாவயேத்3ரஶ்மிபி4: ஸர்வம் பாவகஸ்தேந சோச்யதே |
ஸூர்ய ஆத்மா து ஜக3த: ப்ராணக்2யோ ஹ்ருதி3 ஸம்ஸ்தி2த: ||
ஸர்வாத்மா கத்2யதே தஜ்ஜ்ஞை: ஜீவபூ4த: ஸநாதந: |
த்3விதீயேந து ரூபேண ஸாக்ஷிவத்திஷ்ட2தே து ஸ: ||
ஆத3ாநாத் ஸர்வபூ4தாநாம் ஆதி3த்ய இதி கீர்த்தித: |
ஆர்ய: ஸ்வாம்யாச்ச ஜக3தோ ஹ்யர்யமா தேந சோச்யதே ||
ஸம்ரக்ஷிதா ச பூ4தாநாம் ஸவிதா தேந ஸ ஸ்ம்ருத: |
ப4க3ஸம்ஜ்ஞா த4நஸ்யோக்தா ஸ த3த3ாதி ததோ ப4க3: ||

விஶ்வேஷாம் கர்மணாம் கர்த்தா விஶ்வகர்மா தத: ஸ்ம்ருத: ।
கரைர் ப₄ாஸயதே விஶ்வம் ப₄ாஸ்கரஸ்தேந சோச்யதே ॥
புஷ்ணாதி ஹி ஜக₃த் ஸர்வம் பூஷா தேந நிக₃த்₃யதே ।
அம்ஶுபி₄ர் வ்யாப்யதே விஶ்வம்அம்ஶுஸ்தேநஹ்யுத₃ாஹ்ருத:॥
நிமேஷாதி₃ க்ஷண: கால: தஸ்மாது₃த்பத்₃யதே யத: ।
காலகர்த்தா ததோ ஜ்ஞேய: காலாக்₂யோ விஷ்ணுரவ்யய: ॥
ஸஹஸ்ரச்சி₂த்₃ரஸங்கீர்ண ஆபோ ரேதோமயா க₄டே ।
ஹிரண்மயேந்தரே திஷ்ட₂ந் ரவிஸ்தேந நிக₃த்₃யதே ॥
இட₃ாஸுஷும்நே த்₃வே நாட்₃யௌ ரஶ்மிஸஞ்ஜ்ஞே வ்யவஸ்தி₂தே ।
பாசிகாப்யாயிகே ஹ்யேதே அக்₂நீஷோமாத்மகே ஸ்ம்ருதே ॥
ஏதௌ து பார்ஶ்வகௌ₃ ஜ்ஞேயௌ பந்த₂ாநௌ ஹ்யக்₃நிஹோத்ரிணாம் ।
தே₃வபித்ராத்மகௌ ஹ்யேதௌ ஶாஶ்வதௌ ஜக₃த:ஸமௌ॥
தயோர்மத்₄யே அமா ஹ்யேஷா யத்ர ஸந்திஷ்ட₂தே ஶஶீ ।
கலாவஶிஷ்டோ பூ₄யோऽபி வ்ருத்₃தி₄ம் க₃ச்ச₂தி ப₄ாஸ்கராத் ॥
தத்ர தத் பரமம் த₄ாம உத₃தே₄ரிவ நி:ஸ்ருதம் ।
யஸ்மிந் லவணவத்₃யோகீ₃ விஶத்யேவைகதாம் க₃த: ॥
ஸா ஸூர்யே சைவ ஹ்ருத₃யே பரே ப்₃ரஹ்மணி ஸம்ஸ்தி₂தா ।
தயா க₃ச்ச₂ந்தி வித்₃வாம்ஸோ ப்₃ரஹ்ம ப்₃ரஹ்மவிதே₃ா ஜநா: ॥
ஶ்ரத்₃த₄ாயுக்தா யே ஹ்யுபாஸந்தே அரண்யே
ஶாந்தா வித்₃வாம்ஸோ ப்₃ரஹ்மசர்யம் சரந்தி ।
தே ஸூர்யஸ்ய த்₃வாரேண விரஜா: ப்ரயாந்தி
யத்ராஸௌ திஷ்ட₂தி புருஷோ அவ்யயாத்மா ॥
ஹந்த்யஜ்ஞாநம் ததோ ஹம்ஸ அஶ்ராந்த பரிவர்த்தநாத் ।
ஏவம் பர்யாய ஶப்₃தை₃ஸ்து ஏக ஏவ நிக₃த்₃யதே ॥......
ஶுக்லம் தத்புருஷம் ஜ்ஞேயமலிங்க₃ம் ஜ்யோதிரூபகம் ।
ஸத்யத₄ர்மாண(ணம்)ப₄ர்க்க₃ம் து ஈஶ்வரம் விஷ்ணுஸம்ஜ்ஞகம்॥
தஸ்மிந் ப்ரதிஷ்டி₂தம் ஸர்வம் த்ரயஸ்த்ரிம்ஶத்₃கு₃ணம் ஹி தத் ।......
ஏதத்₃தி₄ ஸோமமத்₄யஸ்த₂ம் அம்ருதம் ஜ்யோதிரூபகம் ।
ஹ்ருதி₃ஸ்த₂: ஸர்வபூ₄தாநாம் சேதந: ஶ்ரூயதே ஹ்யஸௌ ॥

பஞ்சமண்டலமத்₄யஸ்தே₂ா த்₃ரஷ்டவ்யோ யோக₃சக்ஷுஷா ।
ரவிமத்₄யே ஸ்தி₂த: ஸோம: ஸோமமத்₄யே ஹுதாஶந: ॥
தேஜோமத்₄யே ஸ்தி₂த: ஸத்வம் ஸத்வமத்₄யே ஸ்தி₂தோऽச்யுத: ।
[9-79...129]

[(வேத₃ஶாஸ்த்ரங்களில்) த₄ாதா, வித₄ாதா, ப்₃ரஹ்மா, விஷ்ணு, மஹேஶ்வரன், த₄நத₃ன், பாவகன், காலன், வருணன், இந்த்₃ரன், அநிலன், ஶஶி, மித்ரன், த₄ாதா, ப₄க₃ன், த்வஷ்டா, பூஷா, அர்யமா, அம்ஶு முதலான பல பெயர்களால் இவன் ஒருவனே குறிப்பிடப்படுகிறான். எல்லாப் பொருள்களிலும் பிரவேசித்திருப்பதால் விஷ்ணு என்று கூறப்படுகிறான். எல்லா ஜீவராசிகளுடைய புண்ய பாப கர்மங்களைக் காண்கிறானகையாலும், முன் தே₃ஹாநுப₄வத்தால் புண்ய பாபங்களை அழிக்கிறானகையாலும், வேத₃ம் வல்லவர்களால் இவன் த₄ாதா என்றும், வித₄ாதா என்றும் கூறப்படுகிறான். பெரியவனாயிருக்கையாலும், பிறரைப் பெரியவர்களாக ஆக்குகையாலும், ப்₃ரஹ்ம எனப்படும் ருக்₃ யஜுஸ் ஸாம வேத₃ங்களை த₄ரிக்கிறானகையாலும் ப்₃ரஹ்மா என்று கூறப்படுகிறான். துன்புறுபவர்களைக் கண்டு துன்புற்று அழுகிறானகையாலும், து₃ஷ்டர்களை அழச்செய்கிறானகையாலும், அடியார்களிடம் அன்புடையவனாயிருக்கையாலும், எப்போதும் எங்கும் ஸஞ்சரித்துக்கொண்டிருக்கிறானகையாலும ருத்₃ரன் என்று சொல்லப்படுகிறான். பெரியவனாகவும், பூ₄தங்களுக்கு ஈஶனாகவும் இருக்கையால் மஹேஶ்வரன் என்று முழங்கப்படுகிறான். எல்லா இடத்திலும் கைகளாயிரம், கால்களாயிரம் உடைய திருமேனியோடு (ஞானிகளால்) காணப்படுகிறானகையாலும், எல்லாவற்றுக்கும் மேலாயிருக்கையாலும், அனைத்தையும் பூரித்து நிற்கையாலும் புருஷன் எனப்படுகிறான். அக்₃னியில் நன்கு ஹோமம் செய்யப்பட்ட ஆஹுதியானது ஆதி₃த்யனை அடைகிறது. ஆதி₃த்யனிடமிருந்து மழை உண்டாகிறது. மழையிலிருந்து அன்னமும், அதிலிருந்து ஜீவராஶிகளும் ஏற்படுகின்றன. இதனாலேயே செல்வங்களை உண்டாக்கும் ஸவிதாவாகவும், த₄னத₃னாகவும் அப்பரமாத்மா முழங்கப்படுகிறான். வாயு, கர்மம், காலம் ஆகியவை ஜீவர்களுக்கு ஶுத்₃தி₄யைச் செய்கின்றன. தன் கிரணங்களால் (கு₃ணங்களால்) அவை அனைத்தையும் பரிஶுத்₃த₄ப்படுத்துகையால் பாவகன் என்று சொல்லப்படுகிறான். உலகிற்கு ஆத்மாவாயிருக்கையால் ஸூர்யன் என்றும், ஹ்ருத₃யத்தில் இருக்கையால் ப்ராணன் என்றும் கூறப்படுகிறான். ஜீவனுக்கு அந்தர்யாமியாயிருக்கும் பழையோனாகையால் ஸர்வாத்மா எனப்படுகிறான். ரூபம் என்பதற்கு முதற்பொருள் ஸ்வ

ரூபம். இரண்டாவது பொருள் விக்₃ரஹம். விக்₃ரஹமான திரு மேனியுடன் (ஹ்ருத₃யத்தில்) ஸாக்ஷியைப்போலே பரமாத்மா நிற்கிருன். எல்லாப் பொருள்களையும் தன்னிடம் இழுத்துக்கொள்கையால் ஆதி₃த்யன் என்று கீர்த்திக்கப்படுகிருன். இவ்வுலகத்திற்கு ஆரியஞன (நன்மை விளைக்கும்) ஸ்வாமியாயிருக்கையால் அர்யமா என்று அழைக்கப்படுகிருன். எல்லாப் பொருள்களையும் ஸம்ரக்ஷிக்கிருஞகையால் ஸவிதா எனப்படுகிருன். ப₄க₃ம் என்னும் பெயர் பணத்திற்கு உண்டு. அதைக் கொடுக்கிருஞகையால் ப₄க₃ன் எனப்படுகிருன். எல்லாக் கர்மங்களையும் செய்கிருஞகையால் விஶ்வகர்மா என்று உரைக்கப்படுகிருன். தன் கிரணங்களால் உலகை ஒளிவிடச் செய்கையால் ப₄ாஸ்கரன் எனப்படுகிருன். உலகனைத்தையும் போஷிக்கையால் பூஷா என்று போற்றப்படுகிருன். இவனுடைய அம்ஶுக்களாகிற கிரணங்களாலே உலகம் வியாபிக்கப்படுகையால் அம்ஶு என்று சொல்லப்படுகிருன். நிமிஷம், க்ஷணம் முதலான காலம் அவனிடமிருந்தே உண்டாகிறதாகையாலே, காலத்தை உண்டாக்கும் அழிவற்ற விஷ்ணு காலன் என்னும் பெயரையுடையவஞகக் கூறப்படுகிருன். ஆயிரம் ஓட்டைகளையுடைய பொன்மயமான குடம் போன்ற அண்ட₃த்தில் உள்ளேயிருந்துகொண்டு தன்னுடைய வீர்யமாகிற ஜலத்தை நிரப்புகிருஞகையால் ரவி எனப்படுகிருன். இடை₃, ஸுஷும்நை என்னும் இரு நாடிகளும் கிரணங்கள் என்னும் பெயரை உடையவைகளாய் ஶரீரத்தில் இருக்கின்றன. ஶரீரத்தைப் பக்குவமடையச் செய்வதாகவும், போஷிப்பதாகவுமிருக்கும் இவ்விரண்டும் அக்₃நியையும், ஸோமனையும் அதி₄தே₃வதையாகக் கொண்டவை. அக்₃நிஹோத்ரிகளுக்கு இவ்விரண்டும் அருகிலிருக்கும் இரு வழிகளாகும். ஸுஷும்நா நாடி பரமபத₃த்திற்குச் செல்லும் வழியாகையாலே தே₃வயாநம் என்றும், இட₃ா நாடி பித்ருலோகத்திற்குச் செல்லும் வழியாகையாலே பித்ருயாநம் என்றும் சொல்லப்படும் தனித்தனியான நிலையான வழியாயிருப்பவை இவை. இவையிரண்டிற்கும் நடுவில் அமா என்னும் நாடி இருக்கிறது. அதில் ஶஶி என்னும் சந்த்₃ரன் நிலைநிற்கிருன். 16 கலைகளில் ஒவ்வொன்ருகக் குறைந்து ஒரு கலையோடு இருக்கும் அவன் ஸூர்யஞலே மறுபடியும் வளருகிருன். அங்கு கடலிலிருந்து வெளிவந்த அம்ருதம் போன்ற மேலான பரமாத்மஸ்த₂ானம் உள்ளது. அந்த ஸ்த₂ானத்தில் உப்பு நீரில் கரைவதுபோலே ஒன்றியவஞய் யோகி₃ நுழைகிருன். அந்த ஸுஷும்நா நாடி ஹ்ருத₃யத்திலும் ஸூர்யனிடமும் பரம்பொருளிடமும் பரவியிருக்கிறது. ப்₃ரஹ்மஜ்ஞானிகள் அதன்மூலம்

ப்₃ரஹ்மத்தை அடைகிருர்கள். ஶ்ரத்₃தை₄யுடையவர்களாய், ஶாந்தர்களாய், அறிவாளிகளாய் காட்டில் எவர்கள் ப்₃ரஹ்மசர்யத்தை அநுஷ்டி₂த்துப் பரம்பொருளை உபாஸிக்கிருர்களோ, அவர்கள் எல்லா அழுக்கும் நீங்கப்பெற்றவர்களாய், ஸூர்யனுக்கு நடுவிலிருக்கும் துவாரத்தின்மூலம் அழிவற்ற புருஷனிருக்கும் பரமபத₃த்திற்தச் செல்கிருர்கள். அஜ்ஞானத்தை அழிக்கின்றபடியாலும், களைப்பில்லாமல் ஸஞ்சரிக்கிறபடியாலும் ஹம்ஸம் என்றும் கூறப்படுகிருன். இவ்வண்ணமாக தன்னையே குறிக்கும் பல ஶப்₃த₃ங்களாலே இவன் முழங்கப்படுகிருன்......வெளுத்ததான சோதி உருவாய், ப்ராக்ருதமான அடையாளங்களற்றதான அதுவே புருஷன் எனப்படுவதாய், ஸத்யமான கு₃ணங்களையுடையதாய், பு₄ர்க்க₃ம் எனப்படுவதாய், விஷ்ணு என்னும பெயரையுடையதான ஈஶ்வரன். அதனிடத்தில் அனைத்தும் நிலைநிற்கிறது. அது முப்பத்துமுக்கோடி தே₃வதைகளையும் கு₃ணமாக (அவயவமாக) உடையதன்றே...இதுவேயன்றே ஸோமனுக்கு நடுவேயிருக்கும் அழியாத சோதியுருவானது. எல்லா ஜீவராஶிகளின் ஹ்ருத₃யத்திலும் இருக்கும் பேரறிவாளனுக இவன் சொல்லப்படுகிருன். ஐந்து மண்ட₃லங்களுக்கு நடுவிலிருப்பவனுக யோக₃மாகிற கண்ணுல் இவன் காணப்படுகிருன். ரவி மண்ட₃லத்தின் நடுவில் ஸோமமண்ட₃லமும், ஸோம மண்ட₃லத்தின் நடுவில் அக்₃நிமண்ட₃லமும், அந்தத் தேஜோ மண்ட₃லத்தின் நடுவில் ஸத்வமண்ட₃லமும் உள்ளன. அந்த ஸத்வ மண்ட₃லத்தின் நடுவில் பரமாத்மாவான அச்யுதன் உள்ளான்.] என்னும் பகுதியில் பரமாத்மா உலகிலுள்ள எல்லா ஶப்₃த₃ங்களாலும் சொல்லப்படுகிறவனுக இருந்தபோதிலும், புருஷன், விஷ்ணு, அச்யுதன் முதலான தனக்கேயுரிய திருநாமங்களையுடையவனுகவும் காட்டப்படுகையால் விஷ்ணுவே வேத₃முதல்வன் என்று வெளிப்படையாக விளங்குகிறது.

"அத்ர ஹி ஸௌம்யாக்₃நேய ஸாத்விகமண்ட₃லாநி பி₄த்வா தத:
ஶுத்₃த₄ஸத்வாந்தராவஸ்தி₂தம் அசலம் அமரம் அச்யுதம் த்₄ருவம்
விஷ்ணுஸம்ஜ்ஞம் ஸர்வாத₄ாரம் த₄ாம ஸத்யகாமஸர்வஜ்ஞத்வ
ஸம்யுக்தம் ஸ்வதந்த்ர சைதந்யம் ஸ்வே மஹிம்நி திஷ்ட₂மாநம் பஶ்யதி"

[இந்த ஸூர்யமண்ட₃லத்தினுள்ளிருக்கும் ஸோமனுடையவும், அக்₃னியினுடையவும், ஸாத்விகமானதுமான மண்ட₃லங்களை பே₄தி₃த்து, அதனுள்ளிருக்கும் சுத்₃த₄ஸத்வத்தினுள் எழுந்தருளியிருப்பதாய், அசையாததாய், மரணமற்றதாய், (அடியார்களை) நழுவவிடாததாய், நிலையானதாய், விஷ்ணுவென்னும் பெயரையுடையதாய், ஸர்வர்க்கும்

ஆத₄ாரமாயுள்ளதாய், ஸத்யகாமத்வம், ஸர்வஜ்ஞத்வம் முதலான கு₃ணங்களுடன் கூடியதாய், ஸ்வதந்த்ரமானதாய், ஞானஸ்வரூப மானதாய், தன் மஹிமையிலேயே நிலைநிற்பதான தேஜஸ்ஸைப் பார்க்கிறுன் ] என்று மைத்ராயணீய உபனிஷத்தின் ஆருவது ப்ர பாட₂கத்தில் படிக்கப்பட்ட வாக்யத்தை இந்த ஸ்ம்ருதி வசனங்கள் உபப்₃ரும்ஹணம் செய்கின்றன என்றும் விளங்குகிறது.

ஸ ஈஶ: ஸர்வஜக₃த: ப்ராண: ப்ரீணுதி விஶ்வப்₄ருத் ||
விஶ்வோஸி வைஶ்வாநர விஶ்வரூப த்வம்
விஶ்வமாத₄ாரயஸி யாஜமாந:|
விஶ்வம் ச பீத்வாऽऽஹூதயஶ்ச யத்ர ப்ராதே₃ஶமாத்ர: புருஷ:
ஸ்ம்ருதஸ்து ஸ: ||
ஏஷா விஶ்வப்₄ருதிநாம் வை தநுர்விஷ்ணோ: ஸநாதநீ|
அந்நரூபேண விஜ்ஞேயா யயேத₃ம் த₄ார்யதே ஜக₃த் ||
அந்நகாமேந ஸம்ஸ்ருஷ்டம் ப்₃ரஹ்மணு சாகி₂லம் ஜக₃த் |
தஸ்மாத₃ந்நாத் பரம் தத்த்வம் ந பூ₄தம் ந ப₄விஷ்யதி ||
அந்நார்த்தீ₂ சாப்யயம் ஸூர்யோ ரஸாந் க்₃ருஹ்ணுதி ரஶ்மிபி₄: ||
யத₂ா ஹி க்ஷுதி₄தா ப₃ாலா மாதரம் பர்யுபாஸதே |
ஏவம் ஸர்வாணி பூ₄தாநி அந்நயஜ்ஞமுபாஸதே ||
யோ ஹ்யவித்₃வாந் ஸமஶ்நாதி அந்நம் மோஹஸமந்வித: |
ப₄ஸ்மநீவ ஹுதம் ஹவ்யம் தத்₃வத₃ந்நமமந்த்ரகம் ||
ஏவம் ஜ்ஞாத்வா து யோ விப்ரோ விதி₄நாந்நம் ஸமஶ்நுதே |
ஆத்மாநம் ச தத₂ாந்நம் ச த₃ாதாரம் சைவ தாரயேத் ||
தர்ப்பிதம் ச ப₄வேத்தேந விஶ்வம் பு₄வநஸப்தகம் |
தை₃வ்யே பித்ர்யே ச யத்₃த₃த்தம் தத₃க்ஷய்யம் ப₄வத்யபி ||
ஏவம் ஹி ஸர்வப₄ாவஸ்த₂ம் விதி₃த்வா பரமேஶ்வரம் |
காஷ்ட₂ாதெ₃ள ஹி த்ருணுந்தே ச பாஷாணுந்தர்க₃தேऽபி ச ||
ப்₃ரஹ்மாதி₃ஸ்தம்ப₃பர்யந்த மவம் வ்யாப்ய ஸ திஷ்ட₂தி |
பாஷாண மணி த₄ாதூநாம் தேஜோரூபேண ஸம்ஸ்தி₂த: ||
வ்ருக்ஷெளஷதி₄த்ருணுநாம் ச ரஸரூபேண திஷ்ட₂தி |
தந்மாத்ரபூ₄தோ பூ₄தாநாம் விஶ்வரூபேண ஸம்ஸ்தி₂த: ||
ஏவம் வேத்தி ய ஆத்மாநமேகத₄ா ஸம்ப்ரதிஷ்டி₂தம் |
ஜ்ஞாத்வா சோபாஸதே ஸம்யக் ஸோऽம்ருதத்வாய கல்பதே ||
[9-143 ..155]

[எல்லாவுலகிற்கும் அவன் ஈமன். உயிராயிருப்பவன். உலகனைத்தையும் தாங்கி உகக்கிருன். வைம்வாநரனே! உலகனைத்தையும் உருவாகக் கொண்டவனே! நீயே உலகமாயிருக்கிருய். நீயே ஸ்வாமியாயிருந்து உலகம் முழுவதையும் த₄ரிக்கிருய். ப்ரளயகாலத்தில் உலகனைத்தையும் விழுங்குகிருய். யஜ்ஞங்களில் ஆஹுதிகளையும் விழுங்குகிருய். ஹ்ருத₃யத்தில் அடங்கும் அந்தர்யாமி புருஷனுகவும் நீயே முழங்கப்படுகிருய். அன்னம் என்று சொல்லப்படுவதாய், உலகைப் போஷிக்கும் இதுவே விஷ்ணுவின் பழமையான மரீரமாகும். உலகனைத்தும் இதனுலேயே த₄ரிக்கப்படுகிறது. அன்னத்தை விரும்பிய பிரமனுலே இவ்வுலகனைத்தும் ஸ்ருஷ்டிக்கப்பட்டது. ஆகையால் அன்னத்தைக் காட்டிலும் மேலான பொருள் இருந்ததுமில்லை; இருக்கப்போவதுமில்லை. அன்னத்தை வேண்டியே காற்று வீசுகிறது. அன்னத்தை விரும்பியே நெருப்பு எரிகிறது. அன்னத்தை ஆசைப்பட்டே இந்த ஸூர்யன் தன் கிரணங்களாலே ரஸத்தை இழுத்துக்கொள்கிருன். பசியுள்ள குழந்தை தாயை எதிர்பார்த்திருப்பதுபோலே, எல்லா ஜீவராமிகளும் அன்னமாகிற யஜ்ஞத்தை எதிர்பார்த்திருக்கின்றன. (பரம்பொருளுக்குப் படைத்த அன்னத்தை உண்ணவேண்டும் என்று) அறியாதவனுய் எவனெருவன் அன்னத்தை மயக்கத்தோடு தானே உண்கிருனே, பரமனுக்குப் படைக்கும் மந்திரங்களால் பரிமுத்₃த₄ப்படுத்தப்படாத அவனுடைய அன்னம் சாம்பலில் ஹோமம் செய்யப்பட்ட ஹவிஸ்ஸை ஒக்கும். இவ்வண்ணமாக அறிந்து எந்த அந்தணன் முறைப்படி அன்னத்தை அடைகிருனே அவன் தன்னையும், அந்த அன்னத்தையும், அதை அளித்தவனையும் நற்கதியை அடைவிக்கிருன். அவனுல் ஏழு லோகமும் திருப்தி செய்விக்கப்பட்டதாகிறது. தே₃வர்களுக்கும், பித்ருக்களுக்கும் அவன் எதையளிக்கிருனே அது அழிவற்றதாகிறது. இவ்வண்ணமாக, ஸர்வேம்வரனை எல்லாப் பொருள்களிலும் இருப்பவனுக அறிய வேண்டும். குச்சியிலும், புல்லின் நுனியிலும், கல்லினுள்ளும், பிரமன் முதல் புல் ஈருகவுள்ள எல்லாப் பொருள்களிலும் இவ்வண்ணமாக அவன் வியாபித்து விளங்குகிருன். கல், மணி, பொன் முதலான த₄ாதுக்கள் ஆகியவற்றில் ஒளியுருவாயிருப்பவன் அவனே. மரம், செடி, கொடிகள், புல் முதலானவற்றில் அவன் ரஸரூபமாக நிற்கிருன். பூ₄தங்களுக்குக் காரணமான தந்மாத்ரமாயிருப்பவனும் அவனே. உலகனைத்தையும் உருவாகக் கொண்டிருப்பவன் அவனே. இப்படிப் பரமாத்மாவை ஒருபடிப்பட்டவனுய் நிலைநிற்பவனுக எவன் அறிகிருனே, அறிந்து நன்கு உபாஸிக்கிருனே, அவன் மோக்ஷத்தை அடைகிருன்.] என்னும் பகுதியில் அன்னத்தை விஷ்ணுவின் உருவ

மாக எடுத்து, அவனுக்குப் படைத்த பின்பே அன்னத்தை உண்ண வேண்டுமென்று விதி₄த்து, இப்படி அன்னத்தை உண்பவனாய், எல்லாப் பொருள்களிலும் இருப்பவனாக அந்தப் பரமாத்மாவை அறிபவன் மோக்ஷமடைகிறான் என்று கூறியிருப்பதிலிருந்தும் விஷ்ணு பரத்வம் விளங்கா நிற்கிறது.

ந ச பஶ்யந்தி புருஷம் ஹ்யந்தஸ்த₂ம் பரமம் விபு₄ம் |
தம் சிந்தயேத் ஸமாதி₄ஸ்தே₂ா யம் ஜ்ஞாத்வா விப்ரமுச்யதே ||
முக்தோ ந ஜாயதே பூ₄ய: ப்ராப்ய விஷ்ணோ: பரம் பத₃ம் |
[9-177, 178]

[அறிவிலிகள் தங்களுக்குள்ளேயே இருப்பவனாய், ஸர்வவ்யாபியான பரமபுருஷனைக் காண்பதில்லை. ஸமாதி₄நிலையில் அவனையே நினைக்க வேண்டும். அவனையறிந்தவன் முக்தியடைகிறான். முக்திபெற்று விஷ்ணுவின் பரமபத₃த்தையடைந்தவன் இவ்வுலகில் மறுபடியும் பிறப்பதில்லை.] என்னும் பகுதியில் விஷ்ணுவின் பரமபத₃த்தை அடைவதே மோக்ஷம் என்று முழங்கப்பட்டிருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

ஸர்வபாபப்ரஸக்தோऽபி த்₄யாயேந்நிமிஷமச்யுதம் ||
புநஸ்தபஸ்வீ ப₄வதி பங்க்திபாவநபாவந: | [9-180]

[எல்லாப் பாபங்களையும் புரிந்தவனானாலும் ஒரு நிமிஷமாகிலும் (தனக்கு ப்ராப்யம், ப்ராபகம், த₄ாரகம், போஷகம், போ₄க்₃யம் முதலான எல்லாமாயிருப்பவன் என்று) தியானிப்பானாகில் மறுபடியும் பெரும்புண்ணியசாலியாகிறான். பங்க்திபாவனர்களையும் பரிஶுத்₃த₄ப் படுத்துபவனாகிறான்] என்னும் ஶ்லோகத்தில் அச்யுதஶப்₃த₃த்தாலே பரமாத்மாவைக் குறித்திருப்பதும் காணத்தக்கது.

இந்த்₃ரியேப்₄ய: பரே ஹ்யர்த்த₂ா அர்த்தே₂ப்₄ய: பரமம் மந: ||
மநஸஶ்ச பரா பு₃த்₃தி₄: பு₃த்₃தே₄ராத்மா மஹாந் பர: |
மஹத: பரமவ்யக்தம் அவ்யக்தாத் புருஷ: பர: ||
புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்ட₂ா ஸா பரா க₃தி: |
[9-184...186]

[இந்த்₃ரியங்களை வஶப்படுத்துவதைக் காட்டிலும் விஷயங்களை வஶப் படுத்துவது சிறந்தது. விஷயங்களை (அநுப₄வியாமலிருப்பதன்மூலம்) அடக்குவதைக்காட்டிலும் மனத்தை அடக்குவது சிறந்தது. மனத்தை அடக்குவதைக்காட்டிலும் அறிவை அடக்குவது சிறந்தது. அறிவை அடக்குவதைக்காட்டிலும் பெரியவனான ஆத்மாவை (தன்னை) அடக்குவது சிறந்தது. தன்னை அடக்குவதைக்காட்டிலும் ப்ரக்ருதி கார்யமான

ஶரீரத்தை அடக்குவது சிறந்தது. ஶரீரத்தை அடக்குவதைக்காட்டிலும் பரமாத்மாவாகிற பரமபுருஷனை (ஶரணமடைவதன்மூலம்) வஶப் படுத்துவது சிறந்தது. பரமபுருஷனைக்காட்டிலும் (வஶப்படுத்தத்தக்கவை களில்) மேலானது வேறொன்றும் இல்லை. அப்பரமபுருஷனே மேலான உபாயமும் மேலான ப்ராப்யமும் ஆவான்] என்னும் பகுதியில் கடோபநிஷத்தை ஒட்டி, பரமபுருஷனை வஶீகரிக்கத்தக்கவைகளுள் சிறந்தவன் என்றும், மேலான உபாயமாகவும், உபேயமாகவும் இருப்பவன் என்றும் உத்கோஷித்திருப்பது உய்த்துணரத்தக்கது.

த்விகுணம் த்ரிகுணம் வாபி ப்ராணாயாமமுபக்ரமேத் |
ததோ த்யேய: ஸ்திதோ யோऽஸௌ ஹ்ருதயே தீபவத் ப்ரபு:||
தாரயேத்தத்ர சாத்மாநம் தாரணம் தாரயேத்புத: |
மோஹஜாலமபாஸ்யாத புருஷோ த்ருஶ்யதே ஹி ய: ||
ஸஹஸ்ரகரபந்நேத்ர: ஸூர்யவர்ச்சா: ஸஹஸ்ரதா |
[9-191...193]

[இரண்டு முறை அல்லது மூன்றுமுறை ப்ராணாயாமத்தைச் செய்ய வேண்டும். ஹ்ருதயத்தில் விளக்குப்போல் ஒளிவிடும் ஸர்வேஶ்வரனை அதற்குப்பின் தியானிக்கவேண்டும். அந்த நிலையிலேயே அறிவாளி யாயிருப்பவன் தன்னை தரிக்கச்செய்யவேண்டும். இதுவே தாரணம் எனப்படுகிறது. மோஹக்கூட்டத்தையெல்லாம் போக்கடித்தபின்பு கைகளாயிரம், கால்களாயிரம், கண்களாயிரம் உடையவனாய், ஆயிரம் திருமேனிகளை உடையவனாய், ஸூர்யன்போல் ஒளிவிடுபவனான யாதொரு புருஷன் காட்சியளிக்கிறானோ அவனை இந்நிலையில் நெஞ்சில் தரிக்கவேண்டும்.] என்னும் பகுதியில் அஷ்டாங்கயோகத்தில் நெஞ்சில் தரிக்கத்தக்கவனான பரமாத்மாவை விஷ்ணுவுக்கே உரிய தான புருஷஶப்தத்தால் காட்டியதும் குறிக்கொள்ளத்தக்கது.

இனி ஸூர்யோபஸ்தானத்தை வர்ணிக்கும் பத்தாவது அத்தியாயத்திலும்,

நாஸ்தி கங்காஸமம் தீர்த்தம் ந தேவ: கேஶவாத் பர: |
காயத்ர்யாஸ்து பரம் ஜப்யம் ந பூதம் ந பவிஷ்யதி || [10-10]

[கங்கைக்கு ஸமமான தீர்த்தமில்லை. கேஶவனைக்காட்டிலும் மேலான தெய்வமில்லை. (ப்ராஹ்மணர்களால்) ஜபிக்கத்தக்க மந்த்ரங்களில் காயத்ரியைக்காட்டிலும் சிறந்தது இருந்ததுமில்லை; இருக்கப்போவது மில்லை] என்று கேஶவனைக்காட்டிலும் மேலான தெய்வமில்லை என்று உறுதியளித்திருப்பது நடுநிலையாளர்களால் நாடத்தக்கது.

இனி பதினோராம் அத்தியாயத்தில்,

யத: ப்ரவ்ருத்திர்பூ₄தாநாம் யேந ஸர்வமித₃ம் ததம்।
ஸ்வகர்மணா தமேவார்ச்ய ஸித்₃தி₄ம் ப்ராப்நோதி மாநவ: ॥
[11-46]

[எந்தப் பரமாத்மாவிடமிருந்து ஜீவராஸிகளின் ப்ரவ்ருத்தி ஏற்படுகிறதோ, எவனால் உலகனைத்தும் வியாபிக்கப்பட்டு விளங்குகிறதோ அந்தப் பரமாத்மாவை, தனது வர்ணாஸ்ரமங்களுக்குரிய கர்மங்களாலே ஆராத₄னம் செய்து மனிதன் தலைசிறந்த பேற்றைப் பெறுகிறான்] என்று ப₄க₃வத₃ாராத₄னமாக ஸ்வத₄ர்மங்களை அநுஷ்டி₂ப்பவனுக்கு மோக்ஷஸித்₃தி₄ உண்டு என்று காட்டி,

ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாம் அணீயாம்ஸமணோரபி।
ருக்மாப₄ம் ஸ்வப்நதீ₄க₃ம்யம் வித்₃யாத்தம் புருஷம் பரம்॥
ஏதமேகே வத₃ந்த்யக்₃நிம் மநுமந்யே ப்ரஜாபதிம்।
இந்த்₃ரமேகே பரே ப்ராணமபரே ப்₃ரஹ்ம ஶாஶ்வதம் ॥
[11-55, 56]

[அனைவரையும் நியமிப்பவனும், அணுவைக்காட்டிலும் அணுவாயிருப்பவனும், பொன்போல் ஒளிவிடுபவனும், கனவில் காண்பது போலே நெஞ்சிலே காணத்தக்கவனுமான பரமபுருஷனை அறிய வேண்டும். இவனை வேத₃ஶாகை₂களில் சில அக்₃னி என்று கூறுகின்றன. சில மநு என்றும், சில இந்த்₃ரன் என்றும், சில பிராணன் என்றும், மற்றும் சில ஶாஶ்வதமான ப்₃ரஹ்மம் என்றும் கூறுகின்றன.] என்னும் மநுஸ்ம்ருதியை ஒட்டிய ஶ்லோகங்களாலே அந்தப் பரமாத்மா புருஷ ஶப்₃த₃த்தினால் சொல்லப்படும் நாராயணனே என்று காட்டி, வேத₃த்தில் பரம்பொருளைக் குறிக்கும் பல ஶப்₃த₃ங்களும் இவனையே குறிக்கின்றன என்று முடிவு கட்டியதும் அறியத்தக்கது.

வித்₃யை, அவித்₃யை ஆகியவை பற்றிய நிர்ணயத்தை வர்ணிக்கும் பனிரண்டாம் அத்தியாயத்தில்,

ஸாங்க்₂யஸ்ய கர்த்தா கபில: பரமார்த்த₂: ஸ உச்யதே।
ஹிரண்யக₃ர்ப்பே₄ா யோக₃ஸ்ய வக்தா நாந்ய: புராதந: ॥
பஞ்சராத்ரஸ்ய ஸர்வஸ்ய வக்தா நாராயண: ஸ்வயம்।
அபாந்தரதமஶ்சைவ வேத₃ாசார்ய: ஸ உச்யதே॥
ப்ராசீநக₃ர்ப்ப₄ம் தம்ருஷிம் ப்ரவத₃ந்தி ஹி கேசந।
உமாபதி: பஶுபதி: ஶ்ரீகண்டே₂ா ப்₃ரஹ்மண: ஸுத: ॥

ப்ரோக்தவாநித₃மத்யுக்₃ரம் ஜ்ஞாநம் பாஶுபதம் ஹர: |
அத ஊர்த்₄வம் து யே கேசித் வேத₃ஶாஸ்த்ராண்யநேகஶ: ||
பௌ₃த்₃த₄: காபிலகுஹகௌ லோகாயதிகபி₄ந்நகா: |
வேத₃பா₃ஹ்யாஸ்தத₂ாந்யே து தாமஸா அஶிவாஸ்து தே ||
[12-5...9]

[ஸாங்க்₂ய ஶாஸ்த்ரத்தைச் செய்தவர் கபிலர். அவர் பரமார்த்த₂ கு₃ருவாக ஸாங்க்₂யர்களால் கூறப்படுகிறார். ஹிரண்ய க₃ர்ப்ப₄னுகிற பிரமன் யோக₃ஶாஸ்த்ரத்தைச் சொன்னவன். (படைக்கப்பட்டவர்களில்) பிரமனைக்காட்டிலும் பழையவன் ஒருவனுமில்லை. (அனைவரையும் படைத்தவனான) நாராயணன் தானே பாஞ்சராத்ரம் முழுவதையும் அருளினான். அவன் அஜ்ஞான இருளைப் போக்கடிப்பவனாகையாலே 'அபாந்தரதமஸ்' என்றும், வேத₃த்தைப் பிரமனுக்கு முதலில் உபதே₃ஶித்தவனாகையாலே வேத₃ாசார்யன் என்றும் கூறப்படுகிறான். சிலர் அவனைப் பண்டைக்காலத்தில் பிறந்த நாராயணரிஷியாகவும் கூறுகிறார்கள். உமையின் கணவனாய், பஶுபதியாய், (விஷம் தங்கியிருக்கையால்) அழகிய கழுத்தையுடையவனாய், பிரமனின் பிள்ளையான அரன் மிகவும் உக்₃ரமான ஸாத₄னங்களைக் கூறும் பாஶுபதம் எனப்படும் சைவாக₃மங்களைக் கூறினான். இதற்குமேல் உள்ளவையான வேத₃த்தை ஒட்டியிருக்கும் ஶாஸ்த்ரங்கள் பல உள்ளன. பௌ₃த்₃த₄ர், காபிலர், குஹகர், லோகாயதர், பி₄ந்நகர் ஆகிய இவர்களும், மற்றும் சிலரும் வேத₃த்துக்குப் புறம்பானவர்களாகவும், தமோகு₃ணம் நிறைந்தவர்களாகவும், அமங்க₃ளமானவர்களாகவும் உள்ளனர்.] என்னும் பகுதியில் பாஞ்சராத்ரத்தைக் கூறிய நாராயணனைப் பற்றிக் கூறும்போது 'ஸ்வயம்' என்று விஶேஷிக்கையாலே அவன் ஜக₃த்காரணன் என்று உணர்த்தி, அடுத்தபடி சிவனைப் பிரமனின் பிள்ளையாகக் கூறி, அவன் கூறிய பாஶுபத ஶாஸ்த்ரம் காபாலிகம் முதலான மிகவும் உக்₃ரமான ஸாத₄னங்களைக் கூறுவது என்று முழங்கியிருப்பதிலிருந்து நாராயண பரத்வமும், சிவனுடைய தாழ்வும் தெளிவாக விளங்குகிறது.

ப்ரத்யக்ஷம் சாநுமாநம் ச ஶாஸ்த்ரம் ச விவித₄ாக₃மம் |
த்ரயம் ஸுவிதி₃தம் கார்யம் த₄ர்மஶுத்₃தி₄மபீ₄ப்ஸதா ||
ய: கஶ்சித் கஸ்யசித்₃த₄ர்மோ மநுநா பரிகீர்த்தித: |
ஸ ஸர்வோऽபி₄ஹிதோ வேதே₃ ஸர்வஜ்ஞாநமயோ ஹி ஸ: ||
தஸ்மாத் வேத₃ாத்₃ருதே நாந்யத₃த்₄யேதவ்யம் த்₃விஜந்மநா |
வேத₃பா₃ஹ்யம் து யத் கிஞ்சிந்நாத்₄யேதவ்யம் கத₃ாசந ||

யா வேத₃பா₃ஹ்யா: ஸ்ம்ருதயோ யா: காஶ்சந குத்₃ருஷ்டய: ।
ஸர்வாஸ்தா நிஷ்ப₂லா: ப்ரேத்ய தமோநிஷ்ட₂ா ஹி தா:
ஸ்ம்ருதா: ॥
உத்பாத்₃யந்தே வ்யயந்தே ச யாநி தாநி து காநிசித் ।
ஏதாந்யர்வாக்காலிகாநி நிஷ்ப₂லாந்யவ்ருதாநி ச ॥
யோऽநதீ₄த்ய த்₃விஜோ வேத₃மந்யத்ர குருதே ஶ்ரமம் ।
ஸ ஜீவந்நேவ ஶூத்₃ரத்வமாஶு க₃ச்ச₂தி ஸாந்வய: ॥
மூலஸ்தம்பே₄ா ப₄வேத்₃வேத₃: ஶாக₂ாஶ்சாந்யாநி யாநி து ।
மூலே ஹ்யுபாஸிதே ஸம்யக் ப₂லம் ப₄வதி நாந்யத₂ா ॥
உச்சி₂ந்நஶாக₂ா யா: காஶ்சித் தத₂ா வேத₃ாந்தராணி ச ।
அந்தர்த₄ாநக₃தாநீஹ ஸ்ம்ருத்வா து ஸ்ம்ருதய: க்ருதா: ॥
ஏகமேவ ஹி விஜ்ஞேயம் ஶ்ருதிஸ்ம்ருதிவிசக்ஷணை: ।
தஸ்மாத் துல்ய ப₃லத்வாத்து விகல்பஶ்ச க்வசித் ஸ்ம்ருத: ॥
ஶ்ருதிஸ்து வேதே₃ா விஜ்ஞேயோ த₄ர்மஶாஸ்த்ரம் து வை
ஸ்ம்ருதி: ।
தே ஸர்வார்த்தே₂ஷ்வமீமாம்ஸ்யே தாப்₄யாம் த₄ர்மோ ஹி
நிர்ப்ப₃பெ₄ள ॥
யோऽவமந்யேத தே தூபே₄ ஹேதுஶாஸ்த்ராஶ்ரயோ த்₃விஜ: ।
ஸ வித்₃வத்₃பி₄ர்ப₃ஹி: கார்யோ நாஸ்திகோ வேத₃நிந்த₃க: ॥
ஹேதுஶாஸ்த்ராணி யோऽதீ₄தே வேத₃பா₃ஹ்யோ ப₄வேத் த்₃விஜ:।
தேந நாஸ்திக்யபா₄வேந ஸர்வம் மந்யேத ஸோऽந்யத₂ா ॥
[12-19...30]

[ஶுத்₃த₄மான த₄ர்மங்கள் பரவவேண்டுமென்று விரும்புகிறவன் ப்ரத்யக்ஷம், அநுமாநம், பல பிரிவுகளையுடைய ஶாஸ்த்ரம் என்னும் மூன்று ப்ரமாணங்களும் நன்கு அறியப்பட்டதாம்படி செய்ய வேண்டும். மனுவினுல் ஒவ்வொருவனுக்கும் சொல்லப்பட்ட த₄ர்மம் முழுவதும் வேத₃த்தில் சொல்லப்பட்டதாகும். எல்லா ஜ்ஞானங்களும் நிறைந்ததன்றே வேத₃ம். ஆகையால் இருபிறப்பாளன் வேத₃த்தைத் தவிர, வேறு எதையும் ஓதலாகாது. வேத₃த்துக்குப் புறம்பானது எதுவானுலும் அதை ஒருபோதும் கற்கலாகாது. வேத₃த்துக்குப் புறம்பான அர்த்த₂ங்களைக் கூறும் பா₃ஹ்ய ஸ்ம்ருதிகளும், வேத₃த்துக்கு அவப்பொருள் கூறும் குத்₃ருஷ்டி ஸ்ம்ருதிகளும் ஆகிய இவையெல்லாம் மறுமையில் பயனற்றவையாகும். அவை தமோகு₃ணத்தில் ஊன்றி நிற்பவையாகச் சொல்லப்படுகிற

தன்றோ. மற்றும் சில ஶாஸ்த்ரங்கள் அவ்வப்போது தோன்றி அழிகின்றன. இவை பிற்காலத்தில் எழுந்தவை. பயனற்றவை. (நல்லோர்களால்) ஏற்கப்படாதவை, எந்த அந்தணன் வேத₃த்தை ஓதாமல் புறம்பான ஶாஸ்த்ரங்களைக் கற்பதில் ஈடுபடுகிறானோ, அவன் தன் பரமபரையோடுகூட உயிருடன் இருக்கும்போதே விரைவில் ஶூத்₃ரனாகிறான். வேத₃மானது ப்ரமாணங்களனைத்துக்கும் வேர் போன்றதாகும். மற்ற ப்ரமாணங்கள் அதன் கிளைகளாகும். வேருக்குத் தண்ணீர் வார்ப்பதினாலே பழம் ஏற்படுவதுபோலே, வேத₃த்தை உபாஸிப்பதனாலேயே நற்பயன் விளையும். மற்றொன்றை உபாஸிப்பதினால் நற்பயன் விளையாது. இவ்விபூ₄தியில் மறைந்து போன சில ஶாகை₂களையும், ஸ்வர்க்க₃ம் முதலான வேறு உலகங்களில் நடையாடுமவையாய், இங்கு மறைந்தவையான வேத₃ங்களையும் நினைவு கூர்ந்து மநு முதலான ஸ்ம்ருதிகள் இயற்றப்பட்டன. ஶ்ருதி ஸ்ம்ருதிகளை அறிந்தவர்கள் இரண்டையும் ஒன்றாகவே அறுதியிடுகிறார்கள், இப்படி இரண்டும் ஸமமான ப₃லத்தை உடையவையாயிருக்கையால் சிலவிடங்களில் ஶ்ருதியாவது, ஸ்ம்ருதியாவது இரண்டில் ஒன்று ஆத₃ரிக்கத்தக்கதாயிருக்கின்றது. கேள்வியின மூலம் பரவுவதால் வேத₃மானது ஶ்ருதி எனப்படுகிறது. ஶ்ருதியை நினைவு கூர்ந்து செய்யப்பட்டதாகையால் த₄ர்மஶாஸ்த்ரம் ஸ்ம்ருதி எனப்படுகிறது. இவையிரண்டும் சொல்லும் அர்த்த₂ங்கள் அனைத்தும் ஆராயாமல் ஏற்கத்தக்கவை. இவை இரண்டிலிருந்தும் த₄ர்மமானது வெளிப்பட்டது. எந்த அந்தணன் விதண்டா₃வாத₃ ஶாஸ்த்ரங்களைக் கொண்டு இந்த ஶ்ருதிஸ்ம்ருதிகளை அவமதிக்கிறானோ, நாஸ்திகனாய், வேத₃நிந்த₃கனான அவன் அறிவாளிகளால் ப₃ஹிஷ்கரிக்கத்தக்கவன். வெறும் தர்க்கத்தை அடிப்படையாகக் கொண்ட ஶாஸ்த்ரங்களை எந்த அந்தணன் கற்கிறானோ, அவன் வேத₃த்துக்குப் புறம்பானவனாவான், இந்த நாஸ்திக பு₃த்₃தி₄யினாலே அவன் எல்லாவற்றையும் விபரீதமாகவே அறிவான்.] என்று தொடங்கி, விஶிஷ்டாத்₃வைத ஸித்₃த₄ாந்தத்தில் ஒப்புக்கொள்ளப்பட்டபடி ப்ரத்யக்ஷம், அநுமானம், ஶாஸ்த்ரம என்று ப்ரமாணங்களை மூன்றாகவும், ஶாஸ்த்ரத்தை ஶ்ருதி, ஸ்ம்ருதி என இருவகைப்பட்டதாகவும் முழங்கியிருப்பதும், ஶ்ருதிஸ்ம்ருதிகளின் பெருமையைக் கூறியிருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

**அநந்தம் சாப்ரமேயம் ச வேத₃ஶாஸ்த்ரம் ஸநாதநம் |**
**வேதி₃தவ்யம் ப்ரயத்நேந ஸர்வவர்க்க₃ப₂லப்ரத₃ம் ||**
**வேத₃மேவ ஸமப்₄யஸ்யேத் வேத₃ஶ்சக்ஷு: ஸநாதநம் |**

பூ₄தம் ப₄வ்யம் ப₄விஷ்யம் ச ஸர்வம் வேத₃ப்ரதிஷ்டி₂தம் ||
அநந்தம் சாப்ரமாணம் ச ஸர்வம் வேதா₃த் ப்ரஸித்₄யதி|
இதி ஸஞ்சிந்த்ய முநிநா வேதா₃சார்யேண தீ₄மதா ||
யாஜ்ஞவல்க்யேந விப்ராணாம் த்ரயீமார்க்க₃: ப்ரத₃ர்ஶித: ||
யேந க₃ச்ச₂ந்தி வித்₃வாம்ஸ: ஸத்பதா₂ ப்₃ரஹ்மணோऽந்திகம் ||
[12-40...43]

[அளவிடவொண்ணாததாகவும், ஆழ்ந்த பொருளுடையதாகவும், பழைமையானதாகவும். த₄ர்மார்த்த₂காமமோக்ஷங்களாகிற நாலு புருஷார்த்த₂ங்களையும் அளிப்பதாகவுமிருக்கிற வேத₃ஶாஸ்த்ரம் முயன்று அறியத்தக்கது. வேத₃த்தையே கற்கக்கடவன். வேத₃மே பழமையானதான கண்ணாகும். சென்றது, நடப்பது, நடக்கப்போவது ஆகிய அனைத்துமே வேத₃த்தில் நிலைநிற்கிறது. அளவற்றதும், ஓர் ப்ரமாணங்கொண்டு அறியவொண்ணாததுமான எல்லாம் வேத₃த்தினால் அறியப்படுகிறது. இவ்வண்ணம் அறுதியிட்ட அறிவாளியாய், வேத₃சார்யரான யாஜ்ஞவல்க்ய முனிவரால் வேத₃மார்க்க₃ம் (இந்த ஸ்ம்ருதியின் மூலம்) காட்டப்பட்டது. இந்த ஸ்ம்ருதியைக் கொண்டு அறிவாளிகள் நல்வழியின் மூலம் பரம்பொருளுக்கு அருகில் செல்கிறார்கள்.] என்னும் கடைசிப் பகுதியில் இந்த ஸ்ம்ருதியைக்கொண்டு பரம்பொருளுக்கு அருகில் செல்லலாம் என்று கூறியதிலிருந்து இந்த ஸ்ம்ருதியில் பல விடங்களில் முழங்கப்பட்ட விஷ்ணுபரத்வஜ்ஞானமே பரப்₃ரஹ்மப்ராப்திக்கு நல்வழி என்று தெளிவாக விளங்குகிறது. அத₂ர்வஶிகை₂. அத₂ர்வஶிரஸ், மைத்ராயணீயம் முதலான பல உபநிஷத்துக்களை இந்த ஸ்ம்ருதி விஷ்ணுபரமாக உபப்₃ருஂஹணம் செய்கையால், அந்த உபநிஷத்துக்களும் விஷ்ணுபரமானவையே என்பதே யோக₃யாஜ்ஞவல்க்யரின் ஸித்₃தா₄ந்தம் என்று விளங்குகிறது. இதனாலேயே,

"ஹே லோகா:! ஶ்ருணுத ப்ரஸூதிமரணவ்யாதே₄ஶ்சிகித்ஸாமிமாம்,
யோக₃ஜ்ஞாஸ்ஸமுதா₃ஹரந்தி முநயோ யாம் யாஜ்ஞவல்க்யாத₃ய:|
அந்தர்ஜ்யோதிரமேயமேகமம்ருதம் க்ருஷ்ணாக்₂யமாபீயதாம்,
தத்பீதம் பரமௌஷத₄ம் விதநுதே நிர்வாணமாத்யந்திகம் ||"
[முகுந்த₃மாலை 17]

[உலகினரே! பிறந்தும் செத்தும் நின்று இடறும் நோய்க்கு மருந்தொன்று சொல்லுகிறேன், கேளுங்கள். யோக₃மறிந்தவர்களான யாஜ்ஞவல்க்யர் முதலான முனிவர்களும் இம்மருந்தையே கூறுகின்றார்கள். உள்ளேயிருக்கும் சோதியுருவானதாய், அளத்தற்கரியதாய், ஒப்பற்றதாய், கிருஷ்ணன் என்று பெயர்பெற்ற அமு

த்தை அருந்துங்கள். மேலான மருந்தான இம்மருந்து குடிக்கப் பட்டதாகில் நித்யமான மோக்ஷத்தையே அளித்துவிடும்.] என்று முகுந்த₃மாலையில் குலசேகரரும் விஷ்ணுவே மோக்ஷமளிக்கவல்லவன் என்று யோக₃யாஜ்ஞவல்க்யர் முதலானோர் அறுதியிட்டதாக அருளினர்.

இனி, கல்கத்தா பதிப்பில் அடுத்து அச்சிடப்பட்டிருக்கும் ப்₃ரஹ்மோக்த யாஜ்ஞவல்க்ய ஸம்ஹிதையில் ப₄க₃வத்பரத்வம் நிலைநாட்டப் பட்டிருப்பதைக் காண்போம்.

## ப்ரஹ்மோக்தயாஜ்ஞவல்க்யஸம்ஹிதாநிர்ணயம்

பதின்மூன்று அத்தியாயங்கள்கொண்ட இந்த ஸ்ம்ருதியில் நித்ய நைமித்திக கர்மங்களை வர்ணிக்கும் இரண்டாமத்தியாயத்தில் பலவகையான ஊர்த்₄வபுண்ட்₃ரங்களை வர்ணித்து, மற்ற புண்ட்₃ரங்களின் தாழ்வுகளும் சொல்லப்பட்டன.

வேணுபத்ர த₃லாகாரம் வைஷ்ணவம் திலகம் ஸ்ம்ருதம்।
அர்த்த₄சந்த்₃ரம் தத₂ா ஶைவம் ஶாக்தேயம் திர்யகு₃ச்யதே ॥
பைஶாசம் பி₃ந்து₃ஸம்யுக்தம் திலகம் த₄ர்மநாஶநம் ॥
லலாடாதி₃ கபாலாந்தம் கேஶவாதீ₃ந் ந்யஸேத்₃த₄ரிம்॥[2-31, 32]

[மூங்கில் இலை போன்ற வடிவை உடையதும், அர்த்த₄சந்த்₃ர வடிவை உடையதும் வைஷ்ணவ திலகமாகக் கூறப்படுகிறது. குறுக்கே இடும் புண்ட்₃ரம் சைவதிலகம் என்றும், ஶாக்ததிலகம் என்றும் கூறப்படுகிறது.......புள்ளியோடு கூடிய திலகம் அறத்தை அழிப்பதாய் பைஶாசதிலகம் என்று கூறப்படுகிறது. நெற்றியின் அடியில் தொடங்கி கபாலம் வரையில் ஹரிஸ்வரூபமான கேசவன் முதலான பன்னிரு திருமண்காப்புக்களை இடவேண்டும்.] என்று மற்ற ஊர்த்₄வபுண்ட்₃ரங்களையும், ஶைவ ஶாக்த பைஶாச திலகங்களையும் இடவேண்டும் என்று விதி₄க்காமல் கேஶவாதி₃களாகிற பன்னிரு திருநாமங்களையே இடவேண்டும் என்று இங்கு விதி₄த்திருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

நீலோத்பலத₃லஶ்யாமம் நாபி₄மத்₄யே ப்ரதிஷ்டி₂தம்।
சதுர்ப்பு₄ஜம் மஹாத்மாநம் பூரகேநைவ சிந்தயேத்॥
கும்ப₄கேந ஹ்ருதி₃ஸ்த₂ாநம் த்₄யாயேச்ச கமலாஸநம்।
ப்₃ரஹ்மாணம் ரக்த கௌ₃ராங்க₃ம் சதுர்வக்த்ரம் பிதாமஹம்॥
ரேசகேநேஶ்வரம் வித்₃யாத் லலாடஸ்த₂ம் மஹேஶ்வரம்।
ஶுத்₃த₄ஸ்ப₂டிகஸங்காஶம் நிர்மலம் பாபநாஶநம்॥[2-60...62]

[கருநெய்தல் பூவின் இதழ்போல் கறுத்தவனாய், நான்கு திருக்கைகளை உடையவனாய், பரமாத்மாவான விஷ்ணுவைப் பூரகத்திலேயே (காற்றை உள்ளிழுக்கும்போது) நாபி₄யின் நடுவில் நிலைநிற்பவனாகச் சிந்திக்கவேண்டும். தாமரையை ஆஸனமாகக் கொண்டவனாய், சிவப்பும் வெளுப்பும் கலந்த மேனியை உடையவனாய், நாலு முக₂ங்கள் கொண்டவனாய், பிதாமஹனான பிரமனைக் கும்ப₄கத்திலே (காற்றை உள்ளே நிறுத்தும்போது) ஹ்ருத₃யத்திலிருப்பவனாகச் சிந்திக்கவேண்டும். ஶுத்₃த₄ஸ்ப₂டிகம் போல் மேனியை உடையவனாய், குற்றமற்றவனாய், பாபங்களை அழிப்பவனாய், ஈஶ்வரன் என்றும் மஹேஶ்வரன் என்றும் சொல்லப்படுபவனான ஶிவனை ரேசகத்தில் (காற்றை வெளிவிடும்போது) நெற்றியிலிருப்பவனாகச் சிந்திக்க வேண்டும்] என்னும் பகுதியில், ப்ராணாயாமத்தில் பூரக கும்ப₄க ரேசகங்களில் மும்மூர்த்திகளைச் சிந்திக்க வேண்டுமென்று விதி₄க்கும் போது விஷ்ணுவை 'மஹாத்மா' என்று குறிப்பதன் மூலம் அவன் மூவரில் முதல்வன் என்று உணர்த்தப்பட்டது.

அந்தஶ்சரதி பூ₄தேஷு கு₃ஹாயாம் விஶ்வதோமுக₂: |
த்வம் யஜ்ஞஸ்த்வம் வஷட்கார: த்வம் விஷ்ணு: பரமம் பத₃ம் ||
[2-73]

[எல்லா ஜீவராஶிகளினுள்ளும் ஹ்ருத₃யத்திலே எங்கும் பரந்தவனாய் நீ ஸஞ்சரிக்கிறாய். நீயே யஜ்ஞபுருஷன். நீயே வஷட்காரன். நீயே பரமப்ராப்யமான விஷ்ணு] என்னும் ஶ்லோகம் தைத்திரீய நாராயணவல்லியில் 31-வது அநுவாகத்தின் சூாயையிலே அமைந்திருப்பதாய், விஷ்ணுவே பரமப்ராப்யமாகவும், ஸர்வாந்தர்யாமியாகவும் இருப்பவன் என்று அறுதியிடுகிறது.

ஆக₃மோக்தேந மந்த்ரேண விதா₄நேந பூஜயேத்₃த₄ரிம் |
புஷ்பதூ₄பாதி₃நைவேத்₃யை: புஷ்பாஞ்ஜலிவிதா₄நத: ||
விஷ்ணும் ஸமர்ச்சயேத்₃யஸ்து ஸோऽபி விஷ்ணும் ஸமாவிஶேத் |
த₃த்₃யாத் புருஷஸூக்தேந ய: புஷ்பாஞ்ஜலி(ம்) நித்யஶ: |
அர்ச்சிதம் ஸ்யாஜ்ஜக₃தி₃த₃ம் தேந ஸர்வம் சராசரம் ||
[2-115, 116]

[ஆக₃மத்தில் சொல்லப்பட்ட அஷ்டாக்ஷரம், த்₃வாத₃ஶாக்ஷரம், ஷட₃க்ஷரம் முதலான மந்த்ரங்களினால் ஆக₃ம முறைப்படி ஹரியைப் பூஜிக்கவேண்டும். புஷ்பம், தூ₄பம், நைவேத்₃யம் முதலானவைகளை அளித்து, புஷ்பாஞ்ஜலிகளை ஸமர்ப்பித்து விஷ்ணுவை ஆராதி₄ப்பவனும் விஷ்ணுவை அடைவான். புருஷஸூக்தத்தைக்

கொண்டு எவனொருவன் தினமும் புஷ்பாஞ்ஜலியை ஸமர்ப்பிக்கிருனே அவனால் ஜங்க$_3$மாஜங்க$_3$மங்களடங்கிய இவ்வுலகனைத்தும் ஆராதி$_4$க்கப்பட்டதாகிறது.] என்னும் பகுதியிலிருந்து புருஷஸூக்தத்தால் சொல்லப்பட்ட பரம்பொருள் விஷ்ணுவே என்றும், அவனை ஆராதி$_4$ப்பதாலேயே அவனை அடையலாம் என்றும் விளங்குகிறது.

த்$_4$யேய: ஸத$_3$ா ஸவித்ருமண்ட$_3$லமத்$_4$யவர்த்தீ
நாராயண: ஸரஸிஜாஸந ஸந்நிவிஷ்ட: ।
கேயூரவாந் கநககுண்ட$_3$லவாந் கிரீடீ
ஹாரீ ஹிரண்மயவபு: த்$_4$ருதஶங்க$_2$சக்ர: ॥
ஏவம் க்ரமேண ஸம்பூஜ்ய தே$_3$வதே$_3$வம் ஜநார்த்த$_3$நம் ।
ஆக$_3$மோக்தவித$_4$ாநேந ய: பூஜயதி கேஶவம் ॥
சதுர்வர்க்க$_3$ப$_2$லம் ப்ராப்ய விஷ்ணுலோகம் ஸ க$_3$ச்ச$_2$தி ।
[2-124, 125]

[ஸூர்யமண்ட$_3$லத்தின் நடுவிலிருப்பவனாய், தாமரையாகிற ஆஸனத்தில் வீற்றிருப்பவனாய், தோள்வளை, பொற்குண்ட$_3$லம், கிரீடம், ஹாரம் ஆகியவற்றை உடையவனாய், பொன்மயமான திருமேனியையுடையவனாய், ஶங்க$_2$சக்ரங்களை த$_4$ரித்தவனான நாராயணன் தியானிக்கத்தக்கவன். ப்$_3$ரஹ்ம ருத்$_3$ர காரணனாகையாலே கேஶவன் எனப்படுபவனாய், தே$_3$வதே$_3$வனான ஜநார்த்த$_3$னனை இவ்வண்ணமாக ஆக$_3$மத்தில் சொன்ன முறைப்படி எவன் ஆராதி$_4$க்கிருனே அவன் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நாலு புருஷார்த்த$_2$ங்களையும் க்ரமேண அடைந்து விஷ்ணுலோகம் செல்கின்றான்.] என்னும் பகுதியில் ஸூர்யமண்ட$_3$லத்தின் நடுவிலிருப்பவன் நாராயணன் என்று உத்$_3$கே$_4$ாஷித்து, தே$_3$வதே$_3$வனான அவனை ஆராதி$_4$ப்பதால் மோக்ஷமுள்ளிட்ட எல்லாப் ப$_2$லன்களையும் அடைகிருன் என்று முழங்கியிருப்பது ப$_4$க$_3$வத்பரத்வத்தை நிலைநாட்டித்தருகிறது.

யத$_2$ாகாலம் மநுஷ்யாத்$_3$யை: பே$_4$ாக்ஷ்யமாணம் ஶரீரிபி$_4$: ।
தத்ஸர்வம் விஷ்ணுபூஜாயாம் ப்ரீயந்தாம் பித்ருதே$_3$வதா: ॥
ஆராத்ஸமீபே ஶயநாஸநே க்$_3$ருஹே தி$_3$வா ச ராத்ரௌ ச
கத$_2$ாவபி$_3$ப்$_4$ரதா ।
யத$_2$ஸ்தி கிஞ்சித் ஸுக்ருதம் மயா க்ருதம் ஜநார்த்த$_3$நஸ்தேந
க்ருதேந துஷ்யது ॥ [2-153...155]

[காலம் வழுவாமல் மனிதர்கள் முதலான ஶரீரம் எடுத்தவர்கள் ப₄க்ஷ்ய போ₄ஜ்யாதி₃களை அளிப்பதில் ஏற்படும் ப்ரீதியை விஷ்ணுவைப் பூஜிப்பதாலேயே பித்ருதே₃வதைகள் அடைகின்றனர். ஸமீபத்திலோ, தூரததிலோ, க்₃ருஹத்தில் படுத்திருக்கும்போதோ வீற்றிருக்கும்போதோ, பகலிலோ இரவிலோ, பேசிக்கொண்டிருக்கும் போதோ நான் ஏதாவது நற்செயல் செய்திருந்தேனாகில் அந்தச் செயலால் ஜநார்த்த₃னன் உகக்கட்டும்.] என்னும் பகுதியில் விஷ்ணுபூஜையினால் பித்ருக்கள் உகக்கிறார்கள் என்றும், நாம் செய்யும் நற்செயல்களெல்லாம் ஜநார்த்த₃னனுக்கு உகப்பை விளைவிப்பதன் மூலமே புண்யம் என்று பெயர் பெறுகின்றன என்றும் கூறுவதன் மூலம் விஷ்ணுபரத்வம் விளங்கவைக்கப்பட்டது. மூன்றாமத்தியாயத்தில்,

துலஸீக₃ந்த₄மாக்₄ராய பிதரஸ்துஷ்டமாநஸா: |
ப்ரயாந்தி க₃ருடா₃ரூடா₄: தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம் || [3-62]

[துளஸியின் மணத்தை முகர்ந்து மிகவுகக்கும் பித்ருக்கள் க₃ருட₃ன் மேலேறி விஷ்ணுவின் பரமபத₃த்தையடைகிறார்கள்.] என்று துளஸியால் பித்ருக்களை அர்ச்சித்தால் அவர்களுக்கு விஷ்ணுவின் பரமபத₃ம் கிடைக்கும் என்று கூறுவதன் மூலம் பரமபத₃நாத₃ன் க₃ருட₃வாஹனனான விஷ்ணுவே என்று காட்டப்பட்டது. நாலாமத்தியாயத்தில்,

ப்₃ரஹ்மார்ப்பணம் ப்₃ரஹ்மஹவி: ப்₃ரஹ்மாக்₃நௌ
ப்₃ரஹ்மணா ஹுதம் |
தேந தே ப₄க₃வாநீஶ: நித்யம் ப்ரீணாதி கேஶவ: || [4-42]

[ப்₃ரஹ்மமாயிருக்கும் ஸ்ருக் முதலான ஹோமஸாத₄னங்களால் ஸமர்ப்பிக்கப்படுவதான ப்₃ரஹ்ம ரூபமான ஹவிஸ்ஸு ப்₃ரஹ்மமாயிருக்கும் ஹோமம் செய்பவனால் ப்₃ரஹ்மமான அக்₃னியில் ஹோமம் செய்யப்பட்டது. அதனாலே அந்தப் பித்ருக்களும், அவர்களுக்கு அந்தர்யாமியாய், ஜ்ஞானாதி₃கு₃ண பரிபூர்ணனாய், ஸர்வேஶ்வரனான கேஶவனும் தினந்தோறும் உகப்படைகிறார்கள்.] என்னும் ஶ்லோகத்தில் கீ₃தையில் [4-24] சொன்னபடி பித்ருக்களைக் குறித்து ஹோமம் செய்வதால் பித்ருக்களும், அவர்களுக்கு அந்தர்யாமியான கேஶவனும் திருப்தியடைகின்றனர் என்று கூறப்பட்டது குறிக்கொள்ளத்தக்கது.

ஶாத்₃த₄மந்நம் ஹவிஷ்யாந்நம் விஷ்ணுஸாந்நித்₄யபோ₄ஜநம் |
அந்நாபா₄வே து கர்த்தவ்யம் ஶாகமூலப₂லேந வா || [4-54]

[ஶ்ராத்₃த₄த்திற்கு உபயோகப்படும் அன்னம் ஶுத்₃த₄மானதாகவும், ஹவிஸ்ஸாயிருப்பதாகவும், விஷ்ணு ஸந்நிதி₄யில் அமுது செய்விக்கப்பட்ட அன்னமாகவும் இருக்கவேண்டும். அன்னமில்லாவிடில் காய்கறி, கிழங்கு, பழம் ஆகியவற்றைக் கொண்டும் பித்ருக்களை ஆராதி₄க்கலாம்.] என்று ஶ்ராத்₃த₄த்தில் பித்ருக்களுக்குரிய அன்னம் எம்பெருமான் அமுது செய்ததாயிருக்கவேண்டும் என்று விதி₄க்கப்பட்டிருப்பது உணரத்தக்கது. நமது ஸாத்விகவிஜயத்தில் எடுத்துக்காட்டப்பட்ட பாத்₃மபுராண வசனங்களும் இதையே வலியுறுத்துகின்றன. எட்டாமத்தியாயத்தில்,

நகா₃யேத் காமகீ₃தாநி வைஷ்ணவம் கீ₃தமாசரேத் । [8-126]

[காமத்தைத் தூண்டும் பாட்டுக்களைப் பாடலாகாது; விஷ்ணுவைப் பற்றின பாட்டுக்களையே பாடவேண்டும்.] என்று விஷ்ணுவைப் பற்றியே பாடவேண்டும் என்று விதி₄க்கப்பட்டதும் காணத்தக்கது. ஒன்பதாமத்தியாயத்தில்,

ஏகாத₃ஶீதி₃நம் யத்ர நிராஹாரம் ப₄வேத்ஸதா₃ ॥
யாநி காநீஹ பாபாநி அந்நமாஶ்ரித்ய திஷ்ட₂தி ।
த்₃வாத₃ஶ்யாமுபவாஸம் து யே ப்ரகுர்வந்தி மாநவா: ॥
தே விஷ்ணும் நைவ ஜாநந்தி வ்ருத₂ா விஷ்ணுபராயணா: ॥
[9-11...13]

[ஏகாத₃ஶியன்று எப்போதும் உணவு உண்ணாமலிருக்க வேண்டும். அன்று உணவு உண்டால் எல்லாப் பாபங்களும் உண்டாகும். த்₃வாத₃ஶியில் எந்த மனிதர்கள் உபவாஸமிருக்கிறார்களோ அவர்கள் விஷ்ணுவை அறியாதவர்களே. அவர்களுடைய விஷ்ணு ப₄க்தியும் வீணானதே] என்று ஏகாத₃ஶீவ்ரதமும், த்₃வாத₃ஶி பாரணையும் வைஷ்ணவர்கள் அவசியம் கைக்கொள்ளவேண்டியவை என்று காட்டப்பட்டது. பதினோராவது அத்தியாயத்தில்,

தா₃னவிதி₄யை வர்ணிக்கும்போது, தா₃னத்தை ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்று மூவகையாகப் பிரித்து,

ஶ்ரத்₃த₄யா ஸ்ருவலிதா(?)ப₄ாவம் க்ருத்வா ஹ்ருதி₃ ஜநார்த்த₃நம் ।
காலபாத்ரம் ச ஸத்₃ப₄ாவம் கு₃ப்தம் ஸாத்விகமுச்யதே ॥ [11-6]

[ஶ்ரத்₃தை₄யோடும், கைம்மாறு கருதாத நினைவோடும் காலத்தையும் பாத்திரத்தையும் உணர்ந்து, நல்ல எண்ணத்துடன் ஜநார்த்த₃னனை நெஞ்சில் தியானித்து ரஹஸ்யமாகக் கொடுப்பது ஸாத்

விகத₃ானம் எனப்படும்.] என்று ஸாத்விகத₃ானத்தை வர்ணித்திருப்பதும் விஷ்ணுபரத்வத்தை விளங்கவைக்கிறது. அடுத்தபடியாக,

அநேந கோ₃ப்ரத₃ாநேந கோ₃விந்த₃: ப்ரீயதாம் மம। [11-20]
[இந்த கோ₃த₃ானத்தாலே கோ₃விந்த₃ன் என்னிடம் உகப்படையட்டும்] என்னுமிடத்திலும்,

ருணதே₄நும் ப்ரயச்ச₂ாமி (ப்ரத₃ாஸ்யாமி) ப்ரீயதாம்
மே ஜநார்த்த₃ந: । [11-28]
[ருணதே₄நுவை(?) நான் த₃ானம் அளிக்கிறேன். ஜநார்த்த₃னன் என்னிடம் உகப்படையட்டும்] என்னுமிடத்திலும் இது வலியுறுத்தப்படுகிறது.

ஸ்வர்ணரௌப்யம் ச கௌ₃ர்பூ₄மிரந்நம் வஸ்த்ரம் தத₂ா திலா: ।
த₃த்தைஸ்தைர்விஷ்ணுஸத₃நம் யாதி பூ₄த்வா ச விஷ்ணுவத் ॥
[11-41]
[தங்கம், வெள்ளி, பசு, பூ₄மி, அன்னம், வஸ்த்ரம், எள் முதலானவற்றை த₃ானமளிப்பதால் விஷ்ணுவைப் போலாகி, விஷ்ணுலோகத்தையடைகிருன்.] என்றும்,

ஶிவநேத்ரஸமுத்பந்நம் ரௌப்யம் பித்ருக₃ணப்ரியம் ।
தஸ்மாத் ரௌப்யப்ரத₃ாநேந ப்ரீயதாம் ருக்மிணீபதி: ॥ [11-44]
[சிவனுடைய நேத்ரத்திலிருந்து உண்டானதாகவும், பித்ருக்களுக்கு இனியதாகவுமிருப்பது வெள்ளி. ஆகையால், வெள்ளியை த₃ானமளிப்பதால் (பித்ருக்களுக்கு அந்தர்யாமியான) ருக்மிணீபதி உகப்படையட்டும்.] என்றும் த₃ானங்களால் பிரீதியடைந்து தன் லோகத்தையும் அளிப்பவன் விஷ்ணு என்று காட்டப்படுகிறது.

ஆஶௌசத்தை வர்ணிக்கும் பதின்மூன்ருவது அத்தியாயத்தில்,

ஸத்ரயாகீ₃ ச யோ நித்யம் க₃ருட₃த்₄வஜபூஜக: ।
ப்₃ரஹ்மசாரீ யதிஶ்சைவ ஸர்வே தே த்யக்தஸூதகா: ॥ [13-18]
[எவனொருவன் ஸத்ரயாக₃ம் செய்பவனும், க₃ருட₃க் கொடியோனை விஷ்ணுவை தினந்தோறும் பூஜிக்கிருனே அவனும், அப்படி விஷ்ணுவைப் பூஜிக்கும் ப்₃ரஹ்மசாரியும், ஸந்யாஸியும் தீட்டு இல்லாதவர்கள்.] என்று விஷ்ணு பூஜகர்களுக்கே தீட்டு இல்லை என்றும்,

யோ ந பூஜயதே நித்யம் விஷ்ணுவைஶ்வாநராதிதி₂ம் ।
ஸ்நாநஸந்த்₄யாவிஹீநாஶ்ச ஸத₂ா தே ஸூதகாந்விதா:॥[13-26]

[எவனொருவன் தினமும் விஷ்ணுவையும், அக்₃னியையும், அதிதி₂யையும் ஆராதி₄ப்பதில்லேயோ, எவர்கள் ஸ்நான ஸந்த்₄யாவந்த₃னங்களைச் செய்வதில்லேயோ அவர்களனைவரும் எப்போதும் தீட்டுடையவர்கள்] என்று விஷ்ணு பூஜை இல்லாதவர்களுக்கு எப்போதும் தீட்டு உண்டு என்றும் கூறியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

இதுவரையில் இந்த ஸ்ம்ருதியிலுள்ள ப₄க₃வத்பரத்வத்தைத் தெளிவாகக் காட்டும் பல வசனங்கள் விவரிக்கப்பட்டன. விநாயகர் முதலான தே₃வதைகளைப் பற்றிய ஶாந்திகளும், சில குறிப்புக்களும் இந்த ஸ்ம்ருதியில் ஆங்காங்கு காணப்பட்டபோதிலும் அவற்றில் அந்த தே₃வதைகளுக்குப் பரத்வம் எங்கும் கூறப்படவில்லை.

## வ்யாக்ரபாதஸ்ம்ருதி நிர்ணயம்

கல்கத்தா பதிப்பில் நாலாவது ப₄ாக₃த்தின் கடைசியில் அச்சிடப்பட்டுள்ள இந்த ஸ்ம்ருதியில் தே₃வதா விஷயமாகவும், புண்ட்₃ர விஷயமாகவுமுள்ள சில வசனங்களைக் காண்போம்.

த₄ாரயேதூ₃ர்த்₄வபுண்ட்₃ரம் து ஸ்நாநாந்தே ச விஶேஷத: ।
தர்ப்பணே ஹோமகாலே ச ஸாயம் ப்ராத: ஸமாஹித: ॥
திர்யக்புண்ட்₃ரம் ந குர்வீத யாவத் ஹோமம் ஸமாசரேத் ॥ [35,36]

[குளித்தபின்பு ஊர்த்₄வபுண்ட்₃ரம் த₄ரிக்கவேண்டும். சிறப்பாக, தர்ப்பணம் செய்யும்போதும், காலையிலும, மாலையிலும் ஹோமம் செய்யும்போதும் ஶாந்தியுடையவனாய் அதை த₄ரிக்கவேண்டும். திர்யக்புண்ட்₃ரத்தை த₄ரிப்பவர்களும் ஹோமம் முடியும் வரையில் அதை த₄ரிக்கக்கூடாது.] என்றும்,

ஊர்த்₄வபுண்ட்₃ரம் ஸதா₃ கார்யம் ஶ்ரௌதே ஸ்மார்த்தே ச கர்மணி । [40]

[ஶ்ருதியிலும், ஸ்ம்ருதியிலும் விதி₄க்கப்பட்ட கர்மங்களைச் செய்யும்போது ஊர்த்₄வபுண்ட்₃ரம எப்போதும் த₄ரிக்கததக்கது.] என்றும ஊர்த்₄வபுண்ட்₃ரத்தின் பெருமையும், திர்யக்புண்ட்₃ரத்தின் சிறுமையும் பறைசாற்றப்பட்டது.

ஶ்ராத்₃தே₄ யஜ்ஞே ஜபே ஹோமே வைஶ்வதே₃வே ஶிவார்ச்சநே ।
த்ரிபுண்ட்₃ரம் த₄ாரயேத்₃யஸ்து நிராஶா: பிதரோ க₃தா: ॥ [62]

[ஶ்ராத்₃த₄ம், யஜ்ஞம், ஜபம், ஹோமம், வைஶ்வதே₃வம் ஆகியவற்றைச் செய்யும்போது ஶிவபூஜையில் த₄ரித்த த்ரிபுண்ட்₃ரத்தை

அணிந்து கொண்டிருப்பவனுடைய பித்ருக்கள் ஶ்ராத்₃த₄த்தில் விருப்ப மில்லாதவர்களாய் திரும்பி விடுகிறார்கள்.] என்றும் இவ்விஷயம் வலி யுறுத்தப்பட்டது. இனறும் த்ரிபுண்ட்₃ரம் இட்டுக்கொள்ளும் ஸ்மார்த் தர்கள் அந்தப் புண்ட்₃ரமில்லாமலே ஶ்ராத்₃த₄ம முதலானவற்றைச் செய்கிறார்கள் என்னும் அநுஷ்ட₂ானமும் இதையே காட்டுகிறது.

திலகேந விநா விப்ரோ புண்யஸ்த்ரீ குங்குமம் விநா |
த்₃வாவேதௌ கு₃ர்ஹிதௌ லோகே தை₃வே பித்ர்யே ச கர்மணி||
யாக₃ம் தா₃நம் ச யோக₃ம ச ஸ்வாத்₄யாயம பித்ருதர்ப்பணம் |
ப₄ஸ்மீப₄வதி தத்ஸர்வம் ஊர்த்₄வபுண்ட்₃ரம் விநா க்ருதம் ||
[197, 198]

[தே₃வ பித்ரு கார்யங்களைச் செய்யும்போது நெற்றிக்குறியில்லாத அந்தணனும், குங்குமமில்லாத குலஸ்திரீயும் உலகில் இகழப்படு வார்கள். ஊர்த்₄வபுண்ட்₃ரமில்லாமல் செய்யப்படும் யாக₃ம், தா₃னம், யோக₃ம், அத்₄யயனம, பிதரு தர்ப்பணம் ஆகிய அனைத்தும் சாம்பலாகின்றது (வீணாகின்றது)] என்று மறுபடியும் ஊர்த்₄வபுண் ட்₃ரத்தின் பெருமை பேசப்பட்டது.

ந வ்யாஹ்ருதிஸமோ ஹோமோ ந கா₃யத்ரீஸமோ ஜப: |
நாக்₃நிஹோத்ராத் பரோ யஜ்ஞோ ந தே₃வ: கேஶவாத்பர:||[369]

[பூ₄ர் பு₄வஸ் ஸுவ: என்னும் வ்யாஹ்ருதிஹோமத்தையொத்த ஹோமமில்லை. கா₃யத்ரீஜபத்தையொத்த ஜபமில்லை. அக்₃னி ஹோத்ரத்தைக் காட்டிலும் மேலான யாக₃மில்லை. கேசவனைக் காட்டிலும் மேலான தெய்வமில்லை.] என்றும்,

அஸந்துஷ்டே ஸுக₂ம் நாஸ்தி ந த₄ர்ம: க்ஷுத்₃ரமாநஸே |
ப₄ாக்₃யஹீநே த₄நம் நாஸ்தி நாஸ்த்யபுண்யேऽச்யுதார்ச்சநம் ||
[371]

[திருப்தியில்லாதவனிடம் ஸுக₂மில்லை. தாழ்ந்த நெஞ்சையுடைய வனிடம அறமில்லை. ப₄ாக்₃யமில்லாதவனிடம் செல்வமில்லை. புண் ணியம் செய்யாதவனிடம் அச்யுதாராத₄னம் இல்லை] என்றும் ப₄க₃ வத்பரத்வமும் இந்த ஸ்ம்ருதியில் பறைசாற்றப்பட்டது.

## கபிலஸ்ம்ருதி நிர்ணயம்

கல்கத்தா பதிப்பில் கடைசியான ஐந்தாவது ப₄ாக₃த்தில் முதல் ஸ்ம்ருதியான கபிலஸ்ம்ருதியில் பரதத்துவத்தை நிர்ணயித்திருக்கிற படியைக் காட்டுவோம் இனி. இந்த ஸ்ம்ருதியானது விஷ்ணுவினு டைய அம்ஶாவதாரமான கபிலருக்கும் ஶௌநகமுனிவருக்கும் ஸம் வாத₃மாயமைந்துள்ளது. இதன் முதலத்தியாயத்தில்,

ஸாக்ஷாந் நாராயண: ஸோऽயம் பே₄த₃க்ருந்நாயமாப₄வேத்(?) |
வேதோ₃ நாராயண: ஸாக்ஷாத் தத₃ர்த்த₂ஜ்ஞ: ஸ ஏவ ஹி || [37]
[நாராயணனுகிற இந்த தே₃வன் தன்னிலும் வேறுபட்ட உலகைப் படைத்தவனாய்த் தோன்றினன். ஸாக்ஷாத் நாராயணனே வேத₃மாவான். (வேத₃த்தின் பொருளாவான்.) அதன் பொருளை அறிந்தவன் அவனேயன்றே.] என்று நாராயணனே உலகைப் படைத்தவன் என்றும், வேத₃த்தை அறிந்தவன் என்றும், வேத₃த்தின் பொருளாயிருப்பவனென்றும் முழங்கப்பட்டது.

ஶதஜந்மஸ™ தம் வித்₃யாத் ஸாக்ஷாத் தை₃வதமாக₃தம் |
வேத₃நாராயணத்₃ரோஹீ நிர்ப₄யேந ஶ்ருதிம் ஸதாம் ||
வாசா ஸம்ஸ்க்ருதயா வக்தி...வேதே₃ऽஸ்மிந்
ப்₃ரஹ்மஹா ப₄வேத் || [40,41]

[எத்தனை பிறப்பெடுத்தாலும், நேரே பரம்பொருளாய் இவ்வுலகிலும் அவதரிக்கும் அந்த நாராயணனையே அறியக்கடவன். எவனொருவன் வேத₃த்துக்கும், நாராயணனுக்கும் த்₃ரோஹம் செய்பவனாய், நல்ல ஸம்ஸ்க்ருதவாக்கினல் ப₄யமில்லாமல் வேத₃த்தைச் சொல்லுகிறானே, அவன் வேத₃த்தை ஓதியபோதிலும் ப்₃ரஹ்ம(வேத₃)ஹத்தி செய்தவனாவான்.] என்று நாராயணனுக்கு த்₃ரோஹம் செய்பவன் வேத₃ த்₃ரோஹம் செய்பவனே என்று வலியுறுத்தப்பட்டது.

அநதீ₄த்ய புரா வேத₃ம் அந்யஶாஸ்த்ர ஶ்ரமம் வ்ருதா₂ ||
கரோதி ப்₃ராஹ்மணோ மூடோ₄ நரோ கா₃ர்த்த₃ப₄ உச்யதே |
நரகா₃ர்த்த₃ப₄ஸம்ஸர்க்கே₃ ஸ்நாநம் பஞ்சாங்க₃ஸம்யுதம் ||
க்ருத்வா ஸங்கல்ப்ய தத்பஶ்சாத் ப்ராணாயாமஶதம் சரேத் |...
பூ₄தலே கலிநா ஸ்ருஷ்ட: ந குர்யாத் தேந ப₄ாஷணம் |
அஶ்ரோத்ரியைர் ப்₃ரஹ்மவித்₃யாவிஷயே கலஹம் வ்ருதா₂ ||
ந குர்யாதே₃வ ஸோऽயம் வை மஹாவ்யாமோஹகாரணம் |
குலாதி₃ந: குதர்க்காஶ்ச குத்ஸிதா: கலிரூபிண: ||
குபு₃த்₃த₄ய: குபே₃ாத்₃த₄ார: குத்ஸிதாசாரகாரகா: |
நாவலோக்யா ந ஸம்ப₄ாஷ்யா விப்ரநாமகத₄ாரகா: ||
விஶேஷேண ஶ்ராத்₃த₄தி₃நே யதி₃ த்₃ருஷ்டா ஹட₂ாத் தத₂ா |
இத₃ம் விஷ்ணுவ்யாஹ்ருதிஶ்ச ஜபித்வா ப்ரணவம் பரம் ||
ஸமுச்சார்யாऽத₂ ச ஶ்ரோத்ரம் த₃க்ஷிணம் ஸம்ஸ்ப்ருஶேத₃பி |
ஸர்வேஷாமேவ த₄ர்மாணாம் முக்₂யத₄ர்மோऽயமேவ வை ||
[45...53]

[அநாதி₃யான வேத₃த்தை ஓதாமல் எவனொருவன் வீணாக மற்ற ஶாஸ்த்ரங்களைக் கற்கிறானோ, முட்டாளான அந்த அந்தணன் கழுதைமனிதன் என்று சொல்லப்படுகிறான். கழுதை மனிதனோடு தொடர்பு ஏற்பட்டால் பஞ்சாங்க₃ ஸ்நானம் செய்து, அதற்குப்பின் ஸங்கல்பித்து, நூறு ப்ராணாயாமம் செய்யவேண்டியது........ இந்த மனிதன் இவ்வுலகில் கலியினால் படைக்கப்பட்டவன். அவனோடு பேசக்கூடாது. வேத₃ம் ஓதாதவர்களோடு ப்₃ரஹ்மவித்₃யாவிஷயத்தில் வாத₃ம் செய்வது வீணானது. பெரிய மயக்கத்திற்குக் காரணமான இத்தகைய வாத₃த்தை வேத₃மோதினவன் செய்யக்கூடாது. குலத்தை அழிப்பவர்களாய், குதர்க்கம் செய்பவர்களாய், தாழ்ந்தவர்களாய், கலியே உருவெடுத்தவர்களாய், தீய அறிவுடையவர்களாய், தீய அறிவை உபதே₃ஶிப்பவர்களாய், தாழ்ந்த ஒழுக்கத்தைப் பரப்புகிறவர்களாய், அந்தணன் என்னும் பெயரைத் தாங்குகிறவர்களான இவர்கள் காணவும் தகாதவர்கள்; பேசவும் தகாதவர்கள். குறிப்பாக, ஶ்ராத்₃த₄தி₃னத்தில் இவர்களைக் காணவோ, பேசவோ கூடாது. நிர்ப₃ந்த₄மாகக் காணப்பட்டுவிட்டார்களாகில் 'இத₃ம் விஷ்ணு:' என்னும் விஷ்ணுஸூக்த மந்த்ரத்தையும், 'பூ₄:' முதலான வ்யாஹ்ருதிகளையும் ஜபித்து, மேலான மந்த்ரமான ப்ரணவத்தை உச்சரித்து, வலது காதையும் தொடவேண்டும். எல்லா த₄ர்மங்களைக் காட்டிலும இதுவே முக்கிய த₄ர்மமாகும்.] என்று கழுதை மனிதன் முதலான தாழ்ந்தவர்களின் தொடர்பு ஏற்பட்டால் விஷ்ணுஸூக்த மந்திரத்தைப் பிராயஶ்சித்தமாக விதி₄த்திருப்பது காணத்தக்கது,

**விஶேஷேண து வித்₃வாந் ஸ: த்யக்தவைரோ ஹரிம் ஸ்மரந்**
**குர்யாதே₃வ ததோ யாதி தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம் ॥ [511]**

[சிறந்த அறிவாளியான அவன் விரோத₄மற்றவனாய், ஹரியை நினைத்துக்கொண்டு பூ₄மிதா₃னத்தைச் செய்யவேண்டும். அதனால் விஷ்ணுவின் பரமபத₃த்தையடைகிறான்.] என்று ஹரிஸ்மரணத்துடன் பூ₄மிதா₃னம் செய்பவன் விஷ்ணுவின் பரமபத₃த்தையே அடைகிறான் என்று கூறியிருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

**ஏகமேவாஞ்ஜலிம் நோ வை ப்₄ராத்ருதஜ்ஜாதயோ த₃து₃: ॥**
**அத்₃யாஸ்மஜ்ஜலதே₃ா ஜாத: வயமேதேந பூ₄ஷிதா: ।**
**க்ருதார்த்தா₂ நிதராம் ஜாதா: யுஷ்மத்துல்யா அபூ₄மஹி ॥**
**தஸ்மாத் தத்₃த₃த்தமுத₃கம் அஸ்மாகம் பரமாம்ருதம் ।**
**த₃தி₄ ஸோம க்₄ருத க்ஷீர மேதே₃ா மாது₄க ஸிந்த₄வ: ॥**

நாராயணபத₃ப்ராப்திகாரகாஶ்சாதிபாவநா:।
கும்பீ₄பாகமஹாகே₄ாரரௌரவாதி₃ நிவாரகா:॥ [716...719]
[பித்ருக்களான எங்களுக்கு எங்களுடைய சகோதரர்களும், அவர்களுடைய வம்ஶத்தைச் சேர்ந்தவர்களும் ஒரு கை ஜலமாவது கொடுக்கிறார்கள். இன்று எங்களுக்கு ஜலாஞ்ஜலி கொடுப்பவன் பிறந்திருக்கிறான். இவனால் நாங்கள் விளங்கச்செய்யப்பட்டோம்; பெரும்பேறு பெற்றோம். எங்களுடைய பித்ருக்களான உங்களுக்குச் சமமாக ஆனோம், ஆகையால் அவர்களால் கொடுக்கப்பட்ட ஜல தர்ப்பணம் எங்களுக்கு மேலான அமிர்தமாகிறது. தயிர், ஸோம ரஸம், நெய், பால், மேத₃ஸ், தேன் ஆகியவைகளாலான கடலாகவும் ஆகிறது. மிகவும் பரிஶுத்₃த₄மானவையாய், நாராயணனுடைய திருவடியை அடைவிக்கின்றவையாய், கும்பீ₄பாகம் முதலான நரகங்களுக்குச் செல்லாமல் தடுப்பவையாகவும் ஆகின்றன.] என்று பித்ருக்களுக்கு அளிக்கப்படும் ஜலதர்ப்பணம் நாராயணனின் திருவடியை அடைவிக்கிறது என்று கூறியதும் காணத்தக்கது.

யோ வா த₃ாநாநி ஸர்வாணி மஹாந்தி சரமே வய:॥
கரோதி ப₄க்த்யா ஶூத்₃ரோऽபி தத்க்ஷணாத் தேந காயத:।
விஷ்ணுலோகம் ப்ரயாத்யேவ மஹிம்நா தஸ்ய கேவலம்॥
[894, 895]

[ஶூத்₃ரனாயினும் எவனொருவன் தன் கடைசிக் காலத்தில் பெரியதான எல்லா த₃ானங்களையும் தன் உடலை வருத்திச் செய்கிறானோ அவன் மிக விரைவில் அந்த த₃ானத்தின் மஹிமையினாலேயே விஷ்ணுலோகத்தை அடைகிறான்] என்று கூறியிருப்பதும் குறிக்கொள்ளத்தக்கது.

ஸர்வயஜ்வௌக₄விநுதம் அபரம் த₃ாநமேககம்॥
கல்பவ்ருக்ஷாக்₂யகம் தே₃வதே₃வஸ்ய பரமாத்மந:।
அதிஸம்ப்ரீதிஜநகம் ஸத்₃ய: கைவல்யத₃ாயகம்॥
ஏவம் மஹாத₄ராத₃ாநம் கோ₃மேத₄ஶதஸந்நிப₄ம்॥ [923, 924]
[யாக₃ம் செய்பவர்களனைவராலும் புகழப்பட்டதாய், கற்பகவ்ருக்ஷம் என்று பெயர்பெற்ற மற்றொரு த₃ானம் தே₃வதே₃வனான பரமாத்மாவுக்கு மிகவும் உகப்பை அளிப்பது. மஹாத₄ராத₃ானமாகிய இந்த த₃ானம் நூறு பசுமேத₄யாக₃த்தை ஒத்ததாய், உடனே மோக்ஷத்தையே அளிப்பது.] என்று கல்பகவ்ருக்ஷத₃ானத்தின் ப₂லனைப் பரமாத்மா உகப்படைந்து மோக்ஷத்தையே அளிக்கிறான் என்று கூறப்பட்டது.

பித்ரூணமபி ஸர்வேஷாம் நரகோத்தாரபூர்வகம் ||
தச்சாஶ்வதப்ரஹ்மலோகாவாப்திகாரகமுச்யதே |
தாதுஸ்து ஸத்யோ விஜ்ஞாநத்வாரைவ புநரேவ வை ||
தத்ப்ரஹ்மஸாயுஜ்யநாம முக்திகாரகமேவ வை |
தஸ்மாந்நைதத்ஸமம் தாநம் தர்மோ வை தத்பர: குத: ||
..............................லக்ஷ்மீநாராயணப்ரியம் |
மஹாஸந்ததிஸம்வ்ருத்திகாரகம் கதிதம் மஹத் ||[931...934]

[ (கன்யாதானமானது) பித்ருக்கள் அனைவரையும் நரகத்திலிருந்து தூக்கி எடுத்து, நிலையான ப்ரஹ்மலோகத்தை அளிப்பதாகக் கூறப் படுகிறது. இந்த தானமளிப்பவனுக்கு விரைவில் ஜ்ஞானத்தை உண்டாக்கி, ப்ரஹ்மத்தோடு ஸாயுஜ்யம் எனப்படும் தலைசிறந்த மோக்ஷத்தை விளைக்கக்கூடியது. ஆகையால் இதற்கு ஸமானமான தானம் கிடையாது. இதற்கு மேலானது எப்படியிருக்கமுடியும்? ........இது லக்ஷ்மீநாராயணர்களுக்கு இனியது. பெரிய ஸந்ததிகளை வளரச்செய்யும் பெரிய தானம் இது. ] என்று கன்யாதானத்தின் பலனை மோக்ஷபர்யந்தமாகச் சொல்லி, அது லக்ஷ்மீநாராயணர்களுக்கு இனியது என்றும் சொல்லியிருப்பதிலிருந்து, லக்ஷ்மீநாராயணர்களின் ப்ரீதியினாலேயே மோக்ஷம் ஏற்படுகிறது என்று விளங்குகிறது.

யாசந்தம் தண்டுலாந் ப்ரஹ்மசாரிணம் யதிமேவ வா |
த்ருஷ்ட்வா விலோக்ய மார்த்தாண்டம்
புண்டரீகாக்ஷமுச்சரேத் || [950]

[அரிசியைப் பிச்சை எடுக்கும் ப்ரஹ்மசாரியையோ, சந்நியாஸியையோ பார்த்தால் (அதற்குப் பிராயஶ்சித்தமாக) ஸூர்யனைப் பார்த்து, (ஸூர்யனின் நடுவிலிருக்கும்) புண்டரீகாக்ஷநாம ஸங்கீர்த்தனத்தைச் செய்ய வேண்டியது] என்னுமிடத்தில் ஸூர்யனுக்கு நடுவிலிருக்கும் பரம்பொருள் புண்டரீகாக்ஷனே என்னும் சாந்தோக்ய உபநிஷத்வாக்யத்தை விவரித்திருப்பது காணத்தக்கது.

இவ்வண்ணமாக, நாராயணனே உலகைப் படைத்தவன், நாராயணத்ரோஹி வேதத்ரோஹியே, தானம், தர்ப்பணம் முதலான கர்மங்களை ஹரிஸ்மரணத்தோடு செய்பவன் மோக்ஷமடைவான், ஸூர்யமண்டலத்தின் நடுவிலிருப்பவன் தாமரைக்கண்ணனான அவனே என்று முழங்குவதன்மூலம் விஷ்ணுபரத்வத்தை இந்த ஸ்ம்ருதி விளங்க வைக்கிறது.

கபிலஸ்ம்ருதி நிர்ணயம் முற்றிற்று.

## வாதூ₄லஸ்ம்ருதிவிநிர்ணயம்

கல்கத்தா பதிப்பில் கபிலஸ்ம்ருதிக்கு அடுத்தபடி அச்சிடப்பட்டிருக்கும் வாதூ₄லஸ்ம்ருதியிலும் ப₄க₃வத்பரத்வமே பொலிகின்ற படியைக் காண்போம் இனி.

ப்₃ராஹ்மே முஹூர்த்தே ஸம்ப்ராப்தே த்யக்தநித்₃ர: ப்ரஸந்நதீ₄:।
ப்ரக்ஷாள்ய பாத₃ாவாசம்ய ஹரிஸங்கீர்த்தநம் சரேத் ॥ [4]

[ப்₃ராஹ்ம முஹூர்த்தத்தில் (விடியற்காலையில்) தூக்கத்தை விட்டு, தெளிந்த அறிவை உடையவனாய், கால்களை அலம்பி, ஆசமனம் செய்து, ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்யவேண்டும்.] என்று விழித்தவுடன் ஹரிநாம ஸங்கீர்த்தனம் செய்யவேண்டும் என்று விதி₄த்திருப்பதும், இதற்கு மாறாக ஹரநாமஸங்கீர்த்தனம் செய்யவேண்டும் என்று எந்த ஸ்ம்ருதியிலும் விதி₄க்காமலிருப்பதும் காணத்தக்கது.

விஷ்ணவங்க்₄ரிதோயபாநே ச நாத்₃யந்தாசமநம் ப₄வேத் ॥
விஷ்ணுபாதோ₃த்₃ப₄வம் தீர்த்த₂ம் பீத்வா ந க்ஷாலயேத்கரம் ।
க்ஷாலயேத்₃யதி₃ மோஹேந பஞ்சபாதகமாப்நுயாத் ॥ [31, 32]

[எம்பெருமானுடைய ஸ்ரீபாத₃ தீர்த்த₂த்தைப் பருகுவதற்கு முன்பும் பின்பும் ஆசமனம் செய்யக்கூடாது. அத்தீர்த்த₂த்தைப் பருகியபின் கையை அலம்பக்கூடாது. மயக்கத்தினால் அலம்பினானால் பஞ்சமஹாபாதகங்களையும் செய்தவனாவான்.] என்று எம்பெருமானுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂த்தின் மஹிமை விளக்கப்பட்டது.

உத்ஸவே வாஸுதே₃வஸ்ய ய: ஸ்நாதி ஸ்பர்ஶஶங்கயா ।
ஸ்வர்க்க₃ஸ்தா₂: பிதரஸ்தஸ்ய பதந்தி நரகே க்ஷணாத் ॥ [49]

[வாஸுதே₃வனுடைய உத்ஸவத்தில் தீண்டத் தகாதவர்களைத் தீண்டியிருப்போமோ என்று ஐயமுற்று எவனொருவன் குளிக்கிறானோ ஸ்வர்க்க₃த்திலிருக்கும் அவனுடைய பித்ருக்கள் க்ஷணநேரத்தில் நரகில் விழுவார்கள்.] என்று எம்பெருமானுடைய உத்ஸவத்தில் ஸ்பர்ஶதோ₃ஷம் இல்லை என்று காட்டப்பட்டது.

ஆவாஹயாமி த்வாம் தே₃வி ஸ்நாநார்த்த₂மிஹ ஸுந்த₃ரி ।
ஏஹி க₃ங்கே₃ நமஸ்துப்₄யம் ஸர்வதீர்த்த₂ஸமந்விதே ॥
இமம் மே க₃ங்க₃ இத்யுக்த்வா புண்யதீர்த்தா₂நி ச ஸ்மரேத்।......
ததோ நாராயணம் ஸ்ம்ருத்வா ப்ரஜபேத₃க₄மர்ஷணம்॥ [83...85]

[''அழகிய தே₃வியான க₃ங்கை₃யே! ஸ்நானத்தின் பொருட்டு உன்னை இங்கே அழைக்கிறேன் வா. எல்லாத் தீர்த்த₂ங்களையும் தன்

னுள் அடக்கியவனே! உனக்கு வணக்கம்'' என்று கூறி, 'இமம் மே க₃ங்கே₃' என்னும் மந்திரத்தையும் அநுஸந்தி₄த்து, புண்ய தீர்த்த₂ங்களையும் (ஸ்நானம் செய்யும்போது) நினைக்கவேண்டும்...... அதற்குப்பின் நாராயணனை நினைத்து, அக₄மர்ஷண ஜபம் செய்ய வேண்டும்.] என்றும்,

தத்₃விஷ்ணோரிதி மந்த்ரேண மஜ்ஜேத₃ப்ஸு புந: புந: ।
கா₃யத்ரீ வைஷ்ணவீ ஹ்யேஷா விஷ்ணோ: ஸம்ஸ்மரணாய வை ॥
ப்ரதிக்₃ருஹ்யாப்ரதிக்₃ராஹ்யம் பு₄க்த்வா சாப₄க்ஷ்யப₄க்ஷணம் ।
தத்₃விஷ்ணோரித்யபாம் மத்₄யே ஸக்ருஜ்ஜப்த்வா விஶுத்₃த்₄யதி ॥ [89, 90]

['தத்₃விஷ்ணோ: பரமம் பத₃ம்' என்னும் மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு நீரில் மறுபடியும் மறுபடியும் மூழ்கவேண்டும். இது விஷ்ணுவை நினைப்பதற்காக ஏற்பட்ட வைஷ்ணவ கா₃யத்ரியாகும். ஏற்கத்தகாததை ஏற்றாலும், புசிக்கத் தகாததைப் புசித்தாலும், 'தத்₃விஷ்ணோ:' என்னும் மந்திரத்தை நீரின் நடுவிலிருந்து கொண்டு ஒரு முறை ஜபிப்பதினால் ஶுத்₃தி₄ அடைகிறான்] என்றும் ஸ்நானத்தின்போது நாராயணனை நினைக்கவேண்டும் என்றும், அது பாபங்களைப் போக்கடிப்பது என்றும் கூறப்பட்டிருப்பது குறிக்கொள்ளத்தக்கது.

முக₂ஜாநாமூர்த்₄வபுண்ட்₃ரம் திலகம் பா₃ஹுஜந்மநாம் ।
பத₃ாகாரமூருஜாநாம் த்ரிபுண்ட்₃ரம் பாத₃ஜந்மநாம்
த்₄ருதோர்த்₄வபுண்ட்₃ர: பரமேஶிதாரம் விஷ்ணும் பரம் த்₄யாயதி யோ மஹாத்மா ।
ஸ்வரேண மந்த்ரேண ஸதா₃ ஹ்ருதி₃ஸ்தி₂தம் பராத்பரம் யந்மஹதோ மஹாந்தம் ॥
மஹோபநிஷதி₃ ப்ரோக்தமூர்த்₄வபுண்ட்₃ரம் பரம் ஶுப₄ம் ।
த்₄ருதோர்த்₄வபுண்ட்₃ர: க்ருதசக்ரதா₄ரீ நாராயணம் ஸாங்க்₂யயோகா₃தி₄க₃ம்யம் ।
ஜ்ஞாத்வா விமுச்யேத நர: ஸமஸ்தை: ஸம்ஸாரபாஶைரிஹ சைதி விஷ்ணும் ॥
அத₂ர்வஶிரஸி ப்ரோக்தமூர்த்₄வ புண்ட்₃ரவிதி₄ம் த்₃விஜா: ।
ப்ரவக்ஷ்யாமி ஹிதார்த்த₂ம் வோ ப₄வபாப ப்ரணாஶநம் ॥
ஹரே: பாத₃ாக்ருதிம் ரம்யமாத்மநஶ்ச ஹிதாய வை ।
மத்₄யே சி₂ந்த₃ந் ஊர்த்₄வபுண்ட்₃ரம் யோ தா₄ரயதி ஸர்வதா₃ ॥

ஸ பரஸ்ய ப்ரியோ நித்யம் புண்யப₄ாக் முக்திப₄ாக் ப₄வேத் ।
சதுரங்கு₃லமூர்த்₄வாக்₃ரம் த்₃வ்யங்கு₃லம் விஸ்த்ருதம் ம்ருத₃ா ॥
த்₃விஜ: புண்ட்₃ரம் ருஜூம் ஸௌம்யம் ஸாந்தராலம் து த₄ாரயேத் ।
ஊர்த்₄வக₃த்யாம் து யஸ்யேச்ச₂ா தஸ்யோர்த்₄வம் புண்ட்₃ரமுச்யதே ॥
ஊர்த்₄வக₃த்யாம் து தே₃வத்வம் ஸ ப்ராப்நோதி ந ஸம்ஶய: ।
பர்வதாக்₃ரே நதீ₃தீரே விஷ்ணுக்ஷேத்ரே விஶேஷத: ॥
ஸிந்து₄தீரே஽த₂ வல்மீகே துலஸீமூலமாஶ்ரிதே ।
ம்ருத₃ ஏதாஸ்து ஸங்க்₃ராஹ்யா வர்ஜ்யாஶ்சாந்யாஶ்ச ம்ருத்திகா: ॥
ஶ்யாமம் ஶாந்திகரம் ப்ரோக்தம் ரக்தம் வஶ்யகரம் ப₄வேத் ।
ஸ்ரீகரம் பீதமித்யாஹுர் மோக்ஷத₃ம் ஶ்வேதமுச்யதே ॥
அங்கு₃ஷ்ட₂: புஷ்டித₃: ப்ரோக்தோ மத்₄யமா புஷ்கரீ ப₄வேத் ।
அநாமிகாந்நத₃ா நித்யம் தர்ஜநீ முக்திபு₄க்தித₃ா ॥
அபி₄ஷிக்தம் து யச்சூர்ணம் விஷ்ணுபி₃ம்பே₃ து யோ நர: ।
ஹாரித்₃ரம் த₄ாரயேந்நித்யம் ஸோ஽ஶ்வமேத₄ப₂லம் லபே₄த் ॥
[100, 111]

[பரமபுருஷனின் முக₂த்திலிருந்து பிறந்த அந்தணர்கள் ஊர்த்₄வ புண்ட்₃ரத்தையும், தோள்களிலிருந்து பிறந்த க்ஷத்ரியர்கள் திலகத்தையும், துடையிலிருந்து பிறந்த வைஶ்யர்கள் ஒரு திருவடியின் ஆகாரத்தை உடைய புண்ட்₃ரத்தையும், கால்களிலிருந்து பிறந்த ஶூத்₃ரர்கள் த்ரிபுண்ட்₃ரத்தையும் த₄ரிக்கவேண்டும். "ஊர்த்₄வ புண்ட்₃ரத்தை த₄ரித்தவனாய் யாவனொரு மஹாத்மா மேலான ஈஶ்வரனாய் பரமாத்மாவான விஷ்ணுவை ஸ்வரத்தோடு கூடின மந்த்ரத்தினால் தியானிக்கிறானோ அவனுடைய நெஞ்சில் மேலானவற்றைக் காட்டிலும் மேலானதும், பெரியவற்றைக் காட்டிலும் பெரியதுமான பரம்பொருள் எப்போதும் நிலைநிற்கிறது" என்று மேலானதும் மங்க₃ளமானதுமான ஊர்த்₄வபுண்ட்₃ரம் மஹோபநிஷத்தில் விதி₄க்கப்பட்டது. "அந்தணர்களே! ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை த₄ரித்தவனாய், சக்ராங்கனம் பெற்றவனான மனிதன் கர்ம ஜ்ஞான ப₄க்தியோக₃ங்களால் அறியப்படும் நாராயணனை அறிந்து, எல்லா ஸம்ஸார பாசங்களிலிருந்தும் விடுபடுகிறான்; விஷ்ணுவையும் அடைகிறான்" என்று அத₂ர்வஶிரஸ்ஸில் கூறப்பட்டதாய், ஸம்ஸாரபாபங்களைப் போக்கடிப்பதான ஊர்த்₄வபுண்ட்₃ர விதி₄யை உங்கள் நன்மையின் பொருட்டுக் கூறுகிறேன். எம்பெருமானுடைய இரு திருவடிகளின்

ஆகாரத்தில் அமைந்ததாய், அழகியதாய், நடுவில் இடைவெளி உடையதான ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை எவனொருவன் எப்போதும் த₄ரிக்கிறானோ அவன் என்றும் பரமாத்மாவுக்கு இனியவனாய், புண்ணியம் புரிந்தவனாய் மோக்ஷமடைபவனாகிறான். நாலு அங்கு₃லம் உயரம் உடையதாய், இரண்டு அங்கு₃லம் அகலமுடையதாய், நேரானதாய், அழகியதாய், இடைவெளி உள்ளதான ஊர்த்₄வ புண்ட்₃ரத்தை இரு பிறப்பாளன (வெள்ளை) மண்ணால் த₄ரிக்க வேண்டும். எவன் உயர்க₃திக்குச் செல்லவேண்டும் என்று எண்ணுகிறானோ அவனுக்கு ஊர்த்₄வபுண்ட்₃ரம் விதி₄க்கப்படுகிறது. உயர் க₃தியாகிய பரமபத₃த்தில் அவன் அயர்வறும் அமரர்களோடு ஒருவனாக ஆவான் என்பதில் ஐயமில்லை. மலை உச்சியிலும், நதிக்கரையிலும், விசேஷமாக விஷ்ணு க்ஷேத்ரங்களிலும், கடற்கரையிலும் புற்றிலும், துளசிச்செடியின வேரோடும இடத்திலும் உள்ள மண்ணைத் திருமண்காப்பிற்கு எடுத்துக்கொள்ளவேண்டும். மற்ற மண்கள் விலக்கத்தக்கவை. கறுப்பு நிறமுள்ள மண் ஶாந்தியை அளிப்பதென்றும், சிவப்பு நிறமுள்ளது வஶ்யஶக்தியை அளிப்பது என்றும், மஞ்சள் நிறமுள்ளது செல்வத்தையளிப்பதென்றும், வெள்ளை நிறமுள்ளது மோக்ஷத்தை அளிப்பதென்றும் கூறப்படுகிறது. கட்டை விரலால் இடுவது புஷ்டியை அளிக்கிறது என்றும், நடு விரலால் இடுவது நிறைவை அளிக்கிறது என்றும், மோதிரவிரலால் இடுவது அன்னத்தை அளிப்பது என்றும், சுட்டு விரலால் இடுவது எப்போதும் போ₄க₃மோக்ஷங்களிரண்டையும் அளிப்பதென்றும் கூறப் படுகிறது. (திருமண்காப்பின் நடுவில்) விஷ்ணு பி₃ம்ப₃த்தில் அபி₄ ஷேகம் செய்விக்கப்பெற்ற ஹரித்₃ரா சூர்ணத்தை எவனொருவன் எப்போதும் த₄ரிக்கிறானோ அவன் அஶ்வமேத₄ம் செய்த பலனை அடைகிறான் ] என்று ஊர்த்₄வபுண்ட்₃ரலக்ஷணம் விரிவாக விளக்கப் பட்டதும் ஸ்ரீவைஷ்ணவர்களிடும் திருமண்காப்பின் சிறப்பை உணர்த்துகிறது.

ப்₃ரஹ்மயஜ்ஞே ஜபேத் ஸூக்தம் பௌருஷம் சிந்தயந் ஹரிம்।
ஸ ஸர்வாந் ஜபதே வேதா₃ந் ஸாங்கோ₃பாங்கா₃(ந்) விதா₄நத: ॥ [156]

[ப்₃ரஹ்மயஜ்ஞத்தின்போது ஹரியை நினைத்துக்கொண்டு புருஷ ஸூக்தத்தை ஜபிக்கவேண்டும். அப்படி ஜபிப்பவன் அங்கோ₃பாங்க₃ங்களோடு கூடிய எல்லா வேத₃ங்களையும் முறைப்படி ஜபித்தவனாகிறான்.] என்னுமிடத்தில் புருஷஸூக்தத்தினால் சொல்லப்படுபவன் எம்பெருமானே என்பது தோற்ற 'புருஷஸூக்த ஜபத்தின்போது ஹரியை நினைக்கவேண்டும்' என்று விதி₄த்திருப்பது காணத்தக்கது.

ஶ்ருதிஸ்ம்ருதீ மமைவாஜ்ஞா யஸ்தாமுல்லங்க்₄ய வர்த்ததே |
ஆஜ்ஞாச்சே₂தீ₃ மம த்₃ரோஹீ மத்₃ப₄க்தோऽபி ந வைஷ்ணவ: ||
விஷ்ணுநா து புரா கீ₃தமேவம் தத்து மயேரிதம் |
ஶ்ருதிஸ்ம்ருதீ து விப்ராணும் சக்ஷுஷீ த்₃வே விநிர்மிதே ||
காணஸ்தத்ரைகயா ஹீநோ த்₃வாப்₄யாமந்த₄: ப்ரகீர்த்தித: ||
[189...191]

["ஶ்ருதியும், ஸ்ம்ருதியும் என்னுடைய ஆணையேயாகும். எவனொருவன் இவற்றை மீறி நடக்கிறானோ அவன் என் ஆணையை மீறுகிறவனாய், எனக்கு த்₃ரோஹியாகிறானாகையாலே எனது ப₄க்தனாயினும் வைஷ்ணவனாகமாட்டான்" என்று ஆதி₃காலத்தில் விஷ்ணுவினால் சொல்லப்பட்ட இவ்வசனம் இங்கு என்னால் எடுக்கப்பட்டது. அந்தணர்களுக்கு ஶ்ருதியும், ஸ்ம்ருதியும் இரு கண்களைப்போலே படைக்கப்பட்டன. அவற்றில் ஒன்றை அறியாதவன் ஒருகண் குருடனாவான். இரண்டும் அறியாதவன் முழுக்குருடனாகச் சொல்லப்படுகிறான்] என்று ஶ்ருதி ஸ்ம்ருதிகள் விஷ்ணுவின் ஆணைகளே என்று கூறப்பட்டது குறிக்கொள்ளத்தக்கது.

மாஸிகே ச ஸபிண்டே₃ ச ப்ரதிஸம்வத்ஸரே ததா₂ |
வ்யர்த்த₂ம் ப₄வதி தச்ச்₂ராத்₃த₄ம் வாஸுதே₃வம் விநா க்ருதம் ||
ஜபஸ்தப: ஶ்ராத்₃த₄கர்ம ஸ்வாத்₄யாயாதி₃கமேவ ச |
வ்யர்த்த₂ம் ப₄வதி தத் ஸர்வம் ஊர்த்₄வபுண்ட்₃ரம் விநா
க்ருதம் || [199, 200]

[மாஸந்தோறும் செய்யும் மாஸ்யத்திலும், ஸபிண்டீ₃கரணத்திலும், ஒவ்வொரு வருஷமும் செய்யப்படும் ஶ்ராத்₃த₄த்திலும் செய்யப்படும் ஶ்ராத்₃த₄ம் வாஸுதே₃வஸம்ப₃ந்த₄ம் இல்லாமல் செய்யப்பட்டதாகில் அது வீணானதாகும். ஜபம், தபம், ஶ்ராத்₃த₄கர்மம், அத்₄யயனம் முதலானவையெல்லாம் ஊர்த்₄வபுண்ட்₃ரமில்லாமல் செய்யப்பட்டதாகில் அது வீணானதாகும்.] என்று கூறியிருக்கையால் ஊர்த்₄வபுண்ட்₃ரத்தின் சிறப்பும், வாஸுதே₃வனின் பரத்வமும் விளங்கா நிற்கிறது.

யோ மோஹாத₃த₂வாऽऽலஸ்யாத₃க்ருத்வா கேஶவார்ச்சநம் |
பு₄ங்க்தே ஸ யாதி நரகம் ஶ்வாநயோநிஷு ஜாயதே || [222]

[எவனொருவன் மயக்கத்தினாலோ, சோம்பலினாலோ கேஶவனை ஆராதி₄க்காமல் உண்கிறானோ அவன் நரகத்தையடைவான். அதற்குப் பின்பு நாய் ஜன்மத்தை அடைகிறான்.] என்று கேஶவனை தினமும் ஆராதி₄க்கவேண்டும் என்று வலியுறுத்தப்பட்டது.

இவ்வண்ணமாக, (1) விழித்தவுடன் ஹரிநாமஸங்கீர்த்தனம் செய்யவேண்டும். (2) எம்பெருமானுடைய ஸ்ரீபாத₃தீர்த்த₂மஹிமை. (3) உத்ஸவ ஸேவா மஹிமை. (4) ஸ்நானத்தின்போதும் நினைக்கத்தக்கவன் விஷ்ணுவே. (5) ஊர்த்₄வபுண்ட்₃ரப்ரப₄ாவம். (6) புருஷஸூக்தஜபத்தின்போது நினைக்கத்தக்கவன் ஹரியே. (7)ஶ்ருதிஸ்ம்ருதிகள் விஷ்ணுவின் ஆஜ்ஞைகளே. (8)ஊர்த்₄வபுண்ட்₃ரமும், வாஸுதே₃வஸம்ப₃ந்த₄முமில்லாமல் செய்யப்படும் ஶ்ராத்₃த₄ம் பயனற்றது. (9) கேஶவனை தினந்தோறும் ஆராதி₄க்காதவன் மிகத் தாழ்ந்தவன் என்னும் விஷயங்களை முழங்குகையால் இந்த வாதூ₄லஸ்ம்ருதியிலிருந்தும் விஷ்ணுபரத்வம் கல்வெட்டாகத் தேறிநிற்கிறது என்பது தெளிவாகிறது.

வாதூ₄லஸ்ம்ருதிவிநிர்ணயம் முற்றிற்று.

## விஶ்வாமித்ரஸ்ம்ருதி நிர்ணயம்

கல்கத்தா பதிப்பில் வாதூ₄லஸ்ம்ருதிக்கு அடுத்தபடி அச்சிடப்பட்டுள்ள விஶ்வாமித்ர ஸ்ம்ருதியில் ஏழு அத்தியாயங்கள் உள்ளன. அதில் நித்யநைமித்திக கர்மங்களை வர்ணிக்கும் முதல் அத்தியாயத்தில்

ஸமுத்₃ரவஸநே தே₃வி பர்வதஸ்தந மண்ட₃லே।
விஷ்ணுபத்னி நமஸ்துப்₄யம் பாத₃ஸ்பர்ஶம் க்ஷமஸ்வ மே॥[1-45]

[கடலை வஸ்த்ரமாகக் கொண்டவளாய், மலைகளை ஸ்தனங்களாகக் கொண்டவளாய், விஷ்ணு பத்னியான பூ₄தே₃வியே! உனக்கு வணக்கம். என்னுடைய கால்கள் உன்மேல் படுவதைப் பொறுத்துக் கொள்வாயாக.] என்று பூ₄தே₃வியை விஷ்ணுபத்னி என்று குறிப்பதன்மூலம் விஷ்ணுவின் பரத்வம் விளங்கவைக்கப்படுகிறது. ஆசமன விதி₄யை வர்ணிக்கும் இரண்டாமத்தியாயத்தில்

விந்யஸேத் கேஶவாதீ₃நி பௌராணுசமநம் ப₄வேத்। [2-3]

[கேஶவன் முதலான நாமங்களைக்கொண்டு அந்தந்த அங்க₃ங்களைத் தொடுவது புராணங்களில் சொல்லப்பட்ட ஆசமனமாகும்.] என்று முதலில் ஆசமனம் சுருக்கமாகக் கூறப்பட்டது.

கேஶவாதி₃த்ரயேணுபோ மாஷத₃க்₄நம் பிபே₃த் க்ரமாத்॥
கோ₃விந்த₃மக்₂ரதோ ந்யஸ்ய ஸௌஷும்நே விஷ்ணுமேவ ச।

மது₄ஸூதநமாதி₃த்யே ஸூத₄ாம்ஶௌ ச த்ரிவிக்ரமம் ||
அக்₃ரதோ வாமநம் சைவ ஶ்ரீத₄ரம் ஹஸ்தயோஸ் தத₂ா|
ஹ்ருஷீகேஶம் பத்₃மநாப₄ம் உப₄யோ: பாத₃யோர்ந்யஸேத் ||
தா₃மோத₃ரம் ப்₃ரஹ்மரந்த்₄ரே நாம ஸங்கர்ஷணஸ்ய ச |
ந்யஸேத்₃வா நாஸிகாமத்₄யே சாஸ்யாந்தே வா விநிர்தி₃ஶேத் ||
விந்யஸேத்₃த₃க்ஷநாஸாயாம் வாஸுதே₃வம் ததை₂வ ச|
ப்ரத்₃யும்நம் விந்யஸேத்₃வாமே அநிருத்₃த₄ம் து த₃க்ஷிணே ||
புருஷோத்தமம் வாமநேத்ரே த₃க்ஷகர்ணே ஹ்யதோ₄க்ஷஜம் |
நாரஸிம்ஹம் வாமகர்ணே நாப₄ாவச்யுதமேவ வா ||
ஜநார்த்த₃நம் ஹ்ருதி₃ ந்யஸ்ய ப்₃ரஹ்மரந்த்₄ரே ஹ்யுபேந்த்₃ரகம்|
விந்யஸேச்ச ஹரிம் க்ருஷ்ணம் பு₄ஜே த₃க்ஷே ச வாமகே ||
பௌராணம் ஸ்மார்த்தமித்யேதத் க்ஷத்ரியாணும் விதீ₄யதே ||
[2-12...19]

[கேஶவன், நாராயணன், மாத₄வன் என்னும் மூன்று நாமங்களைக் கொண்டு மாஷரேகை₂ முழுகுமளவுள்ள தீர்த்த₂த்தைக் கையிலெடுத்து முறையே பருகவேண்டும். கோ₃விந்த₃னைத் தனக்கு முன்னாலும், விஷ்ணுவை ஸூஷும்நா நாடியிலும், மது₄ஸூத₃னனை ஆதி₃த்ய னிலும், த்ரிவிக்ரமனைச் சந்த்₃ரனிலும், வாமனனை முன்புறத்திலும், ஶ்ரீத₄ரனை இரு கைகளிலும், ஹ்ருஷீகேஶனையும் பத்மநாப₄னையும் இரு கால்களிலும், தா₃மோத₃ரனை ப்₃ரஹ்மரந்த்₄ரத்திலும் ந்யாஸம் செய்யவேண்டும். ஸங்கர்ஷண நாமத்தை மூக்கின் நடுவிலோ முடிவிலேயோ ந்யாஸம் செய்யவேண்டும். வலது மூக்கில் வாஸுதே₃வனையும், இடது மூக்கில் ப்ரத்₃யும்னனையும், வலது கண்ணில் அநிருத்₃த₄னையும், இடது கண்ணில் புருஷோத்தமனையும், வலது காதில் அதோ₄க்ஷஜனையும், இடது காதில் நரசிம்மனையும், நாபி₄யில் அச்யுதனையும், ஜநார்த்த₃னனை ஹ்ருத₃யத்திலும், ப்₃ரஹ்ம ரந்த்₄ரத்தில் உபேந்த்₃ரனையும், ஹரியையும், கிருஷ்ணனையும் முறையே வலது இடது பு₄ஜங்களிலும் நியாஸம் செய்யவேண்டும். புராணங்களிலும், ஸ்ம்ருதிகளிலும் இந்த ஆசமனம் க்ஷத்ரியர்களுக்கு விதி₄க்கப்பட்டது.] என்று முற்கூறிய புராண ஆசமனம் விளக்கப் பட்டது. க்ஷத்ரியர்களுக்குரிய இந்த ஆசமனத்திலும் விஷ்ணுநாமங் களே நியாஸம் செய்யப்படுவது காணத்தக்கது. சிவாதி₃நாமங்களைக் கொண்டு ஸ்ம்ருதிகளில் எங்குமே ஆசமனம் விதி₄க்கப்படாததும் குறிக்கொள்ளத்தக்கது.

ஶௌத்₃த₄ாசமாநாம் த்ரிவித₄ம் ப்ரகாரம் குர்யாத்த்ரி-
ஸந்த்₄யாஸு ஸமஸ்தகர்மஸு।
ஆரம்ப₄ணம் கேஶவநாமயுக்தம் ஶ்ருதிஸ்ம்ருதிப்₄யாம்
த்₃விவித₄ம் ததே₃ாச்யதே ॥ [2-21]

[எல்லா வைதி₃ககர்மங்களிலும், மூன்று ஸந்த்₄யாகாலங்களிலும் [(1) நீர் பருகுவது, (2) அங்க₃ந்யாஸம் செய்வது, (3) நாமங்களை உச்சரிப்பது என்று] மூன்று வகைப்பட்ட ஶௌத்₃த₄மான ஆசமனத்தைச் செய்யவேண்டும். ஆசமனத்தின் தொடக்கம் கேஶவ நாமத்தோடு கூடியது. ஶ்ருத்யாசமனம் என்றும், ஸ்ம்ருத்யாசமனம் என்றும் ஆசமனம் இரண்டு வகையாகக் கூறப்படுகிறது.] என்றும்,

புண்யஸ்த்ரீணும் நமோऽந்தம் ஸ்யாத் விஶேஷாத்
கேஶவாதி₃ஷு। [2-26]

[ப₄க₃வந்நாமங்களை, குறிப்பாகக் கேஶவாதி₃ நாமங்களைப் புண்ய ஸ்த்ரீகள் உச்சரிக்கும்போது கடைசியில் நம:பத₃த்தையும் சேர்த்து உச்சரிக்கவேண்டும்.] என்றும்,

கராக்₃ரபஞ்சாங்கு₃லி பூர்ணமுத்₃ரா ஸகேஶவாத்₃யை-
ரநுவர்த்தநீயா। [2-29]

[கையிலுள்ள ஐந்து விரல்களாலும் அங்க₃ந்யாஸம் செய்துகொண்டு கேஶவாதி₃ நாமங்களோடு ஆசமனம் செய்யவேண்டும்.] என்றும் ஆசமனத்தின்போது கேஶவாதி₃ நாமங்கள் விதி₄க்கப்பட்டன.

ஶ்ருத்யாசமநமேபி₄ர்யோ ஹரே: குர்யாத் த்₃விஜோத்தம: ।
ஸ ஸர்வபாபமுக்த: ஸ்யாத் ஸ்ப்ருஷ்டாஸ்ப்ருஷ்டிர் ந
வித்₃யதே ॥ [2-38]

[இந்த வேத₃மந்த்ரோச்சாரணங்களையும், அங்க₃ந்யாஸ கரந்யாஸங்களையும் செய்து, எந்த அந்தணர் தலைவன் ஹரியைக்குறித்து ஶ்ருத்யாசமனத்தைச் செய்கிருனே, அவன் எல்லாப் பாபங்களிலிருந்தும் நீங்கியவனுகிருன். அவனுக்கு ஸ்பர்ஶதோ₃ஷம் கிடையாது.] என்று ஶ்ருத்யாசமனமும் ஹரியைக்குறித்ததே என்று காட்டப்பட்டது. கா₃யத்ரியின் பெருமையைப் பேசும் ஐந்தாம் அத்தியாயத்தில்,

நாராயணம் மூலமந்த்ரம் ஸஞ்ஜ்ஞாமந்த்ரம் ப₄வேத் ஸதா₃।
ஓமாபோ ஜ்யோதிரித்யேதத் பத₃மந்த்ரமிதீரிதம் ॥ [5-11]

[நாராயண நாமத்தைக் கொண்ட மூலமந்த்ரமாகிற திருவஷ்டாக்ஷர மந்த்ரம் ஸம்ஜ்ஞா மந்த்ரம் எனப்படுவதாய் எப்போதும் சொல்லத்தக்கது. 'ஓமாபோ ஜ்யோதி:' என்பது பத₃மந்த்ரம் என்று கூறப்படுகிறது.] என்று திருமந்த்ரத்தின் பெருமை பேசப்பட்டது.

ஶ்ரீஸூர்யநாராயணப்ரீத்யர்த்த₂ம் அர்க்₄யப்ரதா₃நம் கரிஷ்யே இதி ஸங்கல்ப்ய அர்க்₄யப்ரதா₃நமந்த்ரஸ்ய ஸவித்ரு ப₄க₃வாந் ருஷி: அநுஷ்டுப்ச₂ந்த₃:, ஶ்ரீஸூர்யநாராயணோ தே₃வதா । [5-41]

['ஶ்ரீஸூர்ய நாராயணனின் ப்ரீதியின் பொருட்டு அர்க்₄யப்ரதா₃னம் செய்கிறேன்' என்று ஸங்கல்பித்து, அர்க்₄யப்ரதா₃ன மந்த்ரத்துக்கு ஸூர்யப₄க₃வான் ரிஷி, அநுஷ்டுப் ச₂ந்த₃ஸ், ஶ்ரீஸூர்யநாராயணன் தே₃வதை என்று அநுஸந்தி₄க்கவேண்டும்.] என்று ஸூர்யனுக்கு அந்தர்யாமியான ஸூர்யநாராயணனே அர்க்₄யப்ரதா₃னத்தால் உகப்பவன் என்று காட்டப்பட்டது. இருவித₄மான ஜபத்தைக் கூறும் ஆறும் அத்தியாயத்தில்,

ப்ருதி₂வி(த்₂வி)! த்வயா த்₄ருதா லோகா தே₃வி! த்வம் விஷ்ணுநா த்₄ருதா ।
த்வம் ச தா₄ரய மாம் தே₃வி! பவித்ரம் குரு சாஸநம் ॥ [6-5]

[பூ₄மிதே₃வியே! உன்னால் உலகங்கள் த₄ரிக்கப்படுகின்றன. நீ விஷ்ணுவால் த₄ரிக்கப்படுகின்றாய். நீ என்னை த₄ரிப்பாயாக. என்னுடைய ஆஸனத்தைப் பரிஶுத்₃த₄ப்படுத்துவாயாக.] என்று எல்லாவுலகங்களையும் த₄ரிக்கும் பூ₄மிதே₃வி விஷ்ணுவினால் த₄ரிக்கப்படுபவள் என்று முழங்கப்பட்டது. இப்படி விஷ்ணுபரத்வம் செய்திருக்கும் விஶ்வாமித்ர ஸ்ம்ருதியிலும் வேறு எந்த தெய்வத்துக்கும் பரத்வம் கூறப்படவில்லை. அடுத்ததான லோஹிதஸ்ம்ருதியில் எந்த தெய்வத்துக்கும் பரத்வம் கூறும் வசனங்கள் எதுவுமில்லை. ஆகையால் அதற்கடுத்த நாராயணஸ்ம்ருதியைக் காண்போம்.

விஶ்வாமித்ரஸ்ம்ருதிநிர்ணயம் முற்றிற்று.

## நாராயணஸ்ம்ருதிநிர்ணயம்

இந்த நாராயணஸ்ம்ருதியிலும் முதல் எட்டு அத்தியாயங்களில் எந்த தேவதைக்கும் பரத்வத்தைக் காட்டும் எதுவுமில்லை. கடைசியான ஒன்பதாவது அத்தியாயத்தின் கடைசியில் கலியில் விலக்கப்பட்ட காரியத்தைச் செய்து த₄ரித்₃ரனாய் வாழும் மனிதனுக்குப் பிராயஶ்சித்தத்தை வர்ணிக்கும்போது,

பலாஷ்டகப்ரமாணேந தண்டு₃லேந ஹவி: பசேத் |
கோ₃மூத்ரே விநிவேத்₃யைவ ஹரயே பரமாத்மநே ||
ததே₃வ பு₄க்த்வா ஸாயாஹ்நே ஸ்வபேத்₃வை த₃க்ஷிணாஶிரா: |
ஏவம் ஷண்மாஸக்ருத் விப்ர: பூர்வவத் ஶுத்₃தி₄மாப்நுயாத் ||
ததோ க₃ங்கா₃ஜலே ஸ்நாத்வா ஸேதுத₃ர்ஶநமேவ வா |
க்ருத்வா தத: புந: கர்ம க்ருத்வா ஶுத்₃தி₄மவாப்நுயாத் ||
ஸ்வகர்மபரகர்மார்ஹ: ப₄வேதே₃வ ந ஸம்ஶய: || [9-9...12]

[எட்டு பலம் அளவுள்ள அரிசியைக்கொண்டு ஹவிஸ்ஸை கோ₃மூத்ரத்தில் சமைக்கவேண்டும். அதைப் பரமாத்மாவான ஹரிக்கு நிவேத₃னம் செய்து, அதையே மாலையில் பு₄ஜித்து, (இரவில்) தெற்கே தலையை வைத்துத் தூங்கவேண்டும். இப்படி ஆறுமாதம் பிராயஶ்சித்தத்தை அநுஷ்டி₂க்கும் அந்தணன் முன்போலே பரிஶுத்₃த₄னுவான். அதற்குப்பின் க₃ங்கா₃ ஜலத்தில் நீராடியோ, சேதுவைக் கண்டோ அங்கு செய்யவேண்டிய கிரியைகளைச் செய்து, அதற்குப்பின் பரிஶுத்₃தி₄ அடைவான். தன் கர்மங்களைச் செய்வதற்கும், பிறர்க்குக் கர்மங்களைச் செய்விப்பதற்கும் தகுதியுடையவனுவான். இதில் ஐயமில்லை.] என்று ஹரியைப் பரமாத்மா என்று குறித்திருப்பதிலிருந்து, இந்த ஸ்ம்ருதியும் விஷ்ணு பரத்வத்தையே நிலைநாட்டுகிறது என்று விளங்குகிறது.

நாராயணஸ்ம்ருதிநிர்ணயம் முற்றிற்று.

இனி, கல்கத்தாபதிப்பில் அடுத்தபடி அச்சிடப்பட்டிருக்கும் ஶாண்டி₃ல்யஸ்ம்ருதி ஏற்கனவே ஆராயப்பட்டுவிட்டதாகையால், அதற்கடுத்தபடியுள்ள கண்வஸ்ம்ருதியைக் காண்போம்.

## கண்வஸ்ம்ருதிநிர்ணயம்

இந்த ஸ்ம்ருதியில் த₄ர்மஸாரத்தை வர்ணிக்கும் முதலத்தியாயத்தில்,

யத்கிஞ்சித்₃வா க்ருதம் தேந பரமேஶ்வரதுஷ்டயே |
தத₃க்ஷயமமோக₄ம் ஸ்யாத் ப்₃ரஹ்மஜ்ஞாநைகஸாத₄கம் ||
யதா₂ஶாஸ்த்ரக்ருதம் ச ஸ்யாத் அஶாஸ்த்ரக்ருதமப்யலம் |
பரமேஶ்வரதுஷ்ட்யர்த்த₂க்ருதம் தஸ்மாத் ததா₂ சரேத் ||......
பரமேஶ்வர ஶப்₃த₃ம் ய: கர்மாதி₃ஷு ஸமாஹிதை: |
ப்ரவதே₃த்₃வைதி₃கை: ஸித்₃தி₄: ப்₃ரஹ்மஶப்₃தே₃ாऽத₂வா ஸதா₃ ||
ஶ்ரீஶப்₃த₃பூர்வகோ நித்யம் தாவந்மாத்ரேண ஸா க்ரியா ||
[11...16]

[அவனால் பரமேஶ்வரனின் உகப்பின் பொருட்டு எந்தக் காரியமானது செய்யப்பட்டதோ அது அழியாததாகவும், பெரும்பயனை விளைப்பதாகவும ப்₃ரஹ்ம ஜ்ஞானத்திற்கு முக்கிய உபாயமாகவும் ஆகிறது. ஶாஸ்த்ரமுறைப்படி செய்யப்படாவிட்டாலும், பரமேஶ்வரனுடைய உகப்பிற்காகச் செய்யப்பட்டது ஶாஸ்த்ர முறைப்படி செய்யப்பட்டதாகவே ஆகிறது. ஆகையால் கர்மங்களை அவ்வண்ணமே அநுஷ்டி₂க்கவேண்டும்..............எவன் பரமேஶ்வர ஶப்₃த₃த்தைக் கர்மம் முதலானவற்றில் பழக்கமுடைய வைதி₃கர்களைக் கொண்டு உச்சரிக்கச் செய்கிறானோ அவனுக்கு ஸித்₃தி₄ ஏற்படுகிறது. ஸ்ரீஶப்₃த₃த்தை முன்னிட்ட ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தையாவது பரமேஶ்வர ஶப்₃த₃ ஸ்தா₂னத்தில் எப்போதும் பிரயோகிக்கலாம். இப்படிச் செய்தாலும் அக்கர்மம் பயனுடையதாகிறது.] என்று பரமாத்மாவைப் பரமேஶ்வர ஶப்₃த₃த்தாலும், ப்₃ரஹ்ம ஶப்₃த₃த்தாலும் குறித்தார் கண்வர். இந்தப் பரமேஶ்வரன் யாரென்பதைப் பிற்பகுதிகளில் எப்படி நிர்ணயித்திருக்கிறார் என்பதைக் காண்போம்.

ப்₃ரஹ்ம வை சதுர்ஹோதார: தேப்₄யோ யஜ்ஞோऽபி₄நிர்மித: |
ஸ ஹி நாராயணோ ப்₃ரஹ்ம புருஷரூபேண தத்ர ச ||
வர்த்ததே சாநுயாகேந சோத்தரேண ஜக₃ந்மய: |
ஸ்ருஷ்டிஸ்தி₂திவிநாஶாநாம் கர்த்தா காரணகாரணம் ||
கரணஸ்யாபி கரணம் ஜக₃ஜ்ஜந்மாதி₃காரணம் |
ஸத்யஜ்ஞாநாநந்த₃மயம் ஸத₃ஸச்சிந்மயாத்மகம் ||
தத்₃ரூபேணாவதீர்ணம் தத் தஸ்யாத்₄யேதா தத₃ாத்மக: |
ப்₃ரஹ்மவாத₃யுச்யதே ஸத்₃பி₄: ஸ ஹி வையர்ந நிஷித்₄யதே ||
ஸ ஸர்வவேத₃யஜ்ஞௌக₄ஸத்கர்மவ்ரதக்ருந்மத: |
ஸ உ வை வைதி₃க ஶ்ரேஷ்ட₂: கர்மிஷ்ட₂: கர்மடே₂ாऽஶட₂: ||
ஸர்வாசார்ய: ஸர்வப₃ந்து₄: ஸம்ப்ரதா₃ய ப்ரவர்த்தக: |
ஸர்வாசாரஸ்தா₂பகஶ்ச ஸர்வலோகவிலக்ஷண: ||
ஸூக்ஷ்மத₄ர்மார்த்த₂தத்த்வஜ்ஞ: ஸோऽயம் கில விஶேஷவித் |
வேத₃மார்க்க₃ாநுஸாரீ ச பரம் வேதே₃ாக்தமேவ ஹி ||
கரோதி கர்ம நாந்யத்து கௌ₃ணமுக்₂யே தத₂ா ப₂லம் |
தே₃ஶகாலமஹாபாத்ரத்₃ரவ்யயோக₃ாதி₃கேக்ஷணே ||
முக்₂யம் தத்ஸமநுஷ்ட₂ாநம் குருதே கில ஸந்ததம் |
ஸத்கர்மபி₄: ஸதா₃ பூஜாம் கரோதி குலஸம்ப₄வ: ||

ஸபத்ரபுஷ்பாதி₃க்ருதா தே₃வஸ்ய பரமாத்மந: ।
ப₄வேந்ந து ஸதா₃ பூஜா கிந்து ஸா கர்மபி₄: க்ருதை: ॥
யதா₂ஶாஸ்த்ராதி₃விஹிதை: அலப்₄யைர் மஹதீதி ஸா ।
ப்ரோச்யதே தத்₃விஶேஷஜ்ஞை: ஸா ஹி ஸர்வோத்தமோத்-
ஸா ஸர்வஸாத₄ாரணதோ ந கர்த்தும் ஶக்யதே கில । [தமா ॥
ஸாத₄ாரணாஶ்ச புருஷா: தாத்₃ருஶம் தூ₃ஷயந்த்யபி ॥
தாம் க்ரியாம் தத்ஸ்வரூபம் ச தந்மந்த்ராந் வேத₃வர்ஜிதாந் ।
மோசயந்த: ஸ்வகாம் பூஜாம் அதி₄கத்வேந கேவலம் ॥
வர்ணயந்த: பரம் ப₄ாவம் அஜாநந்த: ஶ்ருதே: பத₃ம் ।
வ்யத்யாஸயந்தி ஸந்மார்க்க₃ாந் அமார்க்க₃ாந் வர்ணயந்த்யபி ॥
ததீ₃யமார்க்க₃ப₄ாக் யோ வை வைதி₃கோऽபி ந வைதி₃க: ।
அக₂ண்ட₃வைதி₃கோ மார்க்க₃: ஸர்வேஷாமேவ கர்மணாம் ॥
ஆரம்ப₄காலே ஸங்கல்பே பரமேஶ்வரதுஷ்டயே ।
கரிஷ்யாமீதி ஸங்கல்ப்ய தத்தத்கர்ம யதா₂விதி₄ ॥
ஸமநுஷ்டா₂ய தத்பஶ்சாத் தத்தத் கர்மாந்த ஏவ ஹி ।
ப்ரீணாது ப₄க₃வாந் தே₃வ: பரமாத்மா ஸதா₃ ஹரி: ॥
அநேந கர்மணா சேதி த்யாக₃ம் குர்யாத் ஜலேந வை ।
ஏதச்சக்ரத₄ரஸ்யாஸ்ய பூஜநம் மஹதே₃ககம் ॥
ஸத்₃பி₄ருக்தம் வித₄ாநேந பரமைர் வைதி₃கோத்தமை: ।
பூஜநம் தே₃வதே₃வஸ்ய பரம் கர்மபி₄ரேவ வை ॥
கதி₂தம் தத் ஸமாஸேந தாநி கர்மாணி ஸாம்ப்ரதம் ।
ப்ரவக்ஷ்யாமி க்ரமேணைவ ப்₃ரஹ்மஜ்ஞாநைகஸாத₄கம் ॥
ஔபாஸநம் வைஶ்வதே₃வம் பார்வணம் ச தத₂ாஷ்டகா: ।
மாஸிஶ்ராத்₃த₄ம் ஸர்ப்பப₃லி: ஈஶாநப₃லிரேவ ச ॥
அக்₃நிஷ்டோமோऽதிபூர்வஶ்ச உக்த்₂ய: ஷோட₃ஶஸஞ்ஜ்ஞிகா: ।
அதிராத்ராப்தோர்யாமஶ்ச வாஜபேயஶ்ச ஸப்த வை ॥......

[394-415]

['' ப்₃ரஹ்ம வை சதுர்ஹோதார: । சதுர்ஹோத்ருப்₄யோதி₄ யஜ்ஞோ நிர்மித: ॥'' [காட₂கம் 3-5-22] [வேத₃மந்த்ரங்கள் சதுர்ஹோதாக்கள் என்று சொல்லப்படுகின்றன. அவற்றுக்காகவே யஜ்ஞம் ஏற்படுத்தப் பட்டிருக்கிறது] என்று வேத₃ம் ஓதுகிறது. அந்த யஜ்ஞமே புருஷ ரூபமாக வடிவெடுத்திருப்பவன் நாராயணனுகிற ப்₃ரஹ்மம். புருஷ

ஸூக்தத்தின் உத்தராநுவாகத்தில்—உலகுக்கு அந்தர்யாமியாகவும் படைத்தளித்தழிக்கும் கர்த்தாவாகவும், பிரமன் முதலான காரண பூ₄தர்களுக்கெல்லாம் காரணமாகவும், உபாயங்களுக்கெல்லாம் உபாயமாகவும், உலகிற்கு உபாத₃ானம் முதலான எல்லாக் காரண மாகவும், ஸத்யஜ்ஞாநாநந்த₃மயமாகவும், ஸத் எனப்படும் ஸ்தூ₂ல வுலகிற்கும், அஸத் எனப்படும் ஸூக்ஷ்மவுலகிற்கும், சேதநர்களுக் கும் அந்தர்யாமியாகவும், வேத₃ரூபமாக அவதரித்திருப்பவனாக வுமுள்ள பரம்பொருள் அவனே. வேத₃த்தை ஓதுகின்ற ப்₃ரஹ்மவாதி₃ ப்₃ரஹ்மத்தை இல்லைசெய்யாத நல்லோர்களால் அந்தப் பரம்பொருளாகவே கூறப்படுகிறான். அவனே எல்லா வேத₃ங்களிலும் காணப்படும் யஜ்ஞங்கள், நற்கருமங்கள், விரதங்கள் ஆகியவற்றைச் செய்தவனாக எண்ணப்படுகிறான். அவனே வைதி₃கர் தலைவன். கர்மம் செய்பவர்களில் சிறந்தவன், கர்மங்களை அறிந்த வர்களில் தலையானவன். தீமையில்லாதவன், அனைவர்க்கும் ஆசாரி யன். அனைவர்க்கும் உறவினன். வைதி₃க ஸம்ப்ரதா₃யத்தை நடத்துமவன். எல்லா ஒழுக்கங்களையும் நிலைநிறுத்துபவன். உயர்ந் தோர் அனைவரிலும் உயர்ந்தவன். அறங்களைப் பற்றிய நுண் ணறிவுடையவன். இவனே சிறந்ததையெல்லாம் அறிபவன். வேத₃மார்க்க₃த்தின்படி நடப்பவன். வேத₃த்தில் சொல்லப்பட்ட மேலான கர்மத்தையே செய்வான். மற்றதைச் செய்யமாட்டான். அமுக்₂யத்வம், முக்₂யத்வம், ப₂லம், தே₃ஶம், காலம், நல்ல பாத்ரம், த்₃ரவ்யம் இவற்றின் சேர்த்தி ஆகியவற்றைக் கவனித்து, எது முக்கிய மானதோ அதை அவன் எப்போதும் அநுஷ்டி₂க்கிறான். நற்குடிப் பிறந்த இவன் நற்கருமங்களால் பரமாத்மாவை எப்போதும் ஆராதி₄க்கி றான். இலை, புஷ்பம் முதலானவற்றைக்கொண்டு தே₃வனை பரமாத் மாவுக்குச் செய்யும் பூஜையே எப்போதும் அவனுக்கு ஆராத₄னமாகி விடாது. நல்ல ஶாஸ்த்ரம் முதலானவற்றால் விதி₄க்கப்படுபவையாய், அரியவையான கர்மங்களால் செய்யப்படும் பூஜையே பூஜையாகும். அந்தப் பூஜையன்றோ சிறந்ததாகக் கர்மங்களின் சிறப்பறிந்தவர் களால் கூறப்படுகின்றது. அந்தப் பூஜையே உத்தமங்களனைத்துக் கும் உத்தமமானது. அது அனைவராலும் செய்வதற்கு அரிதன்றோ. ஸாமாந்ய மனிதர்கள் அந்தக் கிரியையையும், அதன் ஸ்வரூபத்தை யும், அதைச் செய்பவனையும், அதன் மந்திரங்களையும் தூ₃ஷிக்க வும் செய்வார்கள். வேத₃த்தில் சொல்லப்படாத தங்களுடைய பூஜையைச் சிறந்ததாக வர்ணித்துக்கொண்டு, வேத₃த்தில் சொல் லப்பட்ட இப்பூஜையின் சிறப்பை அறியாதவர்களாய், நன்னெறியை வேறுபடுத்தித் தீநெறியை வர்ணிக்கிறார்கள் அவர்கள். அவர்களு

டைய நெறியைப் பின்பற்றும் வைதி₃கன் அவைதி₃கனேயாவான். மாறுபடுத்தப்படாத வைதி₃க நெறியே எல்லாக் கர்மங்களுக்கும் நன்னெறியாகும். ஸங்கல்பத்தின் தொடக்கத்தில் 'பரமேஶ்வரனின் உகப்பின் பொருட்டுச் செய்கிறேன்' என்று ஸங்கல்பித்து, அவ் வக்கர்மங்களை முறைப்படி அநுஷ்டி₂த்து, அக்கர்மங்கள் முடிந்தபின் 'ப₄க₃வானாய், தே₃வனாய், பரமாத்மாவான ஹரி இக்கர்மத்தால் எப்போதும் உகப்படையட்டும்' என்று ஜலத்தினால் தர்ப்பணம் செய்யவேண்டும். இதுவே சக்ரத₄ரியான எம்பெருமானுக்கு ஒப் பற்ற பெரிய ஆராத₄னமாக, தலைசிறந்த வைதி₃கோத்தமர்களான நல்லோர்களால் முறைப்படி சொல்லப்பட்டது. கர்மங்களால் தே₃வ தே₃வனை ஆராதி₄ப்பதே ஆராத₄னமாகச் சொல்லப்படுகிறது. ப்₃ரஹ்மஜ்ஞானத்திற்கு முக்₂ய ஸாத₄னமான அந்தக் கர்மங்களைச் சுருக்கமாக வரிசைக்கிரமப்படி சொல்லுகிறேன்.—(1) ஔபாஸநம், (2) வைஶ்வதே₃வம், (3) பார்வணஶ்ராத்₃த₄ம், (4) அஷ்டகா ஶ்ராத்₃த₄ம், (5) மாதப்பிறப்பின் போது செய்யப்படும் ஶ்ராத்₃த₄ம், (6) ஸர்ப்பப₃லி, (7) ஈஶாநப₃லி, (8) அத்யக்₃நிஷ்டோமம், (9) உக்த்₂யம், (10) ஷோட₃ஶக்ரியைகள், (11) அதிராத்ரம், (12) அப்தோர்யாமம், (13) ஏழு வாஜபேயங்கள்.........] என்று ஸர்வகர்ம ஸமாராத்₄யனான பரமேஶ்வரன் நாராயணன் என் றும், ஹரி என்றும் சொல்லப்படுபவன் என்றும், அவனே பரமாத் மாவும் ப்₃ரஹ்மமும் ஆவான் என்றும் முழங்கப்பட்டது. இவ்வண்ண மாகக் கர்மாநுஷ்டா₂னத்தின்மூலம் ஹரியை ஆராதி₄ப்பதை விளக்கி,

நைமிஶா(ஷா)தி₃ மஹாக்ஷேத்ரே வித்₃யமாநேஶ்வரார்ச்சநாத்||
முக்திர்நாத்ர விரோதே₄ா ஹி தஸ்மாத் குர்யாத் ஹரே: ஸதா₃ா |
ப்ரதிமாஸு புராணேஷு ம்ருத்₃தா₃ருப்ரஸ்தராத்மஸு ||
பத்ரை: புஷ்பை: ப₂லைரர்ச்சாம் ஷோட₂ஶைருபசாரகை: |
நித்யபூஜாம் விஶேஷேண தத₂ா நைமித்திகா அபி || [446-448]

[நைமிஶாரண்யம் முதலான தி₂வ்யதே₃ஶங்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானை ஆராதி₄ப்பதால் மோக்ஷம் ஏற்படும்; இதில் விரோத₄ மில்லை; ஆகையால்—பழையனவான தி₂வ்யாலயங்களில் மண், மரம் முதலானவற்றால் அமைந்த பி₃ம்ப₃ங்களில், இலைகள், மலர்கள், பழங்கள் முதலானவற்றைக்கொண்டு பதினாறு உபசாரங்களையும் செய்து, ஹரிக்கு எப்போதும் திருவாராத₄னம் செய்யவேண்டும்; நித்யபூஜையையும், நைமித்திக பூஜைகளையும் விஶேஷமாகச் செய்ய வேண்டும்] என்று எம்பெருமானுடைய அர்ச்சைத் திருமேனியை ஆராத₄னம் செய்வதாலும் மோக்ஷம் கிட்டும் என முழங்கப்பட்டது.

ஸாத்வதம் விதி4மாஸ்த2ாய கீ3தந்ருத்தார்ப்பணேந ச |
ஹரேர்க3ாநம் ச ந்ருத்தம் ச நடநம் ச விஶேஷத: ||
ஸத2ா ப்ராஹ்மணஜாதீநாம் விஹிதம் நித்யகர்மவத் |
அர்த்த4ாஸ்தமித ஆதி3த்யே புநரர்த்தே4ாத3யேऽநிஶம் ||
தி3வைவாராத4நம் தஸ்ய தே3வஸ்ய பரமாத்மந: |
கைவல்யத3ம் ஸத்3ய ஏவ தத2ா தத3வலோகநம் ||
யத்கிஞ்சித் க்ரியதே கர்ம லௌகிகம் வைதி3கம் தத2ா |
போ4ஜநம் க3மநம் த3ாநம் அலங்காரோऽத2 பூ4ஷணம் ||
ஸர்வம் தத்ப்ரீதயே குர்யாத் தந்நிர்மால்யபரோ ப4வேத் ||

[452-455]

[பாஞ்சராத்ர விதி4யைப் பின்பற்றித் திருவாராத4னம் செய்யும்போது பாடல், நாட்டியம் முதலானவற்றை ஸமர்ப்பிப்பதன் மூலமும் எம்பெருமானை ஆராதி4க்கவேண்டும். ப்3ராஹ்மண ஜாதியைச் சேர்ந்தவர்கள் எப்போதும் நித்யகர்மம் செய்வதுபோல் ஹரியைக் குறித்துச் சிறப்பாகப் பாடுவதும், நாட்டியமாடுவதும், நாடகமாடுவதும் செய்யவேண்டும் என்று ஶாஸ்த்ரங்களில் விதி4க்கப்பட்டுள்ளது. ஸூர்யன் பாதி அஸ்தமித்துக் கொண்டிருக்கும்போதும், பாதி உதித்துக்கொண்டிருக்கும்போதும் எப்போதும் பரமாத்மாவான அந்த தே3வனுக்குப் பகலிலேயே திருவாராத4னம் செய்வதும், அவ்வண்ணமே அவனை ஸேவிப்பதும் அந்தப் பிறப்பிலேயே மோக்ஷமளிக்கும், உணவளிப்பது, எழுந்தருளப்பண்ணுவது, த3ானம் செய்வது, (மலர் முதலானவற்றால்) அலங்கரிப்பது, திருவாப4ரணங்களால் அழகுபடுத்துவது ஆகிய எந்த லௌகிக வைதி3க கர்மங்களைச் செய்தாலும், அவையனைத்தையும் அவனுடைய உகப்பிற்காகவே செய்யவேண்டும். அவன் அமுதுசெய்த ப்ரஸாத3ங்களையே உண்ணவேண்டும்.] என்று அவனது திருவாராத4னத்தைச் சிறப்பாக விளக்கி அதையே அவனுகப்புக்காக அந்தணர்கள் செய்யவேண்டும் என்று விதி4த்து, அவனுடைய ப்ரஸாத3ங்களையே உண்ணவேண்டும் என நியமித்ததும் குறிக்கொள்ளத்தக்கது.

ஸாயுஜ்யநாமிகாம் முக்திம் லப4ந்தே ஸத்3கு3ரோஸ்தராம் |
ப்ரஸாதே3நைவ க்ருபயா பித்ருணுமர்ச்சயா தத2ா ||
அயமேவ மஹாமார்க்கே3ா வேதே3ாக்தாத்யந்தஸௌலப4: |
அந்ய: பந்த2ா நாயநாய ஶ்ருதிரேவமுவாச ஸா || [467, 468]

['ஸாயுஜ்யம்' எனப்படும் மேலான மோக்ஷத்தை ஸதா₃சார்யனுடைய அருளாலும், பித்ருக்களை ஆராதி₄ப்பதாலும் அடைகிறான். இதுவே வேத₃த்தில் சொல்லப்பட்ட மிகவெளிய பெருநெறியாகும். மோக்ஷத்திற்கு வேறு வழியில்லை; புருஷஸூக்த மந்திரம் இவ்வண்ணமே கூறிற்று.] என்று முற்கூறிய விஷயங்களைப் புருஷஸூக்தத்தில் "நாந்ய: பந்தா₂ அயநாய வித்₃யதே" என்று வேத₃ம் சொன்னதாகக் கூறுகையால் புருஷஸூக்தத்தால் சொல்லப்படுபவனும் முற்கூறிய நாராயணனே என விளங்குகிறது.

வேத₃மந்த்ரம் விநா சாந்யத்தாரகம் ந ஹி வித்₃யதே ।
து₃ர்ாலாபாதி₃காலேஷு நாமாந்யாஹுர்விபஶ்சித: ॥
பாவநாநி ஹரேரந்யந்நாஸ்தீதி பரமம் ஸ்ம்ருதம் ।
தஸ்மாத் வைதி₃கக்ருத்யேஷு நிஷ்ணாத: ஸர்வதா₃ ப₄வேத்
நித்யம் யஜேத நிகி₂லை: நித்யைர்நைமித்திகைரபி ।
ஶக்தஸ்த்வஹீநக்ரதுபி₄: ஶதஸம்வத்ஸராதி₃பி₄: ॥
யஜேதைவ ஸதா₃ விஷ்ணோ: அர்ச்சநாய த்₃விஜாக்₃ரணீ: ।
அவேத₃வாதி₃நோ து₃ஷ்ட த₄ார்மிகாந் த₄ர்மதூ₃ஷகாந் ॥
தத₂ாக₃தாம்ஸ்த்யக்தயஜ்ஞாந் குசித்தாந் யஜ்ஞதூ₃ஷகாந் ।
பரித்யஜேத் தூ₃ரதோ வை...................... [477...481]

[வேத₃ மந்திரத்தைத் தவிர மனிதனைக் கடைத்தேற்றக் கூடியது வேறொன்றுமில்லை. தீய பேச்சுக்களைப் பேசுதல் முதலான பாபங்களைப் புரிந்த காலங்களில் ஹரியினுடைய நாமங்களே அவற்றால் ஏற்படும் தோ₃ஷத்தைப் போக்கடிப்பவை என்று அறிவாளிகள் கூறுகிறார்கள். இதைக் காட்டிலும் மேலான பாவனமில்லை என்று ஶாஸ்த்ரங்கள் கூறுகின்றன. ஆகையால் வேத₃த்தில் சொன்ன கிரியைகளிலே எப்போதும் தேர்ச்சிபெறவேண்டும். நித்ய நைமித்திக கர்மங்களனைத்தையும் தினந்தோறும் அநுஷ்டி₂க்கவேண்டும். ஶக்தியுள்ள அந்தணர் தலைவன் அஹீனக்ரதுக்கள், ஶதஸம்வத்ஸரம் முதலான நீண்டநாள் செய்யும் யாக₃ங்களையும் விஷ்ணுவை ஆராதி₄ப்பதற்காக எப்போதும் செய்யவேண்டும். வேத₃த்துக்கு முரண்படப் பேசுகின்றவர்களாய், தீய த₄ர்மங்களை அநுஷ்டி₂ப்பவர்களாய், நல்லறங்களை தூ₃ஷிப்பவர்களாய், யஜ்ஞங்களைக் கைவிட்டவர்களாய், தீயநெஞ்சினராய், யஜ்ஞங்களை தூ₃ஷிப்பவர்களான பௌ₃த்₃த₄ர்களை வெகுதூரத்தில் விலக்கவேண்டும்.] என்று ஹரி

யின் நாமங்களே பரமபாவனங்களென்றும், நித்யம் நைமித்திகம் முதலான கர்மங்கள் விஷ்ணுவுக்கு ஆராத₄னமாயிருப்பவை என்றும் முழங்கப்பட்டது.

லக்ஷ்மீநாராயணத்₄யாநபரத்வேந ஸதா₃ ப₄வேத்। [573]

[லக்ஷ்மீநாராயணர்களை எப்போதும் தியானித்துக்கொண்டே இருக்க வேண்டும்.] என்றும்,

விப்ரஸ்ய கரணம் லக்ஷ்மீநாராயணக₃தம் ப₄வேத்। [584]

[அந்தணனுடைய மனம் எப்போதும் லக்ஷ்மீநாராயணரையே சிந்திக்க வேண்டும்.] என்றும் ஸர்வகார்யங்களிலும் அந்தணன் லக்ஷ்மீநாராயணர்களையே சிந்திக்கவேண்டும் என்று விதி₄க்கப்பட்டது. ஆக, இந்தக் கண்வஸ்ம்ருதியும் ஸ்ரீமந்நாராயணனையே பரமாத்மாவாக நிலைநாட்டிற்று என்று தேறிற்று.

கண்வஸ்ம்ருதிநிர்ணயம் நிறைவுற்றது.

## தா₃ல்ப்₄யஸ்ம்ருதியில் த்ரித₃ண்ட₃ம்

அடுத்ததான தா₃ல்ப்₄யஸ்ம்ருதியில்,

த்ரித₃ண்ட₃க்₃ரஹணாதே₃வ ப்ரேதத்வம் நைவ ஜாயதே। [31]

[த்ரித₃ண்ட₃த்தை ஏற்றுக்கொள்வதினால் ஸந்யாஸி மரணமடையும் போது அவனுக்கு ப்ரேதநிலை கிடையாது.] என்று ஸந்யாஸிக்கு த்ரித₃ண்ட₃த₄ாரணமாகிற வைஷ்ணவாசாரமே காட்டப்பட்டது. இது தவிர, எந்த தே₃வதைக்கும் பரத்வம் கூறும் வசனங்கள் அதில் இல்லை.

தா₃ல்ப்₄யஸ்ம்ருதியில் த்ரித₃ண்ட₃ம் நிறைவுற்றது

## ஆங்கீ₃ரஸஸ்ம்ருதி நிர்ணயம்

அடுத்ததான ஆங்கீ₃ரஸ ஸ்ம்ருதியில் வேத₃ மஹிமையைச் சொல்லும்போது,

வேதா₃க்ஷரோச்சாரணத: ஸர்வநாமப₂லம் லபே₄த்।
ஹரிநாமாநி யாவந்தி படி₂தாநி த்₃விஜாதிபி₄: ॥
அஸங்க்₂யாகாந்யநந்தாநி ஸர்வாவிலஹராண்யபி।
தாந்யேகவேத₃வர்ண: ஸ்யாத் தாத்₃ருஶைர் தி₃வ்யவர்ணகை: ॥
அமேயை: ஸம்வ்ருதோ வேத₃: ஸாக்ஷாந்நாராயணாத்மக:।
தாத்₃ருஶஸ்யாஸ்ய வேத₃ஸ்ய படநாத் ஸர்வகில்பி₃ஷை: ॥
ஸத்₃ய ஏவ விமுக்த: ஸ்யாத் பாதகீ நாத்ர ஸம்ஶய:॥[157...159]

[வேத₃ாக்ஷரங்களை உச்சரிப்பதினால் (எம்பெருமானுடைய) எல்லா நாமங்களையும் உச்சரித்த ப₂லனை அடையலாம். கணக்கற்றவையாய், அநந்த ப₂லனையளிப்பவையாய், எல்லாப் பாபங்களையும் போக்கடிப்பவையான ஹரியின் நாமங்கள் அந்தணர்களாலே எத்தனை படிக்கப்படுகின்றனவோ, அவையனைத்துக்கும் ஒரு வேத₃ாக்ஷரம் ஸமமாகும். அப்படிப்பட்ட அளவிடமுடியாத பெருமையுடைய வேத₃ாக்ஷரங்கள் நிறைந்த வேத₃ம் நேரே நாராயண ஸ்வரூபமாயிருப்பது. பெரும்பாவம் புரிந்தவனாயினும் அத்தகைய வேத₃த்தை ஓதுவதால் எல்லாப் பாபங்களினின்றும் நீங்கப்பெறுகிறான் என்பதில் ஐயமில்லை.] என்று வேத₃ம் நேரே நாராயணஸ்வரூபம் என்றும், வேத₃ாக்ஷரங்கள் ஹரி நாமங்களே என்றும், அவை எல்லாப் பாபங்களையும் போக்கி அளவற்ற ப₂லனையளிப்பவை என்றும் முழங்கப்பட்டது காணத்தக்கது. பாபப்ராயஸ்சித்தத்தை விதி₄க்கும்போது

தத: ஸ்வயம் ச நித்யம் வை யாவத்காஶீ சரேத்₃பு₄வம் ।
பாபப்ரக்₂யாபநம் குர்வந் யாவஜ்ஜீவம் ஹரிம் பூ₄ஜந் ॥ [209]

[அதற்குப்பின் தன்னுடைய பாபத்தை ப்ரகடனம் செய்துகொண்டு, உயிரோடு இருக்கும் வரையில் ஹரியை பூ₄ஜனம் செய்துகொண்டு காசீக்ஷேத்ரம் வரையில் தினமும் தானே நடந்து செல்லவேண்டும்.] என்று ஹரிபூ₄ஜனம் விதி₄க்கப்பட்டது.

ஜலௌக₄ம் ஜாஹ்நவீதீரம் ஜநார்த்த₃ந மஹாஸ்ம்ருதி: ।
ஜ்வலநோ ஜநநோத்பந்நஸுதஸாந்நித்₄யமேவ ச ॥
ஜகாரபஞ்சகம் ப்ரோக்தம் கதி₂தம் ஜந்மமோசகம் ॥ [484, 485]

[(1) பெருக்காறு, (2) கங்கைக்கரை, (3) ஜநார்த்த₃னனை இடைவிடாமல் நினைப்பது, (4) நெருப்பு, (5) தன் வயிற்றில் பிறந்த பிள்ளை அருகிலிருப்பது என்னும் 'ஜ' என்னும் எழுத்தில் தொடங்கும் இவ்வைந்தும் பிறப்பையறுக்கும்.] என்று பிறப்பையறுக்கும் ஜகாரபஞ்சகத்தில் ஜநார்த்த₃ன தியானத்தையும் குறித்திருப்பது காணத்தக்கது.

ததே₃தத் இல தே₃வேஶோ ப₄க₃வாந் பூ₄தபா₄வந: ।
ஷோட₃ஶஶ்ராத்₃த₄ துலிதம் மஹாத₃ாந ஶதாதி₄கம் ॥
ப்ரோவாச இல ஸர்வேஶோ க₂யஸ்ய ஸுமஹாத்மந: ॥ [488]

[தே₃வர் தலைவனாய், ப₄க₃வான் என்னும் சொல்லுக்கு முக்₂யார்த்த₂மாயிருப்பவனாய், உயிர்களனைத்தையும் படைத்தவனாய், ஸர்வேஸ்வரனான ஜநார்த்த₃னன் மிகப் பெரியவனான க₂யனுக்கு இந்த

க்₃ரஹணஶ்ராத்₃த₄த்தைச் சொல்லும்போது ஷோட₃ஶஶ்ராத்₃த₄த்தை ஒத்திருப்பது என்றும், நூறு மஹாதா₃னங்களைக் காட்டிலும் விஞ்சியிருப்பது என்றும் சொன்னானன்றோ] என்று க₃யையில் க₃யனுக்கு உபதே₃ஶித்த ப₄க₃வானான விஷ்ணுவைப் பற்றிக் குறிப்பிடும்போது தே₃வர் தலைவன் என்றும், ஸர்வேஶ்வரன் என்றும், உயிர்களைப் படைத்தவன் என்றும கூறியிருப்பது விஷ்ணுபரத்வத்தை நிலை நாட்டுகிறது.

ப₄ாகீ₃ரதீ₂ ப₂ல்கு₃நீ ச யமுநா ச ஸரஸ்வதீ ।
பித்ருஸௌக்₂யாநி ஸர்வாணி வைஷ்ணவாநி விஶேஷத: ॥
ரக்ஷோக்₄நாநி பவித்ராணி புநரந்யே தத₂ாவித₄ா: ।
ஶ்ராத்₃த₄த்₃ரவ்யவிஶேஷா: ஸ்யு: பித்ரூணாமதிவல்லப₄ா: ॥
[539, 540]

[க₃ங்கை, (க₃யையில் ஓடும்) ப₂ல்கு₃நீ நதி, யமுனை, ஸரஸ்வதி, பித்ருஸௌக்₂யங்கள் இவையனைத்தும் சிறப்பாக விஷ்ணு ஸம்ப₃ந்த₄ம் உள்ளவை, ராக்ஷஸர்களை அழிக்கக் கூடியவை. பாவனமானவை. இவையும் ஶ்ராத்₃த₄த்துக்குரிய திரவியங்களும் இத்தகையவையாய் பித்ருக்களுக்கு மிகவும் இனியவையாயிருக்கின்றன.] என்று க₃ங்கை₃ முதலான பாவனநதிகளும், பித்ருக்கள் ஸம்ப₃ந்த₄ப்பட்டவைகளும் விஷ்ணு ஸம்ப₃ந்த₄ம் உள்ளவையாயிருக்கையாலே அதி பாவனமாயிருக்கின்றன என்று கூறியதும் குறிக்கொள்ளத்தக்கது. மாண்டூ₃வ்யர் என்னும் பரமவைதி₃கர் செய்த தா₃னம ஒன்றைச் சொல்லி, அந்த தா₃னத்தினால் பித்ருக்கள் மிகவும் திருப்தியடைந்து, அவருக்கு ஆசீர்வாத₃ம் செய்து மோக்ஷமடைந்தார்கள் என்று கூறும்போது,

பரம் த்ருப்தா: ஸ்மேதி சோக்த்வா த்வம் க்ருதார்த்தோ₂ஸி மஹாநஸி ।
ஶாஸ்த்ரார்த்த₂ த₄ர்மதத்த்வஜ்ஞஸ்த்வமஸ்மத்பரித்ருப்திக்ருத் ।
இத்யுக்த்வாऽऽப₄ாஷ்ய தே தேந தத்பத₃ம் சக்ரபாணிந: ॥
பஶ்யதஸ்தஸ்ய புரதோ ஜக்₃மு: கில ஸுரோத்தமை: ॥ [565,566]

['நாங்கள் மிகவும் திருப்தியடைந்தோம்' என்று சொல்லி, 'நீ செய்ய வேண்டியதைச் செய்த பெரியவனாயிருக்கிறாய். ஶாஸ்த்ரார்த்த₂ங்களையும், த₄ர்மத்தின் உண்மையையும் அறிந்தவனாயிருக்கிறாய். எங்களைத் திருப்தி செய்வித்தவனாகவும் ஆகிறாய்' என்று கூறி, அந்த பித்ருக்கள் அவர் பார்த்துக்கொண்டிருக்கும்போதே அயர்வறும்

அமரர்களான நித்யஸூரிகளோடுகூட சக்ரபாணியின் ஸம்ப்ரஸித்₃த₄மான பரமபத₃த்தை அடைந்தார்களன்றோ.] என்று மோக்ஷலோகமான பரமபத₃ம் சக்ரபாணியான விஷ்ணுவினுடையதே என்று காட்டப்பட்டது. ஆக, ஆங்கீ₃ரஸஸ்ம்ருதியிலும் விஷ்ணுபரத்வமே நிலைநாட்டப்பட்டது என்று தேறிற்று.

ஆங்கீ₃ரஸஸ்ம்ருதிநிர்ணயம் நிறைவுற்றது.

## ப₄ாரத்₃வாஜஸ்ம்ருதி நிர்ணயம்

கல்கத்தா பதிப்பில் அடுத்து அச்சிடப்பட்டுள்ள ப₄ாரத்₃வாஜ ஸ்ம்ருதியில் ப₄க₃வத்பரத்வம் பொலிகின்றபடியைக் காண்போம் இனி. ஐந்தாமத்தியாயத்தில் பலவகை ஸ்நானங்களை வர்ணித்துவரும்போது

க்₃ராமாத்₃ப₃ஹி: ஶுசௌ தே₃ஶே க₃வாக₃மநபத்₂த₄தௌ ।
ஸ்மரந்நாராயணம் திஷ்ட₂ந் யாவத்₃தூ₄ள்யாவ்ருதம் புந: ।
வாயவ்யம் ஸ்நாநமித்யுக்தம் ஏதத₃ாம்நாயவாதி₃பி₄: ॥[5-28,29]

[கிராமத்துக்கு வெளியில் பரிஶுத்₃த₄மான இடத்தில். பசுக்கள் வரும் வழியில் தேவனான நாராயணனை நினைத்துக்கொண்டு பசுக்களின் குளம்புத் தூசி உடம்பு முழுவதும் படியும்படி நிற்பது—ஸ்நானவிதி₄யை அறிந்தவர்களால் வாயவ்யஸ்நானம் என்று சொல்லப்படுகிறது] என்று வாயவ்யஸ்நானத்தை விவரிக்கும்போது நாராயணனை நினைக்கவேண்டும் என்று விதி₄த்திருப்பது நோக்கத்தக்கது.

ஊர்த்₄வபுண்ட்₃ரம் ச விதி₄நா லலாடே ஹ்ருத₃யே க₃ளே ।
ஸ்நாத்வாக்₃நிஹோத்ரஜேநைவ ப₄ஸ்மநா ச ப்ரஸந்நதீ₄: ॥...
வாமப₄ாகே₃ ஸ்மரேத் விஷ்ணும் கமலாரூட₄வக்ஷஸம் ।
பீதாம்ப₃ரத₄ரம் ஶ்யாமம் சதுர்ப₃ாஹும் கிரீடிநம் ॥
நாநாரத்நப்ரப₄ாஜாலஸ்பு₂ரந்மகரகுண்ட₃லம் ।
ஸர்வாப₄ரணஸம்யுக்தம் ஹேமயஜ்ஞோபவீதிநம் ॥
பவித்ரஹஸ்தோ த்₄யாயீத கிஞ்சித் ப்ரஹஸிதாநநம் ।
அம்பு₃ஜம் பாஞ்சஜந்யம் ச பி₃ப்₄ராணம் ஹஸ்தத₃க்ஷயோ: ॥
கௌமோத₃கீம் ரத₂ாங்க₃ம் ச பி₃ப்₄ராணம் வாமஹஸ்தயோ: ।
திஷ்ட₂ந்தம் வா ஸமாஸீநம் தத₃ா த்₄யாயேத்₃யத₂ாருசி ॥...
ஸர்வபாபவிநிர்முக்த: ஸ யாதி பரமாம் க₃திம் ॥
இத₃ம் ஸ்நாநம் து ஸர்வேஷாம் ஸ்நாநாநாமாசரேத்₃யத₂ா ।
த்₃விஜ: ஶக்தஸ்த்வஶக்தஶ்சேதி₃மமேவ ஸமாசரேத் ॥

இத₃ம் ஹி மாநஸம் ஸ்நாநம் பு₄க்திமுக்திப₂லப்ரத₃ம் ।
தே₃வைர்மஹர்ஷிபி₄: ஸேவ்யம் ப₄க்த்யாபி பரயா ஸதா₃ ॥
ஏவம் ஸப்தவித₄ம் ஸ்நாநம் ப்₃ரஹ்மணோத₃ம் புரோதி₃தம் ।
ஜ்ஞாத்வா த்₃விஜோத்தம: ஸம்யக் யதா₂யோக்₃யம் ஸமாசரேத் ॥
[5-32...41]

[அக்₃னிஹோத்ரம் செய்து உண்டான ப₄ஸ்மத்தில் குளித்து, நெற்றியிலும், ஹ்ருத₃யத்திலும், கழுத்திலும் ஊர்த்₄வபுண்ட்₃ரத்தை முறைப்படி த₄ரிக்கவேண்டும். ஸ்ரீதே₃வி ஏறியிருக்கப்பெற்ற திருமார்பையுடையவனாய், பீதாம்ப₃ரத்தை த₄ரித்திருப்பவனாய், நீலநிறத்தனாய், நான்கு தோள்களையுடையவனாய், கிரீடத்தையுடையவனாய், பலவகைப்பட்ட ரத்னங்களின் ஒளியால் விளங்கும் மகரகுண்டலத்தையுடையவனாய், எல்லாத் திருவாப₄ரணங்களையும் உடையவனாய், பொன்னாலான பூணூலை உடையவனாய், இளமுறுவலோடு கூடிய திருமுகமண்டலத்தை உடையவனான விஷ்ணுவைப் பவித்ரத்தைக் கையிலேந்தியவனாய் தியானிக்கவேண்டும். வலதுபுறமுள்ள இரு திருக்கைகளால் தாமரையையும், பாஞ்சஜந்யமாகிற ஸங்க₂த்தையும் ஏந்தியிருப்பவனாய், இடதுபுறமுள்ள இருதிருக்கைகளால் கௌமோத₃கீ என்னும் க₃தையையும் சக்ரத்தையும் த₄ரித்திருப்பவனாய், நின்ற திருக்கோலத்திலோ, வீற்றிருந்த திருக்கோலத்திலே எழுந்தருளியிருப்பவனான விஷ்ணுவை அப்போது விருப்பத்துடன் தியானிக்கவேண்டும். இப்படி தியானிப்பவன் எல்லாப் பாபங்களிலிருந்தும் நீங்கி, பரமபத₃த்தையடைகிறான். ஸக்தியுடையவனாயிருந்தால் மற்ற ஸ்நானங்களோடு இந்த ஸ்நானத்தையும் அநுஷ்டி₂க்க வேண்டும். ஸக்தியற்றவனாயிருந்தால் இந்த ஸ்நானம் ஒன்றையாவது அநுஷ்டி₂க்கவேண்டும். மாநஸஸ்நானமான இது போ₄க₃ மோக்ஷப₂லன்களனைத்தையும் அளிப்பது. மேலான ப₄க்தியுடன் தே₃வர்களாலும் மஹரிஷிகளாலும் எப்போதும் இது கைக்கொள்ளத் தக்கது. இவ்வண்ணமாக, ப்₃ரஹ்மாவினால் முற்காலத்தில் சொல்லப்பட்ட ஏழுவித₄ஸ்நானங்களையும் நன்கு அறிந்து, அந்தணர் தலைவனாயிருப்பவன் தன்னால் இயன்றவரையில் அநுஷ்டி₂க்கவேண்டும்]

என்று தலைசிறந்ததான மாநஸஸ்நானத்தை விதி₄க்கும்போது, பரமாத்மாவான விஷ்ணுவை விரிவாக வர்ணித்து, அவனை எப்போதும் தியானிப்பதே மாநஸஸ்நானம் என்று காட்டி, இதை அநுஷ்டி₂ப்பவன் பரமபத₃த்தையடைவான் என்று கூறியிருப்பது விஷ்ணுபரத்வத்தை ஐயந்திரிபற நிலைநாட்டுகிறது.

ப₄ாரத்₃வாஜஸ்ம்ருதி நிர்ணயம் நிறைவுற்றது.

# முடிவுரை

ஆக, இதுவரையில் ப₄ாரததே₃ஶத்தில் பல அச்சகங்களில் அச்சிடப்பெற்ற கீழ்க்கண்ட ஸ்ம்ருதிகள் அனைத்தும் ஆராயப்பட்டு, அவற்றுள் விஷ்ணுபரத்வமே நிலைநாட்டப்பட்டிருப்பது நிரூபிக்கப் பெற்றது:—(1) மநுஸ்ம்ருதி, (2) அத்ரிஸ்மருதி, (3) விஷ்ணுஸ்ம்ருதி, (4) ஹாரீதஸ்மருதி, (5) ஶங்க₂ஸ்ம்ருதி, (6) ஶங்க₂லிகி₂தஸ்ம்ருதி, (7) த₃க்ஷஸ்ம்ருதி, (8) ஶாதாதபஸ்ம்ருதி, (9) வஸிஷ்ட₂ஸ்ம்ருதி, (10) ஔஶநஸஸ்ம்ருதி, (11) ப்₃ருஹஸ்பதிஸ்ம்ருதி, (12) ஶௌநக ஸ்ம்ருதி, (13) யோக₃யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி, (14) வ்ருத்₃த₄ஹாரீத ஸ்ம்ருதி, (15) ஶாண்டி₃ல்யஸ்ம்ருதி, (16) பராசரவிஶிஷ்ட பரமத₄ர்ம ஶாஸ்த்ரம், (17) லகு₄வ்யாஸஸம்ஹிதை, (18) வ்ருத்₃த₄கௌ₃தம ஸ்ம்ருதி, (19) அருணஸ்ம்ருதி, (20) வஸிஷ்ட₂ஸ்ம்ருதி, (21) ஸ்ரீப்₃ருஹத்₃யோக₃யாஜ்ஞவல்க்யஸ்ம்ருதி, (22) ப்₃ரஹ்மோக்தயாஜ்ஞ வல்க்யஸம்ஹிதை, (23) வ்யாக்₄ரபாத₃ஸ்ம்ருதி, (24) கபிலஸ்ம்ருதி, (25) வாதூ₄லஸ்ம்ருதி, (26) விஶ்வாமித்ரஸ்ம்ருதி, (27) நாராயண ஸ்ம்ருதி, (28) கண்வஸ்ம்ருதி, (29) தா₃ல்ப்₄யஸ்ம்ருதி, (30) ஆங்கீரஸஸ்ம்ருதி.

பரம்பொருளுக்கேயுரிய தனித்தன்மைகளான (1) ஜக₃த்காரணத்வம் (2) ஸர்வஜ்ஞத்வம் (எல்லாம் அறிபவனாயிருக்கை) (3) ஸர்வ வ்யாபகத்வம் (அனைத்தையும் வியாபித்திருக்கை) (4) ஸர்வநியந்த்ருத்வம் (அனைவரையும் நியமிப்பவனாயிருக்கை) (5) ஸர்வஶக்தத்வம் (எல்லாம்வல்லவனாயிருக்கை) (6) மோக்ஷப்ரத₃த்வம் (மோக்ஷமளிக்க வல்லவனாயிருக்கை) (7)ஸமஸ்தகல்யாணகு₃ணாத்மகத்வம் (எல்லா நற்குணங்களையும் உடையவனாயிருக்கை) (8) அகி₂லஹேயப்ரத்யநீகத்வம் ( தாழ்வுகளுக்கு எதிர்த்தட்டாயிருக்கை ) (9) நிருபாதி₄கப₃ந்து₄த்வம் (இயற்கையுறவினனாயிருக்கை) (10)வேத₃ப்ரதிபாத்₃யத்வம் (வேத₃ங்களால் பரம்பொருளாக ஓதப்படுகை) (11) அவாப்தஸமஸ்தகாமத்வம் (எல்லா விருப்பங்களையும் பெற்றிருக்கை) (12) ஸத்யஸங்கல்பத்வம் (தடையற்ற ஸங்கல்பத்தை உடையவனாயிருக்கை) முதலான பெருமைகள் இவற்றில் ஆயிரக்கணக்கான இடங்களில் ஸ்ரீமந்நாராயணனுக்கே முழங்கப்பட்டிருப்பதைக்கண்டோம். சக்ராங்கனம், ஊர்த்₄வபுண்ட்₃ரத₄ாரணம் முதலான பஞ்சஸம்ஸ்காரங்கள்—எம்பெருமானுக்கே ஆட்பட்டு மோக்ஷமடையவிரும்பும் பரமைகாந்திகளுக்குப் பல ஸ்ம்ருதிகளில் விதி₄க்கப்பட்டிருப்பதையும், த்ரித₃ண்ட₃த₄ாரணமே மோக்ஷத்தை விரும்பும் ஸந்யாஸிகளுக்குப் பலவிடங்களில் விதி₄க்கப்பட்டிருப்பதையும், ப₄ஸ்மத₄ாரணம் முதலான மற்ற மதாசாரங்கள்

மோக்ஷமடைய விரும்புவார்க்கு விலக்கப்பட்டிருப்பதையும் கண்டோம். எந்த ஸ்ம்ருதியிலும், அத்₃வைதிகளைப்போல் ஶிகை₂யையும், பூணூலையும் அறுத்தெறிந்து ஏகத₃ண்ட₃த்தை ஏந்தியிருக்கவேண்டும் என்று ஸந்யாஸி லக்ஷணம் சொல்லப்படவில்லையென்பதையும், ஶைவத்திற்போல் ஶூத்₃ரஸந்யாஸிகள் ஆத₃ரிக்கப்படவில்லையென்பதையும், ஶைவஶாக்தாக₃மங்களிற்போல் மது, மாம்ஸம், மைது₂னம் முதலான மகாரபஞ்சகங்கள் விதி₄க்கப்படவில்லையென்பதையும், காண்கிறோம். இவற்றிலிருந்து விஶிஷ்டாத்₃வைத ஸ்ரீவைஷ்ணவமதமே ஸ்ம்ருதிகாரர்களால் ஆத₃ரிக்கப்பட்டுள்ளது என்றும், ஶைவம், ஶாக்தம், அத்₃வைதம் முதலான மதங்கள் அவர்களால் ஆத₃ரிக்கப்படவில்லை என்றும் தெளிவாக விளங்குகிறது. [இவ்விஷயம் மநுஸ்ம்ருதி வ்யாக்₂யானத்தில் ப₄ாஸ்கரமதத்தைச் சேர்ந்த குல்லூகப₄ட்டராலேயே ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதை 30-ம் பக்கத்தில் காட்டியிருக்கிறோம்.] இப்படி ப்ரப₃லஸ்ம்ருதிகளுக்கு விரோத₄மாக, அச்சிடப்படாத சிற்சில ஸ்ம்ருதிகளில், சிற்சில இடங்களில் காணப்பட்டாலும், அவை ஸ்ம்ருத்யதி₄கரணந்யாயத்தால் ஶ்ருதிவிருத்₃த₄மாகையாலும், ராஜஸதாமஸங்களாகையாலும், தள்ளத்தக்கவை என்பதையும் அவதாரிகையில் [பக்கம் 2, 3] காட்டியுள்ளோம். ஆக, ஶ்ருதிகளிற்போலே ஸ்ம்ருதிகளிலும் ஸ்ரீமந்நாராயணனே பரப்₃ரஹ்மமாக முழங்கப்பட்டுள்ளான் என்று கையிலங்கு நெல்லிக்கனியாகவும், வெள்ளிடைமலையாகவும் ஐயந்திரிபற நிலைநாட்டப்பெற்றது.

"ஆலோட்₃ய ஸர்வஶாஸ்த்ராணி விசார்ய ச புந: புந: ।
இத₃மேகம் ஸுநிஷ்பந்நம் த்₄யேயோ நாராயண: ஸதா₃ ॥"

[எல்லா ஶாஸ்த்ரங்களையும் ஆராய்ந்து பலமுறை விசாரித்தாலும், "நாராயணன் ஒருவனே எப்போதும் தியானிக்கத்தக்கவன்" என்னும் இவ்வர்த்த₂மே நன்கு தேறிநிற்கும்] என்னும் ஸுப்ரஸித்₃த₄ மஹர்ஷிவசநம் ஸ்ம்ருதிகள் விஷயத்திலும் உண்மையானதே என நிரூபிக்கப்பட்டதாயிற்று.

ஸ்ரீவிஷ்ணுசித்தவிஜயத்தில் இரண்டாம் அத்தியாயத்தில்,
முதற்பாத₃மான ஸ்ம்ருதிநிர்ணயம் நிறைவுபெற்றது.